# சமயக் கிண்டர்கார்டன்

அல்லது

# ஆலயங்களின் உட்பொருள் விளக்கம்.

*

I

## அண்டத்திலுள்ளது பிண்டத்தில்.

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்,
எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

*

A. சொக்கலிங்கம்.

1952

*

விற்பனையாளர்கள் :
தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை. * திருநெல்வேலி.

திருநெல்வேலி ஜில்லா,

தென்காசித் தாலுகா—இலஞ்சி,

பெருந்திருவாளர் மிட்டாதார்

ராவ்பகதூர் I. C. ஈஸ்வரன் பிள்ளை

அவர்களின்

பொன்னார் திருவடிகளில்

இந்நூல்

நன்றி நிறைந்த அன்பு மலராக அளிக்கப்படுகின்றது.

A. சொக்கலிங்கம்.

I. C. I. அவர்கள் வாழ்க்கை வரலாறு

பின்னிணைப்பில் உள்ளது.

# முகவுரை.

இந்நூல் "இலஞ்சி புதுவீட்டுப் பொன்னம்மையம்மாள் ஞாபகார்த்த நிதி"யிலிருந்து அச்சிடப்படுகிறது. லாபத்திற்காக அல்லாமல், இறைவன் பணிவிடையாக இயற்றப்பட்டுள்ளபடி-யால், இது அடக்க விலைக்கே விற்கப்படுகிறது. அன்பர்கள் வாங்கிப் படித்துப் பயனடையுமாறு தாழ்மையாய் வேண்டப்-படுகிறார்கள். இதனை விற்றுவரும் பணம் அந்நிதியையே சேரும்; வேறு சொந்தத்திற்கல்ல. தயவு செய்து இந்நூற்கருத்துக்களைத் தமிழ் நாட்டிற் பரப்புங்கள், அதிலும் முக்கியமாகப் பெண் மக்க-ளுக்குப் புகட்டுங்கள்.

ஆலயஞ் செல்ல அவகாச மில்லாத செல்வர்கள்,
ஆலயஞ் செல்லும் ஏழை அன்பர்களுக்கு
இந்நூலை வாங்கி வழங்கிப் புண்ணியம் பெறுவார்களாக!
அது பெரும்பலன்தரும் சிறுசெலவு ஞானதான மாகும்.

இதிலுள்ள படங்களை அச்சிட உதவியதற்காக சென்னை அடையாற்றிலுள்ள T.P.H.-க்கு எனது மனமார்ந்த நன்றி உரியதாகின்றது. நூல்கள் அச்சிட்டுள்ளோர் அதனாலாகும் தொல்லைகளை நன்கறிவர். அதனால், தனது பல ஜோலிகளோடு, இதனை அச்சிடுவதற்கும் பிழை திருத்துவதற்கும் காகிதங்கள் சேக-ரிப்பதற்கும் படங்கள் தயாரிப்பதற்கும் மிகப்பெருஞ் சிரம-மெடுத்து இதனை ஒருவாறு முற்றுவித்த அடையாறு நூல்நிலையம் பண்டித K. ராமச்சந்திர சர்மா அவர்களுக்கு என்னுடையவும் வாசகர்களுடையவும் பெருநன்றி உரியதாகின்றது. இந்நூலை மிக அழகாகத் தொகுத்து அணிந்துரை தந்தும் பிழைதிருத்தம் எழுதியும் உதவிய அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ் விரி-வுரையாளர் திரு. ஆ. இராமசாமிப் பிள்ளை யவர்களுக்கும் என்-னுடைய ஆழ்ந்த நன்றி உரியதாகின்றது. இதனை அழகாக அச்சிட்டுக்கொடுத்த அச்சாபீஸாருக்கும் எனது நன்றி உரிய-தாகின்றது.

A. C.

# அணிந்துரை.

'ஈமயக் கிண்டர்கார்டன்' என்ற இச்சிறந்த நூல் உயர். சைவத் திரு. ஆ. சொக்கலிங்கம் பிள்ளையவர்களின் சிறந்த அறிவுக்களஞ்சிய வெளியீடாகும். இந்நூலிற் காணும் ஆற்றொழுக்கு நடையும், பொருளாழமும், ஆன்றவிந்தடங்கிய கொள்கையும் இந்நூலை ஒருமுறை படிப்போருக்கு 'இவ்வாசிரியர் ஒரு உயர்ந்த நூலாசிரியர்' என்றே ஐயமின்றிக் காட்டும்.

உடல் நலத்திற்காகவும், ஆன்ம நலத்திற்காகவும் பண்டு முதல் இன்றுவரை பல்லாயிர மக்கள் ஆண்டுதோறும் தவறாது வந்து தங்கும் திருக்குற்றாலத்துக்கு வடபாலுள்ள இலஞ்சி மாநகரில் வாழும் இவ்வாசிரியரவர்கள் பரம்பரைச் சைவ வேளாள குலத்து வந்த அறிவுடைச் செம்மல். இருபதாம் நூற்றாண்டுச் சடையப்ப வள்ளலாயும், 'தாளாற்றித் தந்த தம் பொருளெல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டே' என்ற தமிழ் மறையின் கருத்துக்கேற்பச் செழுங்கிளை தாங்கிய செல்வராயும், அற்றார் அழி பசி தீர்க்கும் அண்ணலாயும், தமிழ் நாடு தன் பழமைப் பெருமையுடன் என்றும் நின்று நிலவ வேண்டுமென்ற உயர் நோக்குடன் நெல்வேலி மாவட்டத் தலைவராகப் பலகாலிருந்து பணி புரிந்தவர்களாயும், இன்னாரினியரென்றில்லாது எல்லோரையும் அன்பென்னும் வலையுள் ஆழ்த்தி மகிழ்வித்தவர்களாயும், தமிழ்த்தாயின் சிறந்த தவப்புதல்வராயுமிருந்து அண்மையில் இறைவனடியில் இன்புற்று வாழ நமை விட்டுப் பிரிந்த ஏந்தல் I. C. ஈசுவரன் பிள்ளையவர்களுக்கு இணைபிரியா உயிர்த்தோழராயும், அணுக்கத் தொண்டராயும் இவ்வாசிரியரவர்கள் இருந்தனரென்றால், அவர்களின் இயற்கையாயமைந்த பெருங்குணநலத்துக்கு விளக்கமும் வேண்டுமோ? மேலும், அலைமேவு சீரலைவாய்க் கந்தப்பெருமானின் ஆலயத் திருப்பணியில் தம் இறுதி நாட்களை யர்ப்பணித்து ஆனந்தயோக நிட்டை கூடிய ஆறுமுக அடிகளாரின் அருந்தவ முதற் புதல்வர் எம் ஆசிரியரவர்கள். பிறப்பாலும் நட்புச் சிறப்பாலும் மேன்மையுற்ற இவ்வாசிரியரவர்களின் அறிவுப் பெருக்குக்கு வேறு ஆதாரங்களும் தேடவேண்டுமோ! 'குலத்தளவே யாகுங்குணம்',

மாந்தர்க்கு இனத்தி னியல்பதாம் அறிவு' என்ற ஆன்றோர் வாக்கு எவ்வாறு பொய்க்க முடியும்? அரைகுறை யாராய்ச்சியும், ஆணவத் திமிரும், 'பகுத்தறிவு' என்ற தற்காலப் பாழ்பட்ட விபரீத அறிவும் இக்கால மக்களைப் பல இன்னல்களுக்குள்ளாக்கி யிருப்பது யாவரும் நன்கறிந்ததே. 'கண்டதே காட்சி கொண்டதே கோலம்; ஆண்டவனுமில்லை ஆன்மாவுமில்லை; சமயமும் சடங்கும் மக்களைச் சோம்பேறியாக்கி ஒரு சிலரை வாழவைக்கும் சாதனக் கருவிகள்; எல்லாம் இயற்கையின் வழி; ஆட்டுவிப்பார் யாருமில்லை' என்று ஆணவத்தால் பிதற்றித் திரியும் அறியா மாக்கள் உலகையே மாற்றித் திரியும் இயல்பை எவ்வாறு பொறுப்பர் நன்மக்கள். அவ்வாறு அல்லலுற்று ஏங்கும் அகில உலக மக்களுக்கு நல்லறிவு புகட்டி நன்னெறியிற் செலுத்த வேண்டுமென்ற அருள்நோக்கு ஆறுமுக அடிகளாரின் அருந்தவப் புதல்வருக்குத் தோன்றியது குலப்பண்பே. அத்தகைய ஆர்வத்திலெழுந்ததே இந்நூல். எல்லோரும் இன்புற்றிருக்க எண்ணும் 'இலஞ்சி ஐயா'வின் இணைப்பாலுதித்த இனிய நூல்தான் இது.

மராமத்து மேற்பார்வையாளர் பதவியிலிருந்த ஆசிரியரவர்களுக்கு இவ்வுலகப் பருப் பொருட் குறைபாடுகளை நீக்கி மராமத்துப் பணி செய்யக் கிடைத்த வாய்ப்புப்போலவே, அப்பதவியிலிருந்து ஓய்வு பெற்றபின் பரலோகவாழ்வில் மக்கள் நல்ல நிலையடைய இத்தூல சூக்கும உடம்பையும் மராமத்து செய்து பண்படுத்துவதற்குப் பயிற்சிக்கூடமாக சென்னை அடையாற்றுக் கலா நிலையத்தின் தொடர்பு ஆசிரியரவர்களுக்குக் கிட்டியது ஓர் தவப்பயனே. அன்னிபெசன்டம்மையாரின் திவ்வியஞான சபை (Theosophical Society)யில் பலநாளாக ஓர் உறுப்பினராயிருந்து பல ஆகம சித்தாந்த நூல்களை ஐயந்திரிபறக் கற்று அறிவிற் சிறந்திருந்தனர் நம் ஆசிரியரவர்கள் என்பதற்கு, அவர்கள் இந்நூலின் இடைப்பாகங்களில் கூறும் அன்ன உடம்பு, பிராண உடம்பு, இச்சையுடம்பு, தூல சரீரம், சூக்கும சரீரம், மனித இயல்பில் தோன்றும் உணர்ச்சிகள், மக்களுள் வேறுபட்ட மனநிலை இன்னோரன்ன பல நுணுக்கக் கருத்துக்கள் போதிய சான்றும்.

சைவகுலத்தோன்றலாகிய ஆசிரியரவர்கள் இன்றும் தம் தினசரி வாழ்க்கை நியதிகளில் கடைப்பிடித்துவரும் வழிபாட்டு முறைகளாலும், உற்ற நண்பர்களுடன் ஆகமநெறி தவறாது நிகழ்த்தும் இனிய உரையாடல்களாலும் தமது சைவசமய உறைப்பை நன்கு காட்டுகிறார்கள். இவ்வுறைப்புள்ளம் அவர்களது நூலில் நன்கு ஊடுருவிச்செல்லக் காண்கிறோம். 'நாமார்க்குங் குடியல்லோம்' 'அஞ்சுவது யாதொன்றுமில்லை, அஞ்சவருவது மில்லை' என்ற சைவ வீரம் ஆசிரியரவர்கள் இந்நூல் பக்கம் 6-ல் கிறிஸ்து பாதிரிமார்களைப் பற்றிக்கூறும் கூற்றிலும், நூலுள் ஆங்காங்கே நாத்திகர்களுக்குக் கொடுக்கும் சாட்டையடிகளிலும், சைவ மக்களே தினம் செய்துவரும் முறையற்ற ஒழுங்கற்ற வழிபாடுகளைக் கண்டிப்பதிலும், நன்றாய்க் காணப்படுகிறது. உலகிலுள்ள மாசை நீக்கி ஒழுக்கத்தை நிலைநாட்ட வேண்டுமென்ற நம் அருட் சமயக் குரவர்களின் உயர்ந்த உறுதியுள்ளத்துடனேயே ஆசிரியரவர்கள் இந்நூலை நமக்கு ஆக்கித் தந்திருக்கின்றனர்.

கலை முதலாகத் தொழில்முறை யாவும் காத்து வளர்த்து வரும் இத்தமிழ்நாட்டிலே, பல்லவரின் நல்லாட்சியிலே தொடங்கப்பெற்றுப் பிற்காலச் சோழர்களால் போற்றி வளர்க்கப்பெற்ற சிற்பக் குகைகளும், கோயில்களும் கலைக்காட்சி நிலையங்களாக மாத்திரம் இருந்துவிடவில்லை. தமிழ்நாட்டுக் கம்மியரின் கைத்திறனைக் காட்டும் படிவங்களாயினும் அவைகள் கற்பனைக்கும் தெய்வக் கருத்துக்கும் இடம்பெற்றுத் தெய்வநிலை யெய்துவதாயிற்று. கோயிலமைப்பின் அளவு வரன்முறையும், தெய்வ உருவங்களின் தோற்றக்கூறுபாடுகளும், அவைகளின் பிரதிட்டையிடங்களும், மூலவர், அதிகார நந்தி, கொடிமரம், பலிபீடம், விநாயகர், தெக்கணாமூர்த்தி, சண்டேசுரர், நவக்கிரகங்கள், மூலத்தானம், மகாமண்டபம், சுற்றுவீதிகள், ஆவரணங்கள் இவைகளும் ஆகம நுட்பங்களை யடிப்படையாகக்கொண்டே ஆலயத்தை தெய்வ அருள் நிலையங்களாக அமைக்கின்றன. "நமது ஆலயங்கள் பெரியவையாயினும் சிறியவையாயினும் அவற்றின் அமைப்புமுறை திருப்பணி செய்வோரின் விருப்பத்தைப் பொறுத்ததல்ல. யோகப்பயிற்சியால் நெற்றிக்கண் பார்வைபெற்ற ஞானியர் விதித்திருக்கும் ஆகமநூல்களை யடிப்படையாகக்

கொண்டே அந்த ஆலயங்கள் அமைக்கப்படுவன ; அங்குள்ள விக்கிரகங்களும் வகுக்கப்படுவன ; அம்மூர்த்திகளும் பிரதிஷ்டிக்கப்படுவன ; அல்லாதவை சாஸ்திர விரோதமாகக் கருதப்பட்டு வழிபாட்டுக்கு ஏற்றவையாகா'' என்று ஆசிரியரவர்கள் (பக்கம் 25—வரி 1 முதல் 8ல்) கூறுவது குறிப்பிடத்தக்கது. 'ஆலய வழிபாட்டின் நோக்கம் மிருகத்தன்மையை யொழித்து மனிதத் தன்மையை யடக்கித் தெய்வத்தன்மையை ஒளிவீசச் செய்தலாம்' என்ற ஆசிரியரவர்களின் கூற்றே அன்னாரின் உண்மை யாராய்ச்சியையும், இந்நூல் எழுதித் தமிழனை அறிவு நிலையில் செலுத்த வேண்டுமென்ற பேரவாவினையும் தெள்ளிதின் காட்டுகின்றது.

இந்நூலுள் போற்றத்தக்க பகுதிகள் பல நிறைந்திருக்கின்றன. தமிழ் மக்களின் புராண இதிகாச நூல்களின் உட்கிடக்கையை விளக்கி, தமிழனின் சமூக வாழ்க்கையில் அன்றாடம் காணப்படும் செயல்களின் உண்மைத் தத்துவப் பொருளை நன்கு விளக்கி, எக்காலத்தும் அழியாது நிலைத்திருக்கும் அறிவு வாழ்க்கையைக்காட்டி நிலைநிறுத்துவதே ஆசிரியரவர்களின் குறிக்கோள் எனத் தெரிகிறது மானிட உடம்பைச் சிவன் கோவிலாக உருவகித்துக் காட்டியிருப்பதும், காணும் உலகப்பொருள்களெல்லாம் சிவமயமாமெனை விளக்கிக் கூறுவதும் தமிழகச் சீவன்முத்தர்கள் கண்ட உண்மைகளை யடிப்படையாகக்கொண்ட ஆசிரியரவர்களது ஆராய்ச்சிக் குறிப்புகளாம். உலகமக்களின் தற்காலச் சிற்றறிவுநிலையும், முற்காலப் பேரறிஞர்களின் அருள்நிலையும், தமிழ் நாட்டு அழியாச் செல்வங்களாகிய ஆலய நிலையும் அமைப்புமுறையும் இந்நூலுள் நன்கு சித்தரிக்கப்பட்டிருக்கின்றன. இந்நூல் 5, 6-வது பக்கங்களில் ஆசிரியரவர்களின் ஆருயிர் நண்பர் திரு. I. S. முத்துக்குமாரசாமிப் பிள்ளை யவர்களுக்கும், குற்றாலஞ் சாரலுக்கு வந்திருந்த பகுத்தறிவாளர் சிலருக்கும் நடந்ததாகக்கூறும் வாக்குவாதப் பகுதி குறிப்பிடத்தக்கது. நான் என்பது ஆன்மாவே, உடம்பல்ல குணமல்ல அறிவுமல்ல என்ற கருத்தின் விளக்கமும் ; ஜீவசக்தி, குண்டலினி, பிராணசக்தி என்பனவற்றின் விவரங்களும் ; ஆன்மாவின் ஆறு நிலைகளை ஆலயங்களில் காணும் பொருள்கள், விக்கிரகங்களுக்குப் பிரதிட்டையவசியம், கோயிற்கோபுர மூலத்தானமூர்த்தி நிலை, கோயில் வழிபாடு செய்-

வோர் கொண்டுசெல்லும் தேங்காய் பழம் முதலிய நிவேதனப் பொருள்களின் உண்மைத் தத்துவம், கோயிலில் வழிபடும்முறை இவற்றின் விளக்க விரிவுகளும் இந்நூலைப் படிப்போருள்ளத்தில் 'எவ்வளவு ஆழ்ந்த உண்மைக் கருத்துகள் ஒருங்கே திரட்டித் தரப்பட்டிருக்கின்றன' என்ற நன்றியூறிய இன்பத்தையளிக்கின்றது. ஆசிரியரவர்கள் நூலையணுகும் முறை ஒவ்வொருவரும் தனித்தனியே படித்து இன்புறவேண்டியதே.

இச்சிறந்தநூல் தமிழ் மக்கள் யாவரும் படித்துப் பயன்பெற வேண்டுமென்ற நோக்கத்துடனேயே எழுதப்பட்டிருக்கின்றது. இந்நூலிற் காணப்படும் சொற்கள் மொழிநடை வாக்கிய அமைப்பு எல்லாம் மிக எளிமையாகவே அமைந்திருக்கின்றன. மிக நுணுகிய கருத்துகளை விளக்க ஆசிரியரவர்கள் கையாளும் உவமானங்கள் மிக எளிமையும் நாடோடியும் ஆனவை; அவைகளின் நயமும் பொருத்தமும் மிகப் போற்றத்தகுந்தவை. சான்றுகச் சில எடுத்துக்காட்டுவது ஈண்டு மிகையாகாது.

1. தம் மதக்கோட்பாடுகளின் உண்மையறியாது பழித்துரைத்தல் கண்ணுடி வீட்டில் வாழ்வோர் கல்லெறிதலை ஒக்கும்;

2. பக்குவமடைந்த ஞானிகள் ஆலய வழிபாட்டை நீக்கினர் என்று அறிவிலிகளும் அதனைச் சான்றுகக் காட்டிக் கோயிலைப் பழிப்பதானது சமையல் செய்பவருக்குக் கோடரி உதவாது எனவே விறகு வெட்டுபவனுக்கும் அது உதவாது என வாதிடுவதை ஒக்கும்;

3. ஒரே காட்சி பலருக்குப் பலவிதமாய்த் தோன்றுவது அவரவரின் மனக்கிடக்கையாலே என்பதை சாலையோரத்தில் சாதாரணமாய்த் தூங்குபவனைக் கண்ட பலர் பலவேறுபட்ட எண்ணத்தால் மதிப்பிடுவதற்கு ஒப்பிடுவது (பக்கம் 17, 18);

4. மனித அறிவின் உல்க நாட்டம்—குறைந்த பானை நீரைத் தேடுவதற்கும், பரம்பொருள் நாட்டம் பரந்த கடல் நீரைத்தேடுவதற்கும் ஒப்பிடுவது;

5. பொருளின் நன்மைதீமை அதன் தன்மையாலன்று, அத-
னைப் பயன்படுத்துபவனின் செயலால் என்பதற்கு வெடி-
மருந்தும் பனிநீரும் பயன்படுத்துபவனால் நன்மையும்
தீமையும் பயக்கும் எனக்காட்டுவது ;

6. கோயிற் சிலைகளின் கீழுள்ள இயந்திரம் அவசியமென்-
பதைப் பலவகை அழகிய பாகத்தையுடைய மோட்டார்
வாகனத்துக்கு அதன் முன்புறம் மறைந்திருக்கும் இயந்-
திரத்தின் இன்றியமையாமை கொண்டு விளக்குவது ;

7. சுவரை வைத்துத்தான் சித்திரம் எழுதவேண்டியதைப்
போல ஆரோக்கிய உடம்பில்தான் அழகாக உயிர்வாழ
முடியும் என்பது ;

8. 'ஒருவனே தேவன், அவனை விளக்கிக்காட்டும் மதங்கள்
பல' என்பதை ஒரு மரத்தைச் சுற்றிக்காணும் பல பட்-
டைகள் ( மேல் தோடுகள் ) கொண்டு விளக்குவது ;

9. பிள்ளைகளை வளர்ப்பதில் பெற்றோர்கள் அக்கறை காட்டா-
திருத்தலை, கழுதை குட்டிபோட்டு அதைத் தெருவில்
மேய்ந்துவர விடுதலோடு ஒப்பிடுவது ;

10. சடம்புக்கயிற்றில் வீணாகானம் ஏற்படாது, வீணைத்தந்தி-
யில் வில்லுப்பாட்டு ஓசை எழாது, அதுபோல உத்தம
உடம்பில் இழிவான இச்சையலைகள் ஏற்படாதென்று
காட்டுவது ;

11. கடற்பஞ்சில் தண்ணீர் கலந்து நிறைந்திருப்பதுபோல்
அன்னமயகோசமும் பிராணமயகோசமும் கலந்திருக்-
கிறது என்பது ;

12. தாண்டவ அணுவின் உருவகமே தில்லைக்கூத்தனது திரு-
வுரு எனக்காட்டுதல் ;

— இன்னோரன்ன உவமானங்களும், — தமிழ்நாட்டு மக்களின்
நாவில் பயிலும் மிகஎளிய பழமொழிகளாகிய :

'அடிமேலடி யடித்தால் அம்மியும் நகரும்'

'தாயைப்போல பிள்ளை நூலைப்போல சேலை'
'குதிரை யிருப்பறியும் கொண்ட பெண்டாட்டி
குறிப்பறிவாள்'
'இனம் இனத்தோடே, வெள்ளாடு தன்னோடே'
'கடவுளுக்கு மட்டையடி முதல் வைப்பாட்டிவரை'

—என்பன போன்ற தொடர்களும் ஆசிரியரவர்களால் கையா-ளப்பட்டு, இந்நூலின் கருத்துக்கள் பண்டிதர் முதல் பாமரர் வரை யாவராலும் நன்கு அறியப்படவேண்டுமென்ற உயர்ந்த நோக்கத்தைக் காட்டுகின்றது.

இன்னும் தமிழ் மக்களின் அன்றாட வாழ்வில் காணப்படும் அரசு சுற்றல், பைன்மரக்காட்டில் குடியிருத்தல், அறுசுவை யுணவு தயாரித்தல், சிறுபிள்ளைகளுக்குக் காப்பிடுதல், அரைஞாண் கட்டி அதில் நாய்ப்படம் பொறித்த காசு, தாயத்து, திறவுகோல் கோத்தல், நெற்றியில் பொட்டிடுதல், சடைப்பின்னல், சடை யலங்காரம், கோயிற் சடங்குகள், வீட்டுச் சடங்குகள், இறக்குங்-காலைத் தோன்றும் உணர்ச்சிகள், இறுதிச் சடங்குகள் முதலிய-வற்றின் உண்மைப் பொருள்களை நூலில் ஆங்காங்கு விளக்கி-யிருப்பது யாவரும் அறிந்தின்புறத்தக்கதாம்.

நூலுள் சேர்க்கப்பட்டிருக்கும் படங்களும், பிளான்களும், குறிப்புகளும் மிகத்தெளிவாக இருக்கின்றன. ஆசிரியரவர்கள் கூறும் கருத்துகளை விளக்க அவை பெரிதும் பயன்படுகின்றன.

இறைபணி நிற்கின்ற பெரிதும் மதப்பற்றுடைய ஆசிரிய-ரவர்கள் கோயில்வழிபாட்டில் தற்காலம் காணும் முறைகேடான செயல்களையும் மதபோதனையை நீக்கிய தற்காலக் கல்விமுறையின் குறைபாடுகளையும் நன்றாக எடுத்துக்காட்டி அதனைச் சீர்திருத்த வேண்டிய அவசியத்தை வற்புறுத்துவது பாராட்டத்தக்கது. ஆலயப்பிரவேச அடிப்படை யுண்மைகளை ஆசிரியரவர்கள் இந்-நூலில் 13-வது பக்கத்தில் நன்கு விளக்கிக் காட்டியிருக்கிறார்கள். 'வழிபாடு' என்ற சொல்லுக்கு 'முன்னோர் காட்டிய வழியில் பின்பற்றி நடப்பதே' என்று பொருள்கொள்ளுவது குறிப்பிடத் தக்கது.

ஆயினும் தனித்தமிழுணர்ச்சி துளிர்த்தோங்கிவரும் இந்நாளில் அறிவுக்கருவூலமாக வெளிவரும் இந்நூலுள் ஆங்காங்கு பல வடசொற்களும் பிறசொற்களும் சொற்றொடர்களும் காணப்படுகின்றன; அவைகளுக்குப்பதில் சிறந்த தமிழ்ச் சொற்களையமைத்துக்கொண்டால் நலமாயிருக்கும். குமரிமுதல் வேங்கடம் வரை விரிந்துகிடக்கும் தமிழ்நாடெங்கும், ஏன், தமிழறிந்த ஏனைய நாடுகளிலும், பயன்படவேண்டிய இச்சிறந்த நூலுள் அருகிக் காணப்படும் திருநெல்வேலிப் பேச்சுகளும் வழக்காறுகளும் நீக்கப்பட்டு பொதுச்சொற்கள் அமைக்கப்படலாம்.

ஆழ்ந்த அறிவோ நிறைந்த புலமையோ, பரிபக்குவ நிலையோ, ஒன்றும் அடையப்பெறாத எளியேனாகிய என்னையோர் பொருளாயெண்ணி, ஆசிரியர் இச்சிறந்த நூலைப் பார்வையிடுமாறு பணித்த பெருமைக்கு நான் என்றும் கடப்பாடுடையேன். நூலுள் ஆங்காங்கு அருகிக் காணப்பட்ட அச்சுப் பிழைகளைத் திருத்திச் செய்த என் சிறு உதவி இந்நாலின் பெருமைக்கு இராமர் அன்று கட்டிய அணைக்கு அணிற்பிள்ளை செய்த உதவிபோலாம்.

> 'மனநலத் தினதும் மறுமை மற்றஃதும்
> இனநலத்தின் ஏமாப் புடைத்து'

என்ற குறளுக்கு இலக்கே எனக்கு இந்நூலும் இந்நூலின் ஆசிரியரவர்களும் தந்த பெரும்பேறு.

அண்ணாமலைநகர்,
28–4–52.

ஆ. இராமசாமி, M.A., L.T.

# பொருளடக்கம்.


| | | | பக்கம் |
|---|---|---|---|
| 1. | பகுத்தறிவு | .... | 11 |
| 2. | பண்டையோர் கிண்டர்கார்டன் | .... | 15 |
| 3. | ஆலய உட்பொருள் மூவகை | .... | 19 |
| 4. | பணம் பத்துக் குணஞ் செய்யும் | .... | 24 |
| 5. | அண்டத்திலுள்ளது பிண்டத்தில் | .... | 28 |
| 6. | ஆன்ம விதங்கள் | .... | 56 |
| 7. | மனிதனுடைய அன்ன உடம்பு | .... | 64 |
| 8. | மனிதனுடைய பிராண உடம்பு | .... | 77 |
| 9. | மனிதனுடைய பிராண உடம்பு (தொடர்ச்சி) | .... | 83 |
| 10. | மனிதன்—இச்சையுடம்பு | .... | 123 |
| 11. | மனிதன்—மன உடம்புகள் | .... | 139 |
| 12. | மனிதன்—பிற உடம்புகள் | .... | 167 |
| 13. | மனித உடம்புகள்—முடிப்புரை | .... | 178 |
| 14. | மனிதன்—ஆன்மா | .... | 182 |
| 15. | பிண்டம்—உலகம் | .... | 189 |
| 16. | உலகம்—ஏழு ஆதாரங்கள் | .... | 195 |
| 17. | உலகப்பள்ளியில் மூன்றும் மூல வகுப்பு | .... | 204 |
| 18. | உலகப்பள்ளி—நான்காம் மூலவகுப்பு | ... | 209 |
| 19. | உலகப்பள்ளி—நான்காம் மூலவகுப்பு (2) | .... | 214 |
| 20. | உலகப்பள்ளி—ஐந்தாம் மூலவகுப்பு (1) | .... | 218 |
| 21. | உலகப்பள்ளி—ஐந்தாம் மூலவகுப்பு (2) | .... | 224 |
| 22. | உலகப்பள்ளி—ஐந்தாம் மூலவகுப்பு (3) | .... | 231 |
| 23. | உலகப்பள்ளி—ஆறாம் மூலவகுப்பு | .... | 233 |

பக்கம்

| | | | |
|---|---|---|---|
| 24. | உலகம்—சப்த உலகங்கள் | .... | 237 |
| 25. | சூரிய மண்டலம்—பிரம்மாம்சம் | .... | 239 |
| 26. | சூரிய மண்டலம்—விஷ்ணு அம்சம் | .... | 246 |
| 27. | சூரிய மண்டலம்—சிவாம்சம் | .... | 254 |
| 28. | புராணங்கள்—பாற்கடல் கடைதல் | .... | 258 |
| 29. | பூமண்டலத் தொடர் | .... | 261 |
| 30. | புராணங்களின் கால அளவு | .... | 265 |
| 31. | புராணங்களில் விகாசமுறை | .... | 267 |
| 32. | சூரிய மண்டலம் | .... | 276 |
| 33. | சூரிய மண்டலம்—நைமித்திகப்பிரளயம் | .... | 278 |
| 34. | ஆலய விக்கிரகங்கள் | .... | 283 |
| 35. | ஆலய விக்கிரகங்கள் (தொடர்ச்சி) | .... | 292 |
| 36. | அண்டம் | .... | 301 |
| 37. | அண்டம் (தொடர்ச்சி) | .... | 307 |
| 38. | எவ்வேழு | .... | 313 |
| 39. | உலக உடம்புத் தொகுப்பு | .... | 314 |
| 40. | முடிவு | .... | 315 |
| | பின்னிணைப்பு (1) | .... | 321 |
| | பிழை திருத்தம் | .... | 335 |

# சமயக் கிண்டர் கார்டன்

## காப்பு

" சாட்டி நிற்கும் அண்டமெலாம் சாட்டையிலாப் பம்பரம்போல்
ஆட்டுவிக்குங் குற்றாலத் தண்ணலார் பதம்போற்றி."

## வேண்டுகோள்

**ஆலய வழிபாடு**

அறிகுறியாக அறிவைப் பெருக்கும்;
அருள்நெறியாக அன்பை வளர்க்கும்;
அனுபவவாயிலாக அழியாப்
பேரின்பத்திற்கு அடிகோலும்.

அம்முறைகளைக் கற்றவர்
மற்றவருக்குக்கூறிப் பயன்பெறுக.

# முன்னுரை

தென் தமிழ்நாட்டில் சீரும் சிறப்பும் வாய்ந்த பல இடங்களில் திருக்குற்றாலம் ஒன்று. அது திரிகூட மலைச்சாரிவில் உள்ளது; அகத்தியர் உறைவிடங்களிலொன்முகக் கருதப்படுவது; முனிவர் பல்லோராலும் போற்றப்படுவது; அதனால் சாந்தி அலைகளில் என்றும் மூழ்கி நிற்பது. அங்குள்ள அருவியும், ஆலயமும் நாயன்மார்களால் பாடப்பெற்றவை; புலவர்களால் புகழப்பட்டவை; ஓவியரால் வரையப்பெற்றவை; உடல் நலத்திற்காகவும், ஆன்ம நலத்திற்காகவும் பண்டு முதல் இன்று வரை பல்லாயிர மக்களால் பாராட்டப்படுபவை; அவ்விடத்து அழகும் வளமும் ஒருக்கால் இருக்கால் அனுபவித்தோர் மனத்தில் எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் இன்ப ஊற்றை எழுப்பும்; குறவஞ்சியிலும், குற்றாலத்தலபுராணத்திலும், சம்பந்தர் தேவாரத்திலும் அவை சொல்லுருக் கொண்டு இலங்கும்.

அத் திருக்குற்றால வம்பார் குன்றத்து நீடுயர் சாரலில், செல்வ மல்கு செண்பகம், பாதிரி, சம்பங்கி போன்ற நறும்பூ மரங்களும், தெங்கு, வாழை, மா, தேன்பிலிற்றும் பலா முதலிய தீங்கனி மரங்களும், ஏலம், கிராம்பு, சாதிக்காய், அகில், சந்தனம், முதலிய வாசனை மரங்களும், கோலவண்டு யாழ்செய் கோங்கு, வேங்கை, தேக்குப் போன்ற கொம்பார் சோலைகளும் நிறைந்து வளர்ந்திருக்கும். அடிவாரத்தில் குறும்பலாவீசன் ஆலயமும், மொட்டைக் கோபுரமும், சாட்டி நிற்கும் அண்டமெலாம் சாட்டையிலாப் பம்பரம்போல் ஆட்டுவிக்கும் அண்ணலார், தமது ஐந்தொழில் முறைகளை ஆடிக்காட்டும் பஞ்ச சபைகளில் ஒன்றாகிய அழகிய செப்போடு மேய்ந்த சித்திர சபையும் அமர்ந்திருக்கும். காலத்திற்கும் குண்டலிக்கும் அறிகுறியாகிய பாம்புருக் கொண்ட வாசுகியின் பொருட்டு இறைவன் தன் படைப்பு முறையை இங்கு திவ்ய ஆடிக்காட்டியதாக ஐதீகம்.

> " குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தா, உன் குரைகழற்கே
> கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே. "

என்ற மாணிக்கவாசகர் மணிவாக்கு இங்கு கோயில்கொண்டிருக்கும் கூத்தப்பெருமானை நோக்கியே எழுந்தது. இவருடைய

திருத்தம், ஆண்டுதோறும் இவ்வாலயத்தில் நடைபெறும் மார்கழித் திருவாதிரைத் திருவிழாவில் தாண்டவ தீபாராதனை வடிவமாகக் காட்டப்படும். அப்போது ஆனந்தக் கூத்தருடைய அழகிய திருக்கோலமும், ஐம்பத்தொரு அக்ஷரங்களையும் திரிகாலக் கார்வையில் வாசிக்கும் மேள ஒலியும், அத்தாளத்திற்கு இசைவாக ஏழடுக்குத் தீபாராதனைத் தட்டு ஆடுவதும், கண்டா-மணி முழங்குவதும், தொண்டர் கண்டு அனுபவிக்கவேண்டிய-வையாம்.

இத்திரிகூட மலையையொட்டி, என் பிறப்பிடமாகிய கடை-யத்து அய்யம்பட்டர் சுவாமிகள் முத்திபெற்ற வில்வவனக் குன்று—நித்திய கல்யாணி கோவிலும், அப்பால் அத்திரி ஆசிரமத்துச்சிவசைல மலை—கருணையாறும், பின் அகத்தியாசிரமத்துப்பொதிகைமலை — பொருனையாறு — கலியாண தீர்த்தம் —பாப விநாசம் ஆகிய பல புனிதக் கட்டங்களும், கிழக்கு நோக்கித் தொடர்ந்திருக்கின்றன. இவற்றின் வனப்புக்களைக் கண்டனுபவிப்பதைத் தவிறக் கேட்டனுபவித்தல் இயலாது.

இத்தகைய மாட்சிகொண்ட திருக்குற்றாலத்திற்கு வடக்கே ஒரு மைல் தூரத்தில், சித்திரா நதிக்கரையில், கலியுக வரதராகிய முருகப்பெருமான் கொலுக்கொண்டிருக்கும் ஆலயமொன்று உள்ளது. அது திருவிலஞ்சிக் குமாரர்கோவில் என்று அழைக்கப்படுவது. அங்கு சிலை கொண்டிருக்கும் முருகக் கடவுளின் உயரமும், வனப்பும், கம்பீரத் தோற்றமும் கண்டவர் மனத்தைக் கனியச்செய்வன. இரு மருங்கிலும் வள்ளி தெய்வானை யுடன் அருள் சொரிந்து நிற்கும் அப்பெருமானுக்கு, உச்சி முதல் உள்ளங்கால் வரை சுகந்தகளபஞ்சாத்திச் சந்தனக் காப்பிட்டு ஒருமுறை தரிசனம் செய்தவர்கள், அவர்தம் வடித்தெடுத்த முருகையும் மந்தகாசமுகத்தையும், ராஜகம்பீரத்தையும், எளிதில் மறக்கமாட்டார்கள். அந்தலேபன காலங்களில், ஒருமைப் பட்ட மனத்துடன் கூர்ந்து தியானிப்பவருக்குக் குனிந்த புருவமும், கொவ்வைச் செவ்வாயும், அழகொழுகு முகமும், அருள் ஒழுகு கண்களும், சந்தனவண்ணச் செம்பொன் மேனியும், புன்முறுவல் பூத்த இதழுமாய், அவர் வானுலகத்திருந்து இறங்கித்

தம்மை ஆட்கொள்ளத் தம்மை நோக்கி நடந்து வருவதுபோலவே தோன்றும். அது ஒரு கண்கொள்ளாக் காட்சியாய், மனம் கொள்ளா மாட்சியுடையதா யிருக்கும்.

அவருடைய ஆலயமும், பெரிதும் சிறிதுமன்றி நடுத்தரமாய், அழகிய பெட்டகம் போல அமைந்துள்ளது. ஊரை விட்டு விலகி, அது ஒரு மைல் தூரத்தில் காட்டுக்கோயில் போல விளங்குவதால், யாதொரு சந்தடியுமற்ற அவ்விடத்தில் எப்பொழு-தும் ஒரு மட்டற்ற அமைதியும், ஆன்ம சாந்தியும் நிறைந்திருக்கும். அத்துடன் இயற்கை வனப்பும், செயற்கை வனப்பும் அங்கு போட்டியிட்ட வண்ணமாகவும் இருக்கும். ஆலயத்தின் ஒரு புறத்தில் தேனருவித் திரையெழுப்பி, வானின் வழி ஒழுகத் தென்றல் மேகந் தவழும் நீலவண்ணத் திரிகூட மலைப் பசுந் தோற்றம்; அதில் தேவலோகமக்கள் வீசுகின்ற வெள்ளி வலை போன்று சிதறி வீழும் அழகிய அருவி. இன்னொரு புறத்துப் பசும்பொன்னும், மரகதமும் கலந்து நெய்யப்பட்ட பச்சைக் கம்பளம் விரித்தாற் போன்ற பரந்த நன்செய்ப் பயிர்; இளவெயிலில் அப்பசும் பயிர் பளபளவென்று சிற்றலை வீசும் வனப்பு; அதன் இடையிடையே பணி செய்து நிற்கும் பாவை-யரின் பல நிறங்கொண்ட சேலைகளின் பகட்டு. மற்றொரு புறத்தில், வண்டுகள் பண்பாடும் மா, பலா, தெங்குகள் நிறைந்த சோலைகளின் நறுமணம்; அவற்றினூடே சலசலவென்று ஒலித்-தோடும் சித்ரா நதியின் தேவகானம்; இவையெல்லாம் ஒன்றுகூடி ஆலயத்தின் வனப்பை ஆயிரம் மடங்கு அதிகப்படுத்தா நிற்கும். "சோலை கிளர்ந்து சாலி விளைந்து சூழும் இலஞ்சிப் பெருமாளே" என்றும், "இலஞ்சிய மென்று விரிஞ்சன் நவின்ற இலஞ்சி யமர்ந்த பெருமாளே" என்றும் பலவாறாக இம்முருகனை அருண கிரியார் பாடியிருப்பது இந்தக் கட்டழகில் ஈடுபட்ட மயக்கங் காரணமாகவே இருக்கவேண்டும். தமிழ்நாட்டைப் புனிதப் படுத்திய பெரியாருள் ஒருவராகிய பட்டணம் ஜோசியரென்ற மகான் நெடுங்காலம் இங்கு தங்கித் தவமியற்றினர். அம்முனிவர் ஆசிரமும் கிணறும் இன்றும் தேர் வீதியில் இருக்கின்றன.

இந்த ஆலயத்தின் கிழக்கு வாயிலில், இறைவன் சன்னிதியில், சொக்கப்பனை மண்டபம் என்ற ஒரு நாலுகாற் குறடு இருக்கின்-

றது. காலை மாலை இக்குறட்டில் இருந்துகொண்டு இவ்வளவு வனப்பையும் ஒருங்கே காண்பவர், தாம் அனுபவிப்பது கனவோ நனவோ என்று ஐயுறுகிறார். இந்தக் குறட்டில், மாலை நேரத்தில், இலஞ்சியிலிருந்து உலாவச் செல்லும் ஒருசிலர் சற்று நேரம் உட்கார்ந்து சாந்திபெறுவது வழக்கம். அவருள், நானும் என் ஆருயிர் நண்பரில் ஒருவராகிய I. S. முத்துக்குமாரசுவாமி அவர்களும் இருவர். முத்துக்குமாரசுவாமி பிள்ளையவர்கள் இலஞ்சியிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் "சின்னூறு" என்றும், அப்பாத்துரைப் பிள்ளையென்றும் அழைக்கப்படும் ஒரு பிரபலஸ்தர். அவர்கள் இந்தக் கோவிலுக்கு நெடுங்காலம் தர்மகர்த்தராயிருந்து தொண்டு புரிந்தவர், கோபுரத்தையும் புதுப்பித்தவர், முருகனிடம் மிகுந்த பக்திசிரத்தை யுடையவர். நாங்கள் இந்தக் குறட்டிலிருக்கும் நேரம், அநேகமாக ஆலயத்துள் மாலை ஆராதனை நடைபெறும் நேரமாக விருக்கும். மேள ஒலியும், கண்டாமணி ஓசையும் நாற்புறமும் இன்னிசை பரப்பும். மூலஸ்தானம் எங்களுக்கு எதிர்முகமாயிருந்தபடியால், அங்கு ஆராதனை நடைபெறும்போது அப்பாத்துரைப் பிள்ளையவர்கள் எழுந்து நின்று கைகூப்பி வணங்கிக்கொண்டிருப்பார்கள். அந்நேரத்தில் ஒருநாள், குற்றாலஞ் சாரலுக்கு வந்திருந்த அயலூரார் சிலர் அங்கு நின்றுகொண்டு,

"நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுஷ்பஞ் சாத்தியே
சுற்றிவந்து முணமுணென்று சொல்லுமந்திர மேதடா!"

என்று சொல்லிச் சிரித்தனர்.

அதைக் கேட்ட எனது நண்பர், அவர்களை நோக்கி விளையாட்டாக, "இந்தப் பகுத்தறிவுப் பாட்டு எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முற்பட்டதாயிற்றே! ஆயினும் இந்த உயிரற்ற வழிபாடு இவ்வளவு காலம் நிலைத்திருக்கக் காரணம் என்னய்யா?" என்று குறுஞ் சிரிப்போடு கேட்டனர்.

"அது மக்களுடைய மடைமை", என்றார் வந்தவரில் ஒருவர்.

"பண்டு நாயன்மார்கள், ஆழ்வார்கள் என்ற பலர் ஆலயங்களைப் போற்றி வந்ததாகச் சொல்லுகிறார்களே! அவர்களும் மடையர்கள்தானா?"

"அவர்கள் சரித்திரங்களைப் படித்துப் பார்த்தால் அவர்கள் வெறும் மூடபக்தியில் மூழ்கிக்கிடந்தவர் என்பது நன்றாக விளங்குமே!"

"நீங்கள் கிறிஸ்தவர்களா?" என்று என் நண்பர் ஐயுற்றுக் கேட்டனர். கூட நின்றவரில் ஒருவர் "இல்லை" என்றனர்.

"நீங்கள் கிறிஸ்தவப் பாதிரிமாரைப் போலவே பேசுகிறீர்-கள். அவர்கள் ஞானத்தின் சிகரத்தை அடைந்துவிட்டதாகத் தம்மைத்தாமே ஏமாற்றிக்கொண்டு, நம்மை அஞ்ஞானிகளென்று பெயர் சொல்லி அழைக்கின்றனர்; இந்துக்கள் என்றுகூடக் கூறுவ-தில்லை. அவர்களுடைய வேத புஸ்தகம் மிகச் சிறிய நூல். அதன் பொருளே அவருக்கு விளங்காமல் அவருக்குள் 300-க்கு மேற்பட்ட பிளவுகளும், பிணக்குகளும் இருந்துவருவதாக அவரே ஒப்புக்கொள்கின்றனர். அவருள்ளும் சில கூட்டத்தார் நம்மைப் போலவே ஆலயங்கள், உருவங்கள், தேர்திருவிழாக்கள் எல்லாம் கொண்டாடுகிறார்கள். அக் கூட்டத்தைச் சீர்திருத்த வகையறியாத ஞானப் பாதிரிமார் மூட இந்துக்களைச் சீர்திருத்த வந்திருக்கிறார்களாம். அது அவர்களுடைய மமதை, அதிகாரத் திமிர், அறிவுடைமையுமல்ல. "தேவர்கள் மிதிக்க அஞ்சும் இடத்தில் மூடர்கள் சாடிக் குதிப்பார்கள்", என்பது அவர்கள் பழமொழி. அதாவது அறிவாளிகள் அஞ்சும் இடத்தில் மூடர்கள் துணிந்து குதிப்பார்களாம். அதுபோன்றதே அவர்கள் நடையும். நீங்களும் அவர்களைக் கேட்டே பேசுகின்றீர்களா அல்லது நம்முடைய நூல்களை ஆராய்ந்து பார்த்து—"

"இதற்கு ஆராய்ச்சியென்ன வேண்டியிருக்கிறது? நாங்கள் பிறந்த சமயந்தானே அது. எங்களுக்கு அது தாய்ப்பால்—இந்து மதமென்றால் வெறும் ஆபாசக் கட்டுக்கதைக் களஞ்சியம் என்பது ஆராய்ந்தா அறியவேண்டும்? நம் மதாசாரங்கள் பழைமைப் பெட்டகம், குருட்டு நம்பிக்கைக் களஞ்சியம், மூடக் கொள்கை கள் நிறைந்த குப்பை வண்டி—"

"ஆமாம், விவேகானந்தர் என்ற ஒருவர் வடக்கே இருந்த-தாகச சொல்லுகிறார்களே, அவரைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்-கிறீர்களா—(ஒருவர் தலையசைத்தார்). அவர் உங்களவ்வளவு

படித்தவரா, அல்லது மட்டமா? அவருடைய குருநாதர் ஸ்ரீராமகிருஷ்ணர் என்ற ஒருவர் தம் சொந்த அனுபவத்திலிருந்து ஆலயங்களைப் பற்றி ஏதேதோ சொல்லியிருப்பதாக உங்களைப் போன்ற பீ. ஏக்கள், எம். ஏக்கள் எழுதி வைத்திருக்கிறார்களாமே, அவற்றையாவது படித்துப் பார்த்திருக்கிறீர்களா? அல்லது அவர்களும் கோட்டிக்காரர்கள்தானா?"

எதிர்பாராத முறையில் பேச்சுத் திருகல் முறுகலாவதைக் கண்டு அவருள் ஒருவர், "ஐயா, நாங்கள் இந்துமதத்தைப் பற்றி வழக்காட வரவில்லை. நம் நாட்டில் பாட்டாளிகள் பட்டினி பொறுக்காது சோற்றுக்கழவும், குழந்தைகள் பாலுக்கழவும், பெண்டு பிள்ளைகள் பழந்துணிக் கழவும் இருக்கும்போது, இந்தக் கோவில்களிலுள்ள வெறும் கல்லுருவங்களுக்காகக் குடங்குடமாகப் பாலையும், குறுணிக்கணக்காகச் சோற்றையும், நவரத்ன நகைகளையும், தங்க வெள்ளி வாகனங்களையும், தட்டுமுட்டுக்களையும், பட்டுப் பரிவட்டங்களையும் பாழாக்குவது பெரிய குற்றம் என்பது எங்கள் கருத்து. அதனால் இந்த ஆலயங்கள், மக்களை ஏமாற்றி வயிறு வளர்க்க ஏற்பட்ட சோம்பேறிச் சாவடிகளென்பது பகுத்தறிவு வாதிகளாகிய எங்களுடைய உறுதியான கொள்கை. தயவுசெய்து வருத்தப்பட்டுக்கொள்ளாதேயுங்கள். நேரமாய்விட்டது, நாங்கள் போய்வருகிறோம்" என்று கூறிவிட்டுக் குற்றாலத்தை நோக்கி அவர்கள் புறப்பட்டுவிட்டனர்.

இது சுமார் பதினாறு வருஷங்களுக்கு முன்பு நடந்த கதை. ஆனால் கூட நின்று இவற்றைக் கேட்டுக்கொண்டிருந்த எனக்கு ஆழ்ந்த உணர்ச்சியொன்று அப்போது எனது உள்ளத்திலே உண்டாகியது "இப் பகுத்தறிவு வாதிகள் வேறு என்ன செய்யினும் செய்யாதுபோயினும், பிறரைத் தட்டியெழுப்பி உட்காரச்செய்து கண் திறந்து ஆலோசிக்கச் செய்கின்றனர்" என்பது முதல் உணர்ச்சி. "எவரும் தக்க ஆராய்ச்சியின்றி ஒன்றைப் பழிப்பதும் முறையன்று," என்று தோன்றினும், இந்துமதக் கதைகள் ஆபாசமற்றவைகள் என்பதையும் என் மனம் ஏற்கவில்லை. இவற்றோடு, ஆலயங்களின் உண்மைதான் என்ன, புராணங்களில் ஏதாவது பொருள் உண்டா? அல்லது

அவை வெறும் புழுகுதானா? என்றறிய ஓர் ஆவலும் உண்டா-யிற்று. அதன் பயனாகப் பல நூல்களைப் புரட்ட நேர்ந்தது. அவற்றில் பல பயனற்றவையாய் இருந்தன. ஒருசில என் சிற்றறி-விற்கு ஒத்தனவாகத் தோன்றின. பின்னர், நம் நாட்டில் நிலவும் ஏனைச் சமயங்களின் தத்துவங்களையும் ஒருவாறு அறிவது அவசிய மாயிற்று. அவை யாவற்றினின்றும் திரட்டிய ஒருசில கருத்துக்-களைப் பிறருக்கும் பங்கிட்டு வழங்கும் ஆவலுடனேயே இந்நூல் எழுதப்படுகின்றது. அறிஞர் குற்றங் களைந்து குணம் கொள்க.

இந்த நூலைப் பல குறிப்புக்களின் தொகுப்பாகக் கொள்ள வேண்டுமே தவிரக் கோர்வையாக எழுதப்பட்டதெனக் கொண்டு எவரும் குறைகூறு திருப்பாராக. கற்றோர் பலர், இன்றைய உலகில், கடவுள் நம்பிக்கையைக் கைவிட்டனர். மற்றோர் பெரும்பாலார் மூட நம்பிக்கையில் மூழ்கிக்கிடக்கின்றனர். அவ் விரு சாரரையும் தட்டியெழுப்பி, நம் பண்டைய சமயத்தின் ஆழத்தையும், அகலத்தையும், அருமையையும், பெருமையையும், ஒரு சிறிதேனும் அவர்க்கு இந்நூல் விளக்குமாயின் அதுவே என் உழைப்புக்குற்ற பலனாகும்.

A. C.

முன் இணைப்பு—I

## உலகம் நாஸ்திக மயமாய்விட்டதா?

இந்தியாவில் கொஞ்சம் தற்காலக் கல்வி பயின்ற எவனும் வைதிக சமயங்களின் முறைகளைப் பின்பற்ற ஆவலுடையவனாக இருப்பதில்லை. அவனுக்கு ஆலய வழிபாட்டில் அக்கறை கிடையாது. அவன் ஆலய வழிபாட்டின் பயனைப்பற்றி ஐயமுறுகின்றான். அவன் ஆலயம் செல்வானாயின் அங்குள்ள பக்தி மணத்தில் ஈடுபடுவதை விட்டு அதன் சரித்திரம், சிற்பம், முதலியவற்றிலேயே அதிகமும் கவனத்தைச் செலுத்துகின்றான். அதிகப்படியாகச் சொன்னால் ஆலயங்களில் அவனுக்கு உள்ள பற்று ஒரு பிரதிபலிப்பின் பலனேயாகும். ஏனெனில் ஆணவங்கொண்ட சில அன்னியர்கள் ஆலய வழிபாட்டைக் குறை கூறுவதால், அவன் தன் நாட்டின் மானத்தைக் காக்கவேண்டுமென்று எண்ணுகின்றான்.

உலகம் முழுவதிலுமே சமயத்திற்கு விரோதமாக ஓர் வெளிப்படையான போர் நிகழ்கின்றது. ஒரு கூட்டத்தார் சமயத்தால் ஏதாவது பயன் உண்டோவென்று ஆத்திரமாகப் பேசுகின்றார்கள்; —ஏன், ஜனசமூகத்திற்குச் சமயம் தீங்கிழைப்பதாகவே கூறி வருகின்றார்கள். இவர்கள் கூட்டம் விரைவாக அதிகரிக்கின்றதாகத் தெரிகிறது. இதனால் உலகம் தெளிவாக நாஸ்திகமடைந்து விட்டதென்ற உணர்ச்சி பிறக்கின்றது; நிலைமை நாளுக்குநாள் கீழாகவே செல்கின்றது.

பழைய கோட்பாடுகளும், சமயங்களும் புதிய முறையில் விளக்கப்படாவிடில், அவை புதிய எண்ணங்கள் அபிலாஷைகளின் கோரிக்கைகளை நிறைவேற்றமாட்டாமல், புதிய மனோபாவங்களோடு இணைந்து செல்ல இயலாது போகும்.*

(பிரபுத்த பாரதம்)
அக்டோபர் 1946.

(சுவாமி பவித்திரானந்தர்,
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்)

* இங்கு கடைசிப் பாராவின் கருத்துக் கவனிக்கத்தக்கது—ஆசிரியர்

# EXTRACT

## HAS THE WORLD GROWN IRRELEGIOUS ?

SWAMI PAVITRANANDA,
SRI RAMAKRISHNA MUTT

In India no man who has got some modern education is very anxious to follow the direction of orthodox religions. He does not care to worship in temples. He is critical about the utility of worship in temples. If he visits a temple, he is more concerned about its history and architecture than its devotional influence. At best his love for temples in the result of a reflex action. Because some arrogant foriegners decry temple worship, he must defend it from a sense of national self-respect.

And there is an open crusade against religion all over the world. Some people are talking vigorously the utility of religion—nay, of the disservice that religion has done to humanity. And it seems that this following is rapidly on the increase. One feels that the world has distinctly become irrelegious and the situation is growing worse from day to day.

Old beleifs and faiths must have a new orientation, otherwise they will not be able to satisfy the demands of new hopes and aspirations and keep pace with the new outlook.

*Prabuddha Bharata, Oct. 1946*

## SPIRITUAL HERITAGE OF INDIA

DR. RADHAKRISHNAN'S ADDRESS

A classic was a contemporary of all ages in the sense that it could be used by people of every generation. It was the task of the interpreter and the commentator to point out how the truths of all times could also be expressed as the truth for our time. Looked at in this light, what our greatest acharyas did was to take their stand on ancient texts and interpret them to suit modern tendencies. Their work was not mere repetition but was one of creative interpretation. Our civilisation became decadent when we started repeating texts without reinterpreting them to suit modern conditions and modern thought. It was a phenomenon of arrested development. Thanks to the contact with the West, an intellectual renaissance had started which meant not a mere repetition but a renewal of life.

பாடம் 1

# பகுத்தறிவு

காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு. தந்தம் பழக்க வழக்கங்களும் கொள்கைகளும் எவ்வளவு பொருளற்றவையா யிருப்பினும் அவற்றைப் பொன்னேபோல் போற்றும் மக்கள், பிறருடைய கொள்கைகளில் பொருள் காணமாட்டாதபோது அவற்றைப் பழிப்பதும், தூற்றுவதுஞ் செய்கின்றனர். சிறிது காலத்திற்கு முன், மக்கள் பேசும மொழிகள், உண்ணும் உணவு-கள், உடுக்கும் உடைகள் முதலிய யாவற்றையுமே இப்பிணக்குகள் பீடித்துவந்தன. இப்போது இரு பெரும் உலக யுத்தங்களின் காரணத்தாலும், போக்குவரவு வசதிகளாலும், வானொலி போன்ற விஞ்ஞானக் கருவிகளாலும், ஆங்கிலக் கல்வி விருத்தியினாலும் மக்களுக்குள் நெருங்கிய தொடர்பு ஏற்படவே, மேற்சொன்ன பிணக்குகள் ஒருவாறு குறைந்து வருகின்றன என்னலாம் ஆயினும் சமய சம்பந்தமான மட்டில் அவை இன்னும் இருந்து கொண்டே இருக்கின்றன. அரசன் எரோது (Herod) அப்போஸ்தலன் பேதுருவைக் (St. Peter) கைகால் விலங்கிட்டுக் காவலாள் இருவரோடு பிணைத்துச் சிறையிலிடுகின்றான். இரவு, தேவதூதன் தோன்றி, "பேதுருவே, எழுந்திரு" என்றவுடன் விலங்குகள் கழன்றுவிடுகின்றன; சிறைக்கதவு திறந்துவிடுகின்றது. காவலாளர் மயங்கிக்கிடக்கின்றனர்; கோட்டைக் கதவும் வழி விட்டுக் கொடுக்கிறது; பேதுரு தப்பிவிடுகின்றான். இது முற்றி-லும் உண்மையான நிகழ்ச்சி என்று கிறிஸ்தவர் நம்புகின்றனர். ஏனெனில் அது அவருடைய வேத புத்தகத்தில் சொல்லப் படுகின்றது. ஆனால் கண்ணன் பிறந்த காலத்தில் வசுதேவருக் கேற்பட்டதாகச் சொல்லபபடும் அதே மாதிரி அனுபவத்தைக் கூறும்போது, அவர்கள் கைகொட்டி நகைக்கின்றனர். கண்ணாடி வீட்டில் வாழ்பவர் கல்லெடுத்தெறியக் கூடாதென்ற அறிவு அவர்களுக் குதிப்பதில்லை. இந்துக்களும் இவ்விஷயங்களில் இளைத்-தவரல்லர். அவர்கள் "எம்மதமும் சம்மதம்" என்பது வெறும் வாயளவே யன்றி அன்னவர் வழக்காற்றில் காணப்படுவதில்லை. தம் கடவுளுக்கு மட்டையடி முதல் வைப்பாட்டி வரைக் கற்பிப்பர். ஆனால் புத்தருடைய சீரிய கொள்கைகளைப் புறக்-

கணிப்பர், கிறிஸ்துமதக் கொள்கைகளைக் கண்டனம் பண்ணுவர். "சர்வம் பிரம்மமயம்" என்றும், "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்றும் பெருமையடிப்பர்; ஆயினும் அவர்கள், நாயைப் பேயைக் கட்டி அழுதாலும் நாட்டு மக்களில் பலரைத் தீண்டார்; அவரைத் தம் வீட்டிற் புகவிடார்; அக்கொள்கைகளை நடைமுறையில் கொண்டாடும் மகம்மதியரைப் பாராட்டார். அத்துடன் சைவ வைஷ்ணவ வழக்கு; வைஷ்ணவருக்குள்ளும் வடகலை தென்கலை வழக்கு. இம்மாதிரி முன்னுக்குப் பின் முரணான பல கொள்கைகளும் பழக்க வழக்கங்களும் உலகம் முழுவதிலுமே மலிந்துகிடக்கின்றன.

ஆனால் பகுத்தறிவே உரைகல்லாக விளங்கும் இக்காலத்தில் ஒவ்வொருவரும் தம்தம் கொள்கைகளைக் காரணகாரிய முறையாக ஆராயவேண்டியது அவசியமாகின்றது. தாம் பிறந்த மதம், தம் நாட்டுப் பழக்கவழக்கங்கள் என்றெண்ணி அவற்றின் குற்றங் குறைகளையும் குணமென்று கொண்டாடுவது ஒருவன் தன் வீட்டு விளக்கென்று அதனை முத்தமிட்டுக் கொஞ்சுவது போலா-கும். ஏழை வீட்டில் பிறந்தவர்கள் என்றும் ஏழையாகவே இருக்க விரும்புவதில்லை; தற்குறித் தந்தைக்குப் பிறந்தோமென்று எவரும் கல்வி கற்காதிருப்பதில்லை. அம்மாதிரியே தாம் பிறந்த மதம் என்பதற்காக அதனைக் கண்மூடித்தனமாக அனுசரிக்கவேண்டு மென்பதில்லை பழைமை என்ற பெயரால், அந்த ஒரு காரணத்-திற்காகப் பலவற்றையும், முன்னோர் சொன்னவை, பண்டை நூல்கள் கூறுபவை, பலர் ஒப்புக்கொள்பவை, நெடுங்கால நடப்பிலுள்ளவை என்று விடையிறுக்கும் வழக்குகள் இக் காலத்திற் செல்லுபடியாவனவல்ல; அவை பகுத்தறிவுக்குப் பொருத்தமுடையனவா என்பதே, இக்காலத்துக் கேள்வி. ஆயினும், பூரண அறிவில்லாத அரைகுறை ஆராய்ச்சி கொண்டு ஒன்றைப் பகுத்தறிவுக் கொவ்வாததென்று உதறிவிடுவதும் அறிவுடைமை யாகாது. தற்கால விஞ்ஞான சாஸ்திரிகள் விருப்பு வெறுப்பின்றிய முழு வைராக்கியத்தோடும் உண்மை அறிவும் அவாவொன்றையே மேற்கொண்டு ஆராய்ச்சி நடத்தும் முறையே பகுத்தறிவு முறை எனபபடுவது.

"எப்பொருள் எத்தன்மைத்தாயினும்,—
எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும், அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு."

என்று வள்ளுவ நாயனார் வகுத்ததே உண்மையான பகுத்தறிவு. அன்றி, மந்த அறிவுடனும், ஆழ்ந்த ஆராய்ச்சி யின்றியும், அபிமானத்தை அடிப்படையாகக் கொண்டும், ஒன்றை ஒப்புக்கொள்வதும், உதறிவிடுவதும் அச்சமயத்தில் மனதுக்கு உண்மை போலத் தோற்றுமாயினும், அது போலிப் பகுத்தறிவேயாகும்; மெய்ப்பொருள் காண்பதாகாது; விருப்புள்ள விடத்துக் குற்றம் விளங்காதுபோகும், வெறுப்புள்ள விடத்துக் குணம் விளங்காது போகும், நடுநின்று ஆராயும்போதே மெய்ப்பொருட் காட்சி விளங்கும்.

"காய்தல் உவத்தல்அகற்றி ஒருபொருட்கண்
ஆய்தல் அறிவுடையார் கண்ணதே—காய்வதன்கண்
உற்றகுணம் தோன்றாதாகும், உவப்பதன்கண்
குற்றமும் தோன்றாக் கெடும்"

என்பது அறநெறிச் சாரம்.

இந்து மதத்தில் சன்னியாசிகளுக்கு ஆலய வழிபாடு விதிக்கப்படவில்லை. அவர்கள் ஞானநெறியில் நிற்பவர்கள்.

"மற்றுந் தொடர்ப்பாடு எவன்கொல், பிறப்பறுக்க
லுற்றார்க்கு உடம்பு மிகை"

என்பதே அவர்களுக்குரிய நெறி. அதுபற்றி ஆலயங்கள் யாவர்க்குமே பயனற்றவை யென்றும், விக்கிரக ஆராதனை வெறும் மூடக் கொள்கையெனக் கொள்வதும் முறையாகாது. சமையல் செய்யும் பெண்மணி யொருத்திக்குக கோடரி அகப்பையாகாது. அதனால் இது விறகு தரிப்பவனுக்கும் உதவி புரியாதென்பது பொருந்தாது. அமமாதிரியே, ஆலயங்களும் தற்காலத்தில் பெரும்பாலும் வயிற்றுப் பிழைப்பு நிலையங்களாகவும் மக்களை ஏய்க்கும் மண்டபங்களாகவும் மாறி நின்றபோதிலும் ஆகம முறைப்படி நடத்தப்படும் ஆலயங்கள் சீரிய பலனைக் கொடுக்குமென்பதில் சிறிதும் ஐயப்பாடு வேண்டுவதில்லை. ஆனல்

அவை கொடுக்கமாட்டாத பலன்களை அங்கு எதிர்பார்ப்பதும் மதியீனமாகும். இவற்றை ஆராய்ந்தறிந்து ஆலயந் தொழுபவர் ஏமாற்றமடையார்; மற்றவர் மண் குதிரையை நம்பி நட்டாற்றில் இறங்கியவரேயாவர்.

சமயங்கள் யாவுமே, மனிதனுக்குச் சீவத் தன்மையைப் போக்கிச் சிவத்தன்மையைப் பயக்க அமைந்த வெவ்வேறு முறைகளாம். அங்ஙனம் ஆன்மாக்கள் இறைவனோடு லயித்து ஒன்றுபடும் இடங்களே அச்சமயங்கள் விதிக்கும் ஆலயங்கள். காமம், வெகுளி, மயக்கும், யான், எனதென்னும் செருக்கும் கொண்ட நிலை சீவத்தன்மையாகும். சீவத்தன்மை யென்பது செம்மைத்தன்மை என்றும் மங்களகரமான நிலையென்றும் பொருள்படும். அது அன்பே உருவாய், அருளே குணமாய், இன்பே வடிவாய் நிற்கும் இறைநிலை. இவ்விதம் சீவனைச் சிவமாக்-கும் அடிப்படை உண்மை, சமயங்கள் அனைவற்றிற்கும் பொது. ஆயினும் உலகம் பலவிதம். ஒருவனுக்கேற்ற உணவு இன்னொரு-வனுக் கேற்பதில்லை. பெரு விருந்துகளில் அறுசுவை ஆக்குவது அதனாலேயே. தனக்குப் பிடிக்காதவற்றைச் சமைக்கக் கூடாதென்று அங்கு எவரும் தர்க்கம் பண்ணுவதில்லை. அது போன்றே ஒரு நிலத்திற்குதவும் உரம் மற்றோர் நிலத்திற்குதவுவ-தில்லை; இந்த உண்மையை அறியாத குடியானவனில்லை, அதனைப் பற்றி அவன் குறைகூறுவதுமில்லை, அவ்வுண்மையைப் பயன் படுத்தத் தயங்குவதுமில்லை. ஆனால் இடம் பொருள் காலத்திற் கேற்ப உலகின் பலவகை மக்களுக்குப் பலவகைக் கொள்கைகளைச் சமயங்களாகப் பெரியோர் வகுக்கும்போதும், ஒரே சமயத்தி-லேயே மனிதர் பக்குவத்திற்கேற்பப் பல பல படிகள் காணப்படும் போதும் மாத்திரம் மனிதர் அறிவின்றி வெறும் கூக்குரலிடுகின்-றனர். துறவிகளுக்கு மண் பெண் பொன்னாசைகள் விலக்கு. ஆனால் அதற்குரிய பக்குவம் பெறாத இல்வாழ்வானுக்கும் அவை விலக்கப்படுமானால், உலகம் என்ன நிலையிலிருக்கும்! உலகில் மக்களின்றி எங்கும் இரண்டு கால் மாக்களே, விலங்குகளே காணப்படுவர். ரயில் தண்டவாளம் போன்று எல்லா மக்களுக்கும் ஒரே நெறியை வகுப்பவர் உத்தம அனுபூதிமானாகார். அவரவ-ருக்கு ஒவ்வாத முறைகளை அவரவர் ஒதுக்கிவிடுவது அறிவுடை-

மையே; அதற்காக உலகம் முழுவதுமே அவற்றை ஒதுக்கிவிட வேண்டுமென்று வற்புறுத்துவதும், தம் கொள்கை ஒன்றையே அனைவரும் கடைப்பிடிக்கவேண்டுமென்று வற்புறுத்துவதும் வெறும் முரட்டுத்தனமான பிடிவாதமே யன்றிப் பகுத்தறி வாகாது. சமயங்களில் வேறுபட்ட கொள்கைகளை மறந்து, ஒன்றுபட்ட ஒழுக்க நெறியை மாத்திரம் மனிதர் பின்பற்றுவா-ராயின், பூலோகம் இன்று சுவர்கலோகமாகத் திகழும் என்பதற்கு யாதொரு ஐயப்பாடும் வேண்டுவதில்லை.

உண்மையாதெனின்;

> உலகில் ஒன்றும் இன்றியமையாத தில்லை ;
> அனேகமானமுறைகள் அவசியமானவையல்ல; அவற்றைச்
> செய்யாதொழிவதால் சேதமொன்றுமில்லை ; ஆனால்
> செய்யவிரும்பின் திருந்தச்செய்க—ஏனெனில்,
> பிழைபடச்செய்தலின் செய்யாமை நன்று,

பிழைபடச் செய்வது தீமைக்கு வித்தாகும். குளிக்கப்போய்ச் சேறு பூசிக்கொள்வது எவருக்கும் அறிவுடைமை யாகாது.

---

பாடம் 2

## பண்டையோர் கண்டகாட்சி

உலகில் யாவரும் விரும்புவது இன்ப வாழ்க்கை. அதனை வெறுப்பவரைக் காண்பதரிது. அந்த இன்ப வாழ்க்கைக்கு உறு துணையாவது கல்வி. அக்கல்வி யறிவாலாகும் பலன்களை அழகாகத் தொகுத்து விளக்கிக் கூறுவது,

> "அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்,
> புறங்கடை நல்லிசையும் நாட்டும்—உறுங்கவலொன்று
> உற்றுழியும் கைகொடுக்கும்: கல்வியினூங்கில்லை
> சிற்றுயிர்க்கு உற்ற துணை."

என்ற வெண்பா. அச்சு நூல்கள் புற்றீசல் போலப் பறக்கும் இந்த இருபதாம் நூற்றாண்டிலும் இப்புண்ணிய நாட்டில் எழுதப் படிக்கத் தெரிந்தவர் நூற்றுக்குப் பதின்மரென்றால், பனையோலை-

யில் எழுதிப் படித்துவந்த பண்டைக்காலத்தில், உரைநடை நூலே இல்லாதிருந்த காலத்தில், கல்வியறிவு இன்றையவிட மிகமிகப் பெருகியிருந்ததென்றெண்ண மனம் ஒப்பவில்லை. ஒழுக்கம் விருப்பந்தரலால், ஒழுக்கம் உயிரினும் பெரிதாக ஓம்பப்பட்டது உண்மை. பழைய கல்வெட்டுகள், செப்பேடுகள் முதலியவற்றி-லிருந்து நம்மியர் சிலர், பலர், கல்வி கற்றிருந்தனரென்பதும் உண்மை. எனினும், பழைமை விரும்பிகள் பண்டைக்காலத்தை எவ்வளவு பெரிதாகப் பாராட்டினபோதிலும், நம் நாட்டு நாகரிக-மும் பண்பாடும் பண்டொருக்கால் மிக்க வளம் பெற்றிருந்தது சரித்திர உண்மையேயாயினும், கல்வியறிவு அன்று கடல்போல எங்கும் பரந்திருந்ததென்பது ஐயப்படவேண்டிய கூற்றேயாகும்.

இந்த எழுத்தறிவில்லாக்குறையினாலேயே ஈற்றோரும் மற்றோ-ரும் கருத்தில் எளிதில்இருத்தக்கூடிய ஆத்திசூடி, கொன்றைவேந்-தன் போன்ற அரிய சிறிய நீதிநூல்கள் எழுந்திருக்கவேண்டும். ஒரு தரம் இருதரம் கேட்டவுடன் மனப்பாடம் பண்ணுதற்கு எளிதா யிருக்கும் பொருட்டு அவை, அகர வரிசையில், இரண்டெழுத்து மூன்றெழுத்து வெள்ளைச் சொற்களைக் கொண்டு எதுகை மோனைச் சிறப்புடன், சுருங்கிய அடிகளிற் சிறந்த கருத்துக்களைச் செம்பாகமாகக் கூறும் பழமொழிகள் போல, சிலவகை யெழுத் திற் பலவகைப் பொருள் அடங்கிய மிக அழகிய, விலை மதிக்க வொண்ணாக் குறுநூல்களாக யாக்கப்பட்டிருக்கின்றன.

அதேவிதமாக, நூற்கல்வி யில்லாத மக்களுக்கு ஆன்மார்த்த உண்மைகளைப் புகட்டும்பொருட்டு அமைக்கப்பட்ட கிண்டர் கார்டன் முறைகளே ஆலயங்களும் அங்கு நடைபெறும் கிரியைகளு-மாம். கல்வி தொடங்கும் பிள்ளைகளுக்கு இக்காலத்தில் படங்கள், பொருள்கள், ஆட்ட பாட்டங்கள் மூலமாகக் கற்பிக்குஞ் சிறப்பு வாய்ந்த கிண்டர் கார்டன் முறை மாதிரி, ஆராதனை, ஆட்டம், பாட்டம், தேர்த்திருவிழாக்கள் மூலமாகவும், உருவங்கள் மூலமாகவும், ஆலயச் சுவர்களில் சித்திரங்கள் மூலமாகவும், ஆன்ம நெறியை ஆலயங்கள் நமக்குக் கற்பிக்கின்றபடியால், அவற்றை'சமய கிண்டர் கார்டன்' என்றழைப்பது பொருத்தமற்ற தாகாது. அதனாலேயே இந்நூல் சமயக் கிண்டர் கார்டன் என்று அழைக்கப்படுகிறது.

அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சாகும். அதுபோல ஆராதனைகள் சீர்கெட்டும், ஆர்ப்பாட்டங்கள் அளவு மீறியும் நடைபெறும் இக்காலத்தில், ஆன்ம அமுதளிக்கவேண்டிய ஆலயங்கள் பெரும்பாலும் நச்சுப் பொய்கைகளாக மாறிவிட்டன வென்று கூறுதல் தவறாகாது. "பணம் பத்துக் குணம் செய்யும்" "காசா லேசா" என்ற உண்மை போய், "காசாலே—சா" என்று பொருள்படும்படி காசை அள்ளி எறிந்து, ஆடம்பரங்களைப் பெருக்கிச் சிற்றின்ப உணர்ச்சிகளுக்கு உணவளித்தும், ஆராதனைகளை ஆகம முறைப்படி நடத்தாதும், ஆலயங்களைச் சீர்குலைப்பது பெருங்குற்றம். இக் குறையைப் பரிகரிக்கவேண்டியது அறநிலையப் பாதுகாப்பாளருடையவும், அவருக்கு மேற்பட்ட மந்திரியாருடையவும் பெரும் பொறுப்பாகும். அவர்கள் உண்மை அறிந்து ஆவன செய்வரென்று இந்துக்களுலகம் இன்று எதிர்பார்க்கின்றது. கிரியைகளைக் கவனியாது விட்டு, வெறும் வரவு செலவுகளை மாத்திரம் தணிக்கை செய்துகொண்டிருப்பது உயிரற்ற உடம்பைப் பேணுவதை ஒக்கும். கிரியைகளுக்கான செலவுகளைக் குறைப்பது உடம்பையும் உயிரையும் பசியால் வாட்டுவதுபோலாம்.

ஒரு கிண்டர் கார்டன் பள்ளிக்குச் சென்று குழந்தைகளைக் கவனிப்போமானால், ஒரே மாதிரி மரக்கட்டையை ஒரு குழந்தை பொம்மை என்று சொல்லி விளையாடும், வேறு குழந்தைகள் அதனைப் பாப்பா என்றும், பானை என்றும், வீடென்றும், கோவிலென்றும் பலபலவாக நினைத்து அனுபவித்துக்கொண்டிருக்கும். இது எவ்வாறெனில், மரத்து நிழலில் ஒரு மனிதன் படுத்துறங்கிக் கொண்டிருந்தான். அவ்வழி சென்ற குடிகாரன் ஒருவன், "இவன் என்னைவிடக் கூடுதலாகக் குடித்துவிட்டு மயங்கிக்கிடக்கின்றான்", என்று சொல்லிக்கொண்டு போனான். சோம்பேறி ஒருவன், "இவன் இரவெல்லாம் சினிமாப் பார்த்துவிட்டு இப்போது கிடந்து உறங்குகிறான்", என்று சொல்லிக்கொண்டு போனான். திருடன் ஒருவன், "இவன் இரவு முழுவதும் திருடுவதற்காக விழித்திருந்துவிட்டு, ஒன்றும் கிடையாததனால் இப்போது கவலையற்று உறங்கிக்கிடக்கின்றான்", என்று சொல்லிப் போனான். சன்னியாசி ஒருவன், "இவன் கனவையும் நனவையும் விட்டுத்

துரிய நிலையில் சாந்திபெற்று நிற்கும் புண்ணிய புருஷன்" என்று கூறி, அவன் காலைத் தொட்டுத் தன் கண்ணில் ஒற்றிக்கொண்டு சென்றான். அனைவரும் கண்டது ஒன்றேயாயினும், அவனவன் மனப்பான்மைக்கேற்றதாகவே, அது பொருள் கொடுத்து நின்றது. அம்மாதிரியே அறிகுறிகள் யாவும், அவரவர் பக்குவத் திற்கேற்பப் பல வேறுபடிகளாகப் பொருள்படும்.

இந்த உண்மையை அடிப்படையாகக் கொண்டு, மொழி வழக்கிற்கு எழுத்துக்களும், சொற்களும் அறிகுறிகளாவதுபோல, சமயவழக்கிற்குப் பலவகைச் சின்னங்கள் அறிகுறிகளாக ஏற்பட்டுள்ளன. அவை புள்ளி, பொட்டு, வட்டம், கோடு, முக்-கோணம், நாற்கோணம், ஐங்கோணம், அறுகோணம், பலவித யந்திரங்கள், சிலைகள், முத்திரைகள், ஆயுதங்கள், பிராணிகள், பறவைகள், மனிதஉருவங்கள் முதலியனவாம். இவற்றுள் ஒன்றோ பலவோ, இன்று உயிர்த்திருக்கும் எல்லாச் சமயங்களி-லும், பண்டு இருந்து இறந்துபோன பலவேறு சமயங்களிலும் காணக்கிடப்பன. அவற்றை வாசிக்கக் கற்றவர், சமயங்கள் யாவற்றிற்கும் அடிப்படை உண்மைகள் ஒன்றாயிருப்பனவாகக் கண்டு சமயப் பிணக்குகளில் நின்றும் நீங்கிவிடுவதோடு, எல்லாச் சமயங்களிலும் உண்மையான பற்றுடனே ஈடுபடுவர். இந்தச் சின்னங்கள் சமயங்களின் உலகப் பொதுமொழிகள்.

உத்தம உணவிற்குரிய சத்துக்கள் இன்னின்னவை யென்ற, உணவின் அடிப்படை உண்மைகளை விஞ்ஞானசாஸ்திரிகள் கண்டுபிடித்த பிற்பாடு, "உன் உணவு மேல், என் உணவே மேல்", என்ற உணவு வாதம் இன்று ஒருவாறு ஓய்ந்துவிட்டது போல, சமயங்களின் அடிப்படை உண்மைகளையும், ஒற்றுமை-களையும் யாவரும் அறியும்போது, உலகில் சமயப் பிணக்கும் ஒய்-வுறும். உலகமென்பது உயர்ந்தோர் மாட்டேயாதலால், அந்த உண்மைகளையும், ஒற்றுமைகளையும், உள்ளத்தாலும், உரையா-லும், செயலாலும், பாமரமக்களுக்கு எடுத்துக்காட்டவேண்டியது அறிவுடைய பண்டிதர் பொறுப்பாகும். அன்னார், சமய அறிவால் நல்லொழுக்கமும், நல்லொழுக்கத்தால் இன்ப வாழ்க்கையும் ஏற்படுமென்பதை மனத்திலிருத்தி, சிறிதும் கல்வியறிவில்லாத

மக்களுக்கு இந்தச் சமயக் கிண்டர் கார்டன் ஆலயங்களைத் தவிர, வேறு சமய அறிவு பெறும் வசதி யில்லையென்பதையும் உணர்ந்து, அவ்வாலயங்களை இகழ்ந் தொதுக்காது அவற்றைப் பயன்படுத்து-வதே அறிவுடைமை யாகும்.

---

பாடம் 3

## ஆலய உட்பொருள் மூவகை

மனிதன் மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்புலன்-களை யுடையவன். அவற்றின் உதவியால் அவன் காண்கின்றான்; கேட்கின்றான்; உண்கின்றான்; உயிர்க்கின்றான்; உற்றறிகின்றான். இவற்றைச் செய்வது அவனுடைய அறிவாகும்: இந்த அனுபவங்-களில் சில அவனுக்கு இன்பம் தருகின்றன, சில துன்பந் தருகின்றன. இன்பந்தருவனவற்றை அவன் விரும்புகின்றான், துன்பந்தருவனவற்றை வெறுக்கின்றான். இந்த விருப்பு, வெறுப்பு அவனுடைய இச்சை எனப்படும்.—இனி, விரும்பிய-வற்றை அடையவும், வெறுப்பவற்றை விலக்கவும் அவன் எப்பொழுதும் முயற்சிக்கின்றான். அம்முயற்சி மனிதனுடைய செயலாகும். இவ்விதமான அறிவு, இச்சை, செயல் என்ற மூன்று இயல்புகளையும் ஒவ்வொரு மனிதனும் உடையவனா-யிருக்கின்றான். இவை மூன்று மில்லாத மனிதன் இலன்.

இந்த மூன்று கருவிகளின் உதவியினால், பண்டு முதல் இன்று வரையுள்ள மக்கள் கடலைக்கடந்தும், மலையைக்குடைந்தும், சூரிய சந்திரரை நோக்கிப் பறந்தும், அணுவிலிருந்து அண்டம் வரை துருவியும் அளவற்ற அறிவைத்திரட்டி வைத்திருக்கின்றனர். மக்கள், விலங்குகள், மரங்கள், உலோகங்களைப் பற்றியும் ஓயாது ஆராயவுஞ் செய்கின்றனர். ஆயினும் அவர்கள் இயற்கை அற்புதங்களுக்கு முடிவு காணாமலும், மனத்தில் அமைதியோ, சாந்தியோ ஏற்படாமலும், அறிவிற்கு வரம்பு தெரியாமலும் தவிக்கின்றனர்.

அவ்விதமே இச்சைக்கும் எல்லை காணமாட்டாது அவர்கள் பரிதவிக்கின்றனர். அகிலமெல்லாங் கட்டி ஆளினும்

அமைதியுறாது கடல் மீதிலே ஆணை செலுத்தத் துடிக்கின்றனர்; அளகேசன் நிகராக அம்பொன் மிக வைத்தபேரும் ரசவாத வித்தைக்கலைகின்றனர்; நெடுநாளிருந்த கடும் பெருங் கிழவரும் காயகற்பந்தேடி நெஞ்சு புண்ணுகின்றனர்; குரங்குறுப்புக்களைக் கீறியெடுத்தும் உடம்பில் ஒட்டுப் போட்டாவது உயிர்வாழ விரும்புகின்றனர். இவ்விதம் இச்சையானது ஒன்றைவிட்டொன்று பற்றி நெய்வார்த்த நெருப்புப் போல மேலும் மேலும் ஓங்கி வளர்வதையும், நிலைத்த இன்பம் எதுவுமின்றிக் கடும்புயல் அலைபோலக் கொந்தளித்து நிற்பதையுங் கண்டு மக்கள் மயங்குகின்றனர்.

இனி, இந்த அறிவையும், இச்சையையும் அடிப்படையாகக் கொண்டு அவர்கள் இயற்றும் செயல்களோ, மக்களுக்குள் ஓயாத பொறாமைப் போட்டிகளையும், சண்டை சச்சரவுகளையும் உண்டுபண்ணுவதோடு, உலகெங்கும் குழப்பங்களையும் இடையிடையே பெரும்போர்களையும் சிவபெருமானுடைய சம்மார தாண்டவங்களையும், காளியம்மையின் மயானக்கூத்துக்களையும் விளைப்பதைத் தவிற, வேறு நிலையான இன்பவாழ்க்கையைப் பயக்காமல் மனிதவர்க்கத்தையே திணறவைக்கின்றன. ஆகவே இந்த உலகில் "துன்பமே எந்நாளும் இன்பமில்லை" என்று எவரும் ஏங்கக்கூடிய நிலைமையே இன்று எங்கும் காணப்படுகின்றது. இதற்கு நிவிருத்தி உண்டோ என்ற ஐயமும் இருந்து வருகின்றது.

ஆனால் ஆசையோ அளவற்றது, ஐசுவரியங்களோ அளவுக் கடங்கியவை. அளவுக்குட்பட்ட பொருளொன்றை அளவற்ற கைகள் பற்றுவதானால், அங்கு கலகம் விளையாமல் வேறு என்ன விளையக்கூடும்? இந்த உண்மையை மனிதர் இன்னும் அறிகின்றிலர். எல்லையற்றது பரம்பொருள் ஒன்றே; "அறுப்பு மிகுதி, வேலையாட்களோ கொஞ்சம்," என்று இயேசுநாதர் அருளியபடி அப்பரம்பொருளைத் தேடுபவர் இன்று மிகச் சிலரேயாயினும், அதனிடத்திலேயே அனைவரும் நிறைவும், நிலைத்த இன்பமும் பெறமுடியும். பானைத் தண்ணீரைப் பலபேர் வாரினால் ஒருவருக்கும் நிறைவுண்டாகாது. கடல் நீரை எத்தனைபேர் முகந்தாலும் அனைவருக்கும் அது ஈடுகொடுக்கும். அத்தகையனவே உலக நாட்டமும் பரம்பொருட்தேட்டமும். இந்த உண்மையை

உணர்ந்து, தன்னை விரும்பி வழிபடுவோருக்குத் தன் அருட்காட்சியைக் கொடுக்கும்பொருட்டு—கோ-இறைவன் உறையும்-இல்-இடங்களே கோயில்களும், ஆலயங்களுமாம். மனிதனுக்கு ஆன்ம உணவளிக்க அமைக்கப்பட்ட இந்த ஆலயங்கள் அனை-வற்றிலும் மனிதனுடைய அறிவு, இச்சை, செயல் மூன்றுக்கும் உணவளிக்கும்படி மூவகை முறைகள் கையாளப்படும். அவை ஆலயஅமைப்பு முறை, ஆராதனைமுறை, தரிசனமுறை என்-பனவாம். அவற்றுள் ;

(1) ஆலயக் கட்டடங்கள், அதன் பல அங்கங்கள், மண்டபங்கள், பிராகாரங்கள் முதலியனவும், அங்குள்ள விக்கிர-கங்கள், அவற்றிற்கேற்பட்ட இடங்கள், யந்திரங்கள், பிரதிஷ்டை-கள் முதலியனவும், அமைக்கப்பட்டிருக்கும் விதம் ஆலய அமைப்பு முறையாகும்.

(2) அர்ச்சகர், பட்டர், குருக்கள் முதலியோர் அங்கு பூஜை இயற்றும் முறை ஆராதனை முறையாம்.

(3) அடியார் சென்று வழிபடும் முறையெல்லாம் தரிசன முறையென்னப்படும்.

இந்த மூன்று முறைகளும் தனித்தனியே, அறிகுறிப் பொருள், அருள்நெறிப் பொருள், அனுபவப் பொருள் என மூவகைப் பொருள்களைக் கொடுக்கும். அறிகுறிப் பொருள் - அடியாருடைய அறிவைப் பெருக்குவது; அருள்நெறிப் பொருள் - அடியாருடைய இச்சையைப் பண்படுத்துவது ; அனுபவப் பொருள்-அடியாருக்கு மன அமைதியையும், சாந்தியையும், ஆன்ம முன்னேற்றத்தையும் அளிப்பது.

இக்கூற்றுக்கள் இன்று பலராலும் நம்பக்கூடியவையன்று திரும்பக்கூறின் நகைப்புக்கிடமாகவும் முடியும். ஏனெனில் நம்மில் இன்று நாள்தோறும் ஆலயஞ் செல்பவரும் இருக்கின்-றனர் ; வெள்ளி செவ்வாய் போன்ற கிழமைகளில் விரதமாகத் தவறாது செல்வோரும் இருக்கின்றனர்; மற்றும் அவகாசமுள்ள போதெல்லாம் ஆலயஞ் செல்பவருமிருக்கின்றனர். அவர் பெரும்-

பாலாரிடம் இன்று அதிகமும் மூடக்கொள்கைகளும், மூட-நம்பிக்கைகளும், சமயச்சண்டைகளும், பூசல்களும், குறுகிய மனப்பான்மைகளுமே காணப்படுவதைத் தவிற வேறு விசேஷ-மான அறிவோ, அன்போ ஒளிவீசிக் காணப்படுவதில்லை; அன்றிக் காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரிம் என்ற இத்தீயகுணங்களில் குறைவு பட்டவராய், ஒழுக்கத்திலோ, மன-அமைதியிலோ உயர்ந்தோராகவும் அன்னோர் காணப்படுவதில்லை. மதப்பத்தர் மதப்பித்தர் போலவே திரிகின்றனர். அதனாலேயே ஆலயவழிபாட்டை உயர்த்திப் பேசுவது இன்று நகைப்புக்கிடமா-கும் என்று கூறப்பட்டது. ஆனால் அது ஆலயங்களின் குற்ற-மாகாது. "நன்மையும் தீமையும் தான்தர வருமே" என்பது பெரியோர் கண்ட உண்மை. எந்த ஏற்பாடும் கையாள்பவரைப் பொறுத்து நன்மைக்கும் உதவும், தீமைக்கும் உதவும். வல்லவன் நல்லவனாயின் நஞ்சையும் அமுதாக்கிவிடுவான். தீயவனாயின் அமிர்-தத்தையும் கொடிய நஞ்சாக்கிவிடுவான். வெடிமருந்து மலையைத் தகர்க்கவும் செய்யும், மக்களைத் தகிக்கவுஞ் செய்யும். பனைநீர் உடலை வளர்க்கும், வெல்லத்தையும் கொடுக்கும்; மனத்தை மயக்கும், கள்ளையுங் கொடுக்கும். இவ்வுண்மையே, நன்மையும், தீமையும் அவரவர் தரவரும் என்று கூறப்படுவது. ஆலயங்களி-லும் இவ்விதம் நேரிடக்கூடிய பலாபலன்களை உன்னியே அனுபூதிமானாகிய அப்ப மூர்த்திகள்,

> "விறகில்தீயினன், பாலிற் படுநெய்போல்,
> மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்;
> உறவு கோல்நட்டு உணர்வு கயிற்றினால்
> முறுக வாங்கிக் கடைய முன் நிற்குமே."

என்ற அறிவுரையை அருளிச்செய்தனர். அதாவது, அன்பை மத்தென்னும் கடைகோலாக நட்டு, அதில் அறிவாகிய கயிற்றைச் சுற்றி, முறுக வாங்கி, அதாவது விடாமுயற்சியுடனும், ஊக்கத்-துடனும், கடைந்தாலன்றி இறைவன் காணப்படான், அவனா-லாகும் பேரின்பமும் எய்தப்பெறாது என்று தெளிவாகக் கூறு-கின்றனர். உணர்வின்றிய உறவு மூடபக்தி, உறவின்றிய உறவு வெறும் வறட்டறிவு; அதுபால் கொடாது. ஆனால் இன்று ஆலயஞ் செல்வோரிற் பெரும்பாலர், வியாபார முறையில் இறைவனோடு பேரஞ்செய்யச் செல்கின்றாரேயொழிய, உண்மை

அன்போடோ பகுத்தறிவோடோ இறைவனை வழிபடச் செல்கின்றார் என்று உறுதியாகச் சொல்லுதல் இயலாது. அவர்கள் சிற்றின்பங்கருதிப் பணந்தேடியும், சுகந்தேடியும், பெண்டு பிள்ளைகளைப்பெரிதுந்தேடியும் இறைவனை வேண்டிக்கொள்வதைத் தவிற,

" அம்மையே, அப்பா ஆதிபகவனே நாங்கள்
வேண்டத்தக் கதறிவோய் நீ, வேண்டமுழுதுந் தருவோய் நீ
வேண்டும் நீ யாது அருள்செய்தாய், யாமும் அதுவே வேண்டினல்லால்
வேண்டும்அயன்மாற்கு அரியோய் நீ, வேண்டி எம்மைப் பணிகொண்டாய்
வேண்டும்பரிசொன் றுண்டென்னில், அதுவும் உந்தன் விருப்பன்றே."

என்ற உண்மையன்போடு பிரார்த்திப்பவர் எத்தனை பேர் இருப்பர் என்பதை அவரவர் நெஞ்சிற் கைவைத்து ஆராய்ந்தால் அறிவர். அதற்குத் தகவே அவர்கள் அடையும் பலனும் இருக்கின்றது. அவர்கள் வழிபாடு, குளிக்கப்போய்ச் சேறு பூசிக்கொள்வது போன்றது. சமயத் தொண்டில் ஒப்பற்றவரும், சைவப் பழமுமாகிய யாழ்பாணமுனிவர், ஆறுமுகநாவலர் இக் குறைபாடுகளைக் கண்டே, தம் பாலபாடத்தில், "கடவுளுடைய குணங்களையும், மகிமைகளையும், அவரை வழிபடும் முறைமையையும், அவ்வழிபாட்டாலே பெறப்படும் பயனையும் அறியாதவர், கடவுளை வழிபட்டு உய்வதெப்படி? அவர்களுக்கு தேவாலய முதலியவைகளினாலே பயன் யாது?" என்று ஒளிப்பு மறைப்பின்றியும், மழுப்புதல் சிறிதுமின்றியும் உண்மையுரைக்கின்றனர். ஆனால் பலர் "முறையோ தவறோ பதக்குக் குடித்தால் உழக்குத் தங்காதா" என்று எண்ணுகின்றனர். பதக்கும் ஆமணக் கெண்ணெயாயிருந்தால் உயிருக்கே ஆபத்தென்பதை அவர் அறிகின்றனர்.

எல்லா உயிர்களுக்கும் அவாவே துன்பகாரணம், அன்பே இன்பகாரணம்; இது அனுபவத்தில் எளிதாக அறியக்கூடிய தொன்று. ஆகவே தொண்டரிடம் நாளுக்கு நாள் அவா குறுகுதலும், அன்பு பெருகுதலும் ஏற்படும்போது, உண்மை வழிபாட்டின் பயன் அங்கு உணரப்படும். அவரிடம் துறவும், தொண்டும், மகிழ்ச்சியும்,சாந்தமும்,அஞ்சாமையும்,வளர்ந்துவராதபோது அவருடைய வழிபாடு குறைபாடுடையதென்று அறியத்தக்கது, அவர்

ஆலயவழிபாட்டால் சிவத்தன்மையைப் பெறாது சீவத்தன்மை-யைப் பெருக்குபவராவர். வழிபாடு என்ற சொல் இன்று தொழு-தல் என்ற பொருளிலேயே பெரும்பாலும் வழங்கப்படுகின்றது; காட்டிய வழியில் பின்பற்றி நடத்தலே வழிபடுதல் எனப்-படுவது. அதனால் ஆலயங்கள் தூலமாயும், சூக்குமமாயும் காட்டும் வழிகளில் நடப்பதே, அவற்றைப் பின்பற்றி ஒழுகுவதே உண்மை வழிபாடு என்ற பெயர் பெறுவது. மற்றது வெறும் போலி வழி-பாடாம், பலனும் போலியாகவே இருக்கும்.

---

பாடம் 4

## பணம் பத்துக் குணஞ் செய்யும்

அரசர் அரண்மனை அமைப்பர்; செல்வம் மிகுந்தவர் மெத்தை வீடமைப்பர்; ஏழைகள் குடிசைகளைக் கட்டி வாழ்வர்; இது உலகஇயற்கை—எல்லாம் அவரவர் கைப்பொருளைப் பொருத்தது. இறைவனுடைய ஆலயங்களும், இம்மாதிரியே திருப்பணிசெய்வோர் திரவியத்தைப் பொருத்துப் பெரிதும் சிறிதுமாக அமைகின்றன. மூலஸ்தானம் மாத்திரமுள்ள சிறு கோவில் முதல் திருவரங்கம் போன்ற ஏழு மதிற் கோவில் வரை பலவகைப்பட்ட ஆலயங்கள் பொருள்வளத்திற்கேற்றபடி நம் நாட்டில் அமைந்திருப்பது யாவரும் அறிந்தது. அவற்றுள் மிகச் சிறிய ஆலயங்களில் அறிகுறிப்பொருள்கள் எளிதில் விளங்க-மாட்டா; அவற்றை வலிந்து பொருள்கொள்ளவேண்டும். மிகப் பெரிய ஆலயங்களில் எல்லாப் பொருள்களும் மிக விரிவாயிருப்ப-தால் அவை நம் போன்றோருக்கு மனக்குழப்பத்தை உண்டு-பண்ணும்; அதனாலும் அறியவேண்டியவை எளிதில் விளங்காமற் போகும். இன்றியமையாதனவற்றை எளிதில் விளக்கக்கூடியதான நடுத்தர ஆலயமொன்று கீழே காட்டப்பட்டிருக்கின்றது. அது முன்னுரையிற் சொல்லப்பட்ட திருவிலஞ்சிக் குமாரர் கோவிலில் முருகன் சன்னிதி நீங்கலாக மற்றவற்றைக் கொண்டது; இலஞ்சிக் குலசேகரநாதர்கோவிலை அளந்தெடுத்து வரையப்பட்டது. அன்றி, மனித உருவத்தோடு பொருந்துவதற்காக மனம்போல எழுதப்-பட்டதல்ல.

நமது ஆலயங்கள் பெரியவையாயினும் சிறியவையாயினும் அவற்றின் அமைப்புமுறை திருப்பணி செய்வோர் விருப்பத்தைப் பொறுத்ததல்ல. யோகப்பயிற்சியால் நெற்றிக்கண்பார்வை பெற்ற ஞானியர் விதித்திருக்கும் ஆகமநூல்களை அடிப்படையாகக் கொண்டே அந்த ஆலயங்கள் அமைக்கப்படுவன, அங்குள்ள விக்கிரகங்களும் வகுக்கப்படுவன. அம்மூர்த்திகளும் பிரதிஷ்டிக்கப்படுவன. அல்லாதவை சாஸ்திரவிரோதமாகக் கருதப்பட்டு வழிபாட்டுக்கு ஏற்றவையாகா. இனிக் கூறப்போகும் ஆலய உண்மைகள் பண்டைப் பெருமக்கள் பலராலும் அறியப்பட்டிருந்தன. காரணம் யாதெனில், ஆலயங்களில் ஆராதனை இயற்றும் அர்ச்சகர், பட்டர், குருக்கள் முதலியோர் முற்காலங்களில் முறைப்படி சமய, விசேஷ, நிர்வாண தீக்ஷைகளும், ஆசாரியாபிஷேகமும் பெற்று, சரியை, கிரியை யோகபாதங்களில் ஈடுபட்டிருந்தனர். அவருள் யோக முதிர்ச்சியால் நெற்றிக்கண்பார்வை பெற்றிருந்த சிலர், பலர், தாம் கற்றும், கேட்டும், கண்கூடாகக் கண்டும் அறிந்திருந்த அனேகவிதமான ஆலயஉண்மைகளைப் பக்குவமுடையோருக்குப் போதித்து வந்தனர். ஆலய சம்பந்தமில்லாத வேறுபல முனிவர்களும், சித்தர்களும், யோகப்பயிற்சியிலும், ஆராய்ச்சியிலும் சித்தி பெற்று அவர் இயற்றிய ஆகமநூல்களால் அவ்வுண்மைகளை உறுதிப்படுத்தி வந்தனர்; அவரைப் பின் பற்றிய மக்களும் அவர் உபதேசங்களையேற்று அறிவிலும் ஒழுக்கத்திலும் ஓங்கியிருந்தனர். இந்த உட்பொருள்கள் யோகாப்பியாசத்தால் இன்றும் எவர்க்கும் தணிக்கை பண்ணக் கூடியனவாம். மக்களுக்கு நெற்றிக் கண் திறக்காதவரை பொருள்களின் பூரண அறிவு புலப்படாது. இதனை அடிக்கடி நினைப் பூட்டுவதற்காகவே நாம் நாள் தோறும் நெற்றியில் பொட்டிடுவது, வெறும் முகஅழகிற்காக மாத்திரமல்ல ஒன்றன் உள்ளும் புறமும் காணமாட்டாதவருக்கு அதன் முழு இயல்பும் புலப்படுவ தெங்ஙனம்? புற இயல்பு ஊனக்கண்ணாலும், அக இயல்பு நெற்றிக் கண்ணாலும் அறியப்படுவனவாம்.

இனி, அநேகமான வீடுகளில் முதியோர், இளையோர், குழந்தைகள் என்ற மூன்று பருவத்து மக்கள் காணப்படுவர்; அவர் வயிற்றுக்குப் பொருந்தும் படியாக அங்கு உணவுப்பொருள்-

களும் மூவகையாகத் தயாரிக்கப்படும். அம்மாதிரியே மக்களுக்கு ஆன்ம உணவளிக்க ஏற்பட்டுள்ள உலக மதங்களிலும், குழந்தை-ஆன்மாக்களுக்குக்குறியீடுகள், உருவங்கள், கிரியைகள்,தேர்த்திருவிழாக்கள், பொருளீட்ட நூல்கள், இன்பநூல்கள் முதலியனவும்; இளங்காளையருக்குப் புராணவரலாறுகளும், அறநூல்களும் ; ஆன்மவளர்ச்சியில் முதியோராயுள்ளவருக்குத் தத்துவ முறை-களும், யோகமுறைகளும், அனுபூதிநெறிகளும் அமைக்கப் பட்டுள்ளன. அது காரணமாகவே, வேதாந்த சித்தாந்த உண்மை-கள் பக்குவமுடையோர்க்கன்றி போதிக்கப்படலாகாதென்ற கட்டுப்பாடு வற்புறுத்தப் பட்டது. வயிற்றுக்கு ஒவ்வாத உணவை உண்பதால் நன்மை ஒன்றும் ஏற்படாததோடு, உண்ப-வருக்குத் தீமையும் வந்தெய்துமென்பதை நம் முன்னோர்கள் நன்-கறிந்தே மேலான தத்துவ முறைகளை மறைவாக வைத்திருந்தனர். ஆன்மவயதும், உடம்பு வயதும் வேறு வேறும். ஞானசம்பந்தர், மெய்கண்டதேவர் முதலியோர் உடம்பிற் சிறியோராயினும், பரி-பக்குவத்தில் முதியோருக்கும் மேற்பட்ட தொண்டு கிழவர்கள் என்பது யாவரும் அறிந்தது.

மேற்சொன்ன உண்மைகளை அடிப்படையாகக் கொண்டே, பண்டு பேரும், புகழும், உன்னதப்பண்பாடும் பெற்றிருந்த எகிப்தியர், கிரேக்கர், ரோமர் போன்ற பல மக்களுக்குள்ளும் இந்து மதத்தைப் போன்று, புராணங்கள், கதைகள், கிரியைகள் கலந்துள்ளதான, வெவ்வேறு சமயங்கள் நிலவியிருந்தன. அவற்றைக் கடைப்பிடித்து, ஒழுக்கத்தால் பண்பமைடந்தவருக்கு, அக்கதைகள் கிரியைகளின் அந்தரங்கங்களும், உபயோகங்களும் தனிப்பட உபதேசிக்கப்பட்டன; அவற்றை உள்ளடக்கிய தத்துவமுறைகளும் இயற்கை நியதிகளும் அங்கு விளக்கப்-பட்டன. அவை குப்தவித்தை கீழ்ப்படி (Lesser Mysteries) மேற்படி (Greater Mysteries) என இருவகையாகப் பிரிக்கப்-பட்டிருந்தன. இந்த அந்தரங்க உபதேசத்தாலாகும் அறிவு, இக் காலத்து அணுக் குண்டு போலத் தீயோர் கையில் கருத்தொழிலுக்குப் பயன் படக்கூடியவையாகையால், அவை ஆலயங்களின் அடியிற் கட்டப்பட்ட கல்லறைகளிலும், மனிதன் கண்டறியாத மலைக்குகைகளிலும் பிரமிட்டுகள் (Pyramids)

போன்ற பெரிய அரண்களிலும் பக்குவமுடையோருக்கு மாத்திரம் படிப்பிக்கப்பட்டன. நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், சந்திரன், சூரியன் இவற்றைப்பற்றிய இயற்கை நியதிகள், அண்ட உற்பத்தி, சப்தஉலக உண்மைகள், சூட்சும உடம்புகள், எண்ண உருவங்கள், மந்திரசக்திகள், அவற்றைக் கொண்டு நினைத்தது முடிக்கும் தியானமுறைகள், மரணத்தின் பின் மனிதர் நிலை, அங்கு இன்ப-வாழ்க்கைக்குரிய சாதனங்கள், நல்வினைத் தீவினைப்பலன்வரும் வழிகள், மறுபிறப்பின் முறைகள், இறந்தாரோடு தொடர்பு கொள்ளும் ஏற்பாடுகள் இவையெல்லாம் வித்தகச் சித்தர்களால் கற்பனை உருவங்கள் மூலம் விளக்கப்பட்டன. காலக்கிரமத்தில் சித்தரும் முத்தரும் அந் நாடுகளில் நின்றும் அகன்றுவிடவே, பின் வந்த மக்கள் நேர் அனுபவமில்லாமையினால் மூடக் கொள்கையர் ஆகவும், அம்மதங்கள் சீர்குலைந்து, வழக்கொழிந்து இன்று இறந்துபட்டன. இந்து மதம் ஒன்றே இன்றும் ஒருவாறு உயிர்த்திருக்கின்றது; ஆனால் பெரிதும் பெருமையிழந்து நிற்கின்றது. அதன் எதிர்காலநிலை இன்றைய இளைஞரைப் பொறுத்தது.

மக்களுக்குள் அன்பையும், அறிவையும், அழகையும், ஒற்றுமையையும் விளைவிக்காத மதம் வெறியர் கொண்ட மதமே-யன்றி சன்மார்க்கமல்ல. சமயமென்பது சண்டை சச்சரவுக்-காகவோ, வயிற்றுப்பிழைப்புக்காகவோ, வீண்வாதத்திற்கும், பெருமைக்குமாகவோ அமைந்த ஒரு ஏற்பாடல்ல. மதத்திற்கு மற்றொரு பெயர் மார்க்கம், நெறி என்பது; அதாவது மக்களைப் பேரின்பத்திற்கு நடத்தும் ஒரு வழி என்பதே அதன் பொருள். ஒவ்வொரு மதமும் அதன் மக்களை இன்ப வாழ்க்கையிற் செலுத்த ஏற்பட்ட ஒரு பாதையாகும். அதன் கொள்கைகளைப் பகுத்தறி-வுடன் கற்றறிந்து, ஆதிப்பெரியாருக்குப் பின் வந்த சுயநலக்காரர் அங்கு புகுத்திய கருத்துக்களைக் களைந்து, "ஒன்றே குலமும், ஒரு-வனே தேவனும்" என்ற அடிப்படை உண்மையை உணர்ந்து, தம் ஒழுக்கத்தால் உலக ஒற்றுமைக்கு உழைப்பாராயின், அந்த மதம் செழிப்புற்று வளர்ந்து ஒளி வீசும். அல்லாது மூடக் கொள்கை-களாகவும்,பொருளற்ற சடங்குகளாகவும்வெறும் வாய் ஞானமாக-வும், உள்ளொன்று புறமொன்றாக ஒழுக்கத்தோடொட்டாமலும் நின்று விடுமாயின், அது அறிவுடையோர் நகைப்புக்கிடமாகி நாளாவட்டத்தில் அழுகிக் கெட்டுவிடும்.

"கற்க கசடறக் கற்பவை, கற்றபின்
நிற்க அதற்குத் தக."

என்பது சமயங்களுக்கும் பொருந்தும் பொய்யாமொழி. அவ-னவன் அனுபூதி பெறுவதே சமயங்களின் முதல் நோக்கமும் முக்கிய நோக்கமுமாகும். அன்றித் தத்தம் கண்களிலுள்ள தூசியைத் துடைக்க முயலாது, இன்று காணப்படுவது போன்று பிற மதங்களைத் தூற்றுதலும், பிற மக்களை மதமாற்றஞ் செய்ய முயலுதலுமன்று சமயங்களின் நோக்கங்கள்.

---

பாடம் 5

## அண்டத்திலுள்ளது பிண்டத்தில்

அணு முதல் அண்டம் வரையுள்ள யாவுமே உயிருள்ளன என்பது இந்துமதக் கொள்கை. அவ்விந்துமதத்தவர் உயிரானது உலோகங்களில் உறங்குகின்றதென்பர், தாவரங்களில் கனவு காண்கின்றதென்பர், விலங்குகளில் நனவு காண்கின்றதென்பர், மக்கள் தேவரிடத்து அது விழிப்புடன் பகுத்தறிவும் உடைய-தென்பர், முத்தான்மாக்களிடத்தும், இறைவனிடத்தும் அது சத், சித், ஆனந்தமாக இடைவிடாது விளங்கி நிற்குமென்பர். இவ்வுண்மையைச் சமீபகாலம் வரை மேல்நாட்டு விஞ்ஞான சாஸ்-திரிகள் ஏளனமாகக் கருதி வந்தனர். விலங்குகளும், மக்களும் மாத்திரமே உயிருடையன வென்றும் மற்றப்பிரபஞ்சப்பொருள்களெல்லாம் உயிரற்றவை யென்றும் அவர் முடிவு கட்டியிருந்தனர். பின்னர், நம் நாட்டுப் பெரியார் ஜகதீச சந்திரவசு என்பவர் அரும்பெரும்பாடுபட்டுக் கண்டுபிடித்த கருவிகள் மூலம் உலோகங்களும், தாவரங்களும் புறவுலகத்தாக்குதல்களுக்கு மக்கள் போன்றே ஈடுபடுவதைக் கண்டபோது, மேற்சொன்ன இந்துமதக் கூற்றை அவர்கள் ஒருவாறு ஒப்புகின்றனர்.

உலோகங்களும், தாவரங்களும் மக்கள் அன்போடு தடவிக் கொடுக்கும்போது மகிழ்ச்சியடைவதும், அடிக்கும்போதும், ஒடிக்கும் போதும் துன்பமடைவதும், கள், கஞ்சா, புகையிலை முதலியவற்றால் மயக்கமடைவதும், இளைப்பாறுதற்கு இரவுநேரங்-

களில் உறங்குவதும்,இம் மாதிரியே மனிதர் போன்று பல உணர்ச்சிகளையும் காட்டுவது அக்கருவிகளால் நன்கு புலப்படுத்தப் படுகின்றது. மேலும் அணுவைப்பற்றிய இன்றைய மேநாட்டு ஆராய்ச்சியிலிருந்து "அண்டத்திலுள்ளது பிண்டத்தில்" என்ற உண்மையையும் அவர்கள் பூரணமாய் ஏற்றுக் கொள்கின்றனர்.

ஜீன்ஸ், ரூதர்[illegible]ர்டு முதலிய விஞ்ஞான மேதையர் ஒவ்வொரு அணுவும் ஒரு குட்டிச் சூரிய மண்டலமென்றே கூறுகின்றனர். கடுகிலும் பல கோடிப்பங்கு நுணுகியதான அளவையுடையதாம் அணு என்பது. பத்துக் கோடி அணுக்களை வரிசையாக அடுக்கினால், ஒரு அங்குல நீளத்திற்கு மேற் போகாதென்கின்றனர். அது அவர்கள் கண்ணுக்கோ கருவிகளுக்கோ இன்று புலப்படவில்லையாயினும், அது செய்யும் வேலைகளிலிருந்து அதன் தன்மையை ஒருவாறு தீர்மானிக்கின்றனர். அவர்கள் கூறுவதிலிருந்து, ஒவ்வொரு அணுவிலும் நடுவில் சூரியன் போன்று நியுக்ளியஸ் என்ற அணுக்கரு ஒன்றும், அதனால் வசீகரிக்கப்பட்டு அதனைச் சுற்றி ஓய்வின்றிச் சுழன்று கொண்டிருப்பனவாய், ஆண்மின்னுரு (எல்கட்ரான்), பெண்மின்னுரு (ப்ரோட்டான்,) அலியுரு (நியுட்ரான்) என்ற பலவகையான கிரகங்கள் போன்றவையும் காணப்படுகின்றன வென்றும் அம்மேதையர் கூறுகின்றனர். "சிலந்திப் பூச்சி தன் வலைக் கூட்டின் நடுமையத்தில் வீற்றிருப்பது போல ஒவ்வொரு அணுவின் மையத்திலும் அதன் கரு வீற்றிருக்கிறது; சூரியனைச் சுற்றி மற்றக் கிரகங்கள் ஓடிவருவதுபோல, கருவைச் சுற்றி மின்னுருக்கள் ஓடிவருகின்றன," என்று அணுவின் சிறப்பத்தைப்பற்றி ரூதர் போர்டு என்ற பெரியார் கூறுகின்றனர்.

இந்த உண்மைகளையெல்லாம், யோகப் பயிற்சியால் திறக்கப்பட்ட நெற்றிக்கண் பார்வையால் பண்டே கண்டறிந்துள்ள நம் நாட்டுப் பழங்காலப் பெரியார், சிற்றறிவுடைய நம்போன்ற சாதாரணமக்கள் பொருட்டு அணுவின் உருவத்தை ஆனந்தக் கூத்தனும் நடராஜர் வடிவத்திலும், ஆண் அணு, பெண் அணுக்கள் (Positive and Negative atoms) தம்முள் திருமணஞ்செய்து கொள்ளும் முறைமையைச் சிவலிங்க வடிவத்திலும், அண்ட-

பிண்டங்களிலுள்ள உண்மைகளையும், தத்துவங்களையும், ஆலய அமைப்பிலும் ஆக்கிவைத்திருப்பதாக அறிஞர் கூறுகின்றனர். அவற்றைப்பற்றிய குறிப்புகளை மேலே காண்க. பரிணம முறை எனப்படும் விகாசமுறை(Evolution) யின் இயற்கையான முற் போக்கில் இன்னும் சிறிது காலத்தில் இவை யாவும் இன்றைய மேனாட்டு மேதையர் பலருக்கும் விளங்குமாயினும், இன்று அந்த உண்மைகள் யாவும் இலைமறை காய்போல நம் ஆலயங்களில் புதைந்துகிடக்கின்றன; அவற்றை விளக்குவாரும் இக்காலத்தில் அருகராயினர். அது காரணமாகவே ஆலயங்களைப் பற்றிய பல தப்பபிப்பிராயங்கள் இன்று தலையெடுத்து, ஆக்கவேலையை விட்டு அழிப்புவேலையில் அவை இறங்கியிருக்கின்றன என்னலாம்.

அணுமுதல் அண்டம்வரையுள்ள யாவற்றையும் விளக்க வல்லவர் பூரண மக்களாகிய முத்தான்மாக்களே; ஒழுக்கத்தின் உயர்வால் தகுதியுடையோரென்று அவரால் தெரிந்தெடுக்கப்பட்ட பக்குவான்மாக்களே அவற்றை ஐயந்திரிபற அறியவும், அனுபூதி மூலமாகக் காணவும், உலக நன்மைக்காக உபயோகிக்கவும் வல்ல-வர். ஆயினும், சாதாரண மக்களாகிய நாமும் மிக நுண்ணிய-தாகிய அணுவையும்,மிக வண்ணமுடைய அண்டத்தையும் விடுத்து, இடையிலுள்ள மனிதன், உலகம் முதலியவற்றைப் பற்றியாவது ஆலயங்கள் கூறும் உண்மைகளை ஒரு சிறிதேனும் ஆராய்ந்தறிவது நம் இன்ப வாழ்க்கைக்கு இன்றியமையாததாகவுள்ளது. அந்தக் குறைந்த அளவு அறிவுமின்றி ஆலயந்தொழுவது அரிய பலன் எதையும் கொடுக்காதாகையால், அதனை இயன்றவரை சுருக்கமாக இனி ஆராய்வோம்.

முதலில் பிண்டம் என்பதனை மனிதனைக எடுத்துக்கொண்டு அவனை ஆலயங்கள் விளக்கும் முறையை அறிவோம். நம்மைப் பார்த்து ஒருவன், "நீ யார்" என்று கேட்பானு-னால், நான் பிச்சய்யா, பிள்ளைமார், சிவப்பன், செல்வன், இலஞ்சி யூரான், இன்ன படித்தவன், என்றவாறு விடையிறுப்போம். கேட்டவனும் திருப்தியடைந்துகொள்வான். ஆனால் அப்போது அறிவுடையான் ஒருவன் அருகே நிற்பானானால், அவன் நகைத்து "ஐயா. இவை எல்லாம் உன் உடம்பின் அறிகுறிகளன்றோ!

நீவிர் இவற்றிற்கு அப்பாற்பட்டு, இந்த உடம்பை ஆட்டிக்கொண்டிருக்கும் ஆன்மாவல்லவோ!" என்று அறிவுறுத்துவான். நம்மில் அநேகர் நம் உடம்பையே நாமாகக் கருதுகின்றோம், நாம் ஆன்மா என்ற அறிவு நமக்கு எளிதில் புலப்படுவதில்லை. மனிதனுக்கும், மனிதஉடம்புக்கும் உள்ள வேறுபாட்டை நம்மில் பெரும்பாலார் உணர்வதில்லை. இந்த மயக்கத்தை நீக்கி, "மனிதன் உடம்பல்ல, குணங்களல்ல, அறிவுமல்ல, அவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்ட ஆன்மாவே அவன்," என்ற உண்மையை விளக்குவதே நம் ஆலயங்களின் முதல் நோக்கம்.

"ஸர்வஞானோத்தரம்" என்ற பெயரையுடைய புகழ்பெற்ற ஆகமமானது, ஆன்மாவின் இந்த வேறுபட்ட நிலைகளையும், அவற்றின் காரணங்களையும்,

> "பூதபரி ணாமத்தால் பூதான்மா ஆவன்,
> புகல் சத்தம் பொருந்தலின் அந்தரான்மா ஆவன்,
> மேதகுதத் துவத்தால்தத் துவான்மா ஆவன்,
> விளம்புபிர கிருதிகுணந் தழீஇச் சகதுக் கங்கள்
> தீதறவே புசித்தலினல் சீவான்மா ஆவன்
> திகழ்தருமந் திரப்புணர்வார் மந்திரான்மா ஆவன்,
> யாதுமற விட்ட அவன் பரமான்மா ஆவன்,
> ஏகான்மாவே ஆறு திறனுமா யிருப்பன்." (பாட்டு 59)

என்று கூறுகின்றது. அதாவது, ஒருவன் தன் பூத உடம்பைத் (ஸ்தூல தேகத்தை) தானகக்கொண்டு, அதுவே தானக உணர்ந்து ஒழுகும்போது, அவன் பூதான்மா அல்லது தேகான்மா எனப்படுவன்;* நால்வகை வாக்கை, அதாவது அவற்றிற்கு ஆதாரமான தன் இச்சைகளையும் விருப்பு வெறுப்புக்களையும் தானக ஒருவன் கொள்ளும்போது அவன் அந்தரான்மா ஆவன்; பிருதிவி முதல் புருடதத்துவம் வரையுள்ள ஆன்மதத்துவங்களை, அதாவது, அவற்றை அறியுங் கருவியாகிய மனத்தையே தானக ஒருவன் உணரும்போது அவன் தத்துவான்மா எனப்படுவன்; மேற்சொன்ன யாவற்றையும் நான் அடக்கியாளக்கூடியவன் என்ற உணர்வு ஒருவனுக்குப் பிறந்து, அதனல், "நான் பிரம்மம்"

---

* நால்வகை வாக்குகளாவன—பரா, பச்யந்தீ, மத்யமா, வைகரீ என்பதாம்,

என்ற ஆணவமுனைப்பு ஏற்படும்போது, அவன் முத்திக்கு இக்கத்தே முடிக்கும் முக்குண வசப்பட்ட சீவான்மா ஆவன்; பின்னர் அவன் யான் எனதென்ற பசுநிலையை நீக்கவும் பேரின்ப வீட்டைப் பெறவும் விரும்பி மந்திரோபாசனையில் ஒன்றி நிற்கும்போது மந்திரான்மா எனப்படுவன். முடிவில் அவன், இறைவனோடு உடனாய், இரண்டறக் கலந்து நிற்கும் நிலையில், யாதுமறவிட்ட அவன் பரமான்மா ஆவன். எனவே, ஒரே ஆன்மாவே அதன் அறிவுநிலையைப் பொறுத்தும், அது சார்ந்து நிற்கும் பொருளைப் பொறுத்தும் பூதான்மா, அந்தரான்மா, தத்துவான்மா, சீவான்மா, மந்திரான்மா, பரமான்மா என ஆறு பேதங்களாக விளங்கும் என்பது ஆகமக் கருத்து. ஆன்மாவின் இந்த ஆறு நிலைகளையும் அறிகுறியாக உணர்த்துவதே சிவாலயங்களிலுள்ள,

| | | | |
|---|---|---|---|
| 1. | முன் கோபுரம் | ஸ்தூலலிங்கம் | பூதான்மா |
| 2. | மகாபலிபீடம் | பத்திரலிங்கம் | அந்தரான்மா |
| 3. | கொடி மரம் | துவஜலிங்கம் | தத்துவான்மா |
| 4. | மூலவர் | சதாசிவ லிங்கம் | சீவான்மா |
| 5 | ஆசாரியர் | ஆன்ம லிங்கம் | மந்திரான்மா |
| 6 | பரவெளி | அகண்ட லிங்கம் | பரமான்மா |

என்பனவாம். தைத்திரீய உபநிஷத்திலும், அதை யொட்டிய வேதாந்த பாஷ்யங்களிலும் இவ்வாறையும், அன்னமய ஆத்மா, பிராணமய ஆத்மா, மனோமய ஆத்மா, விஞ்ஞானமய ஆத்மா, ஆனந்தமய ஆத்மா, பிரத்தியக் ஆத்மா என்பர். 'உள்ளது ஒன்றை உரவோர் விள்ளுவர் பலவா', என்னுங் கூற்று மெய்ப்பொருளிற்குப் போலவே தோற்றப் பொருள்களுக்கும் பொருந்தும்.

இனி, நம் ஆலயங்களில், இந்துக்களுக்குள்ளே பண்டிதரும் பாமரரும், இளையோரும் முதியோரும், ஆண்களும் பெண்களும் யாவருமே எளிதில் அறிவதான சில உண்மைகள் காணக்கிடக்கின்றன. அவை யாவன :—

1. ஒவ்வொரு ஆலயத்திற்கும் உயர்நிலையாயிருப்பது அதன் மூலஸ்தான மூர்த்தியாகிய கர்ப்பக்கிரக விக்கிரகம். அந்தக்

கற்சிலைக்கு உயிரைக் கொடுத்து, அதை சான்னித்தியமுடைய மூர்த்தியாக்குவது அதன் அடியில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும் இயந்திரம். யந்திரம் என்பது இன்று எஞ்ஜின் எனப்படும். யந்திரமில்லாத வண்டி ஓடாததுபோல மூர்த்திக்குப் பிராணப் பிரதிஷ்டை செய்யப்படாத ஆலயம் ஆலயமாகாது; அது பாழ்ங்கோயில், வெறுங் கல்மடம். அங்கு வேதாகம ஆராதனையோ, வழிபாடோ நடைபெறுவதில்லை.

2. இந்த மூலஸ்தான மூர்த்தியும், ஆலயத்தின் வருவாய்க்குத் தக்கபடி ஒன்று முதல் ஏழுவரையுள்ள ஆவரணங்கள் அல்லது பிராகாரங்களின் மதில்களால் சூழப்பட்டிருக்கும். அவற்றின் மறைப்பினால் மூர்த்தியானது வெளியே நின்று பார்ப்பவருக்கு விளங்குவதில்லை.

3. ஆலயத்தின் உள்ளே சென்ற பின்பும், மூர்த்தியானது மொத்தாகாரமாய், ஒரு அற்புதச் சின்னமாகத் தென்படுமே தவிரத் துலாம்பரமாகக் காணப்படுவதில்லை. ஏனெனில் கர்ப்பக்கிரகம் இருட்டறையாய் இருப்பதோடு அங்குள்ள வாடா விளக்குகளும் மந்த ஒளியுள்ளனவாகவே காணப்படும். அதனால்,

4. ஆச்சாரியர் வந்து கர்ப்பூரச் சுடரை ஏற்றிக் காட்டும்போதே அந்த மூர்த்தி சற்று விளக்கமாகத் தெரிய வரும். இவை நான்கும் இன்றும் யாவரும் காணக்கூடிய உண்மைகளாம். இவற்றுள், முதலாவது,

### 1. ஆலயத்தின் உயிர் நிலை மூலஸ்தான மூர்த்தி.

ஆலயம் செல்வோர் வெகு தொலைவில் வரும் போதே அவருக்கு முதன் முதல் காணப்படுவது கோவிலின் உயர்ந்த முன் கோபுரம்; கண்டதும் உடனே அதனை வணங்குவர். பின் ஆலயத்தை அடுத்து அதன் கிழக்கு வாயிலில் நின்று உள்ளே நோக்கும்போது, அங்கே தொலைவில் ஒரு இருண்ட அறையும் அதனுள் ஒரு ஏற்றிய கண்ணாடித் தாமரை விளக்கும் காணப்படும். வேறு ஒன்றும் அங்கு புலப்படாவிடினும், உள்ளே ஒரு கல் உருவம்

இருப்பதாகப் பாவித்து அதனையும் வணங்குவர். பின், முறைப்படி அவர் உள்ளே செல்வர். இந்தக் கோபுரங்கள் தேரடி முட்டுகளிலும் தெப்பக்குளங்களின் நடுவிலும் காணப்படுமாயினும், அவற்றை யாரும் வணங்குவதில்லை. அம்மாதிரியே கல்லுருவங்களும் கண்டவிடங்களிலெல்லாம் காணப்படினும், ஆலயத்தூண்களின் அழகிய சிலைகள், சதா சேவை உருவங்கள் முதலியவற்றை அவர் வணங்குவதுமில்லை. ஆனால் ஆலயத்துள்ள இறை உருவங்களுக்கு அடியில் யந்திர ஸ்தாபனம் செய்யப்பட்டிருப்பதாலும், ஆலயக் கோபுரங்கள் கும்பாபிஷேகம் செய்யப்பட்டிருப்பதாலும், அவற்றை மாத்திரம் மக்கள் ஆண்டவன் சானித்திய சின்னங்களாகவும் அருட் கருவிகளாகவும் அறிந்து எங்கும் வணங்குவர். யந்திரப் பிரதிஷ்டை யில்லாத விக்கிரகம் சக்தியுடைய மூர்த்தியாகாது; எஞ்சின் இல்லாத மோட்டார் வண்டி போன்றது அது.

இனி, நமது ஆலயங்களின் உட்செல்லக் கூடாத அன்னிய மார்க்கத்தான் ஒருவன் ஆலயத்தின் புறத்தே நின்று, வெளி மதிலையும் கோபுரத்தையும் கண்டு, கோபுரத்தை நம்மவர் வணங்குவதையும் கண்டு, இவையே இந்துக்கள் வணங்கும் கடவுள் என்று சொல்வானானால் நாம் அவனை மூடன் என்று கூறி நகையாடுவோம். அது போன்ற மடமையே தன்னுடைய உடம்பைத்தான் என்று ஒருவன் கொள்வதும். உலக அனுபவங்களில் ஆன்மாக்கள் லயித்து நின்று பாடம் படிக்க உதவி புரியும் கருவிகளே உடம்புகளாகிய நடமாடும் ஆலயங்கள். அந்த உடம்புக்கு உயிர்நிலையாகிய ஆன்மா அங்கில்லாதபோது, அது வெறும் பாழ்ங் கோயிலாய்ப் பிணமென்று அழைக்கப் படுமேயொழிய, மனிதன் என்று அழைக்கப் படுவதில்லை; "அவன்", "அவள்" என்று கூடச் சொல்லப்படாமல் "அது" என்றும், "இன்னார் கிடக்கின்றார்", எனப்படாமல், "இன்னார் சவம் கிடக்கின்றது", என்றுமே அது குறிப்பிடப்படும். அதுவரை பொன்னேபோற் போற்றப் பட்ட அவ்வுடம்பும், ஆன்மா நீங்கியவுடன் வேகம் வேகமாக மயானத்திற்குக் கொண்டு செல்லப் படுகின்றது. இங்ஙனம் ஆன்மா வேறு, உடம்பு வேறு, என்ற உண்மை மரண சமயத்தில் நன்கு அறியப்பட்டிருப்பினும், மற்ற

விவகார நேரங்களில் அது முற்றிலும் மறந்துவிடப்படுகின்றது. அதுவுமல்லாமல், உடம்பையே நாமாகக் கொண்டு நம்முடைய ஒழுக்கத்தையும் உலக விவகாரங்களையும் நாமெல்லோரும் அமைத்துக் கொள்கிறோம். அந்த மயக்கம் காரணமாக, உடம்பிற்கு ஏற்பட்டிருக்கும் ஆண் பெண் பாகுபாடுகள், நிறவேற்றுமைகள், பெயர்கள், ஜாதிகள், சமயங்கள், தொழில்கள் என்பன பற்றிய விருப்பு வெறுப்புக்களும், அவற்றின் மூலம் ஓயாத போட்டிகளும் வேற்றுமைப் பிணக்குகளும் சண்டை சச்சரவுகளும் உலகெங்கும் நிறைந்து கிடக்கின்றன. இந்த மயக்கம் நீங்காதவரை உலகக் குழப்பம் ஒரு போதும் ஓயப்போவதில்லை. இந்த மயக்கத்தை நீக்கி, "மனிதன் உடம்பல்ல, ஆன்மா" என்ற உண்மையை இடை விடாது நமக்கு ஞாபகமூட்டி நிற்பதே ஆலயத்தின் முன்கோபுரமும் உள்ளிருக்கும் மூலஸ்தான மூர்த்தியும் அறிகுறியாகச் செய்து வரும் முதல் வேலை.

அதனால், அடியார் ஒவ்வொருவரும் ஆலய மதிலையும் கோபுரத்தையும் புறத்தே கண்டவுடனே, "நான் இந்த உடம்பல்ல, உள்ளிருக்கும் ஆன்மா", என்ற உண்மையை அறிவுறுத்திக் கொள்ளுதல் வேண்டும். இது நமது நெடுங்கால வாசனைக்கு எதிரிடையான எண்ண மாகையால் உடனே மறந்துவிடப்படும். ஆயினும், அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகருவது போன்று, இந்த நினைப்பு அடிக்கடி உண்டாகி உள்ளூற உள்ளூற, "நான் ஆன்மா", என்ற எண்ணம் எப்போதும் நிலைத்திருக்கும். பிறரைக் காணும் போது, அவர்களையும் உடம்பாகக் கருதாமல் ஆன்மாவாகக் காணும் பெற்றியும் சிறிது சிறிதாக ஏற்படும்; அப்போது அது பிற உயிர்களிடம் அன்பைப் பெருக்கித் தனக்கு உயர்ந்த மனநிம்மதியைக் கொடுப்பதற்குரிய ஒரு உத்தம ஆத்ம சாதனமாக அனுபவத்தில் காணப்படும்.

## 2. இனி இரண்டாவது, ஆலயத்துள்ள மூர்த்தியை மறைத்து நிற்பன ஆவரணங்கள்.

மனிதன் எவனும் பிறக்கும் பொழுதே பிச்சையா என்ற பெயரோடு பிறப்பதில்லை; பிறந்த சில நாட்களுக்குப் பின் பெற்றோர் அவனுக்கு இட்ட பெயரே அது; அந்த இடைக்காலத்தில்

அவனுக்கு யாதொரு பெயரும் இருந்ததில்லை. குழந்தை தாயார் கருவுக்குட் புகுமுன் அது வேளாளனோ, சிவப்பனோ, செல்வனோ என்பதும் யாருக்கும் சொல்ல இயலாததொன்று; அந்தக் குணங்கள் அவனுடைய தற்கால உடம்பை யொட்டியன வாகும்; பிச்சையா என்ற பெயரும் அந்த உடம்பைச் சேர்ந்ததே. ஒருவன் முகத்தைச் சுளித்து வலிப்புக் காட்டும்போது, "அவன் என்னை நோக்கி வலிக்கிறான், வலிப்புக் காட்டுகிறான்," என்கின்றோம்; அவன் முகத்தில் பருப் புறப்பட்டு வலி ஏற்படும்போது, "அவன் முகம் வலிக்கிறது," என்று சொல்கின்றோம். அங்கு அவனுக்கும் அவன் முகத்திற்கும், அதாவது உடம்பிற்கும் உள்ள வேறுபாடு நன்குணர்த்தப்படுகிறது. அன்றி என் கை, என் கால், என் தலை, என்னும் போதும், அவற்றை ஆட்டவும் அசைக்கவும் அமைதியாய் இருத்தவும் நமக்கு இயலும் போதும், நான் எனப்படுவது உடம்பல்ல என்ற உண்மை சற்றுக் கூர்ந்து நினைப்போருக்கு நன்கு விளங்கும். அந்த உடம்பை நான் என்று கொள்ளும் மயக்கம் இயற்கையிலுள்ள ஆவரணசக்தியின் மறைப்பால் ஆகின்றது. இந்த மறைப்பு இறைவனுடைய ஐந்தொழில் முறையில் திரோபவம் அல்லது மறைத்தல், என்று அழைக்கப்படும்.

"அநியாயமாய் இந்த உடலை நான் என்று வரும்
அந்தகற் காளாகவோ,
வாடித்திரிந்து நான் கற்றதும் கேட்டதும்
அவலமாய்ப் போதல் நன்றோ!"

என்று தாயுமானப் பெருந்தகையார் முறையிட்டதும் இந்த ஆவரணமாகிய அந்தகனைப் பற்றியே.

இந்த ஆவரணமயக்கம், "நான்யார்" என்று பகுத்தறிவதனாலும், "நான் அழிவில்லாத ஆன்மா, இந்த உடம்பு நானல்ல" என்று இடைவிடாது கவனிப்பதாலும் சிந்திப்பதாலும் நீக்கப்படவேண்டும். ஆலயத்தின் கோபுரத்தைத் தூரத்தே கண்டவுடனேயே அடியார்கள் இவ்வுண்மையை நினைப்பூட்டிக் கொள்ளுதல் இன்றியமையாதது. மற்ற நேரங்களில், "ஆன்மாவின் நோக்கம் யாது? உடம்பின் விருப்பு வெறுப்புக்கள் யாவை?"

என்பவற்றைப் பிரித்தறிவதில் கண்ணுங்கருத்துமாயிருக்க வேண்டும். இதற்கு அனுகூலமாயுள்ள ஒரு உயர்ந்த நூல்குருவின் திருவடியில் என்ற அழகிய சிறுநூலாகும். இந்த ஆவரணமயக்கம் நீங்காத மனிதனுக்கு ஆன்மீக வாழ்க்கையோ பேரின்ப நிலையோ கைகூடுதல் அரிது. அவன் தன்னை மறந்து, உடம்பின் வழிச் செல்லும் மனத்தினனாய் அல்லலுக்குள்ளாவான். நம்மில் ஆலயஞ் செல்வோர் எத்தனை பேர் இன்று இக்கருத்தையறிந்து வழிபடுகின்றனர்? உடம்பு வளத்தையும் உலக சுகத்தையுமன்றி ஆன்ம நலங்கருதி இன்று ஆலயந்தொழுபவர் எத்தனை பேர்? உண்மையை அறியாதும் அதனைப் பயிலாதும் ஆலயங்களையும் மதங்களையும் பழிப்பது அறிவுடைமையாகாது.

3. ஆலயத்துள்ளே சென்ற பின்பும், ஆச்சாரியர் வந்து கற்பூரம் காட்டாத வரை மூர்த்தியானது தெளிவாகப் புலப்படுவதில்லை.

சிறு குழந்தைகள் தேர்த்திருவிழாக் காலங்களில் வெளி வீதியில் நடைபெறும் எழுந்திருத்துக்களையும், எடுபிடிகளையும், மற்ற வாகனங்கள், மேளதாளங்கள், பொய்க் குதிரைகள், கணியான் கூத்துக்கள் போன்ற ஆர்ப்பாட்டங்களையும் காணும் போது, ஊணுறக்கமின்றி மிகவும் ஊக்கத்தோடு இரவெல்லாம் விழித்திருந்து வேடிக்கை பார்ப்பர். ஆனால் அவரை ஆலயத்துள் இட்டுச் சென்று விட்டால், அங்கு அவர்கள் ஆடுவதும் ஓடுவதும், குதிப்பதும் கும்மாளம் கொட்டுவதும் சன்னிதியை மறைப்பதும், சன்னிதியிலுள்ள வேலிக்கம்பிகளில் ஊஞ்சலாடுவதும் கண்டமணிகளை எல்லாம் குலுக்கி ஒரே இறைச்சலுண்டுபண்ணுவதுமாகப் பல இடைஞ்சல்களை விளைத்து, உண்மையாக இறைவனைத்தொழுது நிற்பவருக்கும் எல்லையற்ற தொல்லையைக் கொடுப்பது நம் ஆலயங்களில் சாதாரண அனுபவம். அதனால் அக்குழந்தைகளைக் குற்றங்கூறுவதற்கில்லை. அது அவர்களுடைய குழந்தைப்பருவத்திற்கு இயற்கையானது. அம்மாதிரியே, மனிதருடைய உடம்பின் வயதைக் கவனியாது, அவர்களை ஆன்மாவாக வைத்து எண்ணுவோமானால், அங்கும் அன்பு, அறிவு, ஆற்றல் முதலியவற்றில் வளர்ச்சியுறுத குழந்தை ஆன்மாக்கள் உள்ளனவாகையால், அவர்கள் முன்னேற்றத்திற்கு முன்கோபுரமாகிய ஸ்தூல

லிங்க தெரிசனமும் வெளி வீதியில் நடைபெறும் தேர்த்திருவிழாக்களுமே போதுமானதென்றும், அவர்கள் ஆலயத்துள்ளே செல்வதால் அவர்கள் ஒருநன்மையையும் பெறுததோடு அங்கு உண்மையாகத்தொழுபவருக்கும் வெறுந்தொல்லையாகத் தீருவரென்றும் நம் பண்டைய ஆகம நூல்கள் கூறுகின்றன. உள்ளே சென்று வழிபடுவதற்கு வேண்டும் மனப்பான்மை வாய்ந்திராத அவர்கள், நன்மையைப் பெறுதது மாத்திரமல்லாமல், குளிக்கப்போய்ச்சேறு பூசிக் கொள்வதுபோலத் தம் தவறுன நடையால் தீமையையும் சம்பாதித்துக் கொள்வரென்றும் அந்நூல்கள் கூறுகின்றன. அதுவே ஆலயப் பிரவேசத்தைப் பற்றிய அடிப்படை உண்மையாகும்.

மனித அறிவு பல படிகளாய் உள்ளதென்பது வெளிப்படை. ஒருவனுக்கு விளங்கும் உண்மைமற்றொருவனுக்கு விளங்குவதில்லை. ஒருவன் மூளைக்குப் புலப்படும் அறிவு ஆப்பு வைத்து அறைந்தாலும் அடுத்ததோர் மூளைக்குள் புகுவதில்லை. அம்மாதிரியே மனிதருடைய ஒழுக்கத்திலும் பெரிய மேடுபள்ளங்கள் காணப்படுகின்றன. எவ்வளவு முயன்றாலும் ஒழுக்கக் கோணலை நிமிர்க்க ஒண்ணுத மனிதரும் இருக்கின்றனர்; தீமையே மனத்திற்புகாத மேன்மக்களும் இருந்துவருகின்றனர். இவற்றிற்கெல்லாம் காரணம் ஆன்ம வளர்ச்சியின் ஏற்றத்தாழ்வென அறிஞர் கூறுகின்றனர். இந்தக் குழந்தை ஆன்மாக்கள் ஆலயத்துட் செல்லும்போது, அங்கு மனத்தை ஒரு நெறிப்படுத்த இயலாதவராய், அனுசரிக்க வேண்டிய வழிபாட்டு விதிகளைக் கைக்கொள்ளாதவராய், மேற் சொன்ன உடற்சிறூர் சிறூர் = சிறுவர் என்று அர்த்தம் போலவே நடந்து ஆலயங்களை வெறுஞ் சந்தைகளாக மாற்றிவிடுகின்றனர். இதுவே நம் ஆலயங்களின் இன்றைய நிலை. பள்ளிக்கூடம் முதல் பந்தடி மேடைவரையிலும் கசாப்புக்கடை முதல் கக்கூஸ்பறைவரையிலும் ஒவ்வொன்றும் சரிவரநடைபெறச் சில விதிகள் கையாளப்படுகின்றன. இன்று ஒரு விதியும் கையாளப்படாத ஸ்தாபனங்கள் நம் ஆலயங்களே. நம் நாட்டில் அரையிற்கட்டும் ஆடைகள் அநேகமாக அன்றாடம் துவைக்கப்படுகின்றன; மேற்சட்டைகள் அவ்வாறு நனைக்கப்படாமல் பல நாட்களுக்கொருமுறையே வண்ணானுக்கிடப்படுகின்றன. ஆகவே, அவை சில

நாட்களில் துர் நாற்றத்தையும் வியர்வை வீச்சத்தையும் கொடுப்பது வழக்கம். அந்த நாற்றத்தை மேலே இட்டுக் கொண்டு கர்ப்பக் கிரகம் வரை சென்று, மூர்த்திக்குத் திரையிட்டது போன்று முன்னே நின்று மறைத்துக் கொண்டு வழிபடும் உத்தமர் எத்தனை பேர்? உட்பிர காரத்திலும் சந்நிதியிலும் கா, கூ, என்று கூக்குரலிடுபவரும், ஆகாயவிமானப்பாய்ச்சலில் பறந்து ஓடி வலம் வருபவரும், வேறு வலம் வருபவருக்கு இடையூறாகப் பிராகார நடுவில் நின்று பேசிக்கொண்டிருப்பவரும் எத்தனை பேர்? இவ்வித முறை கேடான வழி பாட்டினால் தீமையன்றி நன்மை எங்ஙனம் எய்தப் பெறும்? இத் திருக்கூத்துக்களை மிகுத்துக் கூறுவதாக நினைப்பவர், கிறிஸ்தவ ஆலயங்களிலும், மகம்மதிய மசூதிகளிலும் ஆராதனை நடைபெறுவதைச் சென்று கண்டு உண்மை அறிவாராக.

இனி நம் ஆலயங்களில் முன்கோபுரங்கள் மிக எளிதில் புலப்படுவன போலவே நம்மில் நமக்கு எளிதில் புலப்படுவது நமது ஸ்தூல உடம்பு. கோபுரம் காணப்படும் வெளி வீதியில் நடைபெறும் தேர்த்திருவிழா ஆர்ப்பாட்டங்கள் நமக்கு உற்சாகத்தைக் கொடுப்பது போலவே, அந்த ஸ்தூல உடம்பை ஒட்டியனவாய், நமக்கு முறுகிய சலனங்களைக் கொடுக்கவல்ல சிற்றின்ப அனுபவங்களே நம்மில் பெரும்பாலாருக்கு உயிர் வாழ்க்கைக்கு வேண்டிய ஊக்கத்தைக் கொடுக்கின்றன. அது காரணமாக அந்த ஸ்தூல உடம்பைத் தானாக எண்ணும் ஆன்மாக்கள் தேகான்மாக்கள், பூதான்மாக்கள் என அழைக்கப்படுகின்றனர்; ஸ்தூலான்மாக்கள் எனவுங் கூறப்படுவர்.

தேகான்ம நிலையில் நிற்பவர் பட்டுப்படிப்பவர்; கேட்டுப் படிப்பவரல்லர். மெய், வாய், கண், மூக்குச் செவிகளால் அனுபவிக்கப்படும் சிற்றின்ப உணர்ச்சிகளே அவர்களைச் செயலுக்குத் தூண்டுவன; அல்லாத போது அவர்கள் தமோ குணத்திலாழ்ந்து சோம்பல் மூடிக்கிடப்பர். முறட்டு உணர்ச்சிகளே அவர்களை இயக்கவல்லன, அவர்கள் பெரிதும் விரும்புவன. அவற்றை அடைவதற்கு அவர்கள் கொலை, களவு, காமம், கள்ளுண்டல், பொய்மொழிதல் எதனையும் செய்யத்தயங்கார். அதனால் அவர்கள் தீயோர் என்பதல்ல; அவர்கள் மக்கள் உருவையுடைய

மாக்கள், நன்மை தீமையென்ற பகுத்தறிவில்லாத சிற்றறிவினர். (Unmoral, nonmoral—not Immoral.) இன்றைய ருஷிய நாட்டு அரசியல் முறை அவர்களுக்கு உகந்த முறையாகும். பிறருக்கு இடைஞ்சல் ஏற்படாதவிதத்தில் அவர்களுக்குச் சிற்றின்ப சுகானுபவங்கள் தேவைக்குத் தக்கப்படி வழங்கப்படல் வேண்டும். அதாவது, போதிய உண்டியும் உடை-யும் மனைவிமக்கள் வாழ்க்கையும் அவர்களுக்கு எட்டும்படி அரசி-யலார் ஏற்பாடு செய்தல் வேண்டும். அவர்கள் சோம்பியிராதபடி அவர்களை மிதமாக வேலை வாங்கிவரல் வேண்டும். மனிதனுக்காக வேலை ஏற்பட்டுள்ளதேயன்றி வேலைக்காக மனிதன் படைக்கப் படவில்லை. அதனால், ஆடு மாடுகள்போல அவர்களை ஓயாது செக்கிலிட்டு ஆட்டி, அவர்கள் ஒய்விற்கும் மனப்பயிற்சிக்கும் இடமோ நேரமோ கொடுக்காது அவர்களை மேலும் கீழோராக்கு-வது பெரும் பாவம். அதுவே இன்று நடைபெறும் முறை. வறுமையிலும், பிணியிலும் அவர்களை நலிய விடாது, நயத்தாலும் பயத்தாலும் அவர்கள் முறட்டு சுபாவங்களைப் பண்படுத்துவதே நேரிய முறை. "தேவைக்கேற்ற கூலி, திறனுக்கேற்ற வேலை" என்பன அவருக்கேற்பட்ட திட்டம்.

1. "தீயவை செய்தார் கெடுதல், நிழல்தன்னை
வீயாது அடி உறைந்தற்று."
2. "நோயெல்லாம் நோய் செய்தார் மேலவாம்; நோய் செய்யார்
நோயின்மை வேண்டுபவர்."
3. "அறத்தாறு இது என வேண்டா, சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தானிடை."
4. "இலர் பலராகிய காரணம், நோற்பார்
சிலர், பலர் நோலாதவர்."
5. "அரசன் அன்று கேட்பான்,
தெய்வம் நின்று கேட்கும்."

என்ற கர்ம நியதியும் மறு பிறப்பு நியதியும் அவர்களுக்கு இராமா-யணம், பாரதம் போன்ற கதைகள் மூலமாக நன்கு மனதில் பதியும்படி செய்யப்பட வேண்டும். இவை இல்லாத இன்றைய ஆரம்பக்கல்வி முறை மிகவும் குறைபாடுடையது. அது

மொட்டை மனு எழுதுவதற்கும், கள்ளக் கையெழுத்துப் போடு வதற்கும் சுவர்களில் வசை எழுதுவதற்குமே உபயோகப்படுகின்றது. மேற்கூறியவாறு பண்பட்ட ஆன்மா, நன்மை தீமை இன்னதென ஒருவாறு பகுத்தறியவல்லதாய்க் கோபுரவாயிலைக் கடந்து உள்ளே மகா பலிபீடத்தண்டை செல்லும். இந்த இரண்டாவது நிலையில் அது அந்தரான்மா எனப்படும்.

ஸ்தூலான்ம நிலையை முன்கோபுரம் அறிவிப்பதுபோல அந்தரான்ம நிலையை அறிவிப்பது மகா பலிபீடம். அந்தரான்ம நிலையிலுள்ள மனிதன் ஊரோடு ஒத்துவாழ முயலுவான். இன்னும் சிற்றின்பப் பிரியனேயாயினும் இப்போது அவன் சுகவாசி. சிற்றின்ப அனுபவங்களுக்காக அவன் அல்லலை விலைக்கு வாங்க மாட்டான். அவ்வாறு பெறப்படும் சிற்றின்பங்களை அவன் ஒதுக்கிவிடுவான். காமக் குரோத லோப மோக மத மாச்சரியங்களாகும் தன் இச்சைகளையே "தான்" என்று இப்போது அவன் எண்ணிவாழ்வான். தன் இச்சைகள் யாவும் எடுபட்டுப்போனால் "தான்" என்று ஒன்றுமே இராதென்று எண்ணுவான். சர்வ ஞானோத்தரப் பாட்டில் வாக்கென்று கூறப்பட்டிருப்பது மனிதனுடைய இச்சையையும் உணர்த்தும், வாக்குக்கும் இச்சைக்கும மூலம் ஒன்றேயாகையால், இந்த அந்தரான்ம நிலையில் அவன் பலபல பிறவிகளெடுத்து, இன்பதுன்ப அனுபவங்களாலும் கல்வி கேள்விகளாலும் இச்சைகளே 'தான்' என்று எண்ணிய நிலையைக் கடந்து, மனமே 'தான்' என்ற நம்பிக்கை கொள்கிறான். மிருக இச்சைகளால் என்றுந் துன்பமே தவிற இன்பம் எந்நாளும் பெறப்படுவதில்லையென்றுங் காண்கின்றான். அதன் பயனாக அவன் பலிபீடத்திற்கு இப்பால் விழுந்து வணங்கித் தன் இச்சைகளாகிய மிருகங்களை அங்கு பலிகொடுத்துவிட்டு எழுந்து, கொடிமரத்தண்டை செல்கின்றான். அப்போது அவன் தத்துவான்ம நிலையை அடைகின்றான். அந்நிலையை ஆலயத்தில் அறிகுறியாக விளக்குவதே கொடிமரம். இந்த வெவ்வேறு நிலைகள் மனிதனுடைய ஜாதியைப் பொருத்தவையல்ல, இறைவன் படைப்பின் விகாசமுறையிலுள்ள இயற்கை நிலைகள் அவை. ஜாதி என்பது மனிதனால் ஆக்கப்பட்டதோர் செயற்கை நிலை.

தத்துவான்ம நிலையிலுள்ள மனிதன், உலக வாழ்க்கையில் இன்பத்திலும் துன்பமே கூடுதலாக உள்ளதை உணர்கின்றான். குடும்ப வாழ்க்கையை இன்பக் கோட்டையென்று அவன் கருதியது போய், இப்போது அது சமுசார சாகரமாகவும் கால் விலங்காகவும் அவனுக்குத் தோன்றுகின்றது. இதுவே பேரின்ப அவா எழும் அவசரம். அவன் அந்தரான்மா என்ற இச்சை-யான்ம நிலையில் உள்ளபோது, "முத்திநெறி யறியாத மூர்க்கன்" எனப்படுபவன். "மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா" என்பது முதுமொழி; அதாவது அவன் இனிப்புத்தான் வேண்டுமென்பான், பாகற்காயைத்தான் தின்பேனென்பான். பாகற்-காயின் தன்மை கசப்பென்றால் அதனை ஒப்பாது பிடிவாதமாக முரண்டி நிற்பான். அம்மாதிரியே அந்தரான்மாக்கள் மண் பெண் பொன் அனுபவங்களையே இறுகப்பற்றுவர். அவை நிலைத்த இன்பத்தைத் தரவேண்டுமென்றும் மனம் புழுங்குவர். அது இயற்கைக்கு விரோதமென்றால் அதனை ஒப்பார். அவ்வா-றான பல பிறவிகளின் அனுபவத்தால் அச்சிற்றின்பங்களின் தன்மையை ஒருவாறு உணர்ந்தபின், அம்மனிதர் மனோ-ரகத்தைக் கொடுக்கும் அறிவுப் பயிற்சியில் இன்பத்தை நாடுவர். அது ஐம்புல நுகர்ச்சிகளை விடக் கூடுதல் இன்பம் பயப்பதையும், கூடுதல் நீடித்து நிலைத்திருப்பதையும் அவன் உணர்கின்றான். ஆயினும் அவன் தன்னிடத்தும் தன் உற்றார் உறவினரிடத்தும் ஏற்படும் பிணி மூப்புச் சாக்காடு, பொருள் நஷ்டம் முதலிய துன்பங்களால் மனமுடைந்து, பிரசவ வைராக்கியம், மயான வைராக்கியம் போன்ற தற்காலிக வைராக்கியங்களில் அடிக்கடி ஈடுபட்டுத் தத்துவ விசாரணை செய்யத் தொடங்குகின்றான். அதன் பலனாகவும், உலகத் துன்பத்தின் ஓயாத அவலிடிப்பாலும், தியானம் முதலிய அப்பியாசங்களினாலும் நாளாவட்டத்தில் அவனுக்கு, "நான் இன்ப துன்ப இருப்பிடங்களாகிய உடம்-பல்ல, இச்சையல்ல, மனமுமல்ல", என்ற எண்ணம் உள்ளூறி, "எனக்கு இத்தத்துவங்களை அடக்கவும் ஆளவும் கூடும். ஆகையால் நான் பிரம்மம்," என்ற நினைவு ஏற்படுகின்றது. அந்-நிலையில் அவன் ஜீவான்மா ஆகின்றான். அதனை அறிகுறியாக ஆலயத்துள் காட்டுவதே மூலஸ்தான மூர்த்தியாகும்.

ஆலயங்களில் மகா பலிபீடமும் கொடிமரமும் அமைந்திருக்கும் பிராகாரங்கள் அல்லது ஆவரணங்கள், மிகவும் அழகிய சிற்பவேலைகளாலும் தூண்களாலும், ஓவியங்களாலும், இறைவன் இறைவியருடைய மூர்த்தங்களையும் திருவிளையாடல்களையும் காட்டும் சித்திரங்களாலும், புராணக்கதைகளை விளக்கும் படங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருக்கும். அவற்றிலிருந்து, அங்கு நின்று தொழவேண்டிய அந்தரான்ம, தத்துவான்ம நிலையிலுள்ள மக்களுக்குப் புகட்டவேண்டிய கல்விமுறையும் புலப்படும். புராணங்களின் உட்பொருள்கள், உலக மதங்கள், அவற்றிலுள்ள ஒற்றுமை வேற்றுமைகள், காலதேச வர்த்தமானங்களுக்கேற்ப அவை ஏற்பட்ட காரணங்கள், அறுபத்துநான்கு கலைகள், அவற்றின் பல துறைகளிலுமுள்ள உலகப் பெரியார் சரித்திரங்கள், திருக்குறளாதிய அறநூல்கள், அறம் வழுவாது நின்று பொருளீட்டும் முறைகள், அப்பொருளைத் தீங்கின்றி அனுபவிக்கும் விதிகள், என்பனவற்றை அடிப்படையாகக் கொண்டதாகும் அவர்களுக்குரிய கல்விமுறை அவர்கள் வழிபாடு சரியை, கிரியைகளாம். அவர்களுடைய கடமையும் அறப்பணியுமாவது அன்னதானமும் கல்விதானமுமாம். இவ்வாறு பண்பட்ட மனிதர், அதன்பின் உள்ளே மகாமண்டபத்திற்குத் தொழச் செல்வர். அவ்வாறு பக்குவப்பட்ட ஆன்மாக்களின் தொகை மிகக் குறைவாகவே இருக்குமாதையால், நம் ஆலயங்களும் உள்ளே செல்லச்செல்ல இடஞ் சிறுத்துக்கொண்டே வரும். அன்றி விசாலமாகக் கட்ட அறியாத காரணத்தாலல்ல.

இதுவரை ஆன்மாக்களின் மூன்று நிலைகள் கூறப்பட்டன: அதாவது தேகான்மா என்ற பூதான்மா, அந்தரான்மா, தத்துவான்மா என. இம்மூவகையினரும் ஆலயங்களில் முன்கோபுரத்திலிருந்து கொடிமரம்வரை நின்று தொழும் நிலையினர், அதாவது கொடிமரத்திற்கு இப்பால் நிற்பவரைத் தவிர அப்பால் செல்பவரல்லர் என்றும் கூறப்பட்டது. நம் ஆலயங்களைக் கவனிப்பவருக்கு சிவலிங்கம், அதிகாரநந்தி, கொடிமரம் மூன்றும் ஒரே வரிசையில் நிற்பது புலப்படும். அவற்றை முறையே பதி, பசு, பாசம் என்று சைவாகம நூல்கள் கூறும். பசுவாகிய நந்தி, அதாவது ஆநந்திக்கவல்ல ஆன்மா, உலகமாகிய கொடிமரத்தை

நோக்கி நிற்குமாயின் எங்கும் வேற்றுமைகளும் சிற்றின்ப அனுபவங்களும் அவைகாரணமாகத் துன்பமுமே ஆன்மாவுக்குப் புலப்படுமெனவும், நந்தி கொடிமரத்தைத் தாண்டி, உலகத்தை நோக்குவதைவிட்டுப் பதியாகிய இறைவனை நோக்கும்போதே அப்பசுவிற்கு, அண்டத்திற்கு அடிப்படையாகிய ஒற்றுமையும் பேரின்பானுபவமும் கைவரும் என்றும் சித்தாந்த நூல்கள் கூறும். அதனால் கொடிமரத்தை நோக்கி நிற்கும் இந்த முதல் மூன்றுவகை ஆன்மாக்களும், மண் பெண் பொன் அனுபவங்களை விரும்பி நிற்பன என்பது இப்போது விளங்கும். இவருள் தேகான்மாக்கள் அல்லது பூதான்மாக்கள் பெரிதும் விரும்புவது உண்ணல், உடுத்தல், குடித்தல் முதலிய ஐம்புல நுகர்ச்சிகளையும் அவற்றின் மகுடமாகிய பெண்ணாசையையுமாம். அவற்றைப் பெறும்பொருட்டு அவர்கள் பொன், மண், புகழ் முதலிய யாவற்றையும் துறக்கத் தயாராயிருப்பர்; அவற்றிற்காக எந்தத் தீய வழியையும் கைக்கொள்வர். பயம் ஒன்றே அவரைக் கட்டுப் படுத்தவல்லது. "அடி உதவுவதுபோல அண்ணன் தம்பி உதவான்," என்ற பழமொழி அவர்களுக்கே தகும்.

இரண்டாவதான அந்தரான்மாக்கள் அல்லது இச்சையான்மாக்கள் மண் பெண் பொன் மூன்றையும் விரும்புவரேனும், அவர்கள் பெரிதும் விரும்புவது சுகவாசத்தையும் அதற்கு உதவியாயிருக்கும் பொன்னையுமாம். ஒருவிதம் கட்டுப்பாடுள்ள சமூகத்திடையிலேயே சுகவாசம் சித்திக்குமென்பதை அவர்கள் நன்கறிவாராகையால், அவர்கள் ஊரோடு ஒத்துவாழ முயலுவர். சமூகம் நன்மை தீமையென்று கொள்வனவற்றை இவர்களும் கூடியவரை, அதாவது பிடிகொடாத முறையில், அனுசரிப்பர். அவர்கள் பிறருடைய மனைவியையும் மண் மனையையும் விரும்புவரேனும் அவற்றிற்காக ஆபத்துக்களுக்குள் இறங்கார். அத்தகைய கட்டங்களில் தம் ஆசைகளை அவர் அடக்கிக்கொள்வர்.

இனி, மூன்றுமவராகும் தத்துவான்மாக்கள் பெரிதும் விரும்புவது மண்ணையே, அதாவது புகழையும் ஊரார் போற்றுதலையுமே. அதற்காக அவர்கள் அறிவை விருத்தி பண்ணுதலும் தானதர்மங்களில் ஈடுபடுதலும் உலகம் பழித்த தொழித்தலும்

செய்வர். அந்த முயற்சிகள் முற்றுப்பெறும்பொருட்டுப் பெண்-ணாசை பொன்னாசைகளை அவசியமாயின் கைவிடத் தயாரா-யிருப்பர். இங்கு மண் எனப்படுவது வெறும் நிலங்கரைகளல்ல, அவற்றாலாகும் செல்வாக்காம்.

இனி, (4) ஆச்சாரியர் அல்லது பட்டர் வந்து கற்பூரம் காட்டும்போதே மூலஸ்தான மூர்த்தி விளக்கமாகத் தெரியவரும்.

அடியார்கள் ஆலயஞ் செல்லும்போது வெறுங்கையோடு போவது முறையல்ல. தேங்காய், பழம், வெற்றிலை பாக்குக் கற்பூரம் இவற்றைக் கொண்டு செல்வதே ஆகமவிதி. அல்லாத போது ஆச்சாரியர் அவரைக் கவனிப்பதுமில்லை, கற்பூரம் காட்டுவதுமில்லை. ஆலயத்துள்ள ஆச்சாரியர், அர்ச்சகர் பட்டர் குருக்கள் பூஜாரி எனப் பல ஊர்களில் பலவாறாக அழைக்கப்படுவர். அவர்கள் செய்யும் ஆராதனையும் ஒரு ஆழ்ந்த அறிகுறிப் பொருளைக் கொண்டதாகும். அடியார்கள் நிவேதிக்கக் கொண்டுசெல்பவற்றுள், தேங்காயானது வழிபடச் செல்லும் ஆன்மாவைக் குறிப்பது; அத்தேங்காயின் மூன்று கண்களும் ஆன்மாவை மூடிநிற்கும் ஆணவம், கன்மம், மாயை என்ற மும்-மலங்களைக் குறிக்கும்; அக்கண்களையுடைய கடினமான ஓடு, உள்ளிருக்கும் தூய வெண்தீஞ்சுவைப் பருப்பாகிய ஆன்மாவைப் பந்தித்து நிற்கும் பாசங்களின் கடினத் தன்மையை விளக்கும். அந்த ஓடு கருவியின் துணையின்றிக் கையால் உடைபடுவதில்லை, அவ்வளவு கடினமுடையது. அது மனிதனை மூடிநிற்கும் மும்மலப் பாசங்கள் எளிதில் விலக்கவொண்ணாதனவென்பதையும், ஆன்ம விடுதலைக்குக் கடவுள் திருவருள் இன்றியமையாதென்பதையும், ஆயுதங்கொண்டு காயை உடைக்கும் குருக்கள் போன்ற அருட்-குரவர் ஒருவரும் அவசியமென்பதையும் அறிவிக்கும்.

நறுஞ்சுவையுடைய வாழைப்பழங்கள் பக்தனுடைய நல்-வினைப் பலன்களைக் குறிக்கும்.—தமிழ்த்தாயின் மகள் ஒருவ-ளாகிய தெலுங்கில், பழம் என்பதற்கு பலமு என்ற பெயர் நடமாடுகின்றது. மரம் பலன் கொடுப்பதே பழம் எனப்படுவது.— இந்த இரண்டுடன் கொண்டு சொல்லபபடும் வெற்றிலை பாக்கு முகவாசங்கள், "முத்திக்கு இக்கத்தே முடிக்கும்" முக்குணங்-

களைக் குறிப்பன. தூயவெண் கற்பூரம் இறைவனோடு இரண்டறக் கலக்கும் பக்குவம் வாய்ந்த தூய ஆன்மநிலையைக் காட்டுவது. அக்கற்பூரம், ஆச்சாரியரால் ஏற்றப்படும்போது கசடு ஒன்றும் மிஞ்சாது ஆகாயத்தோடு இரண்டறக் கலந்துவிடுவதால் இவ்வுண்மை அறியப்படும்.

இவ்விதம் தேங்காய் பழம் முதலியனவற்றைக் கைக்கொண்டு, தன்னையும் தன் வினைப்பலன்களையும் இறைவனுக்கு அர்ப்பிக்கத் தயாராக எடுத்துச் செல்லும் அடியாரைக் கண்டவுடனே ஆச்சாரியர் வந்து அவற்றை ஏற்றுத் தேங்காயை உடைத்து, அனைவற்றையும் சுத்திசெய்து, அதாவது மலங்களை நீக்கி, இறைவனுக்கு அர்ப்பித்துக் கற்பூரத்தைக் கொழுத்தி மூர்த்தியின் தெரிசனத்தையும் அருளையும் அவனுக்கு வழங்குவர். மும்மலங்களால் பந்தப்பட்டு முக்குண வசத்தனவாய் நிற்கும் ஆன்மாக்கள், உலகத்தைச் சார்ந்து நிற்பதால் அடையும் துன்பங்களையும், அவை இறைவனைச் சார்ந்து நிற்கும்போது உடைபட்ட தேங்காயின் உள்ளிருக்கும் தூய இனிய வெண்பருப்புப்போன்று மலநீக்கம் பெற்றுப் பேரின்பம் துய்த்தலையும் அவனுக்கு அவர் உணர்த்துவர். சிவப்பிரகாசத்தில்,

> " முன்னம்
> ஈட்டிய தவத்திலுலே இறையருள் உருவாய்வந்து
> கூட்டிடும் இவற்றைநீக்கிக் குறைகழல் குருகுமாறே. "

என்ற உண்மையே, தேங்காய் உடைத்தலும் கற்பூரம் ஏற்றுதலும் அறிகுறியாகக் காட்டுவன என்பதை அவனுக்கு அவர் விளக்குவர். "தான்" என்ற தற்போத முனைப்பு பசுநிலை என்றும், "நான் உடம்பல்ல, இச்சைகளல்ல, மனமல்ல, தத்துவங்களல்ல, இத்தோற்றப் பொருள்களுக்கப்பாற்பட்ட நான் பிரம்மனே," என்ற நினைப்பு பசுஞானம் என்றும், தனக்கெனச் செயலின்றிச் சார்ந்ததன் வண்ணமாய் நிற்பதே ஆன்மாவின் இயற்கைத் தன்மை என்றும் அவர் அவனுக்கு விளக்குவர். அன்றியும், தேங்காய் பழம் முதலியன கொண்டு செல்லாதபோது ஆச்சாரியர் அவனைக் கவனியாதிருப்பது போன்று, ஆன்மபலன், அநுஷ்டானபலன், கர்மபலன் அனைத்தையும் ஒருவன் இறைவ-

னுக்கு அர்ப்பிக்கத் தயாராகாதபோது அருட்குரவர் தென்படுவ-தில்லை யென்பதையும், அவன் பரிபக்குவப்பட்டு, இருவினை யொப்பும் மலபரிபாகமும் எய்தி, தன் "ஆவியும் உடலும் உடைமை யெல்லாமும்" ஆண்டவனுக்குப் பலன் வேண்டாது அளிக்கும்போதே இறையருள் உருவாய்த் தோன்றி ஞானத்-தீயால் அவன் மலங்களைச் சுட்டெரித்து அவனுக்குப் பேரின்ப நிலையை அருளுவர் என்றும் அவர் அறிவுறுத்துவர். அப்போது அவன் "தான்" என்ற முனைப்பு முழுவதும் நீங்கி, இறைவனுடைய அருட்கருவியாக மட்டும் நிற்பன் என்பதை விளக்கி, அதுவே வாகன நந்தி என்றும் அறிவுறுத்துவர். பின், அவன் பசுபோதம் நீங்கிப் பதிஞானம் பெறுதற்கு வேண்டும் சிவோகம் பாவனையை-யும் அதற்குரிய நியாசங்களையும் மந்திரோபாசனையையும் அவனுக்கு அவர் உபதேசிப்பர். அவற்றைப் பயிலும் அவசரத்-தில் அந்த ஆன்மா மந்திரான்மா எனப்படும். அந்நிலையை ஆலயத்தில் அறிகுறியாகக் காட்டுவதே ஆன்மலிங்கமாகும் ஆச்சாரியர், அல்லது பட்டர், அல்லது குருக்களாவர்.

பூதான்மா, அந்தரான்மா இவற்றிற்கு சரியையும் கிரியையும் மார்க்கங்களாவதுபோல மந்திரான்மாவிற்குரிய நெறி யோக மார்க்கம். இவர் நின்று தொழுதற்கு நியமிக்கப்பட்ட மகா மண்டபத்திலும் உட்பிரகாரத்திலும நாயன்மார்கள், ஆழ்வா-ராதியர் திருவுருக்கொண்டிருப்பர். அவர்களுடைய அருள் வாக்குகளைக் கற்றலும் வாழ்க்கைமுறைகளைப் பின்பற்றுதலும், வேதாந்த சித்தாந்த சாத்திரங்களைக் கற்றல் கேட்டல் தெளிதலும், மந்திரான்மாக்கள் பின்பற்றவேண்டிய முறைகளாம். இவர் செய்யும் அப்பியாசத்தை மேற்சொன்ன சர்வ ஞானோத்தர ஆகமம், 26-வது பாட்டில்:

> பூதபௌதிகவர்த்த மானகா லத்தும்
> புகலுமிலா பச்சேத மெவைவந்த விடத்துந்
> தீதிலாத் தற்சொரூப பாவனையே பண்ணிச்
> செய்கருமத் தின்கண்வரு சுகதுக்க மோக
> மாதிகர்த் திருத்துவபோக் திருத்துவங்க ளியாவும்
> ஆன்மதன்ம மன்றுபுத்தி தன்மமென வுணரா

ஒதுபிர கிருதியின்சம் பந்தமுற்று நீங்கி
யுபநிடதத் துண்மை யுணர் பவனேமெய்ஞ் ஞானி."

என்று கூறும். அதாவது, "இறந்தகாலம், வருங்காலம், நிகழ்காலங்களாகிய முக்காலத்தும், சொல்லாநின்ற இலாபம் சேதமென்னுமிவை வந்தவிடத்தும், குற்றமில்லாத சிவசொரூப பாவனையே செய்து, செய்யப்படும் தொழிலினிடமாக வருகின்ற சுகதுக்கமோகங் காரணமாக உண்டாகும் யான் எனதென்னும் மயக்கங்கள் அனைத்தும், ஆன்மாவின்தன்மமன்று, புத்தியின் தன்மமென வறிந்து, சொல்லாநின்ற பிரகிருதியின் காரியமான தூலசூக்கும தேகங்களின் பற்றுக்கோடு அறவே நீங்கி, வேதாந்தத்தின் உண்மைப்பொருளாகிய சிவசீவ ஐக்கியத்தை அறிபவனே உண்மை ஞானியாவன்," என்றவாறு.

இந்த மந்திராப்பியாசமும் சிவோகம் பாவனையும் யோகப் பயிற்சியால் முதிர்ந்தபோது, உரியகாலத்தில், இறைவனே திருவுருக்கொண்டு எழுந்தருளி அவனைத் தன் திருவடி சேர்ப்பர்; அவ்வாறு இரண்டறக் கலந்து குணங்குறியற்று நிற்கும் நிலையே, பரவெளி அல்லது அகண்டலிங்கம் எனப்படுவது. இவ்வளவு கருத்துக்களும் அடங்கியுள்ளன அடியார்கள் ஆலயங்கொண்டு செல்லும் தேங்காய் பழக்காணிக்கையில். இம்முறையை இன்று யாவர் அனுசரிக்கின்றனர்? அடியார் கொண்டு செல்லும் தேங்காய் பழங்கள் பட்டருக்கே உரியன என்று சர்க்கார் இன்று ஒரு உத்திரவு பிறப்பிக்குமானல், அன்றுமுதல் ஒருவருமே அவற்றை ஆலயத்திற்குக் கொண்டு செல்லமாட்டார்கள். இதுவா ஆத்ம நிவேதனம்? இன்று நடைபெறுவது வெறும் போலிவேஷமே.

இதுவரை கூறியவற்றிலிருந்து, அடியார்கள் பிறப்பால் எவ்வருணத்தாராயினும், குணத்தாலும் இச்சையாலும் ஒழுக்கத்தாலும் அவரவருக்கேற்ற இடங்களில் நின்று தொழுவதே அவருக்கு உறுதியான நன்மை பயப்பதாகும் என்பது வெளிப்படும். ஏனெனில், ஆலயங்களில் ஆகமமுறை வழுவாது பூசை நடைபெறுமானல், அப்போது அங்கு உற்பத்தியாகும் அருட்சக்திகள், கர்ப்பக்கிரகத்தில் மிகக்கொடுந் தீவிரத்துடனும், அர்த்த

மண்டபத்தில் மிகத்தீவிரத்துடனும், மகாமண்டபத்தில் தீவிரத்-துடனும், கொடிமரத்தை அடுத்து மந்தமாகவும், வெளிவீதியில் மந்ததரமாகவும் வேலை செய்யும். மற்ற இயற்கைச் சக்திகளைப் போலவே இந்த அருட்சக்திகளும் அதிகத்தூரம் பரவப்பரவ அவற்றின் வலிமை குறைந்துகொண்டே வரும். அதனால் மண் பெண் பொன்களுக்குப் பிரார்த்திக்கும் ஒருவன், கொடிமரத்-தண்டை நின்று அவற்றை இறைவனிடம் வேண்டுவதை விட்டு மகாமண்டபத்திற் சென்று வேண்டுவானானால், அவை அவனுக்கு நன்மையா தீமையா என்ற கேள்வியேயின்றி அவன் தன் விருப்பங்களைத் தீவிரமாகப் பெற்றுவிடுவான். "வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்," என்பது அருள்வாக்கு. ஆனால், "அடிமண்டிவரை குடித்தே தீரவேண்டும்," என்பது ஒரு ஆங்கிலப் பழமொழி. அதாவது, மண்டியில்லாத மது இல்லை; முதலில் அதை இனிப்பாகக் காண்பவன் அடியிலுள்ள கசப்பை-யும் குடித்தே ஆகவேண்டும், என்று அது கூறும். துன்பங் கலவாத சிற்றின்பம் எதுவுமே இல்லை அத்துன்பமும் தீவிரமாக வந்தடையும்போது, அதனையும் அனுபவித்தே தீரவேண்டும்; ஏனெனில் அவனவன் வினையை அவனேதான் அனுபவிக்கவேண்-டும், அழுதழுதும் பிள்ளை அவள்தான் பெறவேண்டும். அக் கருத்தை விளக்குவதே பஸ்மாசுரன் கதை.

பஸ்மாசுரன் இமயமலையில் கடுந்தவம் புரிந்து இறைவனுடைய சங்கார சக்தியையே தன் கையில் பெற்றான். அதனைத் தன் அஞ்ஞானத்தை சங்கரிக்க உபயோகிக்காமல், மாயையும் அதன் தோற்றங்களுமாகிய மோகினி வலையில் சிக்கி, அவளைப் பெறும் பொருட்டு அக்கையையும் அதன் சங்கார சக்தியையும் தன் தலையிலேயே வைத்து அழிவுற்றான். தன் பக்குவத்திற்கேற்ற சாதாரண வரத்தைப் பெற்றிருப்பின் அவ்வளவு தீவிரமாக அழி-வெய்தியிரான். இன்றைய ஆலயங்களின் சீர்கேடான நிலையாலும் குறைபாடான பூசைமுறையாலும் இம்மாதிரியான உடனடிப் பலன் கொடுக்கும் சம்பவங்கள் நமக்குக் காணப்படுவதில்லை; ஆனால் அத்தவறான ஆலயங்களால் பெரிய நன்மையும் பெறப்-படாதாகையால், இன்றைய ஆலயங்களில் நடைபெறும் பரார்த்த பூஜைகள் அங்கு வழிபடுவோர்க்கோ சுற்றியுள்ள நாட்டிற்கோ

உரிய நன்மையைப் பயக்காது வியர்த்தமாகிவிடுகின்றன. ஏனெனில், உரிய சக்தியை உற்பத்தி செய்யமாட்டாத யந்திரங்களையுடைய ரயில், மோட்டார், ஆகாயவிமானங்கள் எங்ஙனம் இடம் விட்டு இடம் பெயரும்? அங்ஙனம் நகராதபோது பிரயாணிகளை அவைஎங்ஙனம் கொண்டுசெல்லும்? ஆகவே உலக நலத்தைக் கவனியாதவரும், தம் நலத்தைக் கருதியேனும் இப் பரார்த்தபூஜா ஆலயங்களைச் சீர்திருத்த முயலுவது அடியார்களின் இன்றியமையாக் கடமைகளில் ஒன்முக இருக்கின்றது.

ஆலயந்தொழுவோர் கொடிமரந் தாண்டி உள்ளே சென்றபோது, சந்தடி செய்யாமலும் விமான வேகத்தில் பறந்தோடாமலும் அமைதியாக நின்று, மனம் மொழி மெய்களை ஒருமைப்படுத்தித் தொழல்வேண்டும். அறிந்தோ அறியாமலோ அவர்கள் முதல்முதலாகப் பிள்ளையார் குட்டுக் குட்டிக்கொள்வதின் கருத்து இதுவே. அர்த்தமண்டபம், மகாமண்டபத்தில் நின்று தொழுவோர், "ஆணவம் கன்மம் மாயை யகற்றி எம்மை ஆட்கொண்டருளும்," என்றே, "காமம் வெகுளி மயக்கும், யான் எனதென்னும் செருக்கும் அறுத்தருளும்," என்றே, "அறிவைக் கொடுத்து அவாவைப் போக்கி அன்பைப் பெருக்கி அடியேனை ஆட்கொள்ளும்," என்றே, "அழியா அன்பும் திடபக்தியுந் தந்தருளும்," என்றே, "அவாவை வேரறுத்து, அன்பைக் கனியவைத்து, அடியேனை ஆட்கொள்ளும்" என்றே மாத்திரம் பிரார்த்தனை செய்தல் வேண்டுமேயொழிய, மூலஸ்தானம்வரை சென்று நின்றுகொண்டு, "எனக்கு மண்ணைத் தாரும், பொன்னைத் தாரும், மனைவிமக்களைத் தாரும்," என வேண்டுவது அவருக்கும் நன்மையில்லை, ஆலயத்திற்கும் நன்மையில்லை. அத்தொழுகை உலகிற்கும் நன்மையில்லை. இம்முறையே குளிக்கப் போய்ச் சேறு பூசிக்கொள்ளும் முறை. அன்றித் தனக்கென வேண்டா, பிறர்க்கென வாழும் மக்கள், உலக சாந்திக்கும் நன்மைக்குமான முறைகளில் பிரார்த்திப்பாராக. அப்பேரறிவாளருக்கு இந்நூல் எழுதப்படவில்லை.

இனி, ஆலயச் சிறப்பந்திகளை மூலஸ்தானம் வரை வெறுஞ் சந்தடியும் வெட்டிப் பேச்சுகளும் சண்டை சச்சரவுகளும் நடத்தும்

போது அங்கு மேற்சொன்ன உயரியநோக்க வழிபாட்டிற்கு இடமே இல்லாது போகின்றது. ஆராதனை நடத்தும் போதும் ஸ்ரீ பலி தேவர் சுற்றி வலம் வரும் போதும் பலிபோடும் போதுங் கூட அவற்றை மனங்கவிந்து செய்வதை விட்டுத் தம் சுரண்டல் வழக்குகளைத் தீர்த்துக் கொள்ள அவையே சமயங்களென்றும் அவர்கள் கொண்டாடுகின்றனர். இவற்றையும் அதிகாரிகள் கவனிக்க வேண்டுவது இன்றியமையாதது.

கைம்மாறு வேண்டா கடப்பாட்டு மழையானது, நிலத்தில் விழும் போது நெருஞ்சி முள்ளையும் நெற்பயிரையும் ஒன்று போலவே தழைக்கச் செய்து விடும். அம்மாதிரியே ஆலயத்துப் பெய்யப்படும் அருள் மழையும் மனிதன் அகத்துள்ள நல்வித்துக்களையும் தீயவித்துக்களையும் பட்சபாத மின்றி வெளிக்கிளப்பி விடும். விகாசமுறை அல்லது பரிணும முறை எனப்படும் மானிட முன்னேற்றத்தின் இன்றைய நிலையில், நாம் பெரும்பாலாரிடம் நன்மையினும் தீமையும் சுயநலமுமே அதிகமாகக் குடிகொண்டிருக்கின்றன. அப்பேர்க்கொத்தவர் தீவிர அருள் சுரக்கும் இடங்களிற் செல்வதனுல் அவருடைய நற்குணங்கள் மட்டுமன்றித் தீயகுணங்களும் உரம் பெறுகின்றன. தீய குணங்கள் நேரடியாகத் தட்டி எழுப்பப்படா விட்டாலும் சார்ந் தொழுகும் சலனங்களால் (Sympathetic Vibration) அவையும் ஊக்கம் பெற்று விடுகின்றன. ஆழ்ந்த பக்தருட் பலர் பெருஞ் சிற்றின்பப் பிரியராய்க் காணப்படுவது இக்காரணத்தாலேயே. இந்த அருட்சலனமுறைகளின் உண்மைகளைக் கொண்டு அவற்றிற்கேற்ப அமைந்ததே பண்டைய ஆலயப் பிரவேச முறை. பின்வந்த மக்கள் குணத்தை விலக்கிப் பிறப்பை அதற்கு அடிப்படையாக்கியபோது ஆலயங்களும் அங்கு தொழும் மக்களும் அவர் வாழும் நாடும் சீர்குலைந்து விட்டன என்னல் தவறுகாது.

மக்களுக்குத் தொண்டு புரிய விரும்புவோர் ஆன்ம நிலைகளைப் பற்றி நன்கறியாத போது அவருடன் ஒப்புரவு கொண்டு உழைக்கவோ, அவருக்குத் தக்க முறையில் தொண்டாற்றவோ இயலாது போவர். அது பற்றியே ஆன்மாக்கள் நிற்கும் வெவ்வேறு சமயங்களைப் பற்றியும் அவரவருக் கேற்ற சமயநிலைகளைப் பற்றி-

யும் இவ்வளவு விரிவாக இங்கு எழுத ஏற்பட்டது; அன்றி இன்றைய ஆலயப்பிரவேச ஏற்பாட்டைப் பழிப்பதற்கல்ல. ஆலய ஆராதனையும் வர்ணாச்சிரம தர்மமும் சீர்குலைந்து நிற்கும் இக் காலத்தில் ஆலயப் பிரவேசத்தைத் தடுக்க முயல்வது சுயநலப் பற்றேயன்றி சாஸ்திர சம்மத மாகாது.

இருண்டிருக்கும் கர்ப்பக்கிரகத்தைப் பற்றிய உண்மையை அறியாத இக்காலத்திய நவ நாகரீக அதிகாரிகள் மூலஸ்தானம் வரை சூரியப் பிரகாசமான மின்சார விளக்குகளை ஏற்றி விடுகின்றனர்; இறைவனை மூடியிருந்த இருளை விரட்டிச் சீர்-திருத்தம் செய்து விட்டதாகப் பெருமையடித்துக் கொள்ளவும் செய்கின்றனர். செய்யப்பட்ட சீர்திருத்தம் முன்னை நிலையினும் மோசம் என்பதைப் பாவம், அவர் சிறிதும் அறிகின்றிலர். பண்டைய ஆலயங்களிலுள்ள கர்ப்பக்கிரகங்கள் மிகவும் இருண்டு, தொழுவோர் மனதில் ஒருவகை அச்சத்தையும் அதிசயத்தையும் வியப்பையும் திகைப்பையும் உண்டுபண்ணுமாறு அமைந்திருக் கும். அங்கு சூட்சுமமான மறைபொரு ளொன்று அறைக்குள் நிறைந்து மிதப்பதாக வாக்குக் கெட்டாத உணர்ச்சி யொன்று அடியார் மனத்துள் உண்டாகும். அது அவர்கள் பக்தியைப் பெருக்கும், அறிவின் சிறுமையை உணர்த்தும், தம்மை மறக்கச் செய்யும், உண்மை அன்பர்களைப் பரவசப்படுத்தும். ஆலயங்-களில் செய்யப்பட வேண்டிய அவசியமான சீர்திருத்தங்கள் எத்தனையோ எவ்வளவோ இருக்கின்றன. ஆனால் மூலஸ்தானத்-துக்குமுன் மின்சாரவிளக்கிடுதல் அவற்றுள் ஒன்றன்று. அது ஆலயத்தை சினிமாக் கொட்டகையாக மாற்றி விடுகின்றது. அக்காட்சியை விரும்புபவர் பேசுங் கடவுளரையும் பாடுங் கடவு-ளரையும் வெறும்கேலிக் கூத்தாக இன்று படம்பிடித் தாட்டி-வைக்கும் சினிமாக் கொட்டகைகளில் சென்று கண்டு கொள்ள-லாம்; அவருக்காக ஆலயங்களைப் பாழ்படுத்துவது அறிவீனம். அன்றியும் எண்ணெய் விளக்குகள், நெய் விளக்குகள் அளிக்கும் அருட் பலன்களை மின்சார விளக்குகள் கொடுப்பதில்லை. எண்-ணெய் விளக்குகளுடைய உட்பொருளும், சூடும் ஒளியும் ஒரு சேரப் பரப்பவல்ல அந்த அக்கினிக்கும் தேவ கணங்களுக்கு-முள்ள நெருங்கிய தொடர்பும், அதனால் ஏற்படும் உத்தம பலனும்

மின்சாரவிளக்குகளால் அடையப்படுவதில்லை. அது சம்பந்தமான உண்மைகளை, விருப்பமுள்ளோர் "சுதந்திரச் சிற்பமுறையின் மறைபொருள்" (The Hidden Side of Freemasonry by Bishop C. W. Leadbeater.) என்ற நெற்றிக்கண் ஆராய்ச்சி நூலிற் காண்க.

கடைசியாக, மூர்த்திக்கு சானித்தியங் கொடுக்கும் அடியிலுள்ள யந்திரங்களைப் பற்றி ஒரு குறிப்பு.

ஆலயத்திலுள்ள யந்திரங்களெல்லாம் அருட் கருவிகளாம். அவற்றைத் தம்மிடத்துக் கொள்ளாத உருவங்களெல்லாம் வெறுஞ்சிலைகளாம், ஆராதனைக்கேற்ற மூர்த்திகளாகா. ஆலயங்களில் யந்திரமே உயிர் நாடியாயுள்ளது. அதுவே பூஜைக்கு இன்றியமையாதது; அதன் மேலுள்ள விக்கிரகம் அருவப் பொருளை அறிய மாட்டாத மனத்தின் கவர்ச்சிக்காகவும் இறைவனைப் பற்றிய ஒரு சில குறியீடுகளைக் காட்டுவதற்காகவும் மக்கள் மனத்தை ஒருமுனைப் படுத்துதற்காகவுமே உதவுவது. அதனாலேயே ஆன்மார்த்த பூஜையில் பலர் பிம்பங்களின்றி வெறும் யந்திரத்தை மாத்திரம் வைத்துப் பூஜை செய்யும் வழக்கமிருந்து வருகிறது. மோட்டார் வண்டிகளில் உடலும் யந்திரமுமென இரு பாகங்கள் காணப்படும். அவற்றுள் யந்திரமின்றி உடல் தனியே இயங்காது; ஆனால் உடலின்றியே யந்திரம் இயங்குமாயினும், இரண்டும் ஒன்றுகூடும் போதே ஓரிடத்தை விட்டு ஓரிடம் நகருவதற்கு அது உற்ற சாதன மாகின்றது. அது போன்றதே ஆலயத்துள்ள பிம்பங்களுக்கும் யந்திரங்களுக்குமுள்ள இணைப்பு.

அன்றி, இந்த யந்திரங்கள் அறிகுறியாகக் காட்டும் உண்மையும் ஒன்று உள்ளது. யந்திரம் முதலில் வரையப்படும் போது, அது ஒரு உலோகத்தகடாய் வெறுஞ் சடப்பொருளாகவே இருக்கும். பின், மந்திரம் முத்திரை பாவனைகளாலும், உரிய கிரியைகளாலும் அது பாடம் பண்ணப் படும்போது, அச்சடப் பொருள் சிறிது சிறிதாக அருட் கருவியாதற்குரிய பக்குவம் பெற்றுக் கொண்டே வரும். முடிவில் அங்கு பூரண உருவேறி, யந்திர ஸ்தாபனமும் பிராணப் பிரதிஷ்டையும செய்யப்படும் போது,

அது முழுதும் இறைவனுடைய அருட்கருவியாக மாறிக் கோடி சூரியப் பிரகாசம் பொருந்திய அனுக்கிரக சக்தியை நாற்புறமும் இரவும் பகலும் இடைவிடாது விசிறிக்கொண்டே யிருக்குமென்று நெற்றிக்கண் பார்வையுடைய யோகியர் கூறுகின்றனர். ஆலயங்களில் நடைபெறும் அன்றாட ஆராதனையின் வேலைகளில் ஒன்று அங்ஙனம் செலவாகும் சக்திக்கு ஈடுகொடுப்பதாம். ஆராதனை இல்லாத யந்திரங்கள் நாளாவட்டத்தில் சக்தியிழந்துவிடும்.

இனி, இந்தப் படமாடுங் கோவிலுக்கு உயிராகவுள்ள யந்திரத்தைப் போன்று நடமாடும் கோவிலுக்கு உயிராக இருக்கும் ஆன்மாவும் கேவலம், சகலம், சுத்தம் என்ற மூன்று அவஸ்தைகளுடையன வென்று அனுபூதிச் செல்வர்கள் அருளுகின்றனர். ஆன்மாவானது முதலில் தன் அறிவு இச்சை செயல் ஒன்றும் தொழிற் படாது, குணம் குறியொன்று மின்றி, ஆணவமலத்தால் மூடப்பட்டுக் கிடக்குமாம். அப்போது, கண்ணிருந்தும் அது காரிருளில் ஒன்றும் காணாதது போன்று, அக்கேவலான்மா மூடமாய்க் கிடக்குமாம். அது அதன் கேவலாவஸ்தை யாம். கேவலம் என்பது தனித்து நிற்றல் எனப் பொருள் படும். பின் இறைவன் அந்த ஆன்மாவை உடம்பினுட்புகுத்தி, தனு கரணபுவன போகங்களால் அதன் அறிவு இச்சை செயல்களைச் சிறிது சிறிதாகத் தூண்டும் காலத்தில் அது சகலாவஸ்தையில் நிற்கும். அதுவே ஆன்மா அவாவுட்பட்டு மாறி மாறிப் பிறந்திறந்துழலும் சாதாரண அனுபவநிலை. பின், அந்த நெடுங்கால இன்ப துன்பநுகர்ச்சிகளால் பிறவியில் வெறுப்புண்டாகி, இருவினை யொப்பும் மலபரிபாகமும் எய்தியபோது ஞானாசாரியராலே ஞானோபதேசம் செய்யப்பட்டு, அநுபூதி நிலையடைந்து, யந்திரமானது விக்கிரகத்தின் அடியில் அடங்கிக் கிடப்பது போல ஆன்மாவும் இறைவனடியில் அடங்கி அவனோடு இரண்டறக் கலந்து அவனுடைய அருட்கருவியாக நிற்கும் நிலையில் அது சச்சிதானந்தப் பிழம்பாய் ஒளிவீசி நிற்குமாம். அதுவே ஆன்மாவின் சுத்தாவஸ்தை, அல்லது பாசமனைத்தும் நீங்கிய பேரின்ப நிலை. "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்பதே அந்த முடிந்த நிலை. நிற்பது, இருப்பது, நடப்பது, படுப்பது என்பன, தற்போத முனைப்புச் செயல்களாம். கிடப்பது தற்போத மின்றிய நிலை.

"படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே" என்ற ஆழ்வார் வாக்கும் அதுவே.

உண்ணாவிரதம் ஓங்கி வளர்ந்துவரும் இக்காலத்தில் அதனைப் பற்றிய ஒரு பண்டைய வரலாற்றை இங்கு நினைப்பூட்டுவது குற்றமாகாது. அப்பர் சுவாமிகள் இறைவன் வயப்பட்டு அவருடைய ஆலயங்களில் சான்னித்தியத்தைப் பெருக்கும் வேலையில் அமர்ந்து ஊர் ஊராய்ச் சுற்றிப் பதிகம் பாடி வரும்போது, சோழ நாட்டில் திருப்பழையாறைவடதளி என்னும் திருப்பதியை அடைந்தார். அங்குள்ள சிவாலயத்தில் சிவலிங்கம் முதலியவற்றைச் சமணர்கள் பெயர்த்தெடுத்துவிட்டுக் கோவிலை அமண் பாழியாக மாற்றிவைத் திருந்தனர். அதனை அறியாத அப்பர் சுவாமிகள், தூரத்தே கோபுரம், திருமதிலைக் கண்டு திருக்கோயில் எனக் கும்பிட்டார். அதைக் கண்ட சமணர், "அமண்பாழியின் கோபுரத்தை ஏன் வணங்குகின்றீர்" என்று கூறி நகையாடினர். அதனைக் கேட்டு உண்மையறிந்த நாயனார் சமணர் வன்செயலுக்கு மனம்பதைத்து மெய்நடுங்கி விதிர்விதிர்த்தார். ஆலயத்துள்ளிருந்த சிவலிங்கம் மறைத்து வைக்கப்பட்டமைக்கு வருந்தி, "மறைந்த இலிங்கம் மீண்டும் வந்து, கோயிலை வழிபட்டன்றி அவ்விடம் விட்டு அகல்வதில்லை" என்று அசையாமல் உண்ணா நோன்பிருக்கத் தலைப்பட்டார், உறைத்ததிருத்தொண்டர். "வஞ்ச அமணர் வஞ்சனையால் மறைத்த வஞ்சம் ஒழித்தருளும், உமதுவண்ணம் கண்டு நாளும்மை வணங்கியன்றிப் போகேனென்று அங்கேயேவீற்றிருந்து உடலை வாட்டினார் எண்ணம் முடிக்கும் வாகீசர்" என்னும், இதனைத் திருத்தொண்டர் புராணம். தொண்டர் துயரத்தைப் பொறுக்கலாற்றாத இறைவர் அன்றிரவே நாடாள் மன்னவன் கனவிற் சென்று செய்தியைக் கூறிச் சிவலிங்கத்தை மறைத்து வைத்திருக்கும் இடத்தையும் தெரிவித்தார். அதனை அறிந்து மன்னவன் சமணரைத் தண்டித்து வடதளிக் கோயிலையும் புதுக்கினான், அப்பரும் சிவனைத் தரிசித்து மகிழ்வெய்தினார், சமணர் "மறைத்தாலும் மறைக்கொண்ணுமோ" என்ற கூற்றைத் தம் திருக்குறுந்தொகையில் அமைத்து இறைவன் மீதும் பாடியருளினார். இந் நிகழ்ச்சியிலிருந்து இந்த உண்ணாவிரத சத்யாக்கிரகம் பண்டே பாண்டி

நாட்டில் பழக்கத்திலிருந்ததாகத் தெரிகிறதல்லவா ! இவ்வரலாறு நம்முள் திருக்கோபுரத்தை வணங்கும் வழக்கத்தைக் காட்டு-வதற்காக இங்கு கூறப்பட்டுள்ளது.

(1) அந்த விமானந் தனக்கருகா
ஆங்கோரிடத்தின் பாங்கெய்திக்
கந்தமலரும் கடிக்கொன்றை
முடியார் செய்ய கழலுன்னி,
மந்தவமணர் வஞ்சனையால்
மறைத்தவஞ்சம் ஒழித்தருளிப்
பந்தங் கொண்ட குண்டர் திறம்
பாற்று மென்று பணித்திருந்தார்.

(2) வண்ணங்கண்டு நானும்மை
வணங்கியன்றிப் போகேனென்று
எண்ண முடிக்கும் வாகீசர்
இருந்தார் அமுது செய்யாதே
அண்ணலாரும் அது உணர்ந்து
அங்கு அரசு தம்மைப்பணிவதற்குத்
திண்ணமாக மன்னனுக்குக்
கனவிலருளிச் செய்கின்றார்.

என்று இந்நிகழ்ச்சியைக் கூறுவது பெரியபுராண வரலாறு.

## பாடம் 6

## ஆன்ம விதங்கள்

இதுவரை ஆலயம் விளக்கும் ஆன்ம நிலைகள், அதாவது ஒரே ஆன்மாவின் பக்குவத்திற் கேற்ற பலவித நிலைகள் ஆராயப் பட்டன. ஆலயத்தின் முன்கோபுர வாயிலில் நின்று கொண்டு யாவரும் காணக் கூடியவையான முன்கோபுரம், கொடிமரம், மூலவர், ஆச்சாரியர்.என்பனவற்றைப் பற்றிய பல உட்பொருள் களில், ஆன்ம சம்பந்தமான ஒன்று விளக்கப் பட்டது, அதுவே ஆலயங்களால் நாம் அறிய வேண்டிய முதல் உண்மை என்றும் கூறப்பட்டது. இனி நாம் ஆலயத்துள்ளே சென்ற உடனே காணும் இரண்டாவது உண்மையை நோக்குவோம்,

ஒருவன் ஆலயத்துள் சென்றவுடனே, அங்கு பல பல மூர்த்திகளின் உருவங்கள் அவன் கண்ணுக்குத் தென்படுகின்றன. அவற்றின் உட் பொருளை அறியாத அன்னிய மதத்தவர், "இந்து மதத்தில் கடவுளர் பலர்" என்று நம்மை ஏளனம் செய்கின்றனர்; தேவ கணங்களுக்கும், தேவாதி தேவனுகிய நங் தெய்வத்திற்கும் உள்ள வேறுபாட்டைக்கூடத் தெரிந்துகொள்ளாத சிற்றறிவுடை-யோராய், அவர்கள் நமக்குக் கடவுள்கள் முப்பத்து முக்கோடி என்றுங் கூறுகின்றனர். அந்த முப்பத்து முக்கோடி தேவர்களையும் கடந்து நிற்பவருக்கே கடவுள் என்ற பெயரும் தெய்வம் என்ற பெயரும் வழங்கப் படுவதையும், ஏனையோர் தேவர்கள் என்ற பெயரால் அழைக்கப் படுவதையும் அவர்கள் அறிகின்றிலர். உபநிடதங்களைச் சிகரமாகவும், வேதாந்த சித்தாந்தங்களை மகுடமாகவும் கொண்டுள்ள இந்து மதத்தில், இறைவன் ஒருவனே என்ற உண்மை அறியப்பட வில்லை யென்றால் அது யாவரும் நகையாட வேண்டியதோர் கூற்றேயாகும். ஆயி-னும் இந்துக்களென்று கூறிக் கொள்வோர் சிலரும் கிளிப்பிள்ளை போன்று இதனைத் திருப்பிச் சொல்லும் போது, சிரிப்பதற்குப் பதிலாக அழத்தான் வேண்டியிருக்கிறது. "ஒன்றேகுலமும் ஒருவனே தேவனும்" என்ற முதுமொழியானது, இன்று நம் நாட்டிலுள்ள அன்னிய மதங்கள் பிறக்கு முன்னரே தோன்றியதென்பதை அவர்கள் அறியார் போலும்.

அங்ஙனம், "ஒருநாமம் ஒருருவம் ஒன்றுமில்லார்க்கு ஆயிரம், திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ" என்ற திருவாசகத்தின்படி, உருவம் ஒன்றின்றி, எங்குமாய் எல்லாமாய் நிற்கும் பரசிவத்திற்குச் சிவாலயங்களில் முதலுருவாகச் சிவலிங்-கத்தையும், வழி உருவங்களாகத் தாண்டவர், தேவியார், தக்ஷிணு மூர்த்தி மூவரையும், சார்புருவங்களாகக் கந்தர், கணேசர், கால பைரவர் மூவரையும் வகுத்து வைத்திருக்கின்றனர். இவருள் பரசிவம் அரூபம் அல்லது அருவமென்றும், சிவலிங்கம் ரூபாரூபம் அல்லது அருவுருவமென்றும், மற்ற இரு மூவரும் ரூபம் அல்லது உருவமென்றும் கூறப்படுகின்றனர். அருவுருவும் உருவுமாகிய இந்த எழுவரும் இறைவனிடத்து அடங்கிக் கிடக்கும் எழுவகைத் தனிப் பெருஞ் சிறப்புத் தன்மைகளைக் குறிக்கும் திருமேனிகளாம்.

அவை அறிகுறியாக ஆன்ம வர்க்கத்தை விளக்கும்போது, அவற்றிற்கு ஏழு வித ஆன்ம கலைகள் அல்லது ஏழு ஆன்ம விதங்கள் என்று இந்த சமயக் கிண்டர்கார்டன் நூலில் பெயர் கொடுக்கப்பட்டிருக்கின்றது.

ஏழு என்பது இன்றுள்ள சிருஷ்டியில் ஒரு முக்கிய எண்ணென்று குப்தவித்தை வல்லவர் கூறுகின்றனர். ஒளியில் நிறங்கள் (Vibgyor) ஏழு, ஒலியில் ஓசைகள் (சரிகமபதநி) ஏழு, உலோகத்தில் ரத்தினங்கள் ஏழு (பவளமும் முத்தும் கல் வகையல்ல,) உடம்பில் ஆதாரங்கள் ஏழு, சூரிய மண்டலத்தில் கிரகங்கள் ஏழு (ராகுவும் கேதுவும் சாயா கிரகங்கள்), இன்னும் சப்த உலகங்கள், சப்த ரிஷிகள், சப்த கோடி மகா மந்திரங்கள் என்பன போன்று ஏழு என்ற சிறப்பெண் இறைவன் படைப்பு முழுவதிலுமே காணக் கிடக்கின்றது. இதனை அனுபூதிமான்கள், இறைவனிடத்தும் அவன் படைத்துள்ள எல்லா வர்க்கங்களிலும் காணப்படும் ஏழு தனிப் பெருஞ் சிறப்புத்தன்மைகள் அல்லது கலைகளாகக் கூறுகின்றனர். அவற்றை இறைவனிடத்துள்ள ஏழு வகைக் கிரணங்கள் என்றும் சொல்லலாம். அக்கலைகள் கீழே காட்டப்படுகின்றன.




இவற்றுள், சக்தியின் பிரதிபலிப்பு அதனைத் தொழிற்படுத்தும் ஆற்றலாகின்ற கிரியையும், அன்பின் பிரதிபலிப்பு பக்தியும், ஞானத்தின் பிரதிபலிப்பு விஞ்ஞான அறிவுமாம். முதல் மூன்றும்

அகநோக்கு; பின் மூன்றும் அவற்றின் பிரதி பலிப்பாகும் (Reflex) புறநோக்கு; நடுவண் உள்ள நான்காவது அகமும் புறமும் ஒருசேர நோக்கும் கலை.

இறைவனுடைய தன்மைகள் அனைத்துமே எல்லா மூர்த்திகளிடத்தும் உள்ளனவாயினும், அவர் யாவரும் படைத்தல், காத்தல், மறைத்தல், அழித்தல், அருளல் என்ற ஐந் தொழிற்குறிய ஆயுதங்களைக் கையிற் கொண்டிருப்பினும், அவற்றுள் ஒவ்வொரு மூர்த்தியும் ஒன்றை மாத்திரம் அடியாரின் பொருட்டு விளக்கிக் காட்டுவர். அது அறிகுறியாகச் சுட்டிக் காட்டுவது யாதெனின், எல்லா மனிதரிடத்தும் மேற் சொன்ன ஏழு கலைகளும் உள்ளனவாயினும் அவற்றுள் ஒன்று மாத்திரம் ஒவ்வொருவரிடமும் கூடுதல் விளக்கம் பெற்றதாய், மற்றவை அதற்குச் சார்பாக நிற்கும், என்பதாம். அவ்விதம் முதன்மையாக விளங்குவதே அவருடைய கலை எனப்படும். மனித வர்க்கத்தில் முதல் மூன்று கலையினரும் அக நோக்கிகள் (Introverts). அவர்கள் தம் இன்பத்திற்குப் புறப் பொருள்களை நாடுவதில்லை. கடைசி மூன்று கலையினரும் புறநோக்கிகள் (Extroverts); புறவுலகத் துணையின்றி அவர்கள் இன்பம் பெறார். நடுக்கலையில் உள்ளவர் அகத்தையும் புறத்தையும் இணைத்து நிற்பவர், உள்ளுணர்ச்சியை வெளி உலகப் பொருள்களைக் கொண்டு உருவகப்படுத்துவர். அவர்கள் சொல்லால் கவிதையையும், வர்ணத்தால் ஓவியத்தையும், ஒலியால் இசையையும், கல்லால் சிலையையும் ஆக்குவதில் கை தேர்ந்தவராய் இருப்பர். இக் கலைஞரின் கற்பனைகளே தெய்வத்தன்மை வாய்ந்தனவாயிருக்கும்; மற்றவர் படைப்புகள் மட்டமாகவே இருக்கும்.

*

# ஏழு கலைகளின் விபரங்கள்

| மூர்த்தி | கலை | குணம் | அதனை விளக்கும் மக்கள் | ஆன்மசாதனம் | மற்ற வர்க்கங்களில் இக்கலைகள் | |
|---|---|---|---|---|---|---|
| | | | | | உலோக வர்க்கம் | மிருக வர்க்கம் |
| சிவலிங்கம் | 1 | (மனோ) சக்தி (Will) | அரசர், வீரர், தளகர்த்தர், நீதிபதி போன்றவர். | ராஜயோகம் | வயிரம் (Diamond) | ... |
| தேவியார் | 2 | அன்பு (Love) | சமயகுரவர், மருத்துவர், கல்வி ஆசிரியர் முதலியோர். | ௸ | இந்திரநீலம் (Sapphire) | ... |
| தக்ஷிணாமூர்த்தி (Mystic) | 3 | பதிஞானம் (Wisdom) | சந்தானகுரவர், தத்துவநூல் வல்லார். | ஞானயோகம் | மரகதப்பச்சை (Emerald) | யானை |
| தாண்டவர் | 4 | அழகு (Harmony) | கவிஞர், ஓவியர், சிற்பியர், நடிகர் கூத்தர், இசைவாணர் ஆதியர். | பொது | கோமேதகம் (Jasper) | குரங்கு |
| கந்தர் (Occultist) | 5 | (பாச) அறிவு (Science) | விஞ்ஞானசாஸ்திரிகள், பூதபௌதிக ஆராய்ச்சியாளர் ஆகியோர். | ஞானயோகம் | புஷ்பராகம் (Topaz) | குதிரை |
| கணேசர் | 6 | பக்தி (Devotion) | ஆழ்வார்கள், நாயன்மார்கள், கிறிஸ்தவ பரிசுத்தவான்கள், மகம்மதியப் பக்கிரி சாதுக்கள், மற்றும் பல மதப் பக்தர்கள். | பக்தியோகம் | மாணிக்கச் சிவப்பு (Ruby) | நாய் |
| காலபைரவர் | 7 | கிரியை(யால்) சக்தி (Ceremonial magic) | யந்திர அமைப்பாளர் (Inventors), சமயக்கிரியையாளர், (Ritualists), பலவகைக்கம்மியர், கைவேலைத் திறமையாளர். | கர்மயோகம் | கருநீலம் (Amethyst) | பூனை |

இந்த ஏழுவித ஆன்ம வகையின் உண்மையை அறியாமையே தற்கால உலகில் காணப்படும் பெருவாரியான துன்பத்திற்கும் குழப்பங்களுக்கும் குறைவாழ்க்கைக்கும் ஒரு காரணமாக இருக்கின்றது. அகநோக்கிகள், உண்மையறியாது புறநோக்கிகளின் வேலையைப் பழிக்கின்றனர், அவ்வாறே புறநோக்கிகளும் நடக்கின்றனர். இரு வகையினரும் வயிற்றுப் பிழைப்பின் பொருட்டு எல்லா வேலைகளிலும் ஈடுபடுகின்றனர். அதனால் தொழிலுக்கும் மனிதனுக்கும் பொருத்தமின்மை (Misfits) ஏற்பட்டு எங்கும் குறைவாழ்க்கையே நிறைந்து உலகம் அமளிகுமளியாய் இருந்து வருகின்றது. அரசியலாரும் சமய வல்லோரும் மனோதத்துவ மேதையரும் ஒன்றுகூடி இதனை நடுநின்று சீர்தூக்கி ஆராய்ந்து நடப்புக்குக் கொண்டுவரும்வரை உலக முன்னேற்றம் தட்டுத் தடங்கலின்றி நடைபெறாது.

இதுவரை கூறியவற்றைக் கற்றறிந்தவர் ஆலயந்தொழச் செல்லும்போது,

(1) கோபுரத்தைக் கண்டவுடன், "நான் உடம்பல்ல, ஆன்மா," என்று நினைப்பூட்டிக் கொள்ளவேண்டும்; கோபுரந்தாண்டிப் பலிபீடஞ் சென்றதும் "நான் இச்சையல்ல," என்று ஞாபகப்படுத்திக்கொண்டு, கீழேவிழுந்து வணங்கும்போது, தம் சுயநல இச்சைகளாகிய மிருகங்களை அங்கே பலி கொடுத்ததாகப் பாவிக்க வேண்டும். பின் எழுந்துநின்று கொடிமரத்தை நோக்கி, "நான் மனமுமல்ல, தத்துவங்களல்ல," என்று நினைப்பூட்டிக்கொண்டு உள்ளே செல்லல் வேண்டும.

(2) உள்ளேசென்று மூலஸ்தானத்தைத் தொழும்போது, தன்னை ஜீவான்மாவாக உணர்ந்து, ஜீவான்மாவின் தன்மைகளாகிய யான் எனதென்னும் உணர்ச்சியும் நீங்கி, இறைவனோடு இரண்டறக் கலந்து, இறைவனுடைய அருட் கருவியாக மாத்திரம் கிடக்க ஆர்வப்படல் வேண்டும்.

(3) பின்னர், வலம்வந்து அங்குள்ள மற்ற மூர்த்திகளைத் தொழும்போது தன் இயற்கைக் கலை இன்னதெனத் தெளிய முயலல் வேண்டும்; அங்ஙனம் தெளிந்து அதற்குரிய ஆத்ம சாதனத்தையும் ஊக்கத்துடன் கையாள முயல வேண்டும். அச் சாதனமே முக்தி நெறியில் அவனுக்கேற்பட்ட குறுக்குப் பாதையும் நேர் பாதையுமாகும்.

இங்ஙனம் உட்பொருளை அறியாதும் அதனை அநுபவத்திற் கொண்டுவர முயலாதும் ஆலயஞ் செல்வதும் தொழுவதும், அனேகமாக வீண் வேலையாகவே முடிகின்றது. அடிக்கடி ஆலயஞ் செல்வோரிடத்துங்கூட தெய்வத்தன்மை விளங்கிக் காணாமைக்குக் காரணம் இதுவே. ஒவ்வொருவனிடத்தும் உடம்புகளாகிய மிருகமும், அதாவது பாசமும், ஆன்மாவாகிய மனிதனும், அதாவது பசுவும், ஆட்டுவிக்கும் இறைவனாகிய பதியும் அடங்கி இருக்கின்றனர். ஆலய வழிபாட்டின் ஒரே நோக்கம் மிருகத்தன்மையை ஒழித்து, மனிதத்தன்மையை அடக்கி, தெய்வத் தன்மையை ஒளிவீசச் செய்தலாம்; அதாவது சீவத்தன்மையைப் போக்கி சிவத்தன்மையை எய்தலாம். அப்போதே பேரின்பம் கைகூடும். அல்லாதவரை அது பெறப்படாது

"ஆத்மனைத் தேருக்குச் சொந்தக்காரனாகவும், உடலைத் தேராகவும், புத்தியைத் தேர் ஓட்டுபவனாகவும், மனதைக் கடிவாளமாகவும், இந்திரியங்களைக் குதிரைகளாகவும், இந்திரிய விஷயங்களை (ஐம்புலப் பொருள்களை)க் குதிரை செல்லும் பாதைகளாகவும் அறிக," என்னும் கடோப நிடதம் (I. 3-4) என்ற பண்டைய ஞான நூல். இந்தத் தேர்ப் பயணத்தில்,

(1) அடங்காத குதிரைகளை யுடையவன் தேகான்மா;

(2) அடங்கிய குதிரைகளை யுடையவன் சீவான்மா;

(3) உடம்புகளுக்கப்பாற்பட்டு அவற்றால் கட்டுண்ணாது நிற்பவன் முத்தான்மா.



கர்ப்பக்
கிரகம்
மகா
மண்டபம்
தேவி
ஆலயம்
2 வது ஆவரணம்
3 வது ஆவரணம்
கொடிமரம்
பலிபீடம்
முன்
கோபுரம்


4-7- ஆவரணங்கள்

*

பாடம் 7

## மனிதனுடைய அன்ன உடம்பு.

முன்பாடங்களில், ஆலயத்தின் முன்கோபுரம் முதல் மூலஸ்தான மூர்த்திவரை கிழ்மேலாக ஒரே கோட்டிலுள்ள ஒரு சில உருவங்கள் விளக்கும் ஆன்ம நிலைகள் கூறப்பட்டன அவையே ஆலயங் கற்பிக்கும் முதல் உண்மை யென்றுங் கூறப்பட்டது. பின், ஆலயத்துள் இறைவனுக்கு அறிகுறியாக அமைக்கப்பட்டுள்ள பலவேறு வடிவங்கள் ஆன்ம கலைகளை அல்லது தனிப் பெருஞ் சிறப்புத்தன்மைகளைக் குறிக்குமென்றும், அது இரண்டாவதாக அறியவேண்டிய உண்மை என்றுங் கூறப்பட்டது.

இனி, நம் ஆலயங்கள் நமக்குக் கற்பிக்கும் மூன்றாவதான உண்மை, அவற்றின் ஆவரணங்கள், என்ற பிராகாரங்களால் விளக்கப்படுவது. அந்த ஆவரணங்கள் ஆலயத்தின் பணச் செழிப்பைப் பொறுத்து ஒன்றுமுதல் ஏழுவரை அமைந்திருக்கும் என்பது மேலே குறிப்பிடப்பட்டது. எவ்வாறாயினும் ஆவரணங்களெல்லாம் மனிதனிடம் மறைப்புண்டுபண்ணும் உடம்புகளையே குறிப்பனவாம். அவை, ஒன்றாக மாத்திரம் இருக்கும்போது மனித உடம்புகளை மொத்தமாகவும், ஏழாக விருக்கும்போது அவ்வுடம்புகளைத் தனித்தனி வேறுபடுத்தியும் குறிப்பிடும்.

| பிராகாரங்கள் | | | உடம்பு வகைகள் |
|---|---|---|---|
| 1 | ,, | மனிதனுடைய உடம்புத் தொகுதி | |
| 3 | ,, | ,, | ஸ்தூல, சூட்சும, காரண உடம்புகள். |
| 5 | ,, | ,, | அன்னமய, பிராணமய, மனோமய, விஞ்ஞானமய, ஆனந்தமய கோசங்கள். |
| 7 | ,, | ,, | அன்ன உடம்பு, பிராண உடம்பு, இச்சை யுடம்பு, உருவமன உடம்பு, அருவமன உடம்பு, விஞ்ஞான உடம்பு, ஆனந்த உடம்பு. |

என இந்த ஆவரணங்கள் மனித உடம்புகளைத் தொகுத்தும் விரித்தும் விளக்கா நிற்கும்.

மனிதன் மேற்கு தலை வைத்துக் கிழக்கு கால் நீட்டி மல்லாந்து படுத்திருப்பதைக் காட்டுவது, ஆலயங்களில் மூலஸ்தானம் முதல் முன்கோபுரம் வரையுள்ள பாகம். (படம் 1. பார்க்க.) எண் சாணுடம்பிற்குச் சிரசே பிரதானமாவது போல ஆலயத்திற்குப் பிரதானமாகிய கர்ப்பக்கிரகம் முகமாகவும், அர்த்த மண்டபம் கழுத்தாகவும், துவாரபாலகர் நிற்கும் இடங்கள் மனிதனுக்குக் காவல் புரியும் இரு தோள்களாகவும், அங்கிருந்து கொடிமரம் வரை முண்டாகாரமான உடம்பாகவும், கொடிமர ஸ்தானம் குதமாகவும், கொடிமரம் முதுகுத் தண்டாகவும், குடைவரை வாயிற் கோபுரம் உயர்ந்து நிற்கும் பாதங்களாகவும் ஆகமங்களில் உருவகப்படுத்திக் கூறப்படுகின்றன. இவ்வுடம்பு அன்னத்தை உண்டு வளர்ந்து, அன்னத்தால் நிலை பெற்றிருப்பதால், அன்னமய கோசம், அன்ன உடம்பு என்றழைக்கப்படுகின்றது. அது மெய் வாய் கண் மூக்குச் செவி, கை கால், முதலிய உறுப்புகளைக்கொண்டு இயங்குவது; பூலோக வேலைக்குக் கருவியாக உதவுவது; ஸ்தூலமாகக் காணப்படுவதால் ஸ்தூல உடம்பென்றுஞ் சொல்லப்படுவது.

இந்து ஆலயங்களில் ஒரு சில தவிர மற்றவை கிழக்கு நோக்கியே இருப்பன. அவற்றின் நான்கு திசைகளிலும் மதில் வாயில்கள் இருப்பினும் ஆலயந் தொழச் செல்வோர் கிழக்கு வாயில் வழிச் செல்வதே முறை. கிழக்கிருந்து வருபவன் முதலாவதாகக் காண்பது படுத்திருப்பவனுடைய பாதங்களேயாம். அவையே படுத்திருப்பவன் உடம்பில் கூடுதல் உயர்ந்திருக்கும் உறுப்புகள். அதனால் முன்கோபுரங்கள் ஆலயங்களில் மிக உயரமாகக் கட்டப்படுகின்றன. கட்டடச் சிற்பத்தில் கைதேர்ந்த பெர்குஸன் (Fergusson) என்ற மேனாட்டு மேதாவியானவர் நம் நாட்டில் சுற்றுப் பிரயாணஞ் செய்து தமிழ் நாட்டு ஆலயச் சிற்பங்களைப் பற்றியும் சிலைகளைப் பற்றியும் வெகுவாகப் புகழ்ந்து எழுதி யிருக்கின்றனர். ஆயினும் அவற்றின் அடிப்படைக் கருத்துக்களையறியாததால், குடைவரை வாயிற் கோபுரத்தைப் பற்றிக் குறைகூறுகின்றனர். "இத்தனை அழகாக ஆலயம் அமைக்கக் கூடிய தமிழ் மக்கள், அதன் உன்னத பாகமாகிய கோபுரத்தை நடுவில் கட்டாமல் முன் முகப்பில் கட்டி யிருப்பது அதிசயப்பட

வேண்டியதாய் இருக்கின்றது" என்று அவர் கூறுகின்றனர். அது ஆலய தத்துவத்தை அறியாதோர் கூற்றாகும். மூலஸ்தானத்திற்கு மேலுள்ள விமானம் மனிதனுடைய பிரம்மரந்திரம் என்ற சகஸ்ரார சக்கரத்தை அறிகுறியாகக் காட்டுவது. அந்தச் சக்கரம் ஆயிரம் இதழ்களையுடைய இரண்டடுக்குத் தாமரை போன்றது. அவ்விதமே மூலஸ்தான விமானங்கள் அமைக்கப்படுகின்றன; அதிகமான உயரமில்லாமலும், உருவத்தில் தாமரை மொக்குப் போலவும், பெரிய ஆலயங்களில் பொன் வேயப்பட்டுச் சூரியப் பிரகாசமாகவும் அவை சீவன்முத்தனுடைய சகஸ்ராரம் போலவே அழகாக ஒளி வீசித் திகழும். அன்றியும் கிறிஸ்தவ ஆலயங்கள் போன்று, மூன்று பத்திகளை மாத்திரம் உடையனவாய் நடுக்கொண்டு உயர்ந்து நிற்கும் கட்டிடங்களிலேயே அத்தகைய கோபுரங்கள் பார்வையாக விருக்குமேயன்றி, பல சந்நிதிகளை யுடையனவாய் மதுரை போன்ற மிகப் பரந்து விரிந்த ஆலயங்களில் நடுக் கோபுரம் அத்தனை எடுப்பாகத் தோன்றாதென்பதும் எளிதில் அறியக் கூடியது.

இனி, உடம்பின்றி உயிர்வாழ முடியாதென்பது யாவரும் அறிந்தது. "சுவரை வைத்தல்லவா சித்திரம் எழுத வேண்டும்" என்ற தமிழ்ப் பழமொழி அவ்வுண்மையை உணர்த்துவதே. ஏனெனில் பண்டைக் காலங்களில் பெரும்பாலும் சுவர்களிலேயே சித்திரங்களை எழுதி வந்தனர். துணி, காகிதங்களில் வரைவன பல காரணங்களால் கெட்டுப் போவதோடு அன்னியரால் கொள்ளை கொள்ளத் தக்கனவாயுமிருக்கின்றன. சுவரிலுள்ள சித்திரங்கள் அங்ஙனம் அகற்றப்படக்கூடாமையால், உலகப் பிரசித்தி பெற்ற அஜாந்தா, எல்லோரா, சித்தன்னவாசல், மதுரைச் சொக்கர் கோயில், தஞ்சைப் பெருங் கோயில், திருவாங்கூர் பத்மநாபபுரம் முதலிய இடங்களின் சுவர்ச் சித்திரங்கள் இன்றும் நம் நாட்டிற்கு அணிகலமாக இருந்து வருகின்றன. அத்தகைய சித்திரங்கள் வரைவதற்குச் சுவர்கள் நீறுங் காரையும் சுடுகல்லுங் கொண்டு செம்மையாகக் கட்டப்பட்டிருத்தல் வேண்டும். அதனால் "சுவரை வைத்தல்லவோ சித்திரம் எழுதல் வேண்டும்" என்ற பழமொழி, இன்று, ஆரோக்யமில்லாத உடம்பில் அழகாக உயிர்வாழ்வதெங்ஙனம் என்று பொருளில் வழங்கப்பட்டு வருகின்றது. நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம், என்பதும் இதனையே.

இந் நோயற்ற வாழ்விற்கு இன்றியமையாத இரு விதிகள், அழுக்கு நீக்கலும் ஆகாரம் ஊட்டலுமாம். அழுக்கைப் போக்குவது இடக்கை, ஆகாரம் ஊட்டுவது வலக்கை. அதனால் இவ்விரு விதிகளையும் கீழ்க்கண்ட படத்தின் மூலம் சிறுவருக்கும் விளக்குவது எளிது. அவ்விதிகளை விளக்கிக் கூறுவது இந்நூலின் நோக்கமல்ல; அவை எல்லாச் சுகாதார நூல்களிலும் காணப்படும்.


உடம்பு
உடுப்பு
உணவு
வீடு
நாடு
அழுக்கைப்
போக்கு
இடதுகை


நாடு
வீடு
உணவு
உடுப்பு
உடம்பு
ஆகாரம்
ஊட்டு
வலதுகை

ஆனால் அந்தச் சுகாதார நூல்களில் சொல்லப்படாததான முக்கியமான உண்மையொன்று இங்கு கூறவேண்டுவதாகின்றது. அது யாதெனின், இந்த அழுக்கிலும் ஆகாரத்திலும் தூலம், சூக்குமம் என இரு பகுதிகள் உள்ளன. அவற்றுள் தூலப்பகுதியை முக்கியமாகக்கொண்டு, மேனாட்டாராகிய ஐரோப்பிய மக்கள் தங்கள் உடம்பிற்கு உரத்தை ஊட்டி ருத்ர கணங்களாக மாறி மயானத் தாண்டவம் ஆடுகின்றனர். கீழ் நாட்டாராகிய ஆசிய மக்கள், சூக்குமப் பகுதியை முக்கியமாகக் கொண்டு என்றும் வறுமைப் போர்வை போர்த்து, எலும்பும் தோலுமாய், பெரி-யம்மை, சின்னம்மை, பேதி போன்ற காளியாட்டத்தில் ஈடுபட்டுத் திளைக்கின்றனர். இரு பகுதிகளையும் ஒன்று சேர்த்துக் கையாண்டாலன்றி இன்ப நிலை ஏற்படாதென்பதைக் காட்டுவதே இப்பகுதியின் நோக்கமாகும்.

தூல அழுக்கு சாதாரணமாக யாவராலும் அறியப்படுவது; பொருள்களால் மனத்திலும் இச்சையிலும் ஏற்படும் அழுக்குகளே சூக்கும அழுக்காம். விளக்கானது தன் ஒளியை நாற்புறமும் பரப்பிக் கொண்டிருப்பது போல, உலகிலுள்ள ஒவ்வொரு பொருளும், மலருக்கு மணம் போலத் தனக்கு இயற்கையாயுள்ள அலைகளைத் தன்னைச் சுற்றி ஓயாது பரப்பிக்கொண்டே யிருக்கும். அந்த அலைகளே அவற்றின் உயிர் வாழ்க்கை. இவ்வுண்மை இக் காலத்து விஞ்ஞானக் கலைஞரால் கண் கூடாகக் காணப்படுவது. சில பொருள்கள் புறத்தே துப்புரவாகக் காணப்படினும், அவற்-றின் அலைகள் அறிவையும் இச்சைகளையும் அல்லற்படுத்துவனவாக விருக்கும். இது வசீகர தோஷம் (Magnetic Impurity) என்னப்-படும். மேனாட்டார் தூல அழுக்கை நீக்குதற்கு பகீரதப் பிரயத்-தனங்கள் செய்வர், ஆனால் வீடுகள் நிறையச் சுருட்டுப்புகை, வீதிகளெங்கும் கள்ளுக்கடைகள், கசாப்புக் கடைகள், வெளியிலும் வீட்டுக்குள்ளும் இட்டு நடப்பது ஒரே செருப்பு; இத்தகைய சூக்கும அழுக்கு முறைகளை அவர்கள் கவனியாமையால் மனத்-தில் அமைதியோ இச்சையில் அடக்கமோ காணமாட்டாமல் அல்லற்படுகின்றனர். போதுமென்ற மனமுடையோரை அவ-ருடைய நாட்டிற் காண்பது மிகவும் அரிது. நம் நாட்டில் சூக்கும அழுக்குகள் சமயாசாரங்களாகக் கருதப்படுவதால், அவை மூடக்

கொள்கைகளாகவோ, அறிவுடனேயோ அனேகமாகக் கையாளப்படுகின்றன. தீட்டு, திருஷ்டி தோஷம், ஒருவர் உடை செருப்பு முதலியவற்றைப் பிறர் அணியாமை, கள்ளுக்கடை கசாப்புக்கடை ஒதுக்கம், செருப்புக் காலோடு வீட்டிற்குள் பரிமாறாமை, இவற்றையும் இவை போன்ற பிறவற்றையும் நம் மக்கள் உயிராபத்துப்போலப் பயந்தொதுக்குவர். ஆனால் விடியுமுன் எழுந்து எதிர் வீட்டுச் சுவரண்டை மலஜலங் கழிப்பர், வீட்டைச் சுற்றியுள்ள வழி நடைகள், ஆறு, குளம், கால்வாய்கள் எங்கும் ஆபாசம் பண்ணித் தொற்று நோய்களைப் பரப்புவர், வெறுங் காலுடன் நடப்பர், நடக்குமிடமெல்லாம் காறியுமிழ்வர், வீட்டிலும் கடையிலும் உணவுகள் தின்பண்டங்களை மூடி வைக்காமல் ஈ மொய்க்க வைப்பர். அத்துடன் போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்தென்ற கொள்கையை நம்மவர் தமோ குண முறையில் போற்றி வருவதால், நமக்குள் என்றும் நீங்காத வறுமையும், எய்ப்பும், இளைப்பும், தொத்து நோய்களால் மக்கள் புற்றீசல்போல மடிவதும், இயற்கையாகி விட்டன. அதனால் நாம் ஏலாப்பதிவிரதை என்ற முறையில் கையாலாகாத சாதுக்களாகத் திகழ்கின்றோம்.

> " தீயாரைக் காண்பதுவும் தீதே, திருவற்ற
> தீயார் சொற் கேட்பதுவும தீதே,"

என்ற செய்யுள் இந்த சூக்கும அழுக்கு முறையைக் குறிப்பிடுவது. இச் சூக்கும அழுக்கின் பலன்கள் இரண்டாம் பாகத்தில் "பூத கணங்கள்" என்ற தலைப்பின் கீழ் சற்று விரிவாகக் கூறப்படும்.

அழுக்கைப் போலவே ஆகார முறையிலும் தூல சூக்குமப் பகுதிகள் இருக்கின்றன. அதன் தூலப் பகுதியாவது ஆகாரத்தின் அடிப்படையாகிய கரிநீரகப் பொருள் (Carbohydrates), புரதம் என்ற ஊன் சத்து (Protiens), கொழுப்பு (Fats), உலோக உப்புக்கள் (Mineral salts), வைற்றமின் என்ற உயிர்ச் சத்துக்கள் (Vitamins), என்பனவாம். இவை யன்றி வேறும் இருக்கலாம்; விஞ்ஞானிகளால் இதுவரை நிர்ணயிக்கப்பட்டிருப்பவை இவையே. ஆகாரத்தின் சூக்குமப் பகுதி யெனப்படுவது அதன் சத்துவ, ரஜோ, தமோ குணங்களாகும். இது இதுவரை மேனாட்டாரால்

ஆராயப் படாதது; இக்குணங்கள் ஆகாரப் பொருளிடத்திருப்ப-தாக அவர்கள் ஒப்புவதுமில்லை. அதனால் அவர்கள், ஊர்வன-வற்றில் கட்டை வண்டியும், ஓடுவனவற்றில் மோட்டார் வண்டி-யும், பறப்பனவற்றில் ஆகாய விமானமுந் தவிர மற்றெல்லா-வற்றையும் பட்சபாதமின்றிக் கவளீகரித்து விடுகின்றனர். மலை முழுங்கி மாடசாமிக்குக் கதவு வடம் பப்படம் என்ற முறையில் அவர்கள் சிறிதும் பெரிதுமான காட்டுப் பிராணிகள், நாட்டுப் பிராணிகள், நீர்ப் பிராணிகள், பறவைகள் எல்லாவற்றையும் கொலை செய்து தின்று விடுகின்றனர். இவையனைத்தும் கொடிய-தமோ ரஜோ குணப் பொருள்களாக ஆயுர் வேதத்தில் அனுப-வத்தால் கூறப்பட்டிருக்கின்றது. மேனாட்டார் தூலப்பகுதியை மாத்திரம் நிறுத்தும் உரைத்தும் அளந்தும் காலரி (Calory) கணக்கிட்டும் மிக நுணுக்கமாகக் கையாண்டு உடம்பைக் கொழுக்க வைத்து விடுகின்றனர். ஆனால் சூக்குமப் பகுதியின் உண்மையைக் கையாளாமையால் அவர்களுக்கேற்பட்டிருக்கும் அபரிமிதமான உலக இச்சையும் சிற்றின்ப விழைவும் பாராட்டத்-தக்கதாயில்லை, அவருக்கு நிம்மதி கொடுப்பதாகவுமில்லை. நம் இந்திய மக்களோ, முக்குணங்களைப் பெரிதும் பாராட்டுவா-ராயினும் தூலப் பகுதியில் போதிய ஊட்டமின்றி உடம்பு சோர்ந்து, போலிச் சத்துவ குணமாகிய தமோ குணத்தில் ஆழ்ந்திருக்கின்றனர். இரு நாட்டாரும் தம் உணவை மாற்றி யமைத்தாலன்றிப் பூரண மனிதத்தன்மையை அடையார்.

தாயைப்போல பிள்ளை நூலைப்போல சேலை. சிவப்பு நூலால் நெய்யப்பட்டது வெள்ளைச் சேலையாகாது. ஒரு சமயம் வண்ணான் உதவியால் ஆகலாம்; அது போலிச்சாயம். அம்மாதிரியே உடம்பு உணவால் நெய்யப்படுவதாகையால், அவ்வுடம்பின் தன்மை உணவைப் போன்றேயிருக்கும். மண்ணால் கட்டப்பட்ட வீடு மண்ணாகவேயிருக்கும்; செங்கல் வீடு செங்கல்லாகவும் கருங்-கல் வீடு கருங்கல்லாகவும் இருக்குமேயன்றி மண் வீடு கல் வீடாக மாறிவிடாது. அந்த உண்மையை ஏற்று, ஆகாரத்திலும் தூல சூக்குமப் பகுதிகளை அறிந்து, உத்தமமான ஆகாரத்தைக் கையாள்வதே உடம்பிலும் மனதிலும் நோயற்று வாழ்வதற்கான முறை; பரமார்த்திக வாழ்விற்கு இன்றியமையாத முறையும் அதுவே.

திருமூலர் பூரண சித்தர், தமிழ் நாட்டில் பிறந்த சித்தர். அவர் கீழ்நாட்டு மக்களுடைய மனப்பான்மையையும் தம் திரு மந்திரத்தில் எடுத்துக் கூறுகின்றனர்.

(1) உடம்பார் அழியில் உயிரார் அழிவர்,
திறம்பட மெய்ஞ்ஞானம் சேரவு மாட்டார் ;
உடம்பை வளர்க்கும் உபாய மறிந்தே
உடம்பை வளர்த்தேன், உயிர் வளர்த்தேனே.

(2) உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன் ;
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன் ;
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டானென்று
உடம்பினை யான் இருந்து ஓம்புகின்றேனே.

என்பன அப்பாக்கள். தவ ஒழுக்கத்திலும் தாயன்பிலும் தலை சிறந்த ஔவைப் பிராட்டியாரும்,

"உடம்பினா லாய பயனவை தெல்லாம்
உடம்பினுள் உத்தமனைக் காண்."

என்று கூறியதுபோலவே, இவரும் உடப்பெடுத்த நோக்கத்தைக் கூறி, அது முற்றுப்பெறுதற்கு, உடம்பினைத் தக்க உபாயப்படி வளர்த்து ஓம்பும்படி அறிவுறுத்துகின்றனர். இந்த உடம்பையும் உயிரையும் வளர்க்கும் உபாயங்களில் முதலாவது, அழுக்கிலும் உணவிலும் மேற்சொன்ன தூல சூக்குமப் பகுதிகளை அறிந்து அனுசரிப்பதாம். இரண்டாவது, போகப் பயிற்சியாம். உலக மதங்களுக்குப் பொறுப்பாளராகிய வித்தகச் சித்தர் கணத்தவர் ஆலயக் கிரியைகளையும் இந்த உணவு வேறுபாட்டிற்கேற்ப வேறு வேறாகவே அமைத்திருக்கின்றனர். இந்துமதக் கிரியைகள் பெரி-தும் யோக நெறிக்கு அடிப்படையாயுள்ளவை. முறைப்படி வாழும் இந்துவானவன் யோகம் பயில்வதால் அதிக அபாயத்திற்-குட்படமாட்டான். கிறிஸ்தவரில் அர்ச்சகர் கூடப் புலாலும், கள்ளும் அருந்துவதால், அவர்கள் கிரியைகள் கரும நெறிக்கே உதவுவனவாக அமைக்கப்பட்டிருக்கின்றன. ஆயினும், கீழ் நாட்-டாரும் மேல்நாட்டாரும் இன்று உயிர்வாழும்முறை, மற்றொரு சித்தர் பாடலையே நினைப்பூட்டுகிறது.

"நந்த வனத்திலோர் ஆண்டி—அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்
கொண்டு வந்தானொரு தோண்டி—அதைக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத் தாண்டி
சங்கர சங்கர சம்பு......

என்ற பாட்டு ஏழைகள் வாய்ப்பாட்டு. பலநிறப் பூக்கொண்ட நந்தவனம், பலவித வனப்பு மிக்க இந்த உலகம்; ஒன்றையும் "பிறக்கும்பொழுது கொடுவந்ததில்லைப் பிறந்து மண்மேல் இறக்கும்பொழுது கொடுபோவதில்லை," எனப்படும் ஆன்மா ஆண்டியே; நாலாறு மாதம், பத்து மாதக் கரு; குயவன், மாயைக் களிமண்ணில் உருச்செய்யும் இறைவன்; தோண்டி, ஒன்பது துவார உடம்பு; கூத்தாடி என்பது மைனர் விளையாட்டு விளையாடி என்பதாம்; மைனர் விளையாடுகிறவன் இன்றும் கூத்தாடி என்றழைக்கப்படுகின்றான். அவன் ஒரு வெறுங் கூத்தாடி, என்பது நமக்குள் ஒரு சாதாரண வழக்கப் பேச்சு.

இதனை யொத்தே யிருக்கின்றது இன்றைய நவ நாகரிகப் போக்கு. ஐம்புல நுகர்ச்சியே இக்காலத்துப் பெரும் நோக்கா-யிருந்து வருகின்றது. உண்மையுடன் ஆலயந் தொழ விரும்புவோர் மனிதனிடம் அடங்கிக் கிடக்கும் தெய்வத்தன்மையைத் தலை யெடுக்கச் செய்வதே மனித வாழ்க்கையின் பயன் என்று கண்டு, உடம்பினை வளர்க்கும் உபாயமறிந்து, அதனை உரமுடைய-தாகவும் உத்தம குணமுடையதாகவும் ஓம்பல் வேண்டும். அல்லாதபோது ஆலய வழிபாடு அதிகப் பயன் தராது போகும்.

இனி, "புழுக்கமை அழுக்குடல்" என்றும் "புழுப் பொதிந்த போர்வை" என்றும் பண்டையோரால் இழித்துக் கூறப்பட்ட இந்த உடம்பு உண்மையில் ஒரு புழுக் கூடேயாகும். அதாவது, நமது அன்ன உடம்பானது பல்லாயிரக் கணக்கான அணுக்கிருமிகளால் (Cells) ஆக்கப்பட்டிருக்கின்றன என்பது இன்றைய உடல்நூல் வல்லார் கூற்று. இது பூதக்கண்ணாடியால் காணக் கூடியதொன்று. இந்த அணுக்கிருமிகளில் ஒவ்வொன்றும் பிறந்து, வளர்ந்து, இறந்து போவதால் அவை தனித்தனி உயிர்களாகும். அவையனைத்தையும் திரட்டி ஒருடம்பாக்கி

அதனை நடத்தி வருவது அணுக்கூட்டுயிர், அல்லது ஆவி என்று இங்கு அழைக்கப்படும். இது நம்மைப்போன்ற அறிவுடைய தன்றாலும் உடம்பைப் பாதுகாத்துக்கொள்ளும் வல்லமையுடையது. அன்ன உடம்பின் அணுக்கூட்டுயிராகிய இந்த ஆவியானது, உடம்புக்குச் சோறும் நீரும் அவசியப்படும்போது அதனைப் பசியாகவும் தாகமாகவும் ஆன்மாவிற்கு அறிவிக்கும்; உறங்கும்போது உடம்பைப் பழுதுபார்க்கும், ஒய்வு உண்டாகும் முறையில் வலப்புறம் இடப்புறம் திரும்பிப் படுக்கச்செய்யும், கொசு கடித்த இடத்தில் சொரியச்செய்யும்; போர்வையை இழுத்துக் கை கால்களை மூடிக்கொள்ளச் செய்யும்; வயிற்றிலிட்ட உணவைச் செரிக்கச்செய்யும்; வியாதி கண்டபோது அதைக் குணப்படுத்த முயற்சிக்கும்; வெட்டுக்காயங்கள் ஏற்பட்டால் அவ்விடத்திற்குக் கூடுதல் இரத்தத்தைச் செலுத்தி இரத்தக் கிருமிகளால் அவற்றை ஆற்றுதற்குரிய வேலை செய்யும்; சுவாசம் விடுவது, இரத்தம் ஓடுவது எல்லாம் இதன் வேலையே. ஆன்மாவின் சவனமின்றியே இவ்விதம் ஓயாது விழிப்புடனிருந்து அன்ன உடம்பைப் பேணுவது இந்தக் கூட்டுயிராகிய ஆவியின் வேலையாகும்.

ஆனால் மனிதன் அதன் இருப்பை உணராது, அதைத் தன்னின் வேறாகக் காணாது, அந்த உடம்பையே தானாகக்கருதி விடுவானானால், அது அவனை அல்லலுக்குள்ளும் ஆக்கிவிடும். அவனுடைய வேலையின்போது ஏதாவது ஆபத்தான கட்டங்கள் நேரிடுமாயின், அது பயந்து ஓட முயலும்; அவன் தன் கடமைகளைச்செய்யவேண்டிய காலங்களில் அது சோம்பி ஓய்வெடுக்க விரும்பும், உறங்க விரும்பும், உலாத்த ஆசைப்படும்; உண்ணவும் விளையாடவும் சொல்லும். பிறருக்கு உதவி செய்ய வேண்டிய கட்டங்களில், "அந்தத் தொல்லை நமக்கேன்? வேறு யாராவது இதனைச் செய்யட்டும்," என்ற உணர்ச்சியை உண்டுபண்ணும். இத்தகைய சமயங்களில் அவன், தான் வேறு உடம்பு வேறு என்பதை மறந்து, அதன் வழியே செல்வானானால் அவன் வாழ்க்கை வீண் வாழ்க்கையாகிவிடும். அன்றி, தன்னை உடம்பின் பாகனாகக்கொண்டு, "என் கடமையைச் செய்வதில் நீ இடைஞ்சல் செய்ய இடங்கொடேன்," என்று உறுதிபண்ணி, ஊண் உறக்கத்-

தால் உடம்பைப் போற்றவேண்டிய நேரம் போற்றி, இளைப்பாற்ற வேண்டிய நேரம் இளைப்பாற்றி, மற்ற நேரங்களில் வேலை வாங்கி வருவானாயின் அவன் ஆன்ம வாழ்க்கையில் வெற்றி பெற்றவனாவான். ஆன்மாவின் விருப்பம் எப்போதும் உடம்பின் விருப்பமாக இருப்பதில்லை. அதையறிந்து மனிதன் நடந்து கொள்ள வேண்டும். சிறு குழந்தைகள் அழும்போதும் கூச்சலிடும்போதும் வேலை செய்வது இந்தக்கூட்டுயிரே, ஆன்மாவல்ல. கூட்டுயிரென்பதை அணுக்கிருமிகளைக்கூட்டி ஒன்றுபடுத்தி நிற்கும் உயிரென்றும், உடம்புக்கூடு இயங்குவதற்கு உதவியாயிருக்கும் உயிரென்றும், பொருள் கொள்ளலாகும். இந்தக் கூட்டுயிரானது, அணுக்கிருமிகளுக்கிடையே வேலை செய்யும் ஒரு கவர்ச்சி சக்தி. இந்த சக்தி நீங்கி விடுமாயின் அக்கிருமிகள் தனித்தனியே இயங்கி உடம்பு அழுகிவிடும். அதுவே மரணம்

நமக்காக உடம்பேயன்றி உடம்புக்காக நாம் அல்ல என்ற உண்மையை அறிந்து, அந்த உடம்பை அடக்கியாள விரும்புவோருக்கு மேற்சொன்ன அணுக்கிருமிகளால் அனுகூலமும் இருக்கின்றது. தொட்டிற் பழக்கம் சுடுகாடுமட்டும் என்பதே அது. ஒரு பழக்கத்தைவிட்டு வேறொரு பழக்கத்தைக் கையாடும்போது உடம்பு முதலில் எதிர்த்து நிற்கும். ஆனால் அந்த எதிர்ப்புக்குக் கீழ்ப்படியாது, புதிய பழக்கத்தைத் தொடுத்துக் கையாண்டு வந்தால், அணுக்கிருமிகள் முதலில் அதற்கிணங்கிப் பின்னர் நம் கவனமின்றியே அப் புதுப்பழக்கப்படி ஒழுகத் தொடங்கும். காலையில் எட்டு மணிவரை உறங்குபவனுக்கு, ஐந்து மணிக்கு எழுவதென்றால் முதலில் அது கூடாத காரியமாகும்; சிறிது பழக்கத்தின் பேரில் நம்மையறியாமலே அதிகாலையில் தூக்கம் கலைந்துவிடும். அவ்வாறே எல்லா நல்ல பழக்கங்களும் தீயபழக்கங்களுமாம். இதனை நன்கறிந்திருந்த நம் முன்னோர், குழந்தைப் பருவத்திலேயே பிள்ளைகளை நற்பழக்கங்களில் பயிற்றிவந்தனர். அம்முறைகள் பண்டைக்காலத்துப் பெரிதும் பாராட்டப்பட்டு நித்திய கர்மவிதி என்று அழைக்கப்பட்டுவந்தன. அப்பழக்கத்தால் இந்நாடு உயர்ந்த நாகரீகமுடையதாய், இந்திய மக்கள் திடகாத்திரராய்த் திரைகடலோடித் திரவியம் தேடியும் தம் கலைகளையும் பண்பாடுகளையும் அன்னிய

நாடுகளிற் பரப்பியும் புகழுடன் வாழ்ந்து வந்தனர். இன்று, காலையில் எட்டு மணிக்குத் தூங்கியெழுந்து பல் துலக்காமலே படுக்கைக் காப்பியருந்தும் காலத்தில், நம் மக்கள் சீர்குலைந்து செழிப்புமற்று வாழ்ந்துவருவது ஆராயவேண்டிய தத்துவங்களில் ஒன்றாகும். ஒருவனுக்கு அடிமையாக வாழ்பவன் மற்றொருவனுக்குத் தன்னை ஈயமுடியாது. உடம்புக்கு அடிமையாக வாழ்பவன் இறைவனுக்குத் தன்னை அர்ப்பிக்கவோ, அருட்குரவரை அடையவோ முத்திநெறியில் கால்வைக்கவோ முடியாதவனாவான். மறந்தும் புறந்தொழாதவனே பேரின்பத்தைப்பெற உரியவன்; பெறவும் வல்லவன்.

குதிரை இருப்பறியும், கொண்ட பெண்டாட்டி குறிப்பறிவாள் என்பது பழமொழி. அத்தன்மையுடையதே நம் உடம்பும். அடயோகியானவன் தூலஉடம்பை நினைத்தபடியெல்லாம் ஆட்ட வல்லவனாகின்றான்; சுவாசத்தை மணிக்கணக்கு, மாசக்கணக்காக நிறுத்திவிடுகின்றான்; நெஞ்சடிப்பையும் ரத்த ஓட்டத்தையும் நிறுத்தி விடவோ துரிதப்படுத்தவோ தாமதப்படுத்தவோ வல்லவனாகின்றான்; முள்ளின்மேற் கிடந்துபுரண்டாலும் அவ்வுணர்ச்சி மூளையைத்தாக்காது அதனைத் தடுத்து வலியை நீக்கிக் கொள்கின்றான். ஆனால் இவ்வெற்றியை அடைவதற்கு அவன் எவ்வளவோ அரும்பெரும் பாடு படவேண்டியிருக்கின்றது. இவ்வளவு அரும்பாடின்றி, அற்ப முயற்சியாலேயே உடம்பை நமக்கு வேண்டிய அளவிற்கு அடக்கியாள முடியும். விருப்பம் ஒன்றே வேண்டுவது.

நாம் பெரும்பாலார் எப்பொருளைக்கொண்டு உடம்பை அமைக்கிறோமென்று கவனிப்பதில்லை. நாவுக்குச் சுவையாக எது இருப்பினும் அதனைக்கொண்டு நம் தொந்தியை நிரப்பி, நம் வீட்டைக்கட்டி விடுகின்றோம். அது, கொத்தன் ஒருவன் தன் கையில் கிடைத்தவற்றை யெல்லாங்கொண்டு, அதாவது கல், மண், மயிர், செத்தை, குப்பை, கூளம் எது கைக்கெட்டினும் அவற்றைக்கொண்டு வீட்டை அமைத்து விடுவது போலாம். ஆன்மா குடியேறியிருக்கும் உடம்பின் சீர்கேட்டினால் ஆன்மநிலை எவ்வளவு தூரம் பாதிக்கப்படுமென்பதை ஒருவன் உண்மையாக உணர்வானானால், அவன் தன் உணவு விஷயத்தில்

அத்தனை கவனக்குறைவாக இருக்க முடியாது. உண்மையான சாதுவாயினும், அவன் ஒரு புட்டி கள்ளைக்குடித்து விடுவானானால், அவன் ஆடுங் கூரங்காட்டத்தை அறியாதவருண்டோ? மேதாவி யொருவன் கோட்டிகொண்டு விடுவானானால், அவன் மேதைக்குக் குறையொன்றுமில்லையாயினும் மூளைக் கோளாறினால் அவன் திறமையை வெளிக்குக்காட்ட முடிவதில்லை. வீணைவல்லான் ஒருவனுக்குக் கையில் வாதம் காணுமாயின் வீணையில் கைவரிசை காட்டுவது அவனுக்கு ஏலாமற்போகும். அம்மாதிரியே மது, மாமிசம், காரசாரங்கள், அவை ஊக்கப்படுத்தும் மண் பெண் பொன்னாசைகள், இவற்றால் ஊட்டி வளர்க்கப்படும் உடம்பு பேரின்பம் பெறுதற்கு ஏற்றதாகாது. இவற்றை நீக்கி உயிர் வாழ்வது பலருக்குக் கடினமாகத் தோன்றலாம். அவர்கள் பேரின்பத்தை விரும்புபவரல்லர். ஒரு ஆண்டுவரை, ஒருவன் தமோ ரஜோகுண உணவுப்பொருள்களை நீக்கி, காலையில் நாலு மணி முதல் மாலை எட்டு மணிவரை நித்தியகர்மானுஷ்டானங்களை ஒழுங்காகக் கைக்கொள்ளுவானானால் அவனுக்கு அரைக்கோடி ரூபாய் ஆண்டுறுதியில் கொடுக்கப்படும், என்று சர்க்கார் ஒரு சட்டம் ஏற்படுத்தினால் அப்போது எத்தனை பேரோ அவ்விதம் நடந்து உடம்பை அடக்கியாளத் தயாராய் இருப்பர். ஆனால் பேரின்பப் பேற்றுக்கு அங்ஙனம் பாடுபடவேண்டுமாயின் அது மிகத் துர்லபமாயிருக்கின்றது.

உடம்பிலுள்ள அணுக்களெல்லாம் ஏழு வருஷத்திற்கொருமுறை புதுப்பிக்கப்படுகின்றனவாம். கீழ்த்தர அணுக்கள் போஷிப்பில்லாது நீங்க நீங்க, உயர்தர அணுக்கள் சத்துவ உணவாலும் நித்திய கர்மானுஷ்டானங்களாலும் உடம்பிற் பெருகப்பெருக, உடம்பினை ஆரோக்கிய நிலையில் வைத்திருப்பதும் அடக்கியாளுவதும் எளிய காரியமாய்விடும். தமோகுண உடம்பை உடையவர்களிடத்துப் பிறர்களைந்தெறியும் தமோகுண அணுக்கள் வந்து ஒட்டிக்கொள்ளுகின்றன, சத்துவகுண உடம்பில் அவை அங்ஙனம் சாரமுடிவதில்லை. அவ்வாறே சத்துவகுண அணுக்களும். இந்த நியதியை நோக்கினாலும் உடம்பை முறைப்படி பேணுவது அவசியமாகும்.

---

பாடம் 8

## மனிதனுடைய பிராண உடம்பு.

வெண்ணெயை நெருப்பிலிட்டுக் காய்ச்ச அது நெய்யாகும்; மேலும் காய்ச்சினால் அது தகதகவென்று எரியும்; மேலும் காய்ச்சினால் அது வாயுவாகும்; அந்நிலையில் அது கண்ணுக்குப் புலப்படுவதில்லை, மூக்கில் மாத்திரம் வாசனையாகத்தட்டும்; அதனையும் காய்ச்ச அது ஆகாயமாகுமென்றும், அது நெற்றிக்-கண்ணுக்கே புலப்படுமென்றும், ஆயினும் அனுமானத்தால் அறியப்படுமென்றும் அறிஞர் கூறுகின்றனர். இவற்றுள், வெண்ணெ கட்டிப் பொருள், நெய் நீர்ப்பொருள், தகதகவென்பது நெருப்புப்பொருள், வாசனையாகத் தட்டுவது வாயுப்பொருள், அப்பாற்பட்டது ஆகாயப்பொருள், என்று சாதாரணமாக அழைக்கப்படுகின்றன. நம் நாட்டுப் பண்டைத் தத்துவநூலார் இயற்கையைப் பஞ்ச பூதங்களாக வகுத்து அவற்றிற்கு நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், அல்லது பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்று பெயர் வழங்கினர்; தோற்றப் பொருள்களெல்-லாம் அவற்றின் காரியமே என்றுங் கூறினர். ஆனால் தற்கால நவீன ஆராய்ச்சியாளர் இயற்கைப்பொருள் நிலைகளை ஏழாகப் பாகுபடுத்தி, அவற்றிற்கு

1. கட்டித்தன்மை (Solid)
2. நீர்த்தன்மை (Liquid)
3. வாயுத்தன்மை (Gaseus)
4. ஆகாயத்தன்மை (Etheric)
5. நுண்ணாகாயத்தன்மை (Super–Etheric)
6. திரட்டணுத்தன்மை (Sub–Atomic)
7. அணுத்தன்மை (Atomic)

எனப் பெயரிட்டுப் பழைய பஞ்ச பூதங்களை இப்போது சப்த பூதங்களென அழைக்கின்றனர்.

உதாரணமாக, அணு ஒன்றை உருப்படி ஒன்றாகக் கணக்-கிட்டால், அவற்றில் இரண்டு திரண்டது ஒரு திரட்டணு; அத்திரட்டணு இரண்டு பின்னி நிற்பது நுண்ணாகாய நிலை; அவை

இரண்டு கூடியது ஆகாயம்; அவற்றிலிரண்டு சேர்ந்தது வாயு நிலை, அவற்றிலிரண்டு ஒன்றியது நீர்ப்பொருள், அவற்றிலிரண்டு கலந்து நிற்பது கட்டிப்பொருள். ஆகவே, இம்முறையிலமைந்த கட்டிப் பொருளொன்றில் பல அணுக்கள் ஒன்று சேர்ந்து பின்னிப் பிணைந்து நிற்கின்றனவென்று கூறலாம். ஆனால் இயற்கையின் சேர்க்கை நியதி இவ்வளவு எளிய முறையில் அமைக்கப்படவில்லை, மிகப் பெரிய மேதையரும் மனங் குழம்பும்படியான சிக்கலையுடையது அது. அவை பற்றிய நுணுக்கங்களை சூரிய மண்டலம் என்ற பாடத்திற் காண்க. 576 அணுக்கள் சேர்ந்து கந்தகத்தின் துகள் அல்லது மாலெக்யூல் ஒன்றாகின்றதாம்; இரும்பின் துகளில் 1008 அணுக்களும் பாதரசத்துகள் ஒன்றில் 3576 அணுக்களும் ரேடியத்தில் 4087 அணுக்களும் இருக்கின்றனவாம். இவற்றின் அற்புதங்களை இன்றைய (Chemistry) ரசாயன நூல்களிற் காண்க.

இதுவரை கூறப்பட்ட ஏழுநிலைப் பொருள்களும் பூலோக தத்துவங்களென்றும், அந்த அணு பூலோக அணு என்றும் கூறப்படும். அந்த பூலோக அணுவை எவ்வளவு கொடிய சூடேற்றினும் அதற்குமேல் பிரிக்க முடியாது. ஆனால் கோடிக்கணக்கான வோல்ட் அளவு (Voltage) கொண்ட மின்சார சக்தியை அதில் ஏற்றினால் அது திரும்பவும் பிளந்து விடுகின்றது. அவ்விதம் பிளக்கப்பட்ட துண்டுகள் பூலோகச் சூட்டிற்கு அப்பாற்பட்டு நிற்பதால் அவை புவர்லோகக் கட்டிப்பொருள் என்று அழைக்கப்படுகின்றன. அந்த புவர்லோகப் பொருளை நெருப்பு எவ்விதத்திலும் பாதிப்பதில்லை, மின்சார சக்தியினால் மாத்திரம் அது திரும்பவும் படிப்படியாக மேற்சொன்ன ஏழு நிலைகளாகமாறுகின்றது. அவ்விதம் கட்டிப்பொருள் முதல் அணுவரை புவர்லோகத் தத்துவங்கள் ஏழும் ஏற்படுகின்றன. ஆகவே, பூலோகத்திலுள்ள கட்டிப் பொருளொன்றே சூட்டிற்கேற்ப ஏழு நிலைகளாகவும் மின்சாரத்தால் ஏழு நிலைகளாகவும் இவ்வாறு பதினான்கு நிலைகளாக மாறிநிற்பினும், சூடு, குளிர்ச்சி இவற்றால் முதல் ஏழும் பாதிக்கப்படுவதால் அவை பூலோகமென்றும், அவற்றால் பாதிக்கப்படாமையால் மற்ற ஏழும் புவர்லோகமென்றும் தனித்தனியாக அழைக்கப்படுகின்றன, மற்றப்படி

பொருள் ஒன்றேயாம். இப்பொருள்கள் யாவும் சூட்டினால் இளக்கங் கொடுப்பது போலக் குளிர்ச்சியினால் இறுக்கங் கொடுக்கும். அவ்வாறு நீர் பனிக்கட்டியாகவும், வாயு நீராகவும், ஆகாயம் வாயுவாகவும் மாறவல்லது.

இனி, புவர்லோக அணு வேறொரு சக்தியால் 7 நிலைகளாக மாறி சுவர்லோக, மகர்லோக தத்துவங்களென்று பெயர் பெறும். அவை சூடு குளிர்ச்சியாலோ மின்சார சக்தியாலோ பாதிக்கப்படுவதில்லை. இவ்விதமே பூலோகக்கட்டிப்பொருளொன்று ஏழு விதமான வெவ்வேறு சக்திகளால் எவ்வேழாகப் பிளவுபட்டு மொத்தத்தில் (7 × 7) 49 பெரும் பிரிவுகளாக விளங்கும். இந்த 49க்குள் அண்டத்திலுள்ள தத்துவங்கள் அனைத்தும் அடங்கும். எல்லாவற்றிற்கும் ஆதியாகவும் பரமாணுவாகவும் நிற்பது மகாமாயை, குடிலை, விந்து என்று அழைக்கப்படும். இந்த ஒரு பொருளே படிப்படியாகத் திரண்டு திரண்டு 49 நிலைகளாக நிற்பினும், அவற்றை இயக்கும் சக்திகளின் வேறுபாடுபற்றி அவை எவ்வேழாகத் தொகுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள் சூடும் மின்சார சக்தியும் தவிர மற்ற சக்திகளின் பெயர்கள் நமக்கு அறிவிக்கப்படவில்லை ; அவை சித்தி முத்தி பெற்ற பெரியாருக்கே விளங்குவன வென்று சொல்லப்படுகின்றது. இவ்விதம் எவ்வேழு பிரிவுகள் கொண்ட தொகுதிகள் ஏழுக்கும் அடியிலிருந்து முறையே,

1. பூலோகம்,
2. புவர்லோகம்,
3. சுவர்—மகர் லோகங்கள்,
4. ஜனலோகம்,
5. தப—சத்ய லோகங்கள்,
6. வைகுண்டம்,
7. கைலாயம்,

என்ற பெயர்கள் வழங்கி வருகின்றன. இந்த ஏழும் ஏழுமாபெரும் பந்துகளாக ஒன்றினுள் ஒன்றாய் வியாபக வியாப்பிய முறையில் அமைந்திருக்கும். இந்த ஏழு உலகங்களின் அமைப்பு, ஒன்றுக்குள் ஒன்றாக ஏழு வட்டங்கள் வரைந்து கொண்டால் அதிலிருந்து ஒருவாறு விளங்கும். (படம் 3 பார்க்க). அதாவது உலகங்கள் ஏழும்

பந்துபோல ஒன்றுக்குள் ஒன்றாக அமைந்திருக்கின்றன. ஆனால் அவை வெங்காயத்தோல்போல அடுக்கடுக்காக அமையவில்லை. கடற் பஞ்சு கட்டிப்பொருள், தண்ணீர் இளக்கமான பொருள். அந்தக் கடற்பஞ்சொன்றைத் தண்ணீருக்குள் அமுக்கினால், தண்ணீரானது கடற் பஞ்சின் துவாரங்களிலெல்லாம் பரவி, பஞ்சுக்கு வெளியிலும் பரந்திருக்கும். அதாவது பஞ்சுக்குள் தண்ணீரும் பஞ்சும், பஞ்சுக்கு வெளியே தண்ணீர் மாத்திரமுமாக இருக்கும். இதுவே வியாபக வியாப்பிய முறை என்னப்படுவது, அதாவது பஞ்சு வியாப்பியம், நீர் வியாபகம். இந்த முறையிலேயே சப்த உலகங்களும் அமைந்துள்ளன.

எவ்விதமெனில், பூலோகம் தடித்த, திண்ணிய பொருள்களாலாகியது; புவர்லோகம் அதைவிட நுண்ணிய பொருள்களால் ஆக்கப்பட்டிருப்பதால், தன்னுள் அமிழ்ந்து மிதக்கும் பூலோகத்தை அது ஊடுருவி நிறைந்து நின்று, அதற்கப்பாலும் கொஞ்ச தூரம் சுற்றிப் பரந்திருக்கும். அதனால் புவர்லோகத்தின் நடுவிலிருந்து பூலோகத்தைப் பிடுங்கி வெளியே எடுப்பதானால், புவர்லோகம் நீர் வற்றிய தேங்காய் போலக் குடுக்கையாக இராமல், புவர்லோகப் பொருளால் நிறைந்தே இருக்கும். பூலோகத்தின் கட்டிப்பாகம் சுமார் 8000 மைல் கனம் கொண்ட பந்து; அதன் வாயு, ஆகாயம், முதலியவற்றையும் கணக்கிட்டால், பூலோகம் சுமார் அரைலக்ஷம் மைல் கனம் கொண்ட பந்துபோன்றிருக்கலாம். புவர்லோகமோ நான்கு லக்ஷம் மைல் குறுக்களவு கொண்ட மிகப்பெரிய பந்தென்று நெற்றிக்கண்ணுடையோரால் கூறப்படுகின்றது. அதனால் நாமிருக்கும் இடத்தில் பூலோகமும் புவர்லோகமும் விரவியிருப்பதுவும், பூலோக எல்லைக்கு அப்பால், அதாவது நாமிருக்கும் இடத்திலிருந்து கால் லக்ஷம் (25000) மைல்களுக்கப்பால் புவர்லோகம் மாத்திரமே இருப்பதுவும் விளங்கும். சப்த உலகங்களும் இந்த முறையிலேயே அமைந்திருக்கின்றனவாதலால், இங்கு, நாமிருக்கும் இடத்தில், இப்பொழுதும் எப்பொழுதும், ஏழு வெவ்வேறு உலகங்கள் ஒன்றுபோல் விரவி அமைந்திருக்கின்றன. இங்கிருந்து மேல்நோக்கியோ கீழ் நோக்கியோ செல்லச் செல்ல அவ்வுலகங்கள் ஒவ்வொன்றாக நீங்கிக்கொண்டே வந்து கடைசியில் கைலாயம் ஒன்றே மிகுந்-

சப்த உலக அமைப்பு



திருக்கும். அதனால் இங்கு நாமிருக்கும் இடத்தில் சப்த உலக வாசிகளும் சஞ்சரிக்க முடியும், சஞ்சரிக்கின்றனர். நெற்றிக்கண் திறந்தோருக்கு அவர்கள் துலக்கமாகக் காணப்படுவர். பூலோகத்திற்கு அப்பால் நமது ஸ்தூல உடம்போடு செல்லுதல் இயலாது; சூட்சும உடம்புகளே அங்கு செல்லவல்லன. ஒன்றுக்கொன்று விரவிப் பின்னிநிற்கும் பூமியின் சப்த உலகங்களும், பூமி சூரியனைச்சுற்றிவரும்போது இணை பிரியாது பூமியுடன் ஒன்றாகவே கூடச்செல்லும். விரிவை மேற்பாடங்களில் காண்க.

இனி மனிதனுடைய பிராண உடம்பை நோக்குவோம். பூலோக தத்துவங்களாகிய மேற்கூறிய சப்தபூதங்களில், கட்டிப்பொருள், நீர்ப்பொருள், வாயுப்பொருள் ஆகிய மூன்றால் அமைந்த மனித உடம்பு அன்ன உடம்பு அல்லது அன்னமய கோசமாம். எஞ்சிய ஆகாயம், நுண்ணாகாயம், திரட்டணு, அணு ஆகிய நான்கு பூதங்களால் அமைந்திருக்கும் மனித உடம்பே பிராண உடம்பென்றும் பிராணமய கோசம் என்றும் அழைக்கப்படுவது. அன்னத்தை உண்டு உயிர்வாழும் உடம்பு அன்ன உடம்பென்று அழைக்கப்படுவதுபோல, பிராணனை உண்டு உயிர்த்திருக்கும் இந்த உடம்பு பிராண உடம்பு எனப்படுகின்றது. இந்தப் பிராணன் (Vitality) சூரியனிடத்திலிருந்து வெளிவரும் பல சக்திகளுள் ஒன்று. அதனைப்பற்றியும் அதனை உறிஞ்சி உயிர்வாழும் பிராண உடம்பைப் பற்றியும் விரிவாகப் பேசுமுன், ஏழு உலகங்களிலும் தனித்தனி வேலை செய்வதற்கு மனிதனுக்கு ஏற்பட்டிருக்கும் கருவிகளின் பெயர்களும், அவை தொழிற்படும்போது காணப்படும் குணங்களும் கீழே தரப்படுகின்றன. அந்தந்த உடம்புகள் அந்தந்த உலக சப்த பூதங்களால் ஆக்கப்பட்டிருப்பனவாம்.

| உலகங்கள் | சப்தபூதங்கள் | உடம்புகள் | தொழில் | குணங்கள் |
|---|---|---|---|---|
| 1 கைலாயம் | 1—7 | பரமுத்திநிலை | — | கிரியாசக்தி |
| 2 வைகுண்டம் | 1—7 | அபரமுத்திநிலை | — | இச்சாசக்தி |
| 3 சத்யலோகம் | 5—6—7 | ,, | — | ஞானசக்தி |
| தபோலோகம் | 1—4 | ஆனந்தமய கோசம் (1) | ஆனந்தானுபவம் | கலை |
| 4 ஜனலோகம் | 1—7 | விஞ்ஞானமய கோசம் (2) | ஒற்றுமை உணர்ச்சி | இராகம் |
| 5 மகர்லோகம் | 5—6—7 | அருவமனஉடம்பு (3) | அழகு, அன்பு போன்ற அருவ எண்ணங்கள் | வித்தை |
| சுவர்லோகம் | 1—4 | உருவமனஉடம்பு (4) | மலை, மரம் போன்ற உருவநினைவுகள். வேற்றுமைஉணர்ச்சி | அறிவு |
| 6 புவர்லோகம் | 1—7 | இச்சையுடம்பு (5) | இச்சைகள், ஆசைகள் | இச்சை |
| 7 பூலோகம் | 7 அணு<br>6 திரட்டணு<br>5 நுண்ணுகாயம்<br>4 ஆகாயம் | பிராணமய கோசம் (6) | செயல்கள் | செயல் |
| | 3 வாயு<br>2 நீர்<br>1 கட்டி | அன்னமய கோசம் (7) | | |

பாடம் 9

## மனிதனுடைய பிராண உடம்பு (தொடர்ச்சி)

மனிதனுடைய பூலோக உடம்பு இரு பகுதிகளை உடையது. அதன் திண்ணிய, தடித்த பாகமே நம்முடைய சாதாரணக் கண்ணுக்குப் புலப்படுவது, அது அன்ன உடம்பு; அங்ஙனம் காணப்படாத நுண்ணிய பாகம் பிராண உடம்பாம். இரண்டும் சேர்ந்ததே மனிதனுடைய ஸ்தூல உடம்பாகையால், ஆலயத்தில் அன்ன உடம்பைக் குறிக்கும் பாகமே பிராண உடம்பையும் அறிகுறியாக உணர்த்தும். இந்த இரண்டு பாகங்களும் ஒன்றைவிட்டொன்று பிரிந்து தொழிற்படா. மனிதன் இறக்கும் போதன்றி மற்றக் காலங்களில் முழுவதும் பிரிபடுவதுமில்லை. ஆயினும் குளோரோபாரம் போன்ற மயக்கு மருந்துகளாலும் ஹிப்னட்டிஸம் மெஸ்மரிசம் போன்ற வசீகர முறைகளாலும் அவை ஒரு வரம்புக்குப் பிரிக்கப்படக் கூடுமாகையால், அந்நிகழ்ச்சிகளையும் அவற்றாலேற்படும் அபாயங்களையும் விளக்குதற்கும், மனிதன் இறந்தபின் இந்தப் பிராண உடம்பால் அவனுக்கேற்படும் சில இடைஞ்சல்களை எடுத்துக்காட்டுதற்கும் உதவியாகும் பொருட்டு, இந்த இரண்டு பாகங்களுக்கும் தனித்தனிப் பெயர்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆயினும், உண்மையில் அவை ஒரு உடம்பின் இரண்டு பகுதிகளேயன்றித் தனித்தனி இரு வேறு உடம்புகளல்ல.

பிராண உடம்பு உருவத்தில் அன்ன உடம்பையே ஒத்து அதைவிடக் கால அங்குலம் எல்லாப்பக்கங்களிலும் விரிந்திருக்கும். ஒருவன் சுவரண்டை நிற்கும்போது அதில் விழும் அவனுடைய நிழல் எவ்விதம் அவனைப் போலவும் அவனைவிட அளவிற் சற்று பெரிதாகவும இருக்குமோ அம்மாதிரியே அவன் பிராண உடம்பும் இருக்கும்; ஆனால் கட்டியாயிராமல், நெற்றிக்கண் பார்வைக்குச் சிறிது கறுத்த சாம்பல்நிறப் புகையினாலோ மூடுபனியாலோ மேகத்தினாலோ அமைக்கப்பட்டது போன்று, கொஞ்சம் நீலமான மந்த ஒளியுடையதாயிருக்கும். அதனால் அது ஆவியாலான அன்னமயகோசம் போன்றேயிருக்கும். இந்த உடம்பிற்கு மற்றொரு பெயர் கருவுடம்பென்பது. மனிதனுடைய பாவ

புண்ணியங்களுக்குத் தக்கபடி அவன் பிறப்பு இறப்புக்களையும் உடம்பின் சாயலையும் நிர்ணயிக்கும் கர்மாதிகாரிகள், அவன் கர்மத்திற் கேற்ற பிராண உடம்பை மனோசக்தியினால் படைத்து, அதனைத் தாயார் கருவுக்குள் புகுத்திய பின்னரே, கம்மாளன் கருக்கட்டி வார்ப்பது போன்று அதை அச்சாகக் கொண்டு அன்ன உடம்பு அங்கு உருவாகின்றது. அதை நினைப்பூட்டும் பொருட்டு இவ்வுடம்பு கருவுடம்பென்றும் சாயா உடம்பென்றும் கூறப்படும். நுண்ணிய தத்துவங்களாலான இந்தப் பிராண உடம்பு, கடற் பஞ்சுக்குள் தண்ணீர் வியாபித்து நிற்பது போலவும், சோடாக்குப்பி நீரில் கரியமிலவாயு கலந்து நிற்பது போலவும் ஸ்தூலமான அன்ன உடம்பின் உள்ளூறி, அதனுள் எங்கும் வியாபித்து நிறைந்து, அதற்கு வெளியிலும் மேலே சொன்னபடி காலங்குலம் விரிந்திருக்கும். (படம் பக்கம் 84 பார்க்க)

பிராண உடம்பின்றி அன்ன உடம்பு உயிர்த்திராது ; அது வெறும் பிணமாகவே கிடக்கும் ; அதிலுள்ள மெய், வாய், கண், மூக்குச் செவி ஒன்றும் தொழிற்படாது. குளிரினால் விரைத்துப்போன உறுப்புக்களும், கோக்கேயின் போன்ற மயக்க மருந்துகள் தடவப்பட்ட உறுப்புக்களும், பக்கவாதங் கொண்ட உறுப்புக்களும் உணர்ச்சியற்றுப்போவது பிராண உடம்பின் அவ்வப்பாகங்கள் நீங்கிவிடுகின்ற காரணத்தினாலாம்; இரத்த ஓட்டக் குறைவினாலல்ல. ஆஸ்பத்திரிகளில் குளோரோபாரம் கொடுக்கும்போது பிராண உடம்பின் பெரும் பாகம் அன்ன உடம்பை விட்டுப் பிரிந்து விடுவதினால், எவ்வளவு அறுத்தாலும் சுட்டாலும் நமக்கு உணர்ச்சியே இல்லாமல் போய்விடுகின்றது. அச்சமயத்தில் பிராண உடம்பு தலைக்குமேலே மிதந்து கொண்டிருக்கும்; நாபியிலிருந்து மயிரிழை போன்ற பொன்னிறமான சூக்குமக் கம்பியொன்று அந்தப் பிராண உடம்பையும் அன்ன உடம்பையும் பிணைத்து நிற்கும். மருந்து வேகம் தீரும்போது பிராண உடம்பும் அதில் தங்கி நிற்கும் ஆன்மாவும் திரும்பவந்து அன்ன உடம்பிற் புகுந்துகொள்ளும். அந்தப் பொன்னிறக் காந்தக்கம்பி அறுந்துபோமானால் அம்மனிதன் இறந்து போனான். திரும்ப அன்ன உடம்பில் இறங்குவதற்கு அவனுக்கு ஆற்றல் இருப்பதில்லை.

மற்றப்படி இயற்கை முறையில் மனிதனுக்குச் சாவு நெருங்கும்போது, அவனுடைய பிராண உடம்பு, பானைக்குள்ளிருந்து புகை கிளம்புவதுபோலவும், தலையணையின் உறையைக் கழற்றுவது போலவும், சிறிது சிறிதாகக் காலிலிருந்து தலைப்பக்கமாக வெளிக்கிளம்புவது நெற்றிக்கண் பார்வைக்கு நன்கு புலப்படும். அப்போது உடம்பின் அந்தந்த அவயவங்களின் உணர்ச்சி நீங்கிக் கொண்டே வந்து, பிராணக்கம்பி அறுந்துபோகும் சமயத்தில் ஒரு பெருமூச்சும் ஏக்கமும் தொண்டையில் கரகரப்பும் ஏற்பட்டு, உயிர் பிரிந்துவிடுகின்றது. இந்த முன்னோட்டத்தையே கால் கை குளிர்ந்து விட்டதென்று கூறுகிறது. அந்திய திசையில் அருகிருலிந்தவர் இந்த அறிகுறிகளை அநுபவத்தில் கண்டிருப்பர்.

இவ்விதம் அன்ன உடம்பைப் பிரிந்த மனிதன், பிராண உடம்பில் சிக்குண்டு, பிரக்ஞையற்றவனாய், அந்த அன்ன உடம்பைச்சுட்டுப் பொசுக்குகிறவரை பழைய பழக்க வாசனையால் அதற்கு மேலாக முண்டம்போல மிதந்து கொண்டிருப்பான். இந்தப் பிரக்ஞையற்றநிலை பிரேதநிலை எனப்படும். இறந்த அன்று செய்யும் கிரியைகளும் சிலநாட் சென்று செய்யும் கற்குழி (பாஷாண ஸ்தாபனம்) முதலிய கிரியைகளும் இந்தப் பிரக்ஞையற்ற நிலையை மாற்றும் பொருட்டுப் பிராண உடம்பை ஆன்மாவை விட்டு அப்புறப்படுத்துதற்கேயாம். அவ்விதம் பந்தப்படுத்தி நிற்கும் பிராண உடம்புப் பிணம் வேறுபடுத்தப்பட்டபோது, மனிதன் தன் இச்சையுடம்பில் உணர்ச்சி பெற்றுப் பிதிர் லோக வாழ்வெய்துகின்றான். கிரியை யொன்றும் செய்யாதபோதும் யாவருக்கும் இந்நிலை தானாகவே இயற்கை முறையில் சின்னாளில் வந்தெய்துகின்றது. புகையிலைகள், கஞ்சா, அபின் முதலிய லகிரிப் பொருள்களை அதிகமாக உபயோகிப்பவர்களுக்கு இறந்தவுடன் ஏற்படும் இம்மயக்கநிலை மாதக்கணக்காக இருக்குமென்று சொல்லப்படுகின்றது. உத்தம ஒழுக்கமுடையோருக்கு இந்நிலை அநேகமாய் எய்துவதில்லையென்றும், எய்தும்போது ஒன்றிரண்டு நாட்களில் தானாகவே நீங்கிவிடுமென்றும், மரணத்திற்குப் பின்னுள்ள மனித நிலைகளை ஆராயவல்ல யோகியர் கூறுகின்றனர்.

பிராண உடம்பின்றி அன்ன உடம்பு தனித்து இயங்க மாட்டாததுபோலவே, அன்ன உடம்பின்றிப் பிராண உடம்பும் தனித்து இயங்காது. அதனால், மரிக்கும்போது பிரிக்கப்பட்ட பிராண உடம்பின் பிணம், யாதொரு உணர்ச்சியுமின்றி வீட்டைச் சுற்றியோ சுடுகாட்டைச் சுற்றியோ சிலகாலம் மிதந்துகொண்டிருந்து, காலக்கிரமத்தில் சிறிது சிறிதாக உலைந்துபோகும்.

சுடுவதற்குப் பதிலாகச் சவம் புதைக்கப்பட்டால், அது அழுகி மண்ணின்று போகிறவரை பிராண உடம்பும் அதன் மேலே மிதந்துகொண்டிருக்கும். அங்ஙனம் மிகச் சாவதானமாக அழிவுறும்போது, இடைக்காலத்தில் அது அங்கஹீனமாகவும் மிகவும் அருவருப்பாகவும் பயங்கரமாகவும் காட்சியளிக்கும். சுடுகாடு இடுகாடுகளில் பயந்தவர்கள் கண்ணுக்குப் பேயாகத் தோன்றுவது இதுவே, ஆனால் ஆன்மா அதைவிட்டு நீங்கிவிட்டபடியால் உண்மையில் அது பேயல்ல, வெறும் பிராண உடம்பின் பிணமே. உயிரற்ற இந்தப் பிராண உடம்புகளைச் சில கீழ்த்தரமான பூதகணங்களும் (Nature Spirits) இறந்தவரிற் சில இழிவான மூர்க்கமக்களும் பிடித்தாட்டவல்லவர்; கருத்தொழில் மாந்தரிகர், பல தீய செயல்களுக்கு இவற்றை உபயோகிக்கவல்லவர். அக்கெடுதிகளையுன்னி இறந்தோரைப் புதைப்பதைவிடச் சுட்டெரிப்பதே மேன்மையென்று பெரியோர் கூறுகின்றனர்.

இந்தப் பிராண உடம்பு அன்ன உடம்பின் உயிர் வாழ்க்கைக்கும் இயக்கத்திற்கும் ஆதாரமாயிருப்பதுமன்றி, அன்ன உடம்பிற்கும் மனிதனுடைய மற்ற நுண்ணுடம்புகளுக்கும் இடையே பாலம்போலப் பிணைந்துநின்று, மனிதனுடைய இச்சைகளும் நினைவுகளும் உலகில் உருவெடுப்பதற்கு உதவியாக நிற்கின்றது. இவ்விதப்பிணைப்பின்றி நம் எண்ணங்களும் இச்சைகளும் அவற்றின் அலைகளும் நம் மூளையில் தட்டாது மேலுடம்புகளிலேயே நின்றுவிடும, அப்போது அவன் பிராந்தன், கோட்டிக்காரன் எனப்படுவான்.

இனி, மனிதனுடைய அன்ன உடம்பில் பழையனகழிதலும் புதியன புகுதலுமாய் எண்ணற்ற மாறுதல்கள் என்றும் நிகழ்ந்துகொண்டேயிருக்கின்றன. இந்த ஓயாத மாறுதல்களின் இடையே அவ்வுடம்பு உயிர்த்திருக்கும் பொருட்டு அதற்கு மூன்றுவகையானதேவைகள் ஏற்படுகின்றன. அவை, ஊட்டத்திற்கு உணவும், சுவாசத்திற்குக் காற்றும், நரம்பொழுக்கிற்கு மூவிதப் பிராணதாரசக்திகளுமாம். இவற்றுள் உணவை உட்கொள்ள வாயும் காற்றை உட்கொள்ள மூக்கும் ஏற்பட்டிருப்பதுபோல, மூவகைப் பிராணதாரங்களை உட்கொள்வதற்குப் பிராண உடம்பில் பலகருவிகள் ஏற்பட்டிருக்கின்றன. அவை, சிறு வட்டுகள்போன்ற உருவமுடையனவாய் எப்போதும் சுழன்றுகொண்டிருப்பதால் சக்கரங்களென்றும், பிராண உடம்பிற்கு ஆதாரமாகும் சக்திகளை உட்கொள்ளுங்கருவிகளாதலால் ஆதாரங்களென்றும், தாமரைப்பூப்போன்ற தோற்றமுடையனவாயிருத்தலால் கமலங்கள் என்றும் அழைக்கப்படுகின்றன. அவற்றின் விபரங்களைக் கீழே கட்டத்திற் காண்க. (முகப்புப் படம் பார்க்க.)

## கட்டம் 1

| பெயர் | இடம் — உடம்பில் | இடம் — ஆலயத்தில் | கமல இதழ் | பொதுவான நிறம் |
|---|---|---|---|---|
| 1. மூலாதாரம் | முதுகுத்தண்டின் அடி (குதம்) | கொடிமரப்பீடம் | நாலிதழ்க்கமலம் | மாணிக்கம் |
| 2. சுவாதிஷ்டானம் வாமமார்க்கம் | குறியின் அடி (குய்யம்) | ஷை மகாபலிபீடம் | 6 | மஞ்சணைச் சிவப்பு |
| ஷை தேவமார்க்கம் | மண்ணீரல் (Spleen) | அம்பிகை | 6 | சூரிய ஒளி |
| 3. மணிபூரகம் | தொப்புள் (நாபி) | அதிகார நந்தி | 10 | மரகதம் |
| 4. அனாகதம் | இதயம் (நெஞ்சு) | நடராஜர் | 12 | உருக்கிய பொன் |
| 5. விசுத்தி | கழுத்து (அடி நா) | வாகன நந்தி | 16 | மேகநீலம் |
| 6. ஆக்ஞை | புருவநடு (நெற்றி) | மூலஸ்தான லிங்கம் | 96 | பொன்பாய்ந்தநீலம் (Blue in Gold Sheen) |
| 7. சகஸ்ராரம் | தலை உச்சி | சர்ப்பக்கிரக விமானம் | 972 அல்லது (1008) | பூரணமான எல்லா நிறங்களும் |

## கட்டம் 2

### தியான முறையும், பலனும்

| யந்திரம் | அதிதேவதை | சக்தி | (நடுஎழுத்து) அக்ஷரம் | தோன்றும் ஒளி | கேட்கும் ஒலி (ஓசை) |
|---|---|---|---|---|---|
| 1 நாற்சதுரத்துள்ளே முக்கோணம் | கணேசர் | குண்டலினி | ஓங்காரம் | தீப்பந்தம் | இடிமுழக்கம் |
| 2 நாற்சதுரம் | பிரம்மா | சரஸ்வதி | நகாரம் | விளக்கு | பறை—எக்காளம் |
| 3 மூன்றாம்பிறை | விஷ்ணு | லக்ஷ்மி | மகாரம் | மின்னல் | சங்கநாதம் |
| 4 முக்கோணம் | உருத்திரன் | பார்வதி | சிகாரம் | மின்மினி | கைத்தாளம் |
| 5 அறுகோணம் | மகேஸ்வரன் | மகேஸ்வரி | வகாரம் | சூரியன் | வேய்ங்குழல் |
| 6 வட்டம் | சதாசிவன் | மனோன்மணி | யகாரம் | சந்திரன் | வீணை—குயில் |

I. இந்த ஆதாரங்கள் ஆறிலேயும், ஆறெழுத்தும், ஆறு தெய்வமும், ஆறு வீடும், ஆறு புண்ணியஸ்தலங்களும், ஐம்பத்தொரு அக்ஷரங்களும் யோகியருக்குத் துலங்கும்.

II. முருகன் உபாசகர் யோககுருவாகிய இடிம்பன் அருள்பெற்று, உண்மைக் காவடியெடுப்பரேல், அதாவது சத்திகிரியாகிய மூலாதாரத்தையும், சிவகிரியாகிய பிரம்மரந்திரத்தையும் சுழுமுனையாகிய பிரம்மதண்டத்தில் இணைத்து, முருகன் கா—அடி எய்துவரேல், அந்த ஆதாரங்களில் அப்போது ஆறுமுகங்களையும், சரவணபவ என்ற ஆறெழுத்துக்களையும், ஆறுபடைவீடுகளையும், அங்கு அவன் நடத்திய லீலைகளையும் திரைப்படத்திற் போலக்காண்பர். அவர் பெறுவதே பேரின்ப வீடு. இன்று சாதாரணமாக நடைபெறும் உபாயக் காவடிகள் இப்பேரருட்பேற்றை நினைப்பூட்ட அமைக்கப்பட்டனவாய் உலக இன்பங்களைப்பெற உபயோகப்படுத்தப் படுகின்றன.

பக்கம் 89

ஆதாரங்கள் (பக்கப் பார்வை).



# ஆலய அறிகுறிப்பொருள்கள். II

| I ஆலயம். சப்தமூர்த்திகள் | II மனித உடம்பு. ஏழு ஸ்தானங்கள் | III மனித உடம்பில் சக்கரங்கள் | IV பூமி. சப்ததீவுகள் | V பூமண்டலம் | VI சூரியமண்டலம் | VII அண்டம் |
|---|---|---|---|---|---|---|
| 7 மேல்விமானம் | தலைஉச்சி | சகஸ்ராரம் (பிரம்மரந்திரம்) | 7 தென் துருவத்தில் இனித் தோன்ற இருப்பன | 7 ஒருஸுவர்லோக சூக்குமக்கிரகம் | 7 நெப்ற்றியூன் மண்டலம் | அகிலாண்டம் ஏழு பேரண்டங்களையும், பேரண்டங்கள் ஒவ்வொன்றும் ஏழு சிற்றண்டங்களையும், சிற்றண்டங்கள் ஒவ்வொன்றும் ஏழு பிரம்மாண்டங்களையும், பிரம்மாண்டங்கள் ஒவ்வொன்றும் ஏழு சூரியமண்டலங்களையும், சூரியமண்டலங்கள் ஒவ்வொன்றும் ஏழு கிரகமண்டலங்களையும், கிரகமண்டலம் தனித்தனி ஏழு கிரகங்களையும், தத்தம் எவ்வேழு சக்கரங்கள் அல்லது சூக்குமப்புவனங்களாகக் கொண்டிருக்கும். |
| 6 சிவலிங்கம் | புருவநடு | ஆக்ஞை | 6 பவிபிக் சமுத்திரத்தில் இனித் தோன்ற இருப்பன | 6 ஒரு புவர்லோக சூக்குமக்கிரகம் | 6 யூரானஸ் மண்டலம் | |
| 5 வாகனநந்தி | கழுத்து | விசுத்தி | 5 இன்றைய நாடுகள் | 5 புதன் | 5 சனி மண்டலம் | |
| 4 நடராஜர் | இதயம் | அநாகதம் | 4 அத்லாந்திக் சமுத்திரக் கண்டம் அத்லாந்தியா | 4 பூமி (திங்கள்) | 4 வியாழன் மண்டலம் | |
| 3 அதிகாரநந்தி | நாபி | மணிபூரகம் | 3 பவிபிக் சமுத்திரக்கண்டம் லெமூரியா | 3 செவ்வாய் | 3 செவ்வாய், பூமி, புதன் மண்டலம் | |
| 2 அம்பிகை (அல்லது) | மண்ணீரல் (அல்லது) | விட இமாலய சுவாதிஷ்டானம் | 2 வடதுருவத்தின் தெற்காக, நோவாஸெம்ப்லா, ஸ்பிற்ஸ்பர்கன், ஐஸ்லாந்து என்பவற்றை இணைத்துக் குதிரைலாடம் போன்றிருந்த ஒரு கண்டம். | 2 ஒரு புவர்லோக சூக்குமக்கிரகம் | 2 சுக்கிரன் மண்டலம் | |
| 2 பலிபீடம் | குய்யம் | தென்னிந்திய சுவாதிஷ்டானம் | | | | |
| 1 கொடிமரம் | குதம் | மூலாதாரம் | 1 வடதுருவக்கண்டம் இவற்றுள் 1—2—3—4 இப்போது பெரும்பாலும் கடல் கொள்ளப்பட்டன. ஒரு சில துண்டுகள் இன்றைய நாடுகளின் பகுதிகளாயிருப்பன. | 1 ஒருஸுவர்லோக சூக்குமக்கிரகம் | 1 வல்கன் மண்டலம் இந்த ஏழு மண்டலங்களும் தனித் தனி எவ்வேழு கிரகங்களைக் கொண்டனவாம். | |

ஆதாரங்கள், ஆற்றொழுக்கில் நீர்ச்சுழிபோன்று, பிராண உடம்பின் வெளிப்புறத்தில் சுழிகளாகக் காணப்படும். அவற்றின் அமைப்பு படத்திலிருந்து ஒருவாறு விளங்கும். ஞெற்றிக்கண் பார்வைக்கு அவை பிராணமயகோசத்தின் வெளிப்புறத்தில் நீர்ச்சுழிகள் போலவும், சுழன்று கொண்டிருக்கும் தாமரை, பூசணி, ஊமத்தம் பூக்கள் போலவும் பல பல நிறங்களுடன் ஒளி வீசிக் காணப்படும். அப்பூங்காம்புகளிலிருந்து மெல்லிய நாளங்கள் புறப்பட்டு முதுகுத்தண்டின் நடுவே ஓடும் சுழுமுனு நாடியில், மூங்கிலில் கணுக்கள் அமைந்திருப்பது போலவே வேரூன்றியிருப்பதும் காணப்படும். (முகப்புப் படம் பார்க்க) மனிதனுடைய பல உடம்புகளில் ஒன்றன் சக்திகளை மற்றொன்றுக்கு இறக்கும் துவாரங்களே ஆதாரங்கள். அவற்றின் துணையின்றி ஒன்றும் உயிர்த்திராதாகையால் அவை எல்லா உயிர்ப் பிராணிகளுடைய உடம்பிலும் இருப்பனவாம். ஆனால் அவரவர் அறிவுக்கும் ஆற்றலுக்கும் தக்கபடி இந்தச் சக்கரங்கள் உடம்புக்குடம்பும், ஒரேஉடம்பிலேயே ஆதாரத்திற்காதாரமும், அளவிலும் நிறத்திலும் சுழற்சி வேகத்திலும் மிக மிக வேறுபடும். சாதாரண மக்களிடம் இவை இரண்டங்குலவட்டமாய், தணல்போன்ற மந்தமான ஒளி வீசிக்கொண்டு மிக மந்தமாய்ச் சுழன்று, உடம்பு உயிர்த்திருப்பதற்கு வேண்டிய அளவு மாத்திரம் சக்திகளை உபயோகித்து நிற்கும். பூரண மக்களிடம் அவை ஒருச்சாண் அகலம்வரை விரிந்து, வானவில் நிறங்களோடு மின்னொளி வீசி, மின் வேகத்தில் சுழன்றுகொண்டு பலவித சக்திகளைப் பெருவாரியாக உள்ளேற்று, ஒவ்வொரு சக்கரமும் ஒரு சிறு சூரியன் போலப் பிரகாசித்துக் கொண்டிருக்கும். அன்னுருடைய அறிவும் ஆற்றலும் உலகம் வியக்கத் தக்கனவாக இருக்கும். இந்தச் சக்கரங்கள் உடம்பில் சில உறுப்புக்களின் மேலுள்ளனவாகக் கூறப்படினும் அவை அவ்வுறுப்புகளின் பாகங்களல்ல. பிராண உடம்பின் அவயவங்களாம். பிராண உடம்பு அன்ன உடம்பை விட்டு நீங்கும்போது இவையும் கூட நீங்கிவிடும்.

பிராண உடம்பிலுள்ள ஆதாரங்களில் முக்கியமானவை ஆறுகும். இந்த ஆறு கமலங்களும் விரியும் போது தலைக்கு மேலுள்ள சகஸ்ராரமும் கூடவே விரியுமாகையால், அது இவற்-

றுடன் ஒரு சக்கரமாகச் சேர்த்துக் கூறப்படுவதில்லை. ஆயினும் அதுவே அனைவற்றிலும் மேலான சக்கரமாவது. ஆறாதாரங்களும் பிரம்மரந்திரமுமாகிய இந்த ஏழின் ஸ்தானங்களே ஆலயத்தில் 1-முதல் 7-வரையுள்ள பிரதான மூர்த்திகளின் இருப்பிடங்களாக அமைந்திருக்கின்றன. ஆலயப் படத்தையும் மனித உடம்பின் படத்தையும் (முகப்புப் படங்கள் 1—2 பார்க்க) ஒப்பிட்டுப் பார்க்கும் போது இவ்வுண்மை நன்கு விளங்கும். அவற்றுள் மூலாதாரத்தைக் குறிப்பது கொடி மரத்தின் பீடமேயாகும், கொடிமரமல்ல. கொடிமரம் அன்ன உடம்பில் முதுகுத் தண்டத்தையும், பிராண உடம்பில் சுழுமுனை நாடியையும் அறிகுறியாகக் காட்டுவது. இங்கு கூறிய ஆதாரங்களன்றி ஒவ்வொரு உடம்பிலும் வேறு ஆதாரங்களும் இருக்கின்றன. ஆனால் அவை வாம மார்க்கத்தைச் சேர்ந்தவை, மனிதனுக்கு விலங்கு ஆகுபவை, மனிதரை விலங்காக்குபவையுமாம். வித்தகச் சித்தர் கணத்தாரால் அவை கையாளப்படுவதில்லை.

உயிர்களின் அன்ன உடம்பும் பிராண உடம்பும் சேர்ந்த ஸ்தூல உடம்பை இந்த ஆதாரங்கள் மூலம் தொழிற்படுத்தும் சக்திகள் மூன்றும். இச்சையுடம்பு, மனவுடம்பு முதலியவற்றில் இவையேயன்றி வேறு பல சக்திகளும் வேலை செய்கின்றன; அவை பின்னால் கூறப்படும். இறைவனிடமிருந்து எண்ணற்ற சக்திகள் வெளிவருகின்றன. அவற்றுள் ஒவ்வொன்றும் அண்டங்கள், புவனங்கள், சப்த உலகங்கள் எங்குமே இடைவிடாது வேலை செய்து கொண்டிருப்பன. அவையனைத்தும் மனித அறிவிற்கு அடங்குவனவல்ல. அவற்றின் வேலையை ஒரு சிறிது, நாம் உணரும் பொருட்டு ஆன்றோர் அவற்றினைப் படைக்கும் சக்திகள், காக்கும் சக்திகள், அழிக்கும் சக்திகள் என மூவகையாகத் தொகுத்துக் கூறுகின்றனர். வேறு சிலர் காக்கும் சக்திகளை இரு கூறாக்கி அவற்றைக் காப்பன, மறைப்பன என்றும், அழிக்கும் சக்திகளை இரு கூறாக்கி அவற்றை அழிப்பன, அருள்வன என்றும், ஆக இறைவனுடைய வேலையைப் பஞ்ச கிருத்தியங்கள் என்றும் கூறுவர். ஆனால் ஒரே குயவன் எண்ணிறந்த மட்கலங்களை ஒரே நேரத்தில் ஓரிடத்தில் வனைந்து கொண்டும், வேறோரிடத்தில் உலர்த்திக் கொண்டும் இருப்பானானால் அந்த

மர்யம் நம் மனத்திற்குப் புலப்படாத தொன்று. அதனால் உலக் மதங்களெல்லாம் முத்தொழில் இயற்றும் இறைவனை மூன்று மூர்த்திகளாக்கி அவருக்கு மூன்று பேருங் கொடுத்து அழைக்கின்றன; ஆயினும் அம்மூவரும் ஒருவரேயென்றும் ஒருவரே அம்மூவருமென்றும் தம் ஞானநூல்கள் வாயிலாக வற்புறுத்தவுஞ் செய்கின்றன. "ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ, ஒருருவே மூவுருவமான நாளோ" என்று அப்ப மூர்த்திகள் போற்றியதும் இதனையே. இந்த மூன்று மூர்த்தங்களையும் பிரம்மா, விஷ்ணு, சிவன் என்றும், பிதா, புத்திரன், பரிசுத்த ஆவி என்றும், ஒஸிரிஸ், ஐஸிஸ், ஹோரஸ் என்றும், இன்னும் பல முப்பெயர்களாலும் இன்றைய உலக மதங்களிலும் பண்டு இருந்து இறந்துபட்ட பல மதங்களிலும் அழைப்பர். இறைவனுடைய இந்த மூவுருவங்களில், உருவத்திற்கு ஒரு சக்தியாக மூன்று சக்திகள் கூடி நம் ஸ்தூல உடம்பிற்குரிய ஆதார சக்திகளாக வேலை செய்கின்றன. அவை முறையே குண்டலினி, ஜீவ சக்தி, பிராண சக்தி என்றழைக்கப்படுகின்றன. அவற்றில் சிவப்பு நிறமுடைய குண்டலினி பிரம்ம பாகத்தைச் சேர்ந்ததாகவும், நீல நிறமுடைய ஜீவ சக்தி விஷ்ணு பாகத்தைச் சேர்ந்ததாகவும், பொன்னிறமுடைய பிராண சக்தி சிவ பாகத்தைச்சேர்ந்ததாகவும் கருதப்படுகின்றன. ஜீவ சக்தியும் பிராண சக்தியும் வேறு வேறும், ஒன்றல்ல. இம்மூன்று சக்திகளும் வேலை செய்யும்போது நெற்றிக்கண் பார்வைக்குப் புலப்படும் அவற்றின் நிறங்களே, ஆன்றோரால் நமது திரிமூர்த்திகளுக்குக் கற்பிக்கப்பட்டிருக்கும் திருவுருவங்களுக்குக் கொடுக்கப்பட்டிருப்பவை. பொன்னார்மேனியன், நீலவண்ணன், செந்தாமரையான் என்ற பெயர்கள் இந்த மூன்று சக்திகளினால் ஏற்பட்டவையாம்.

## குண்டலினி

குண்டலினி குடிலை, ஓங்காரி (ஓம்காரி) எனப்படுவள். அவள் ஓங்கார உருவினள். அவளே நாதப்பிரம்ம சக்தி. நாதத்திலிருந்தே அண்டங்களும் புவனங்களும் படைக்கப்படுவதால் அந்த நாத சக்தியின் அதிபதி பிரம்மா எனவும் படுவர். அதனாலேயே பிரம்மாவானவர் தன் சக்தி சரஸ்வதியை வாக்கில், அதாவது

காரத்தை உண்டுபண்ணும் நாவில் உடையவராகவும், அந்த வாக்கும் 'வைகரீ, மத்தியமா, பச்யந்தீ, ஸூக்ஷ்மா' என நால் வகைப்படுவதால் அவர் நான்முகனாகவும் உருவகப்படுத்தப்பட்டுள்ளனர். அல்லாமல் நான்கு முகங்கொண்ட மனித உருவத்தோடு அவர் சத்திய லோகத்தில் வீற்றிருக்கின்றார் என்பது பொருளல்ல. அவர் அண்டம் முழுவதும் நிறைந்த அருவுருவினர். குண்டலியின் பல வேலைகளில், பிரதானமானது படைப்புத் தொழிலானமையால் அது இறைவனுடைய படைப்பு மூர்த்தமாகிய பிரம்மாவின் சக்திகளில் ஒன்றாக வைத்தெண்ணப்படும்.

நமது பூமியினுள்ளே, பாதாளம் என்னப்படும் மையபாகத்தில், இறைவனுடைய பட்டறையாகிய உலைக்களம் நடைபெறுகின்றது. அந்தப் பாதாளச்சுவாலையின் வெப்பத்தை உலகக் கருவிகளால் அளக்க முடியாது; அவ்வளவு உக்கிரமான பலங்கொண்டது அது. அது பூகம்பங்களை விளைவித்துப் பூமியைப் பந்துபோல ஆட்டவல்லது, நினைத்த நொடியிலேயே சமுத்திரங்களை வற்றச் செய்வது, மலைகளையும் நாடுகளையும் கண்டங்களையும் ஒரே மூச்சில் மேலெழும்பச் செய்வது. உலகத்தில் இன்று காணப்படும் புதிய புதிய உலோகங்களெல்லாம் அந்த உலையிலேயே காய்ச்சி அடித்து உருவாக்கப்படுகின்றன. அவற்றுள் கடைசியாக உருவாக்கப்பட்டுள்ள சிலவே, அபூர்வ சக்திகளையுடைய ரேடியம், உரேனியம் போன்றவை. இவற்றினும் அற்புதமான உலோகங்கள் அங்கு இன்று தயாராகிக் கொண்டிருக்கின்றனவாம். அவை நாளாவட்டத்தில் பூமிக்கு மேலே தள்ளப்பட்டு உலக உபயோகத்திற்காக வழங்கப்படும். இவையும் இன்னும் பலவும் குண்டலினியின் வேலைகளாம். இந்தக் குண்டலினி இறைவனிடமிருந்து ஓங்காரமாய் முதல் முதல் வெளிவந்தபோது அது மகா மாயையைக் கலக்கி அதில் நுண்ணிய குமிழிகளாகிய (Bubbles) விந்துவையும், அவ்விந்துவைக் கலக்கி அங்கு 7 விதத் தத்துவங்களையும் உண்டு பண்ணிற்று. அதாவது அவ்விந்துவை ஏழு விதமாகத் திரட்டி நிலம், நீர், காற்று, ஆகாயம், நுண்ணாகாயம், திரட்டணு, அணு என்ற சப்த பூதங்களை ஆதி உலகமாகிய கைலாயத்தில் படைத்தது. அதிலிருந்து கீழ் நோக்கிப் பருப்பொருளாக எவ்வேழு பூதங்களைப்படைத்து வைகுண்டம், சத்திய

லோகம் முதலியவற்றைப் படைத்துக்கொண்டே வந்து, முடிவில் பூலோகத்தையும் அதன் சப்த பூதங்களையும் படைத்தது. பூலோகம் என்னும்போது பூமி மாத்திரமல்ல; சூரியன், சந்திரன், மற்றக் கிரகங்கள், ஆகாயத்தில் மிதக்கும் எண்ணிறந்த கோடி நக்ஷத்திரங்கள், ஆகிய எல்லாவற்றின் ஸ்தூல பாகத்தொகுதியாம். அந்தக் கோளங்கள் ஒவ்வொன்றின் உள்ளிலும் இந்த ஓங்காரி மிகப் பயங்கரமான அக்கினிச் சுவாலையாகப் படைப்பு வேலையைச் செய்து கொண்டிருக்கிறாள். அங்கு அவள் அக்கினிக்குழம்பு போலக் கொதித்துக் குமுறிக்கொண்டிருப்பாள். அவளுடைய மிகமிகச் சாந்தமான வெப்பமே உலகுக்கு வெளியே வீசிக்கொண்டு உடம்புகளிலும் குண்டலினியாக வேலை செய்வது. என்றும் அழிவேயில்லாத படைப்பு இயற்கையில் இல்லவேயில்லை. அதனால் படைப்பும் அழிப்பும் எங்கும் என்றும் பின்னியே நடைபெறும். இந்த உலக மாதாவுடைய வேலையும் அவ்விதமே. அவள் காளியாக அழிக்கும்போது பார்வதியாகப் படைப்பாள்.

இக்குண்டலினி, எல்லா உடம்புகளிலும் அடங்கிக் கிடக்கும் ஒரு அக்கினி; மின்சார சக்தி போன்று விறகின்றியே எரிவது; உறங்கிக்கிடக்கும் பாம்புபோல முதுகுத்தண்டின் அடியில் சுருண்டு கிடப்பது. இந்த மனுவந்தரத்திற்குத் திட்டமிடப்பட்ட ஆன்ம வளர்ச்சி முற்றுப்பெறும்போது இக் குண்டலினிசக்தி எல்லா மக்களிடமும் பூரணமாக வேலை செய்யும். ஆனால் அந்த மனுவந்தரத்தின் நடுக்காலமாகிய இன்றைய நிலையில், முயற்சி செய்யாதவரிடம் இச்சக்தி முழுப்பலத்துடன் வேலை செய்வதில்லை. தகாத மக்களிடம் அது தட்டி யெழுப்பப்படுமானால், அவருக்கு அது பெருந்தீங்குகளை விளைப்பதோடு மேல் வரும் பல பிறவிகளுக்கும் அல்லலைக் கொடுக்கும். சுய நலமும் சிற்றின்ப இச்சைகளும் அறவே நீங்காதவரிடத்து அது தூண்டப்படுமானால், அது கீழ் நோக்கிப் பாய்ந்து குறியின் அடியிலிருக்கும் வாமமார்க்க சுவாதிஷ்டானத்தை ஆழப்படக் கலக்கி அவரை எவ்விதத்திலும் கட்டுப்படுத்த முடியாத காமப் பேய்களாக்கிவிடும். ஆயிரக் கணக்கான கன்னிப் பெண்களைச் சிறையெடுத்தாரென்ற அசுர கூட்டங்கள் இவரே. சிற்றின்ப இச்சைகளை அடக்கியவராயினும் சுயநலக்காரராயிருப்பின் அது அவரை ஆணவப் பேய்களாக்கி

அதிகாரத்திமிரையும், குரூர குணத்தையும் அவரிடம் மட்டுக்கடங்காது பெருக்கி, உலகில் ராக்ஷஸர்களையும் ஹிட்லர் முஸோலினிகளையும் படைத்துவிடும். "கொக்கென்று நினைத்தாயோ கொங்கணவா" என்ற கற்பரசியின் புராணக்கதை இந்த உண்மையையே விளக்குவது. இந்த இருவகை மக்களாலும் அவருக்கும் உலகிற்கும் அழிவும் கேடும் விளைவதைத் தவிர நன்மை யொன்றுமே ஏற்படுவதில்லை. அதனால், இந்த வாமமார்க்கத்தை வெறுத்து, மண் பெண் பொன்னாசைகளை அறவே ஒழித்துக் காமம் வெகுளி மயக்கும் யான் எனதென்னும் செருக்கும் அறுத்துப் பேரின்பப் பேற்றிற்குப் பக்குவப்பட்டு நிற்கும் ஆன்மாக்களுக்கு, அருட்குரவர் தோன்றி ஆபத்தில்லாத முறையில் அவருடைய குண்டலினியை எழுப்பும்போது, அது ஆலயக்கொடிமரத்தில் கொடிப்பட்டம் சுற்றி ஏறுவது போன்று முதுகுத் தண்டின் வழியாகப் பாம்புபோல வளைந்து வளைந்து மேலேறி, நாபி, வயிறு, இதயம், கழுத்து, நெற்றி இந்த ஐந்து சக்கரங்களிலும் சீறி வெளிக்கிளம்பும். இதுவே ஐந்து தலை நாகம் எனப்படுவது. பாம்பாட்டிச் சித்தர்கள் பிடித்தாட்டும் பாம்பு இதுவேயாகும். ஜீவான்மா பரமான்மப் பேற்றைப்பெற்று நிற்கும்போது அந்த "நாதர் முடி மேலிருக்கும் நச்சுப்பாம்பு" இதுவே; இதனையன்றி வேறு ஐந்துதலை ஏழுதலை நாகங்கள் எங்குமில்லை. குண்டலினியை எழுப்பி, மேல் நோக்கிச் செலுத்தி, ஒவ்வொரு ஆதாரத்திலும் நிறுத்தி, தலை யுச்சிக்கு ஏற்றும் வல்லமை வந்தவுடன், அது பிரம்மரந்திரத்தின் வழியாகத் தங்கு தடையின்றிப் பொங்கி வழிந்து கொண்டிருக்கும். அப்போது அம்மனிதன், விழிப்புடன் திரிலோகங்களிலுஞ் சஞ்சரிக்கவும், நெற்றிக் கண்ணால் உலகங்களை உள்ளும் புறமும் பார்க்கவும், கந்தர்வ கானங்களைக் கேட்கவும், கூடுவிட்டுக் கூடுபாயவும், அஷ்டமா சித்திகளைக் கையாளவும் வல்லவனாகின்றான். அவன் அருளே உருவாக இருப்பானாதலின் அவன் தங்குமிடமெங்கும் மங்களம் பொங்கும்.

எல்லா சக்திகளையும் போலவே குண்டலினியும் கண்ணுக்குப் புலப்படுவதில்லை; அதன் வேலையைக்கொண்டே அதன் இருப்பை அறிய முடியும். அது பூமியின் மையத்திலிருந்து வெளியே நாற்புறமும் பரவி உயிர்ப் பிராணிகள் அனைவற்றின் மூலாதாரங்களிற்

புகுந்து வேலை செய்யும்போது, அங்கு பூலோக அணுக்களைத் திரட்டி ஏழு சுருள்கொண்ட நாகம்போல உறங்கிக் கிடக்கும். அதனாலும், பாம்பு போன்று வளைந்து வளைந்து மேலேறுவதனாலும், குண்டலினி சக்தியானது "சர்ப்பாக்னி" (Serpent Fire) என்று அழைக்கப்படும், ஏழடுக்கு வீரியமுள்ள அந்த சக்தியின் கூடானது மூலாதாரத்தில் ஏழு தோல் கொண்ட வெங்காயம் போன்று ஒன்றனுள் ஒன்றாய் மிக மிக நுணுக்கமான உருண்டையாக நெற்றிக்கண்ணுக்குப் புலப்படும். அதனைக் குண்டலினியின் உடற்கூடு என்னலாம். சாதாரண மக்களிடம் அக்கூட்டின் வெளித்தோல், அல்லது சிமிழ் ஒன்றே மந்தமான கதகதப்புடன் வேலை செய்துகொண்டிருக்கும். அன்னாருடைய சுழுமுனைநாடி அவருடைய முதுகுத்தண்டின் நடுவே மிக நுண்ணிய சிலந்திநூல் போல நெற்றிக்கண்ணுக்குப் புலப்படும். அதனூடாகக் குண்டலினியின் இந்த மந்த நடையானது பாம்பு வளைவின்றி நேரே கதிப்பாய்ச் சாரையோட்டமாக மேல் நோக்கி ஏறிச்சென்று கொண்டிருக்கும். அது அபாயமற்றது; உடம்பின் உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத உதவியாய் நிற்பது. உள்ளிருக்கும் சிமிழ்களில் சூடு கிளம்பும்போதுதான் அபாயம் ஆரம்பிப்பது. அதன் பூரண வல்லமையும் மேலேறும்போது அது ஆக்கர்க் கருவியந்திரம் கரும்பாறையைத் துளைப்பதுபோலச் சுழுமுனை நாடியைக் குடைந்து விசாலப்படுத்தி மேலேறுமாம். அச்சமயம் பழுக்கக் காய்ச்சின இருப்புச் சலாகையைக்கொண்டு முதுகுத்தண்டைத் துளைப்பது போன்று வேதனை பொறுக்க வொண்ணாததாயிருக்குமென அனுபூதிமான்கள் கூறுகின்றனர். அவ் வேதனையைப் பொறுத்தற்கும் அதன் மின்வேகத்தைக் கட்டுப்படுத்தி ஆதாரந்தோறும் அதனை நிறுத்தி நிறுத்தி மேலேற்றுதற்கும் மிக்க மனோ வலிமை வேண்டுமெனவும் கூறப்படுகின்றது. புலால், புகையிலை, கள், அபின் முதலியவற்றை உட்கொள்ளும் உடம்புகளில் இந்த முயற்சி உடம்பையே அழித்து விடுமென்று சொல்லப்படுகிறது. இதனைத் தீங்கின்றி நற்பலன் தரும் முறையில் படிப் படியாக எழுப்புவதற்குப் பல மதங்களிலும் கிரியைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. வங்கப்பணி முனிவர், "சுதந்திரச் சிற்ப விதானத்"தை நெற்றிக்கண் கொண்டு செய்த ஆராய்ச்சியிலிருந்து (The Hidden Side of

Free Masonry) இக்கிரியைகளின் உட்பொருள் ஒரு சிறிது விளங்குகிறது. அதிலிருந்து நமது மதச் சடங்குகளிலும் சில உண்மைகள் அநுமானிக்கத்தக்கவையாயிருக்கின்றன. அ, உ, ம் என்ற மூன்று ஒலிகளைக்கொண்டது ஓம் என்ற பிரணவம். அந்த அகர உகர மகாரங்கள் பிரம்ம விஷ்ணு ருத்திராம்சங்களென்று கூறப்படுகின்றன. இந்த மூன்று அம்சங்களும் பின்னியதாகவே குண்டலினி காணப்படுகின்றது. அவை தனித்தனி பிரிக்கப்பட்டுத் தட்டி யெழுப்பப்படும்போது, அங்கு இடகலை, பிங்கலை, சுழுமுனை என்ற மூன்று பிரிவுகள் தோன்றுகின்றன. ஒருவனுக்குச் சைவாகம முறைப்படி சமய தீக்ஷை செய்யப்படும்போது அவனுடைய இடநாடி அக்கிரியையால் திறக்கப்படுகின்றது; குண்டலினியின் வெளிச்சிமிழிலுள்ள இடகலையும் பிரிந்து விடுகின்றது. அது சிவப்பு நிறமாய், முழுவதும் பெண் தன்மையுடையதாய், பிரம்மாம்சமாக இருக்கின்றது; அது முதுகுத்தண்டின் இடப்பக்கமிருந்து புறப்பட்டு அத்தண்டத்தைப் பாம்புபோலச் சுற்றிச் சுற்றி மேலேறிப் பிடரியில் போய் முட்டிநிற்கின்றது. (படம் பக்கம் 97) பின் இரண்டாவது தீக்ஷையான விசேஷ தீக்ஷை செய்யப்படும்போது பிங்கலை நாடி திறந்து, அதன் வழியாக முன் கூறிய வெளி அடுக்கிலுள்ள பிங்கலையானது பொன்னிறத்தோடு முதுகுத்தண்டின் வலப்பக்கமிருந்து புறப்பட்டுப் பாம்புபோல வளைந்து வளைந்து மேலேறிப் பிடரியில் போய்ச் சேருகின்றது. இது முழுவதும் ஆண் தன்மையுடையதாய், ருத்திராம்சமாகவிருக்கின்றது. பின்னர், மூன்றாவதான நிர்வாண தீக்ஷை செய்யப்படும்போது, பிரம்மதண்டத்தின் நடுவிலுள்ள சுழுமுனை நாடி நன்கு திறக்கப்பட்டு, அதன் வழியாகச் சுழுமுனை சக்தியானது ஆழக்கடல் நீல நிறமாய்ச் சாரையோட்டமாகக் கதிக்க மேலேறும். இது ஆண் பெண் இரு தன்மைகளும் கலந்ததாய், விஷ்ணு அம்சமாயிருக்கும். இந்த மூன்று நாடிகளும் இங்ஙனம் பிடரியில் ஒன்று கூடுவதே கங்கை யமுனை சரஸ்வதியின் திரிவேணி சங்கமம். இப்மாதிரிக் குண்டலினியின் ஏழு அடுக்குகளும், நெடுங்கால யோகாப்பியாசங்களினால் திரிவேணி சங்கமஞ் சேர்ந்து, பிரம்மரந்திரத்தில் பொங்கி வழிந்து உச்சந்தலையை முழுக்காட்டும்போதுதான், அம்மனிதன்

பிறப்பிறப்பைக் கடக்கின்றான். அன்றிப் பிரயாகை சென்று உச்சி மயிரை நனைத்துக்கொள்வதால் அந்த அரும்பெரும் பேறு அகப்பட்டுக்கொள்ளுமென்று நினைப்பது இக்காலத்திய மூடக் கொள்கைகளில்ஒன்று. பின்னது முன்னதற்கு அறிகுறியேயன்றி அது பிறவிப்பிணியை நீக்கமாட்டாது; வேறு சில அற்பமான நன்மைகளை மாத்திரம் தரவல்லது.

நமது ஆலயத்திருவிழாக்கள், யோக நெறியையும் ஸ்தூல உலகிலுள்ள உபாயதீக்ஷா முறைகளையும் சூக்ஷ்ம உலகில் நடைபெறும் உண்மைத்தீக்ஷா மார்க்கத்தையும் விளக்குவனவாம். அதனால் அங்கு கொடியேற்றப்படும்போது, மற்றக்கொண்டாட்டங்களிலுள்ள கொடியேற்றுப்போலன்றிப் பட்டமானது இடகலைபோலக் கொடிமரத்தை வளைந்து வளைந்து சுற்றி மேலேறுவது கவனிக்கத்தக்கது. குண்டலி, குடிலை என்ற சொற்கள் வளைந்தது என்று பொருள்படுவன. இந்த இடகலை பிங்கலை நாடிகள் ஆண்களுக்கும் பெண்களுக்கும் எதிர்மாறாக விருக்கும்; அதாவது ஆண்களுக்கு இடகலை இடப்புறமும் பெண்களுக்கு வலப்புறமும் தொடங்குவன. அம்மாதிரியே பிங்கலை ஆண்களுக்கு வலக்கைப்பக்கமிருந்தும், பெண்களுக்கு இடக்கைப்பக்கமிருந்தும் முதுகுத்தண்டின் அடியிலிருந்து எழும்பி மேலேறும். பிங்கலையே ஆண்கலையாதலால், ஆண்களுக்கு வலது புறத்திலும், பெண்களுக்கு இடது புறத்திலும் ஏற்படும் நோய்கள் எளிதில் குணப்படுவதில்லை; அங்கு பக்கவாதம் காணுமாயின் அவர் காலந்தாழ்க்காது மரித்துவிடுவர். ஆலயந் தொழும்போது ஆண்களும் பெண்களும் இடகலையை இறைவனிடம் திருப்பி நிற்பர், முதலில் எழுப்பப்படவேண்டியது இடகலையாதலால்.

இடகலை ஒருவனிடம் தொழிற்படும்போது, அது காமக்குரோத லோப மோகங்களையும், சிற்றின்ப இச்சைகளையும் அடக்க உதவி செய்யும்; பிங்கலை, துள்ளும் மனத்தை ஒடுக்க உதவி செய்யும்; சுழுமுனை பகுத்தறிவைப்பெருக்கி ஆன்ம முன்னேற்றத்தைத் தீவிரப்படுத்த உதவும். இங்ஙனம் இவை உதவி செய்யுமென்பதால் மனித முயற்சியின்றி அந்நற்பலன்கள் தாமே எய்தப்பெறுமென்பதல்ல. நெல்லை உலர்த்த வெயில் உதவி செய்யுமாயினும்,

அது வீட்டினுட் புகுந்து நெல்லைக் கிண்டிக் கொண்டிராது. அம்மாதிரியே அறிவு இச்சை செயல்களை நல்வழியில் நடத்த முயல்பவனுக்கு இந்த நாடிகளும், அவற்றைத்தூண்டும் தீக்ஷைகளும் துணையாய் நிற்குமேயன்றி அவை தாமாக ஒன்றுஞ் செய்துவிடா. அங்ஙனம் முயலாத மனிதரிடம் தீக்ஷைகளால் திறக்கப்பட்ட நாடிகள் பழக்கமின்மையால் திரும்பவும் தூர்ந்து போகும்; அது தண்ணீர் பாயாத கால்வாய்கள் தூர்ந்து விடுவது போலாம்.

இன்றைக்குச் சுமார் இருபது முப்பதினாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு பண்டைய எகிப்து நாட்டில், அதன் உன்னத நாகரிக காலத்தில், அங்குள்ள மக்களின் தீவிர ஆன்ம முன்னேற்றத்தின் பொருட்டுச் சுதந்திரச் சிற்பவிதானம் என்ற கிரியா முறை கையாளப்பட்டுவந்தது. அதன் வழித் தோன்றலொன்று முக்கியமான அம்சங்களில் அதில் நின்றும் சிறிதும் வேறுபடாததாய், உலகின் பல நாடுகளில் இன்றும் நடந்து வருகின்றது. அம் முறையில் இறைவனை அண்டத்தின் மகத்தான சிற்பி (G. A. O. T. U.) (The Great Architect Of The Universe) என்ற பெயரால் வழிபடுவர். அது ஒரு அந்தரங்க முறையாகையால் அதன் நுட்பங்களை விரிவாக வெளிப்படுத்த எவருக்கும் அதிகாரமில்லை. அந்த விதான முறையில், நமது சமய, விசேஷ, நிர்வாண தீக்ஷைகளுக்கொப்ப வேறு மூன்று தீக்ஷைகள் நடைபெறுகின்றன. அவை நடைபெறுங் காலத்து நெற்றிக்கண்ணுக்குக்காணப்பட்ட சூக்குமப் பலன்களே மேலே விளக்கப்பட்டிருப்பவை. அவற்றையொத்த தீக்ஷைகள் இந்து மதத்திலும் கிறிஸ்து மதத்திலும் நடைபெறுவதால், ஏற்படும் பலன்களும் ஒருவாறு ஒத்திருக்குமென்றே அனுமானிக்க இடந்தருகின்றது. தீக்ஷை முறைகளைப்போலவே அவ்வவற்றிற்கமைந்த கடமைகளும் உரிமைகளும் ஒற்றுமையுடையனவாகக் காணப்படுகின்றன. அவற்றை "ஆலயந்தொழுவது சாலவும் நன்று" என்ற இந்நூலின் இரண்டாம் பாகத்திற் காண்க.

## ஒத்திருக்கும் தீக்ஷை முறைகள்

| சைவசமயம் | சுதந்தரச் சிற்பமுறை | கிறிஸ்து மார்க்கம் |
|---|---|---|
| 1 சமயதீக்ஷை | பயில்பவர் (E. A.) (Entered Apprentice) | ஸப் டீக்கன் (Sub Deacon) |
| 2 விசேஷதீக்ஷை | பணியாளர் (F. C.) (Fellow Craftsman) | டீக்கன் (Deacon) |
| 3 நிர்வாணதீக்ஷை | சிற்ப நிபுணர் (M. M.) (Master Mason) | ப்ரீஸ்ற் — அய்யர், குரு, சாமியார் (Priest) |
| 4 ஆசாரியாபிஷேகம் | ஆளும் தலைவர் (I. M,) (Installed Mason) | பிஷப் — கண்காணியார், அத்யக்ஷகர் (Bishop) |

இக்கிரியைகளின் உட்பொருள்களை அறியும்போது, கால தேச வர்த்தமானங்களுக்கேற்ப ஆன்றோரால் அமைக்கப்பட்ட உலக மதங்கள் வெளிப்பார்வைக்கு வேறுபட்டனவாகக் காணப்படினும், அவைகள் யாவும் உள்ளொற்றுமையுடையனவென்பது நன்கு புலப்படும். மதங்களெல்லாம் உயர்ந்த வயிரமொன்றில் எண்ணற்ற பட்டைகள் போன்றவை; அதன் ஒவ்வொரு பட்டமும் வானவில்லின் ஒவ்வோர் நிறத்தை மாறிமாறிக் காட்டுவது அனைவரும் அறிந்தது. உண்மையின் பட்டைகளனைத்தையும் ஒருசேரக் காண்பது மனித அறிவிற்கு எட்டக்கூடியதல்ல. அதனால் ஒவ்வொரு மதமும் உண்மையின் ஒரு பட்டையைச் சிறப்பித்தும், மற்றவற்றைப் பொதுப்படையாகவும் கூறும். அச்சிறப்புப்பட்டை மிக்க ஒளி வீசி ஜொலிப்பதால், மக்கள் மனக்கண் கூச்சமெடுத்து, மற்றப்பட்டைகளை மறந்து, அவ்வொன்றையே உண்மையெனக் கொண்டாடத் தொடங்குகின்றனர்; வேறு பட்டைகளைச் சிறப்பிக்கும் பிற மதங்களைக் குறைகூறவுஞ் செய்கின்றனர். இந்து மதம் இறைவனுடைய எல்லாமாந்தன்மையையும், அந்தர்யாமித்துவத்தையும், பார்ஸி மதம் அவனுடைய களங்கமற்ற தூய்மையையும், புத்த மதம் அவன் வரம்பிலா ஞானத்தையும், கிறிஸ்து மதம் அவனுடைய

அளக்கொணு அன்பையும், இஸ்லாம் மதம் அவன் சர்வ வல்லமையையும் சிறப்பித்துக்கூறுவதாக வேதாந்த சித்தாந்த சமரஸ சன்மார்க்க ஞானிகள் எடுத்துரைக்கின்றனர். இந்த உண்மையை உணர்வாரிடையே, மதப்பிணக்குகளும் பூசல்களும் சிறிதுமின்றி மதிப்பும் ஒற்றுமையும் ஏற்படுவதோடு, அன்னுர் எல்லா மதங்களையும் கையாண்டு, உண்மையின் பல முகங்களையும் உய்த்துணர்ந்து இறைவனை எளிதில் அடைவர். இதுவே சமீப காலத்தில் தென்னுட்டு வள்ளலார் ராமலிங்க சுவாமிகளும் வடநாட்டு ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸரும் சொந்த அனுபவத்தால் நமக்கு எடுத்துக்காட்டிய உண்மை. இது ஒரே காலத்தவரான அவர்களுடைய சரித்திரங்களிலும் ஞானேபதேசங்களிலும் பரக்கக்காணப்படும்.

## ஜீவசக்தி (Primary Force)

உடம்புகளுக்கு ஆதாரமாயிருக்கும் இரண்டாவது சக்தி, ஜீவசக்தி, அல்லது உயிர்ச்சக்தி, அல்லது ஆவி என்னப்படும். குண்டலினி சக்தியானது மகாமாயையைக் கலக்கி அங்கு சப்த உலகங்களையும் அவை யொவ்வொன்றிலும் தனித்தனியாக சப்த பூதங்களையும் படைத்தபோது அவற்றின் அணுக்கள் ஒன்றையொன்று தீண்டாமல் தனித்தனியே தாண்டவமாடிக்கொண்டிருக்குமர். அத்தாண்டவத்தின் வேகத்தை அளக்கக்கூடிய கருவிகள் நம்மிடம் இன்று எதுவுமில்லையென்று மேனுட்டு விஞ்ஞானிகளே கூறுகின்றனர்; அச்சலனம் ஒரு நொடிப்போது நின்று போமாயின் அந்நொடிப்பொழுதிலேயே அண்டமெல்லாம் மாயமாய் மறைந்து விடுமென்றும் அம்மேதையரே இன்று கூறுகின்றனர். இதனை நம்முடைய பண்டைய ஞானிகள், எடுத்தகால் ஊன்றுத, இமைப்போதும் நில்லாத இறைவன் தாண்டவமாக நமக்கு ஆலயங்கள் மூலம் கற்பித்தனர்; தூக்கிய திருவடியைக் கீழே ஊன்றுவாராயின் அப்போதே அண்டபிண்ட சராசரங்களெல்லாம் அழிந்து விடுமென்பதையும் அவர் கூறிவைத்தனர். அவ்வுண்மை இந்துக்களால் இன்று கைவிடப்பட்டு, அதில் நம்பிக்கையில்லாதிருந்த மேனுட்டாரால், தமது ஆராய்ச்சியில் புலப்படுவதாக நமக்கு எடுத்துரைக்கப்படுகின்றது. அவ்வளவு

இழிந்த நிலைக்கு இன்றைய இந்துக்கள் வந்து விட்டனர். இவ்-விதம் தாண்டவமாடும் அணுவின் உருவிற்கும், காலைத்தூக்கி நின்றாடும் சிவபெருமானுடைய உருவத்திற்கும் உள்ள ஒற்றுமை-கள் மேல்வரும் பாடத்திற் காட்டப்படும்.

இங்ஙனம் ஒன்றையொன்று தீண்டாது தலைவிரித்தாடும் அணுக்களினிடையே, இறைவனுடைய இரண்டாவது மூர்த்தத்தி-லிருந்து ஜீவசக்தியானது வெளிப்பட்டு சப்த உலகங்களிலும் பரவி வியாபிக்கும்; வியாபிப்பதோடு, அவ்வியாபகத்தின் பலனாக அங்கங்குள்ள அணுக்களினிடையே ஒரு கவர்ச்சியையும் வசீகர சக்தியையும் உண்டுபண்ணும். அதனால், அதுவரை தனித்தனியே இயங்கிவந்த சப்த பூதங்களுக்குள் பலவிதமான சேர்க்கைகளும் கலப்புகளும் புணர்ப்புகளும் ஏற்பட்டு, அண்டமெங்கும் தனு-கரண புவனங்கள் உண்டாகின்றன. எங்ஙனமெனில், ஆகாயத்தில் ஆக்ஸிஜன் (பிராணவாயு), ஹைட்ரஜன் (நீர்வாயு) என்ற இரு தனித்தனி வாயுக்களும் எங்கும் எப்போதும் நிறைந்திருக்கின்-றன. அவை ஒன்றையொன்று ஒட்டாது, அவற்றின் நுண்ணிய துகள்கள் தனித்தனியாகச் சுழன்று சலனப்பட்டு நிற்கும். ஆனால் ஜீவசக்தியின் கவர்ச்சி அங்கு வேலைதொடங்குமாயின், அவை யிரண்டும் ஒன்றையொன்று மோகித்துக் கலந்துகூடி இமை கொட்டு முன்னம் தண்ணீராக மாறிவிடுகின்றது. அவ்விதமே மற்றும் பலவகையான வாயுக்களும் அவற்றின் கலப்புகளும் நடைபெறுகின்றன. அம்மாதிரியே உலோக வர்க்கத்திலும் ஒருவன் பித்தளைப்பொடியையும் கந்தகத்தையும் ஒன்றாக விரவி எவ்வளவு நேரம் குலுக்கினாலும் அவை மயில் துத்தமாக மாறுவ-தில்லை. ஆனால் ஜீவசக்தியின் கவர்ச்சி ஏற்படும்போது அவை இரண்டறக்கலந்து புதியதொரு பொருளாகின்றது. அவ்வாறே ஸோடியம், குளோரின் இரண்டும் ஒன்றுகூடி நாம் உண்ணும் கறியுப்பாகின்றது. இந்த ஜீவசக்தியானது தன்னுடைய மோகன வேலையால் பலவகைப்பட்ட உலோகங்களில் ஒன்றையொன்று மணக்கச்செய்து அவற்றிலிருந்து உயிரணுக்கள் என்ற (Cells) அணுக்கிருமிகளையும், அக்கிருமிகளைப் பல்வேறு விதங்களிலும் கணக்கற்ற முறைகளிலும் ஒன்றையொன்று புணரச்செய்து, தாவரவர்க்கத்துள்ள மரம் செடி கொடிகளையும் அவற்றின் இலை

பூ காய் கனிகளையும், விலங்கினத்திலும் மக்களினத்திலும் பல-
வகைப்பட்ட உடம்புகளையும் அவற்றின் மெய் வாய் கண் மூக்குச்
செவிகளையும் எண்ணற்ற அகத்துறுப்புக்களையும் புறத்துறுப்புக்-
களையும் பெற்றெடுத்து, உலக அற்புதத்தை உண்டாக்கி விடுகின்-
றது. கொத்தனும் அவனுக்குத் துணையாகத் தண்ணீரும் இல்-
லாதபோது கல், மண், செங்கல், சுண்ணாம்பு முதலியவை குடிசை-
யாகாமல் கிடந்துவிடும். அம்மாதிரியே இந்த வியாபகசக்தியும்
அதன் வசீகரத்தன்மையும் இல்லாமல் ஒன்றும் உருப்பெறுவ-
தில்லை. அங்ஙனம் உருப்பெற்ற பின்பும் அதன் இடைவிடாத
வேலையின்றி அவையொன்றும் நிலைத்து நிற்பதுமில்லை; அதனால்
இது ஜீவசக்தியென்றும், காத்தற் சக்தியென்றும் அழைக்கப்படும்.
"விஷ்" என்ற சொல் வியாபகத்தன்மையைக் குறிப்பதால் அத்-
தன்மையுடைய இது விஷ்ணு சக்தியாகும்.

பிரளயத்தின் பின்னர் ஒருகால், அண்டபிண்ட சராசரங்-
களையும் அவற்றின் தனுகரண புவன போகங்களையும் படைக்கும்
பொருட்டுத் திருப்பாற்கடல் கடையப்பட்டது. ஆனால் மகா
விஷ்ணுவானவர் மாயையாகிய அத்திருப்பாற்கடலின் உள்ளும்
புறமும் வியாபித்திருக்காமல் அதன் மேலாக மாத்திரம் பள்ளி-
கொண்டிருந்தபடியால், விஷ்ணுவின் கவர்ச்சி சக்தியின்றி அங்கு
ஒன்றும் உருவாகவில்லை. அதன் மேல் அவர் ஆமையுருவெடுத்து,
அடிவரை புகுந்து வியாபித்த பின்னரே உருவங்கள் தோன்ற-
லாயின. அம்மாதிரியே மோகினி அவதாரமும் அதன் மயக்கு
முறைகளும் விஷ்ணுவுக்கே உரியனவாகக் கற்பிக்கப்பட்டிருக்-
கின்றன. திருப்பாற்கடலினின்றும் அமிர்தம் உண்டானபோது
அசுரரை மயக்க மோகினியாக வந்தவர் மகாவிஷ்ணுவே. கங்-
காளநாதர் தாருகாவனத்திற்குப் புறப்பட்டபோது அங்குள்ள
முனிவரை மயக்க வந்த மோகினியும் இவரே. பஸ்மாசுரன்
சிவபெருமான் தலையில் கைவைக்க வந்தபோது அவ்வசுரனை
மயக்க மோகினியாக வந்தவரும் அவ்விஷ்ணு பெருமானே.
மற்றும் பல மோகினி வடிவங்களும் விஷ்ணுவுடையனவே; அவ்-
வுரிமை அவருக்கேயுடையது. இவையெல்லாம் கூடார்த்த-
முடையவை; இவை பண்டு மாத்திரமல்லாமல் இன்றும் என்றும்
இயற்கையில் நடந்து கொண்டிருப்பனவாம். சாதாரண அறி-

யிற்கு எளிதில் விளங்கமாட்டாத இவை போன்ற உயர்ந்த இயற்கை உண்மைகளையும் நியதிகளையும் இவ்வாறு அறிகுறியாகப் புராணங்களில் புகுத்து வைத்தனர் அனுபூதிமான்களாகிய நம் பண்டைப் பெரியார்.

இறைவன் தன்மையிலுள்ள ஏழு கலைகள் போலவே இந்த ஜீவசக்தியிலும் ஏழு கலைகள் உள்ளன. அது மனித உடம்பிற் புகும்போது, ஒவ்வொரு ஆதாரத்தில் ஒவ்வொரு கலை மாத்திரமே மலர்ச்சியடைவதால் அந்த ஆதார கமலங்கள் வெவ்வேறு இதழ்களையுடையனவாகக் காணப்படுகின்றன. அது பின்னர் விளக்கப்படும். (முகப்புப் படம் பார்க்க.)

## பிராணசக்தி (Vitality)

நமது உடம்புகள் உயிர்வாழ்வதற்கு மூன்று சக்திகள் இன்றியமையாதனவென்று முன்னே கூறப்பட்டது அவற்றுள் முதலிரண்டும் குண்டலினியும் ஜீவசக்தியுமாம்; மற்ற மூன்றாவது சக்தி பிராணசக்தி (Vitality) என்னப்படும். இது ஜீவசக்தியினின்றும் வேறாகும். ஜீவசக்தி இறைவனிடத்திலிருந்து நேராக வருவது. பிராணசக்தியோ நமது சூரியன் மூலமாக உலகிற்கிறங்குவது. இளவெயில் கண்டவுடனே மனதிற்கு ஒரு மகிழ்ச்சியும், உடம்பிற்கு ஒரு ஊக்கமும் குதூகலமும் உண்டாவதை யாவரும் அறிவர்; ஆயினும அதற்குக் காரணத்தை அறிபவர் மிகச்சிலரே. சூரியனிடமிருந்து வெயிலும் சூடும் வெள்ளப் பெருக்கெடுப்பது போலவே பிராணசக்தி எனப்படுவதொன்றும் அங்கிருந்து ஓயாது சூரிய மண்டல முழுவதும் பரவிக்கொண்டிருக்கிறது. மற்ற இரு சக்திகளையும் போலவே இதுவும் சப்த உலகங்களிலும் வேலை செய்து கொண்டிருப்பினும், இங்கு கவனிக்கப்படுவது அதன் பூலோக வேலையே. இந்தப் பிராணசக்தி சில விதங்களில் மின்சார சக்தியை ஒத்திருப்பினும், அது மின்சார சக்தியல்ல. ஒளி, சூடு, மின்சாரசக்தி முதலியன சப்த பூதங்களை வெளிப்புறத்திலிருந்து வெகு வேகமாய் ஆட்டுகின்றன. அது ஒருவன் தொட்டிலை ஆட்டுவது போல்வது. ஆனல் பிராணசக்தியோ மனிதன் தானே தாண்டவமாடுவதுபோல அணுவின்

உள்ளிருந்தே அதனை ஆட்டுகின்றது. பிராணசக்தியை உறிஞ்சிய அணு பேய் பிடித்த மாதிரிக் கூத்தாடும். இந்த சக்தி, பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன் என்ற பஞ்சப்பிரா-ணன்களின் தொகுதியாகையால், பிராணசக்தியென்று அழைக்கப்படுகின்றது. இது சுவாசத்துடன் கலந்து உடம்பிற் சாரும்போது உடம்பிற்கு ஒரு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் கொடுத்து, பெருஞ் சுமைபோன்றிருக்கும் உடம்பைப் பஞ்சு போலாக்கித் துள்ளிக் குதிக்கவைப்பதால், இது பந்தத்தையழிக்-கும் சிவசக்தி யென்னப்படும்.

பிராணசக்தி சூரிய ஒளியினின்றும் வேறாயிருப்பினும் அந்த ஒளியுடன் கலந்தே உலகிற்கு வரும்; சூரிய ஒளியில்லாதபோது அது நமக்குக் கிடைப்பதில்லை. அதனால் அது வெயிலெரிக்கும்-போது அபரிமிதமாக நமக்கு வருவதும், மப்பு, மந்தாரம், மழை நேரத்திலும் இராக்காலங்களிலும் அங்ஙனம் வராமற்போவதும் ஆகும். இனி, மரம் முதல் மனிதன் ஈறாக உள்ள எல்லா உயிரினங்களும், தம் உயிர் வாழ்க்கைக்கு இரவும் பகலும் இடை-விடாது இதனை உட்கொள்ள வேண்டியிருப்பதால், நாமெல்-லோரும் இராக்காலங்களில் உபயோகிப்பது பகலில் சேமிக்கப்-பட்ட பிராண சக்தியையே. ஆவ்வாறு வரவின்றிச் செலவு மாத்திரம் செய்யுங்காரணத்தால் இரவு நேரம் ஆகஆகப் பிராண-சக்தியின் இருப்புக் குறைந்துகொண்டே வரும். அதனாலேயே அருங்காலையில் அனைவருக்கும் அயர்வும் அசதியும் ஏற்படுவது; நோயாளிகளுக்கு இரவில் நோய் அதிகப்படுவது; மரிப்பவர் பெரும்பாலோர் நடுயாமத்துக்குமேல் விடிவதற்குள் இறப்பது; முன்னிரவில் ஒரு மணிநேர உறக்கம் பின்னிரவில் இருமணிக்-கூறுக்குச் சமம் என்ற பழமொழியும் ஏற்பட்டது இளவெயில் காய்வதால் உடம்புக்குக் குதூகலம் உண்டாவதும் இதனாலேயே. இந்தப்பிராணசக்தி காற்றோடும் கலந்து நம் சுவாசத்துடன் உட்-புகுந்து இரத்தத்திற் சேர்ந்து அதற்கும் போஷிப்பைக் கொடுக்-கும். பிராணசக்தியை உட்கொண்டு ஆகாயத்தில் மிதக்கும் அணுக்கள், கடற்கரையில் உச்சிவெயிலில் நின்று பார்ப்போருக்கு மின்னொளி வீசும் மின்மினிகள்போலவும் தீப்பொறிகள்போலவும் நீர் மட்டத்திற்குமேல் வெகுவேகமாகச் சுழன்று திரிவது எளிதில்

புலப்படும்; பாலைவனத்திலும் மரம் மட்டையில்லாத வெம்பரப்பு நிலத்திலும் வேனிற்காலத்தில் இவற்றைச் சாதாரணமாகக்காணலாம். இந்தப்பிராணசக்திக்கும், அதை நமக்குக்கொண்டுவரும் சூரியவெளிச்சத்திற்கும், நமது அன்னமய பிராணமயகோசங்களுக்கும் உள்ள நெருங்கிய தொடர்பை நன்கறிந்தவர், சுகவாழ்விற்குச் சூரிய ஒளியாலாகும் உத்தம உதவியை இழந்துவிடமாட்டார்கள். பூமியிற்போலவே இது சப்த உலகங்களிலும் வேலைசெய்வதால், வெயில் நிதானமாயுள்ள நேரங்களிலும் நாடுகளிலும் உடம்புமாத்திரமன்றி மனம் இச்சையெல்லாமே சுறுசுறுப்பாயிருக்குமென்பதையும் அறியவேண்டும்.

இனி இம்மூன்று சக்திகளும், அதாவது குண்டலினியாகிய பிரம்மசக்தியும், ஜீவசக்தியாகிய விஷ்ணுசக்தியும், பிராணசக்தியாகிய சிவசக்தியும், பிராணமயகோசத்தையும் அதன் மூலம் அன்னமயகோசத்தையும் இயக்குகின்ற விதத்தை ஆராய்வோம். குண்டலினியானது முதுகுத்தண்டின் அடியிலுள்ள மூலாதாரத்திற்குள்ளிருந்து பொங்கியெழுந்து, அங்கு ஒன்றுக்குள்ளொன்றாக ஏழு சிமிழ்களை இட்டது போன்ற ஒரு நுண்ணிய ஏழடுக்கு அறைக்கூடொன்றை அமைத்து, அதன் வெளிக்கூட்டில் மாத்திரம் மந்தமான கனல்போலத் தகதகவென்று கொதித்துக்கொண்டிருக்கும். யோகியரல்லாத மற்றையோர் உடம்புகளில், உள்ளடுக்குகள் ஆறும் தொழிற்படாது உறங்கிக்கிடக்குமென்பது முன்னே கூறப்பட்டது. நம் போன்ற சாதாரண மக்கள் உடம்புகளில், மந்தமான இந்தச் சிறு கனல் முதுகுத்தண்டின் ஊடாக மேலேறிக் கணுவுக்குக் கணு பூங்காம்பு வழியாக ஒவ்வொரு ஆதாரத்திற்குட் இடைவிடாது சென்றுகொண்டிருக்கும். விஷ்ணுசக்தியாகிய ஜீவசக்தியோ உடம்புக்கு வெளியே இருந்து ஆதாரம் ஒவ்வொன்றினுள்ளும் ஒரே காலத்தில் வந்து புகுந்துகொண்டிருக்கும். அதுவும் இடைவிடாது நடந்து கொண்டேயிருக்கும். இவ்வாறாக இந்த இரண்டு சக்திகளும், அகத்திருந்து ஒன்றும் புறத்திருந்து ஒன்றுமாக வட்டமாகவிருக்கும் ஆதாரங்களின் மேல்மட்டத்தில் எதிர்த்துச் சந்தித்து, ஒன்றோடொன்று மோதி உராயவே, அந்த வேகத்தால் ஆதாரங்கள் யாவும் சக்கரங்கள் போலச்சுழலும். அப்போது அவை நீர்ச்சுழிகள் போலக் காணப்படும்.

ஜீவசக்தியின் ஏழுகலைகளில் ஒவ்வோர் கலை மாத்திரமே ஒவ்வோர் ஆதாரத்தில் விரியும்; உதாரணமாக மூலாதாரத்தில் விரிவது நாலுகாற் கலையாம். அது வண்டிச்சக்கரத்தின் நடுக்குடத்திலிருந்து கால்கள் பரந்து செல்வது போலவும், குறவன் தட்டு முடையும்போது அடியிடுவது போலவும், அக்கலை நான்கு கால்களாக விரியும் எஞ்சி நின்ற ஆறு கலைகளின் சக்திகளும் அக்குறவன் தட்டைச் சுற்றிமுடைவதுபோன்று இந்த நான்கு ஆர்க்கால்களுக்கு மேலும் கீழுமாக மாறிமாறி மிகவேகமாக ஓடும். அப்போது அந்த நீர்ச்சுழி போன்ற ஆதாரம் தனித்தனி இதழ்களையுடைய நான்கிதழ்ப் பூப்போலக்காணப்படும். (முகப்புப் படம் பார்க்க.) மூலாதாரத்தில் நாலுகாற் கலையும், மணிபூரகத்திலும் குறியடியிலும் ஆறுகாற்கலையும், உந்தியில் பத்துக்காற்கலையும், நெஞ்சில் பன்னிருகாற்கலையும், கழுத்தில் 16 காற்கலையும், புருவ நடுவில் 96 காற்கலையும் இவ்விதம் விரிவதால், அந்தந்தச்சக்கரங்கள் அத்தனை அத்தனை இதழ்க்கமலங்களென்று கூறப்படுகின்றன. மேற்சொன்ன இரு சக்திகளின் சந்திப்பு, உடம்புகள் உயிரோடிருக்கிறவரை இரவும் பகலும் இடைவிடாது நடந்து கொண்டிருப்பதால் ஆதாரங்கள் எப்போதும் சுழன்றுகொண்டேயிருக்கும். இந்தப் பிணைப்பு உடம்பில் நின்றுவிடுமானால், சக்கரங்கள் சுழல்வதும் நின்று புல்லுடம்பும் உடனே இறந்துவிடும்; அது உலகில் நின்றுவிடுமானால், அந்த நொடியிலேயே உலகமும் அங்குள்ள எல்லாத் தோற்றங்களுமே மாயமாய் மறைந்துவிடுமென்று நம் பண்டை நூல்கள் கூறுகின்றன.

குண்டலினி பெண் தன்மையுடையது, அம்மையெனப்பெயர் பெறுவது; ஜீவசக்தி ஆண் தன்மையுடையது, அப்பனெனப் பெயர் பெறுவது. இவ்விரண்டிற்கும் இடைவிடாது நடந்து கொண்டிருக்கும் திருமணத்தாலேயே உலகத்தில் தனுகரண புவன போகங்களெல்லாம் தோன்றுவதும் நிலைத்திருப்பதுமாம். அதனை அறிகுறியாக விளக்கும் பொருட்டே ஆலயங்களில் பள்ளியறை கூட்டுவதும் விழாக்கொண்டாடித் திருக்கல்யாணம் நடத்துவதும். இயற்கையில் ஓயாது நடைபெற்றுக்கொண்டிருக்கும் இந்த உண்மை நெற்றிக்கண்ணுக்கே புலப்படுவது; நெற்றிக்கண் திறக்காதவருக்கு அதைத் திறக்கவேண்டிய முயற்சியில்

அவரை ஊக்கப்படுத்தும் பொருட்டே ஆலயங்களில் நாள்-தோறும் இது நமக்கு நினைவூட்டப்படுகிறது. அந்த முயற்சியில் ஈடுபடாத, அந்த இயற்கை உண்மைகளை நேரில் காண ஆவலு-மில்லாத இன்றையச் சிற்றின்பக் கோட்டிகொண்ட மக்கள், இறைவனையும் தம்மைப்போலவே கருதி, அவனுக்கும் சிற்றின்ப விழைவா என்று ஏளனஞ் செய்கின்றனர். இந்த இரு சக்திகளின் புணர்ப்பால் ஏற்படும் சில நுணுக்கங்கள் மேற்பாடத்தில் கூறப்-படும். அவை இந்து மதத்தின் பெருமையையும், அதனை அமைத்த பண்டைய ஞானிகளின் சூட்சும அறிவையும் கருணைத் திறத்தை-யும் எடுத்துக் காட்டும்.

இனி, இந்த இரு சக்திகளும் எதிர்த்து உரசுவதால் ஏற்படும் இரண்டாவது பலன், பிராண உடம்பில் ஒரு நரமபொழுக்கு: அதாவது ரத்தக்குழாயில் ரத்தம் ஓடுவதுபோல நரம்புகளைச்-சுற்றிப் பிராணமய கோசத்தின் அணுக்கள் ஒரு குழாய்போல ஓடும் இரத்த ஓட்டத்தால் அன்னரசம் ரத்தத்துடன் சென்று உடம்பின் தசை முதலியவற்றை ஊட்டுகின்ற மாதிரி, இந்தப் பிராண ஓட்டத்தால் பிராணமய கோசத்தின் தாதுக்கள் பிராண உடம்பின் பல பாகங்களுக்குஞ் சென்று, அவற்றைப் பழுது பார்க்கவும் புதுப்பிக்கவும் உதவுகின்றன. அவ்வேலைக்கு உறு-துணையாக நிற்பது இறைவனுடைய மூன்றாவது சக்தியாகிய பிராணசக்தி என்ற சிவசக்தியாம். இது இரண்டாவது சக்தி-யைப்போன்று எல்லா ஆதாரங்களிலும் வந்து புகுவதில்லை. குண்டலினிசக்தி மூலாதாரத்துள் மாத்திரமே புகுவதுபோல, சூரிய ஒளியிற் கலந்துவரும் இதுவும் சுழன்று கொண்டிருக்கும் மண்ணீரல் ஸ்தானத்துள் மாத்திரமே புகும். புகுந்தவுடன் அந்த ஆதாரத்தால் இது பஞ்ச வாயுக்களாகப் பிரிக்கப்பட்டு, அவ்வாயுக்கள் ஒவ்வொன்றும் குறிப்பிட்ட சக்கரங்களை நோக்கிச் சென்று வெவ்வேறு வேலைகளைச் செய்யத் தொடங்கும். இப் பஞ்ச வாயுக்கள் பிராண, அபான, சமான, உதான, வியான வாயுக்கள் என்றழைக்கப்படும்.

இந்த ஐந்து பிரிவுகளுள் முதலாவது, பிராணவாயு அது மஞ்சள் நிறங்கொண்டது. அது மண்ணீரல் சக்கரத்திலிருந்து

இருதயச்சக்கரத்துட்சென்று இருதயம், சுவாசப்பை இவற்றின் வேலைகளை நடத்தும். (முகப்புப் படம் பார்க்க) இந்தப் பிராண-வாயுவின் உதவியினாலேயே நாம் சுவாசம் விடுவதும நமது இருதயம் ரத்தத்தை உடம்பு முழுவதும் ஓட்டுவதுமாம். பிராண-வாயுவின் குறைவிருந்தால் அவருக்கு இருதய நோய், காசநோய் முதலியன உண்டாகும் இந்தப் பிராணவாயு மேலே சொன்ன பிராண சக்தியல்ல, அப்பிராண சக்தியின் ஒரு பிரிவேயாகும்.

பஞ்ச வாயுக்களில் இரண்டாவதான அபானவாயு கிச்சிலிச் சிவப்பு நிறங்கொண்டது. அது மூலாதாரத்துட்சென்று மலம் ஜலம் விந்து இவற்றைக்கழிக்கும். இதன் குறைவிருப்பவரிடம் மலக்கட்டு, மூத்திரநோய்கள், பேடித்தன்மை முதலியவை காணப்படும்.

மூன்றாவது சமானவாயு பச்சை நிறங்கொண்டது. அது நாபிச்சக்கரத்தின் வழியாக வேலை செய்து ஜீரண சக்தியைக் கொடுக்கும். அஜீரண நோய்களுக்குக் காரணம் இதன் குறைவே. இந்திர நீலம் போன்றது நான்காவதான உதானவாயு இது நீலத்-தடாகத்தில் நிலவொளி வீசுவதுபோன்று, திருநீலகண்டம் என்ற பெயருக்குக் காரணமாய் நிற்பது. இது கழுத்துச் சக்கரத்தை-யடைந்து குரல் நயம், அதன் பலம், பேச்சுவன்மை முதலியவற்-றைக்கொழிப்படுத்தும். ஐந்தாவதாகிய வியானவாயு என்ற இளஞ்சிவப்பு நிறங்கொண்ட வாயுவே முன்சொன்ன நரம்-பொழுக்குடன் உடம்பு முழுவதும் ஓடுவது. இது, ரத்தக் குழாய்களில் ரத்தோட்டம்போல, இளஞ்சிவப்பு (ரோஸ்) நிறங்-கொண்ட பிராண ஓட்டமாக நரம்புதோறும் ஓடிக்கொண்டிருக்-கும். இந்த வியானவாயுவே நரம்புகளைப் போஷிப்பது. இதன் குறைவினால் நரம்புத்தளர்ச்சி, உடம்பில் எய்ப்பு, இளைப்பு, அசதி முதலியவை ஏற்படுவதோடு, அக்குறைவு மற்ற நான்கு வாயுக்-களின் பூரண வேலைக்குத் தடையாகவும் நின்று உடம்பில் பலபல நோய்களை உண்டுபண்ணும்.

திடகாத்திரமுள்ள மனிதன் தன் தேவைக்கு அதிகமாகவே இந்த வியானவாயுவை உடம்பில் உற்பத்தி செய்கின்றான். அவ-

னுக்கு உபயோகப்பட்டதுபோக எஞ்சிய வியானவாயு உடம்பின் மயிர்க்கால்கள் வழி வெளியே விசிறிவிடும். குளிரினால் உடம்பு மயிர்க்கூச்செரியும்போது உடம்பெங்கும் உரோமம் சிலிர்த்து விரைப்பாக நிற்பதுபோல, இந்த வியானவாயு கதிர்-கதிராகச் சன்னக் கம்பிகள்போல உடம்புமுழுவதிலுமிருந்தும் வெளிச்செல்லும். இது நெற்றிக்கண்ணுக்குப்புலப்படும் ஆரோக்கியமில்லாதவனுடைய உடம்பில், இக்கதிர்கள் விரைப்பாக நிற்பதற்குப் பதிலாக விளைந்தநெற்கதிர் வயலில் மடங்கிக்கிடப்பது-போன்று மடிந்துதொங்கும். (படம் பக்கம் 97). நெற்றிக்கண் பார்வைக்கு நோயின்தன்மையும் நோய்வாய்ப்பட்ட உறுப்பும் இதிலிருந்து எளிதில் விளங்கும். ஆரோக்கியமுள்ளவர் வெளிவிடும் வியானவாயுவானது, நோயாளிகளுக்கு அசை போடப்பட்ட உணவுபோல (Predigested food) உதவுகின்றது; அது அங்ஙனம் பக்குவப்பட்டிருப்பதால், நோயாளியின் உடம்பில் எளிதில் சார்ந்து அவனுக்குப் பயன்படுகிறது. சில நோயாளிகள் ஆரோக்கியசாலிகளின் அண்டையிலிருக்கும்போது அவர்களுடைய பிராணசக்தியை அளவுக்குமிஞ்சி உறிஞ்சிவிட-வல்லவர்; அப்போது அந்த ஆரோக்கியவான்களுக்கு ஒரு தற்கால அசதியும், இவ்வாறு அடிக்கடி நிகழுமாயின் அவருக்கு நோயும் உண்டாகும். கிழவர் பக்கத்தில் சிறுவர் இராக்காலங்-களில் வழக்கமாய்ப் படுத்துறங்குவாராயின் அச்சிறுவருக்குத் தேகமெலிவும் நோய்களும் இக்காரணத்தால் ஏற்படும். வயது-சென்றவர் இரண்டாவது மூன்றாவதுமுறையாகச் சிறு பெண்களை மணந்து, அவரண்டையிலேயே பதிவாக உறங்குவாராயின், அப்-பெண்களுக்குக் காசநோய் முதலியனகண்டு அவதிப்படுவர். இதற்குக் காரணமும் அப்பெண்களுடைய பிராணவாயு அளவுக்கு-மிஞ்சிக் கணவரால் உறிஞ்சப்படுவதே.

பஞ்சவாயுக்களைக்கொண்ட இந்தப் பிராணசக்தி மனிதர்-மாத்திரமன்றிப் பிராணிகள், மரங்கள், செடிகள், கொடிகள், ஆகிய எல்லாமே உயிர்வாழ்வதற்கு இன்றியமையாததாயிருக்-கின்றது. அவற்றுள் சிலவகை மரங்கள் தாம் பக்குவப்படுத்திய வியானவாயுவைச் சிறிதளவே உட்கொண்டு, எஞ்சியிருப்பதை ரோஸ்நிறப் புகைப்போலப் பெருவாரியாக வெளியே கக்கிப் பரப்-

பிக்கொண்டிருக்கும். அம்மரங்களில் முக்கியமானவை, அரசின் இனமாகிய கல்லால், அரசு, பைன், யூக்கலிப்ட்டஸ் முதலியவை. நரம்புநோயாளிகள் இம்மரங்களை அண்டியிருப்பதால், அவற்றி-லிருந்து வெளிச்செல்லும் இந்த வியானவாயு அவருடம்பிற்சார்ந்து அவரைக் குணப்படுத்தும். இந்த உண்மையைக்கொண்டே நம்-நாட்டில் அதிகாலையில் அரசுசுற்றும் வழக்கமும், மேல்நாடுகளில் நரம்புநோயாளிகளைப் பைன்மரக்காட்டில் குடியிருத்திச் சுகப்-படுத்துவதும் ஏற்பட்டிருக்கின்றன. நரம்புமாத்திரம் வலுவுடை-யதாயிருக்குமாயின், மற்ற அநேகமான நோய்கள் அவருக்கு எளிதில் நீங்கிவிடும்.

## பிராண சக்தியின் பஞ்சவாயுக்கள்.

| வாயு | நிறம் | மண்ணீரலிலிருந்து நோக்கிச்செல்லும் சக்கரம். | வேலை |
|---|---|---|---|
| 1. பிராணன் | மஞ்சள் | இதயம் | இரத்தோட்டம், சுவாசம். |
| 2. அபானன் | கிச்சிலிசிவப்பு | குதம் | மலம், ஜலம், விந்து பாகம்பண்ணல். |
| 3. சமானன் | பச்சை | நாபி | ஜீரணம். |
| 4. உதானன் | கருநீலம் | கழுத்து | குரல், பேசசு. |
| 5. வியானன் | இளஞ்சிவப்பு | மண்ணீரல் | நரம்பு, மூளைபண்படுதல். |

இதுவரை விளக்கப்பட்ட மூன்று சக்திகளுள், ஜீவசக்தியின்றி உடம்பிற்கு உருவமில்லை; குண்டலினியின்றி உடம்பிற் சூடில்லை; பிராணசக்தியின்றி உடம்பிற்கு இயக்கமில்லை, அதாவது ஆட்ட-ஓட்டங்களில்லை. இவையே அவற்றின் பொதுக்குணங்கள். ஆனால் அவை மூன்றும் ஒன்றுசேராதபோது உடம்பேயில்லை.

மூளையின் வலிவும் மெலிவும் புருவநடுவிலுள்ள நெற்றிச்சக்-கரத்தைப்பொறுத்தது. பிரம்மரந்திரத்திலுள்ள ஆயிர இதழ்க்-கமலமாகிய சகஸ்ராரம் மிகமிக முக்கியமான ஒரு ஆதாரமேயாயி-னும் அதன் வளர்ச்சியும் மலர்ச்சியும் மற்ற ஆறு ஆதாரங்களின்

விரிவைப்பொறுத்திருப்பதால், அது ஆறோடு ஏழாவதாகச்சேர்க்கப்படுவதில்லை. ஆயினும் அது அனைவற்றிற்கும் தலையான ஏழாவது ஆதாரமே.

இந்தச் சக்கரங்களின் பூரணஅளவுள்ள வர்ணப்படங்களை வங்கப்பணிமுனிவர் யோகப்பார்வையால் ஆராய்ந்தெழுதியுள்ள "சக்கரங்கள்" (Chakras. T. P. H. Adyar) என்ற நூலிற் காணலாம். அப்படங்களிலிருந்து, பரமயோகியாகிய சிவபெருமானுக்கு இடப்பட்டிருக்கும் நீலகண்டன், முக்கண்ணன், நெற்றிக்கண்ணன், அர்த்தநாரி என்ற பெயர்களுக்குப் பொருள்தெரியவருகின்றது. கழுத்துச்சக்கரம் இந்திரநீல மின்னல்போலவும், நீலத்தடாகத்தில் நிலவொளிபோலவும் சொக்கவெள்ளிக் கதிர்கள்போலவும் இலங்குகின்றது. புருவநடுவிலுள்ள சக்கரமே மூன்றாவது கண்ணாகிய நெற்றிக்கண்; அதில் ஒருபகுதி கருநீலமாகவும் மற்றப்பகுதி செம்பொன்போலவும் ஒளிவீசுகின்றது. கருநீலம், தேவியினுடைய நிறமும் பெண்தன்மையுடைய சக்தியுமாகும்; செம்பொன்,பொன்னார்மேனியன் சிவபிரான் நிறமும் ஆண்தன்மையுடைய சக்தியுமாம்; யோகீச்வரனுக்கு அர்த்தநாரி என்ற பெயருண்டாயதற்குப் பலகாரணங்களுள் இது ஒன்று. பிரம்மரந்திரப்படம் ஆலயமூர்த்திகளுக்கமைந்திருக்கும் மூன்றடுக்குக் கிரீடம்போலவே காணப்படுகின்றது. நாடகமேடைகளிலுங்கூட நம்நாட்டுக் கிரீடங்கள் மற்றநாட்டுக் கிரீடம்போன்றிருப்பதில்லை; அதற்குக் காரணம் நம் யோகியர், நெற்றிக்கண்ணால் பூரணபுருஷர் தலைமீது கண்ட இந்த இயற்கைக்கிரீடமாகிய சகஸ்ராரத்தின் காட்சியேயாகும் அவ்வடிவத்தையே அவர்கள் செயற்கையிலும் உருவகப்படுத்தியுள்ளனர். மூர்த்திகளைச் சுற்றியுள்ள பிரபைகள் அவர்கள் சூட்சும உடம்பைக் காட்டுவன; பிரணவத்தைக் குறிப்பனவுமாம்.

மக்கள் பெரும்பாலாருக்கு முதுகுத்தண்டிலுள்ள இடை, பிங்கலை, சுழுமுனைநாடிகள் திறந்திருப்பதில்லை; அதனால் குண்டலினியானது முதுகுத்தண்டின் நடுவாகவே மேலேறவேண்டியதாயிருக்கின்றது. முதுகுத்தண்டிலுள்ள களங்கத்தால், மேற்செல்லுவதைவிட அதற்குக் கீழ்நோக்கிச்செல்வது எளிதாயிருப்பதாலும், மானிடர் பன்னெடுங்காலமாகச் சிற்றின்ப முயற்சியிலேயே ஈடு-

பட்டிருப்பதால் அந்தப் பெரும்பழக்கத்தாலும், இந்த சக்தி அதிகமும் கீழ்நோக்கிச் சென்று குறியடியிலிருக்கும் சுவாதிஷ்டானச் சக்கரத்தைத் தூண்டுகிறது. அந்தச் சக்கரமே சிற்றின்ப ஸ்தானமாகையால் அது காரணமாக அவனது சிற்றின்ப உணர்ச்சிகளும் இச்சைகளும் அதிகப்படுகின்றன; அவனுடைய நல்லொழுக்கத்திற்கும் இடையூறு ஏற்படுகின்றது. இதைக்கூடியவரை தடுக்கும்பொருட்டே பண்டைக்காலத்தில் மக்கள் அரைநாண் கட்டிக்கொள்வது. இப்போது அது கௌபீனம் கட்டுவதற்கென்றும், கௌபீனம் கட்டாதவருக்கும் பெண்களுக்கும் அது அவசியமில்லையென்றும் கருதப்படுகின்றது. ஆனால் பத்துநாட் கைக்குழந்தைக்குக் கோமணங்கட்டுவது எங்கும் வழக்கமில்லை. ஆயினும் நமக்குள் பிள்ளைகளுக்குப் பெயரிடும்போது அரைநாண் கட்டுவது ஒரு முக்கியமான கிரியையாகக் கொண்டாடப்படுகிறது. காரணம் என்னவெனில்,நாமகரணம் என்ற ஸம்ஸ்காரம் செய்யும்போது அக்கிரியையால் உச்சி, நாபி, மூலாதாரம் முதலிய சக்கரங்கள் சிறிதளவுக்குத் திறக்கப்படுகின்றன. அப்போதுண்டாகும் குண்டலினிக்கிளர்ச்சி அப்போதும் அதன் பின்னரும் கீழ்நோக்கிச் செல்வதைத் தடுக்கும்பொருட்டே, அபிமந்திரிக்கப்பட்ட அரைநாண், பஞ்சலோகத்தாயத்து செப்புக்காசு திறவுகோல் இவற்றுடன், இடுப்பில் கட்டப்படும். அது உண்மையாகவே அங்ஙனம் தடைசெய்யவல்லதென்பதை மெஸ்மரிஸம், ஹிப்னட்டிஸம் முதலிய வசீகரவித்தைகள் கற்றவர் நன்கறிவர் அம்மாதிரியே சிறு தெய்வங்கள், பேய் பிசாசுகள், திருஷ்டிதோஷங்கள் முதலியவற்றினின்றும் குழந்தையைக் காப்பாற்றும்பொருட்டே அபிமந்திரிக்கப்பட்ட காப்புகளை அன்று குழந்தைகளுக்கணிவது. இன்று இந்தக்கிரியை பாட்டன் பாட்டிமார், மாமன் மாமிமார், இவரிடமிருந்து எதிர்பார்க்கப்படும் பொன் வெள்ளி ஆபரணங்களுக்காகவே நடத்தப்படுகின்றது இக்கிரியையின் அடிப்படை உண்மை மறந்துவிடப்பட்டமையால், அக்காப்புகளை முறைப்படி அபிமந்திரிப்பது இன்று நின்று போய்விட்டது. மின்சார சக்தியை நடத்துவதற்கு எல்லாக்கம்பிகளும் உபயோகமாவதில்லை. அம்மாதிரியே மந்திர சக்திகளைத் தம்மிடத்து ஏற்பதற்கும் அவற்றை வீண்விரயமாகாமல் சேமிப்பதற்கும் பொன் வெள்ளி உத்தமமானவை; அல்லாதபோது பட்டுநூலும் மஞ்சள் தடவிய

பருத்திநூலும் போதுமானவை. இவைகள் அரைநாணுக்கும் காப்புக்குமே உபயோகப்படுத்தப்படலாம். கோமணமின்றியும், இடுப்பைச்சுற்றி உத்தரீயம் கட்டிக்கொள்ளாமலும், சந்தியாவந்தனம் முதலிய அநுஷ்டானங்களும் ஆலய தரிசனமும் செய்யலாகாதென்ற விதியும் மேற்கூறிய உண்மையைப்பற்றியதே.

சக்கரங்களைத் தூண்டுவதான கிரியைகளிலெல்லாம் இவ்விதமான விதிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. சுதந்திரச் சிற்பவழிபாட்டில்(Freemasonry) உடம்பிற் சில முக்கியமான சக்கரங்கள் ஊக்கப்படுத்தப்படுகின்றன. அதனால் அதற்கு உரியதான உடையொன்று அங்கு விதிக்கப்பட்டிருக்கின்றது. அது ஒரு அரைநாணும் அதில் ஒருசாண் சவுக்கமான பட்டம் அல்லது துணித் தொங்கல் ஒன்றுமாம். இந்த (Apron) மேல்துணியில்லாமல் வேறு எத்தனை உடைகள் ஒருவன் அணிந்திருந்தாலும், அவன் ஆலயத்துள்ளே செல்ல அனுமதிக்கப்படமாட்டான்; இத்தொங்கல் ஒன்றைமாத்திரம் அணிந்து மற்றப்படி அவன் நிர்வாணியாக இருந்தாலுங்கூட அவனைத் தடுக்க யாருக்கும் அதிகாரமில்லை. இப்போது அக்கயிற்றின் உண்மையைப் பெரும்பாலான சிற்பிகள் அறிவதில்லை. ஆயினும் அது பண்டைக்காலத்தில் நன்கறியப்பட்டிருந்தது; பண்டைய எகிப்தியர் அத்தொங்கட்டத்தைவிட அரைநாணையே முக்கியமாகக் கொண்டாடிவந்தார்களென்பது ஆராய்ச்சியிலும் அவர்கள் சிலைகளிலிருந்தும் சித்திரங்களிலிருந்தும் துலங்குகின்றது.

தக்கார் கைப்படாதபோது யோகசாதன முறைகள் உலகிற்குப் பெருங்கேட்டை விளைவிக்குமாதலால், பண்டைக்காலத்தில் அவை மிகமிக அந்தரங்கமாக வைத்துப் பாதுகாக்கப்பட்டுவந்தன. ஒழுக்கத்திலும் துறவிலும் மேம்பட்ட பக்குவான்மாக்களுக்கு மாத்திரமே அநுபவ ஞானிகளால் அவை கற்பிக்கப்பட்டுவந்தன. அப்போது குறியடியிலிருக்கும் சுவாதிஷ்டானச் சக்கரம் இரண்டாவது சக்கரமாகக் கையாளப்பட்டது. ஏனெனில் பிரவர்த்திமார்க்கத்தில் இருக்கும்போது அது நன்கு ஊக்கப்பட்டு மற்றச் சக்கரங்களைவிட அதிகமாக விரிவடைந்திருக்குமாகையால், அதனைப் பூரணநிலைக்கு மலரச்செய்வது எளிதானகாரியமாயிருந்தது.

சாதகர்கள் ஒழுக்கத்திலும் துறவிலும் உயர்ந்தோராயிருந்தபடி-யால், அவர்களுக்கு அதனுல் கேடில்லாதிருந்தது. பிற்காலத்தில் அரைகுறை அநுபவம்பெற்ற யோகப் பயிற்சியாளர், தன்னல இச்சையால் யாதொரு வரையறையுமின்றிப் பக்குவம்பெருத மக்களுக்கும் இவற்றைப் புகட்டவே, அதனுல் அளவற்ற கேடுகள் உலகிற்பெருகி, அதுகாரணமாக அத்லாந்திக் மகா சமுத்திரத்தில் இருந்த ஒரு பெரிய கண்டமே கடலில் இறைவனுணையால் அமிழ்த்தப்பட்டதென்ற பரம்பரையை ப்ளேற்ரே (Plato) முத-லிய ஞானிகள் கூறுகின்றனர். நம் நாட்டில் நடமாடும் அசுரசம்-மாரக் கதைகள் இவ்வுண்மையை எடுத்துக்காட்டுவனவாகும். அதனுல் இன்று அச்சக்கரம் வாமமார்க்கத்தைச் சேர்ந்ததாகக் கருதப்படுகின்றது; அதற்குப் பதிலாக மண்ணீரலிலுள்ள நாபி-கமழ்ச் சக்கரமே, தட்சிணமார்க்கத்தைச் சேர்ந்த வித்தகச் சித்தர் கணத்தவரால் இன்று கையாளப்படுவது.

இன்றைய அத்லாந்திக் மகாசமுத்திரம் பல்லாயிரம் ஆண்டு-களுக்குமுன்பு கடலாயிராமல் ஒரு பெருங் கண்டமாக இருந்த-தாகவும், அது பின்னர் கடல்கொள்ளப்பட்டு அழிந்துபோன-தாகவும், அதைப்பற்றிய வரலாறுகளை எகிப்துநாட்டு ஞானியர் தமக்கு விளக்கியதாகவும், பளேற்ரோ என்ற கிரேக்க ஞானியர் கூறுகின்றனர். செந்தமிழ் நாடாயிருந்த குமரிநாடும் அக்காலத்-திருந்ததே. அப்பெருங்கண்டத்தின் தலைநகரும், அதைப்பின்பற்-றிக் குமரிநாட்டின் தலைநகரும், செம்பொன்னுலாய கோட்டைக் கதவுகளைக்கொண்ட சிறப்புப்பெற்றிருந்தமையால், அத்தலைநகர்-கள் கபாடபுரமென்று அழைக்கப்பட்டனவாம். தற்காலத்துச் சீன, ஜப்பானிய, திராவிடமக்களின் முன்ளுேராகிய இந்த அத்-லாந்தியர் மிக மேலான நாகரிகத்துடன் வாழ்ந்துவந்தனர். அவருள் நிலவிய யோகமுறையில் குய்யத்தினடியிலுள்ள சுவா-திஷ்டானச் சக்கரமே இரண்டாவது ஆதாரமாயிருந்துவந்தது. சுவாதிஷ்டானம் வீரியத்திற்குரிய ஆதாரம். வீரியத்தை விருத்தி-பண்ணி விந்துவைக்கட்டி மேலே மூளைக்கேற்றவல்லவருக்கு அதி-சயிக்கத்தக்க பலவித வல்லமைகள ஏற்படுவது இன்றும் எளிதில் காணக்கூடியது. காமஇச்சையைக் கொன்று விந்துவைக் கட்டி அதனை முதுகுத்தண்டு, நரம்புகள் வழியாக மூளைக்கு ஏற்ற-

வேண்டுமென்பதைக் குறிப்பதே ஆலயத்திற் பலிபீடமும் மனித உடம்பில் அதற்கு நேரான குறியடி ஆதாரமும், அவற்றை ஒட்டி-நிற்கும் கொடிமரமும் முதுகுத்தண்டுமுமாம். அவ்விதம் பலியிடு-வதற்குப்பதிலாக, செல்வச்செருக்கால் அம்மக்கள் அதனை அளவி-லடங்காச் சிற்றின்ப நுகர்ச்சிக்கு அடிப்படையாக்கவும், அதனால் வாமமார்க்கம், தாந்திரீகம், கருத்தொழில், சூனியவித்தை முதலியன பெருகி நாடெங்கும் அசுரத்தன்மை நிறைந்துவிடவே, இறைவனாணையால் அந்நாடு கடலுக்குள் அமிழ்த்தப்பட்டது. இந்-தப் பிரளயம் கி. மு. 9564-ல் நடந்ததாக நெற்றிக்கண் ஆராய்ச்சி-யால் தெரியவருகின்றது. இனியும் அந்த ஆபத்து நேராவண்ணம் தட்சிண மார்க்கிகளாகிய வித்தகச் சித்தர்கள் மணிபூரக ஸ்தா-னத்தையே இன்றைய இரண்டாவது ஆதாரமாக உபயோகித்து வருகின்றனர்.

## பிராண உடம்பைப் பேணும் முறை.

பிராண உடம்பு தனி உடம்பல்லவென்றும் அன்ன உடம்-பின் நுண்ணிய பாகமேயென்றும் மேலே கூறப்பட்டிருக்கின்றது. அதனால் அன்ன உடம்பிற்குரிய விதிகளனைத்தும் பிராண உடம்-பையும் பாதிப்பனவாம். தமோகுண ரஜோகுண ஆகாரங்கள் அன்னமய கோசத்தைப்போலவே பிராணமய கோசத்தையும் இழிவான நிலையிலேயே வைத்திருக்கும். பருவுடம்பிற்குச் சத்துவ-குண ஆகாரத்தையே ஊட்டி, அதனை எப்போதும் சுத்தமாகவும் வைத்திருப்பின்; பிராணமய கோசமும் நன்கு பண்பட்டு, சாதா-ரண மக்களுடைய ஐம்புலன்களாகிய மெய் வாய் கண் மூக்குச் செவிகளுக்குப் புலப்படாத பல நுண்ணிய உணர்ச்சிகளும் நிறங்-களும் சுவைகளும் வாசனைகளும் ஒலிகளும், அம்மனிதருக்குப் புலப்படும். அவை மனத்திற்கு மிகுந்த மகிழ்ச்சியையும் அறி-விற்கு நல்ல கூர்மையையும் கொடுக்கும். அத்துடன், இந்தப் பிராண உடம்பிலுள்ள சக்கரங்களை ஊக்கப்படுத்தி அவற்றின் மூலம் அறிவு, உணர்ச்சிகள் இவற்றின் கூர்மைகளை அதிகப்-படுத்துவதற்காகவே, பொதுமுறையாக ஆலயவழிபாடும், சிறப்பு முறையாக சந்தியாவந்தனம், ஆன்மார்த்த பூஜை முதலிய சமயாநுஷ்டானங்களும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. சந்தியா-

வந்தனம் வேதமுறை, ஆகமமுறை என இருவகைப்படும். இந்த சந்தியா காலங்களை அநுசரிக்க ஒருவன் உரிமை பெறவேண்டு-மாயின், அவனுக்குச் சில தீக்ஷைகள் செய்யப்படல் வேண்டும். வைதிகமுறைக்கு அது உபநயனச் சடங்காகும்; ஆகமமுறையில் சைவசமயிகளுக்கு ஏற்பட்டவை சமயம், விசேஷம், நிர்வாண-மென்ற மூன்று தீக்ஷைகளாம். மனிதனுடைய உடம்புகள் ஸ்தூல-மாயினும் சூக்ஷ்மமாயினும், அவையெல்லாவற்றிற்குமே இன்ப வாழ்க்கைக்கு இன்றியமையாத இருவிதிகள், அழுக்குப்போக்-கலும் ஆகாரம் ஊட்டலுமாம். மனிதனுடைய நுண்ணுடம்பு-களின் பயிற்சிக்கும் வளர்ச்சிக்குமாக ஏற்பட்டுள்ள இந்த தீக்ஷை முறைகளிலும், இந்த இரண்டு விதிகளும் இடம்பெறுகின்றன. பருவுடம்பின் அழுக்கைப் போக்குதற்கு நீரில் முழுகுதலும் உடம்பைக் கழுவுதலும் உள்ளனபோன்று, நுண்ணுடம்புகளின் பலவித மலங்களைப் போக்குதற்கு ஆசமனம், மந்திரஸ்நானம், அகமர்ஷணம் முதலியவைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. தொடுமிடந்தொடுதல், திருநீறு தரித்தல், அங்கநியாசம் முதலியவை ஆதாரங்களைச் சிறிதுசிறிதாக விரியவைப்பதற்கு ஏற்பட்டவை. அதனாலேயே அவற்றைச் செய்யும்போது ஆதாரங்கள் ஒவ்வொன்-றாகத் தொடப்படுகின்றன. இவையனைத்தும் முறைப்படி மந்திரம் முத்திரை பாவனைகளுடன் செய்யப்படல்வேண்டும் இவ்விதம் தூலசூக்ஷ்ம உடம்புகளைப் பேணுவது இறைசேவைக்கே யென்-பதை உணர்த்துவன சந்தியாவந்தன முடிவில் வரும் காயத்திரீ ஜெபம், தர்ப்பணம், சூரியோபஸ்தானம், ஜபநிவேதனம் ஆகியவை. அதனால் இக்கிரியைகள் சிற்றின்பத்திற்காகவன்றிப் பேரின்ப நெறிக்கு அடிப்படையாகவே கருதப்பட்டனவென்பது தெரிய-வரும்.

குழந்தைகளுக்குக் கால் கை முதலிய அவயவங்களை அடக்கி-யாள ஏழு வயதுவரை பிடிக்குமென்றும், ஏழுமுதல் பதினாறு வயதுவரை அவர்கள் இச்சை வசப்பட்டிருப்பார்களென்றும், மனத்தின் வேலை அதற்குமேலேயே நன்கு ஆரம்பமாகுமென்றும் மேனாட்டு மனோதத்துவ நிபுணர்கள் கூறுகின்றனர்; அதற்கேற்பக் குழந்தைகள் கல்விமுறையும் அமைக்கப்படவேண்டுமென்றும் அவர்கள் முயல்கின்றனர். இது நம் முன்னோர் பண்டே அறிந்த

உண்மைகளில் ஒன்று; அதனால் இத்தீக்ஷைகளுக்குத் தக்க கால-வரையறைகளையும் விதித்திருக்கின்றனர். சைவக்குழந்தைகளுக்கு ஏழுவயசாகும்போது சமயதீக்ஷை செய்யப்படல்வேண்டும். அது இச்சைகள் விருத்தியாகும வயசு. சமயதீக்ஷையால் இடகலை நாடி திறக்கப்படுகின்றது. இந்த இடகலை யோட்டம் இச்சைகளையடக்குவதற்குப் பெரிதும் உதவி செய்யுமென்பதும், ஆனால் அது முயற்சி செய்வோருக்குமாத்திரம் உதவி செய்யுமேயன்றித் தானே இச்சைகளை அடக்கிவிடாதென்பதும் மேலேகூறப்பட்டுள்ளது. அதனால் நமக்கு ஏற்பட்டுள்ள சோம்பலினால் இந்த நாடிகளைப்பற்றி விபரீதமாகப் பொருள்கொண்டுவிடக்கூடாது. மழைகாலம் பயிர் செய்வதற்கும் வெயிற்காலம் வீடுகட்டுவதற்-கும உதவுமென்பது யாவரும் அறிந்தது; அதனால், அவை தாமே பயிரையும் வீட்டையும் அமைத்துவிடுமென்று ஒரு-வன் கொள்ளுவானானால், அவனுக்கு மூளைக்கோளாறென்று-தான் கொள்ளவேண்டும். இந்த தீக்ஷா பலன்களும் அம்மாதிரி-யானவையே. இடகலையின் வேலைக்கு உதவியாகப் பெற்றோர்கள் முதலாவது தம் இச்சைகளையடக்கியாளவேண்டும்; பின்னர், பிள்ளைகளையும் அம்முறைகளில் பயிற்றவேண்டும். அல்லாதபோது இச்சைகளையடக்கவேண்டிய அவசியத்தைக் குழந்தைகள் உண-ராமற்போவர். பின், வயசு 14 ஆகும்போது விசேஷதீக்ஷை செய்யப்படவேண்டும். அது பிங்கலை நாடியைத் திறக்கும். இந்தப் பிங்கலையோட்டம் மனத்தின் குரங்காட்டத்தையடக்கி, அதனை ஒருமுனைப்படுத்தப் பெரிதும் உதவுகின்றது. அதனால் கல்வி, ஜபம், தியானம் முதலியன பயில்வதற்கு அது பெரிதும தகுதி-யுடையதாகின்றது. இந்த அறிவு இச்சை இரண்டையுமே ஒரு சேரப் பண்படுத்துவதற்கு, இவ்வயசில் கிறிஸ்துவ முறையிலும் ஒரு சடங்கு செய்யப்படுகின்றது. அது உறுதிப்படுத்தல் (Confirmation) என்று பெயர் பெறுகின்றது; அதன் பயனும் மேற்கூறியவாறே. அது நெற்றிக்கண்ணால் காணப்பட்டது.

சைவப்பிள்ளைகளுக்கு, அதாவது ஆண் பெண்பாலாரிரு-வருக்குமே, 21 வயசாகும்போது நிர்வாணதீக்ஷை செய்யப்படல் வேண்டும்; அப்போது சுழுமுனாநாடி திறந்து, அவன் யோகம், தியானம் பழகவும், ஆன்மசாதனங்களைச் செய்யவும் அருகனா-

கின்றான்; சுழுமுனை நாடியோட்டம் அவற்றிற்குப் பெரிதும் பயன் படுவது. ஆனால் இன்றைய சைவர்கள் இவ்விஷயங்களில் வெறும் சூனியமாகவே, அதாவது (Cypher) சைபர்களாகவே இருந்து-வருவது பரிதவிக்கத்தக்கதாயிருக்கின்றது. இக்காலத்தில் பிள்ளை-கள் பெற்றோரால் வளர்க்கப்படுகிறார்களென்று சொல்லுவதற்-கிடமில்லை; கழுதை குட்டிபோட்டால் தெருவில் மேய்ந்து வளரும் என்றபடி பிள்ளைகள் எவ்விதமோ தாமாக வளருகின்றனரென்று சொல்லவேண்டுமே தவிர, அவர்களுடைய ஆன்மவிருத்தியைக் கருதிப் பெற்றோரால் பயிற்றப்படுகிறார்களென்று சொல்லமுடி-யாது. அது இக்கால நவநாகரிக முறையாக இருந்துவருகின்றது. சந்தியாவந்தனங்களை அனுஷ்டிக்கிற ஒருசிலரும், அதன் பொருளை யறியாமல் ரயில் வேகத்தில் ஏதோ ஒருவிதமாக அதனைச் செய்து-விடுகிறார்களே தவிர, அதன் முழுப்பலனைப் பெறும் முறையில் அநுஷ்டிப்பதில்லை. இந்த சந்திகளைச் சரிவர அநுஷ்டிப்பதற்கு, ஒருவன் தன்னை முதலில் அறிந்திருக்கவேண்டும். அதாவது தன்னையும் தன் பல்வேறு உடம்புகளையும் அவற்றின் பல தத்து-வங்களையும்பற்றிக் கற்றறிந்திருக்கவேண்டும் அல்லாமல் வெறும் மந்திரங்களை மாத்திரம் ஒலிப்பது வெற்றொலியேயாகும். இனி, சந்தியாவந்தனத்தின் உயிராயிருப்பது காயத்திரீ மந்திரம்; அதனைக் கிளிப்பிள்ளைபோல அனைவரும் ஒப்புவிப்பதன்றிப் பொருளறிந்து சொல்பவர் பெரும்பாலும் காணப்படவில்லை. வட-மொழி மந்திரங்களை ஒலி பிறழாமல் உச்சரிக்கவேண்டியதைத் தவிரப் பொருளறியவேண்டுவது அவசியமில்லையென்ற கோட்-பாடும் இருந்துவருகின்றது. இது, நாம மந்திரங்களுக்கு ஒரு சிறிது பொருந்துமாயினும் சொற்றொடர் மந்திரங்களுக்குப் பொருந்துவதாகாது. "சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார், செல்வர் சிவபுரத்தினுள்ளே" என்பதே மணி-வாசகப்பெருமான் நமக்கு அருளியிருப்பது. நம் ஆழ்வாராதி-யரும் நாயன்மார்களும் தங்கள் பதிகங்களுக்குத் திருக்கடைக்-காப்புச் சாத்தும்போது, பண்ணும் பொருளுந் தெரிந்து பாட-வேண்டிய அவசியத்தை இதுகொண்டே அடிக்கடி வற்புறுத்து-கின்றனர். அவை யாவும் வெறும் வாக்குகளல்ல, உண்மை நிறைந்த அருள்வாக்குகளாம். பொருளறியாத சொற்றொடர்-மந்திரங்கள் வெற்றொலிகளேயாகும்.

இனி, நம் முன்னோர்கள் கூடுமான வழிகளிலெல்லாம் சமய உண்மைகளைக் கிண்டர் கார்டன் முறையாகப் புகட்டினரென்பதற்கு நமது பெண்கள் தலையணியே ஒருசான்றாகும். மற்றநாட்டுப் பெண்கள் தலையில் தொப்பிகள், நாடாக்கள், அலங்கார ஊசிகள், செயற்கைப் பூ, காய்கறிவகைகள், முறங்கள், கூடைகளைத் தலையிலணிந்துக்கொண்டிருக்கவும், நம் நாட்டில், அதாவது தென்னாட்டில், தலைவாரிப் பின்னி அதில் ஜடைநாகர், நெற்றிச்சுட்டி, சூரிய சந்திரப் பிறைகள், நறுமணமுள்ள இயற்கைப் பூக்கள் இவற்றையணிவது பழைய வழக்கம் இன்று இது பெரும்பாலும் வழக்கொழிந்து வருகிறபடியால் இங்கு பழைய வழக்கம் என்னப்பட்டது. முற்காலங்களில் அறிவுடையோர் ஜடைப் பின்னலை வெறும் மயிரலங்காரமாக மாத்திரம் கருதவில்லை. அது முதுகுத்தண்டைக் குறிப்பதாகவும், அதில் குண்டலினி வளைந்து வளைந்து மேலேறும் ஜடை நாகராகவும், சூரிய சந்திரப் பிறைகள் சூரிய கலையாகிய பிங்கலை நாடியையும் சந்திர கலையாகிய இடைநாடியையும், நெற்றிச்சுட்டி புருவ நடுவிலுள்ள நெற்றிக்கண்ணையும் குறிப்பதாகவுமே அமைத்து வைத்தனர். பெண்கள் சிறுபருவத்திருந்தே அவற்றை அடிக்கடி அணியும்போது தமது தாய்மாரால் அவற்றின் அறிகுறிப் பொருளைச் சொல்லக் கேட்டு, இந்த மூன்று நாடிகளைப் பற்றியும் அவற்றைச் சமய விசேஷ நிர்வாண தீக்ஷைகளால் எழுப்பும விதத்தையும் அறிந்து, அக்கலைகளாலேயே ஆன்மாவின் பூரணத் தன்மையும் பேரின்ப நிலையும் எய்தப்படுமென்பதையும் தெளிந்து, அதில் எடுத்துக்கொள்ள வேண்டிய முயற்சியை ஞாபகப்படுத்தி வற்புறுத்தும்பொருட்டே தங்கள் தலைமயிர் அடிக்கடி அழகுபடுத்தப்படுகின்றதென்றும், மேனாட்டரைப் போல அது ஆடவரை மயக்குவதற்காகவல்லவென்றும், அவர்கள் இளமையிலிருந்தே கண்டுகொள்வர். அத்துடன், சிறுவர் சிறுமிகளுக்கு இந்த அணிகலன்கள் ஆபரணமாவது போல, முதியோருக்குப் பூரண வளம் பெற்ற குண்டலினியே உண்மையான ஆபரணமாகுமென்றும அவர்கள் அறிந்திருந்தனர். இந்த ஆபரணங்களை அடிப்படையாகக்கொண்டு அதற்கு மேற்பட்ட சமய உண்மைகள் பலவற்றை அறியவும் அவருக்கு எளிதாயிருந்தது. "குண்டலினி சக்தி எழுந்தாலொழிய ஆத்மீக உணர்ச்சிகள் உண்டாகமாட்டா"

என்ற ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் உபதேசமொழியின் உண்மையைப் பண்டு நம்நாட்டு ஆண்களும் பெண்களும் அறிந்திருந்தனரென்று இவ் வழக்கம் காட்டுகின்றது.

கடைசியாக: இறைவனுடைய ஏழு தனிப்பெருஞ் சிறப்புகளாகும் இயற்கைக் கலைகள் ஏழினைப்பற்றி முன்னே கூறப்பட்டுள்ளது. இக்கலைகள் ஆன்ம முன்னேற்றத்திற்காகவே அண்டத்தில் தொழிற்படுவனவாம். அந்த ஆன்ம முன்னேற்றமும் படிப்படியாகவே நடைபெறுவதாகையால், அதன்பொருட்டு ஒவ்வொரு கலையும் முறையே ஒவ்வொரு காலத்தில் உச்ச நிலையிலிருக்கும்; அப்போது மற்ற 6 கலைகளும் அதற்கடங்கியும் அதைத் தழுவியும் நடைபெறும். சமீபகாலத்தில் உச்சத்திலிருந்தது ஆறுவதாகிய பக்திக்கலை. அதனால் அக்காலத்து நம் நாட்டில் பல நாயன்மார்களும் ஆழ்வார்களும், வடநாட்டில் பல விஷ்ணு தாசர்களும், புத்த நாடுகளில் பல உத்தம பிட்சுக்களும், மகமதியரிடம் பல உண்மைப் பக்கிரிகளும் பீர்களும், கிறிஸ்தவ நாடுகளில் பல பல முனி புங்கவர்களும் அர்ச்சிஷ்டர்களும் (Saints) உலகில் மூலை மூலையாகப் புற்றீசல்போலப் புறப்பட்டு ஒளி வீசினார்கள். அதனால் பக்தியும் துறவும் ஒழுக்கமும் எங்கும் தழைத்தோங்கின, பலராலும் பாராட்டப்பட்டன. இப்போது சிலகாலமாக, அந்த பக்திக் கலை குறைந்து அடுத்த ஏழாவது கலையாகிய கிரியா கலை ஆரம்பமாகி வருகின்றமையால், இடைக்காலமாகிய இந்தச் சந்தியா காலத்தில், முன்போன்ற உணர்வோடு கூடிய உறவு மாறி, பகுத்தறிவோடுகூடிய பக்தி அநேகமாய் இறந்துபட்டு, மூடபக்தியும் அவநம்பிக்கையுமே இன்று அதிகமாகக் காணப்படுகின்றது. ஆயினும், கிரியா கலை ஊக்கம் பெறப்பெற இக்குறைபாடு நீங்கிக் கிரியையோடு கலந்த உத்தம பக்தி உலகில் நடமாடுமென்று ஞானிகளால் கூறப்படுகின்றது.

கிரியையென்பது இயற்கைச் சக்திகளைக் கையாளுவதற்குரிய உபாயங்களாம்; அவை யந்திரம், மந்திரம், தந்திரம் முதலியவைகளாம். நமது அறிவிற்கு எளிதில் விளங்குமாறு இயற்கைச் சக்திகளை ஸ்தூல உலகைச் சேர்ந்தவையென்றும் சூக்ஷ்ம உலகைச் சேர்ந்தவையென்றும் இருவகையாகப் பிரிக்கலாம். தூல உல-

கிற்குரிய உபாயங்கள் யந்திரங்களும் தந்திரங்களுமாம்; சூக்கும உலகிற்குரிய உபாயங்கள் யந்திரங்களும் மந்திரங்களும் முத்திரை பாவனைகளுமாம். இந்தக் கிரியாகலையின் முன்னேட்டம், கூர்ந்து நோக்குவோருக்கு இப்போதே காணப்படும். தூல உலகில் இந்தக் கிரியா கலையின் வல்லமையால், வெறுந் தற்குறிக் கம்மியனுங்கூட ஆறு மாதப் பயிற்சியில் ஆகாயத்தில் பறக்கும் காலம் வந்திருக்கிறது. இது பண்டு ஒரு சில முனிவர்கள் தம் வாழ்நாள் முழுவதும் பெருமுயற்சி செய்து பெற்ற யோகசக்தியால் நடத்திய ஒரு வித்தையெனப்படுகிறது. அம்முனிவரும் தாம் மாத்திரமே சென்றாரேயொழியப் பிறரையும் இழுத்துச் சென்றதாகச் சொல்லப்படவில்லை. இன்றைய ஆகாய விமானியோ எத்தனையோ முனிவர்களை மாத்திரமன்றிச் சாதாரண மக்களையும் மிருகங்களையுங்கூட எடுத்துச் சென்றவண்ணமாகவே இருக்கின்றான். இக்கலையின் அபகாரம் முதிர முதிர, பண்டு யோகியர் கண்ட பல காட்சிகள், கேட்ட பல சப்தங்கள் எல்லாம் நம்போன்ற சாதாரண மக்களுக்கும் விளங்கநேரும். இவற்றின் முன்னறிகுறியே இன்றைய வானொலி (Radio), கம்பியில்லாத்தந்தி (Wireless), கம்பியில்லாக்காட்சி (Television) முதலியன. இவை சாதாரணப் பழக்கத்திலாகிவிட்டபடியால் இவற்றின் அற்புதங்களை நாம் உணர்கிறோமில்லை. பதினாயிரம் மைல்களுக்கப்பால் ஒரு பாடகன் பாடும்போது, அவன் வீணையில் பிரடை முறுக்குவது அந்நொடியிலேயே கிர்ரென்று நமக்குக் கேட்கின்றது; அவன் பொடியுறிஞ்சுவதுகூட எவ்வளவு அமைதியாகச் செய்தபோதிலும் உடனே நமக்குத் தெரிந்துவிடுகிறது. ஓரிடத்தில் பத்து வானொலிப் பெட்டிகளை வைத்து, அலைநீளத்தில் ஒன்றுக்கொன்று ஒரு மயிரிழை மாத்திரமே வேறுபடும்படி அவற்றைத் திறந்துவைப்போமானால், ஒரு பெட்டியில் கேட்கும் ஒலி மற்றொன்றில் கேட்கப்படுவதில்லை. அங்ஙனம் அண்டத்திலுள்ள ஒலிகளெல்லாமே நம்மைச்சுற்றி ஏக காலத்தில் நடமாடுவதையும், அவற்றை அவ்வளவு நுணுக்கமாகப் பிரித்துக் காட்டக்கூடிய கருவிகளும் நம்மிடையே இன்றிருப்பதையுங் காணும்போது, யாருக்குத்தான் வியப்புண்டாகாதிருக்க முடியும் இவையெல்லாம் தூல உலக சக்திகளேயாம். இம்மாதிரியே சூக்கும உலக சக்திகளும் பணி தொடங்கி-

யிருப்பதாகக் கூறப்படுகின்றது. அவற்றை சாதாரணமாக இயக்குபவர் அந்த சூக்கும உலகவாசிகளாகிய தேவர்களாவர். இந்தக் கிரியா கலை உச்சம் பெறும்போது மனிதருக்கும் தேவர்களுக்கும் நெருங்கிய உறவும் தொடர்பும் உலகெங்கும் ஏற்படுமென்றும், அதன் மூலம் மேலுலக சக்திகளும் தாராளமாக நமக்குக் கைவசமாகுமென்றும், மழையும் விளைவும் செழிப்புறுமென்றும், வறுமைநோய் முற்றிலும் வறண்டுவிடுமென்றும், அங்கங்கே தேவர்கள் வேண்டும்போது மானிடச் சட்டை போர்த்து மக்களிடையே நடமாடுவரென்றும், அங்ஙனம் நேரடியாக மக்களுக்குப் பல அரிய விஷயங்களைப் படிப்பிப்பரென்றும் ஞானிகள் கூறுகின்றனர். அந்த நன்னிலைக்கு அடிப்படையிடுவதற்கே, இன்றைய அகோர யுத்தங்களும் உலக முழுவதும் காணப்படும் அமளிகுமளிகளும் சண்டை சச்சரவுகளும், அவற்றின்மூலம் எல்லாத் துறைகளிலும் பழைய முறைகள் கழிதலும் புதியன புகுதலும் நடைபெறுகின்றன. வயல் நல்விளைவு கொடுப்பதற்கு மண் நன்கு வெட்டி மறிக்கப்படவேண்டுமன்றோ? அங்குள்ள களைகள் முதலாவது களையப்படல்வேண்டுமன்றோ? இவ்வுண்மைகளையறிந்தோர் இன்றைய உலக நிலையைக் கண்டு ஒரு சிறிதும் மனம் சோரார்.

---

பாடம் 10.

## மனிதன்—இச்சை உடம்பு.

முந்தின பாடங்களில் ஆலயத்தில் (1–1–2–2) எண்ணிட்ட பாகம மனிதனுடைய அன்ன உடம்பையும், அதைச் சுற்றச் சூக்குமமாய்க் காலங்குலம் வரை விரிந்து நிற்கும் பிராண உடம்பையும் அறிகுறியாய்க் காட்டும் என்பது விளக்கப்பட்டது. அன்ன உடம்பிற்குப் பிரதான அங்கம் முதுகெலும்பிற்குள்ளிருக்கும் நரம்புத் தண்டம் என்றும், அது அண்டத்திற்கு மேரு தண்டம் போன்றதென்றும், அதுவே ஆலயக் கொடிமரம் என்றும் கூறப்பட்டது.

1. முன்னுரை.

கருவுடம்பாகிய பிராண உடம்பிலும், இந்திரியங்களாக ஏழு ஆதாரங்கள், ஓயாமற் சுழலும் சக்கரங்கள் போன்று உள்ளன

வென்றும், அவற்றிற்குள் குண்டலினி என்ற பிரம்ம சக்தியும், ஜீவசக்தி யென்ற விஷ்ணு சக்தியும், பிராண சக்தி யென்ற சிவ சக்தியும் புகுந்து, நம் உடம்பிற்கு உருவத்தையும் உயிரையும் இயக்கத்தையும் கொடுத்து, ஆன்மாவின் ஆற்றலை, அதாவது செயல் வன்மையை வெளிப்படுத்து மென்றும் சொல்லப்பட்டது. அவ்வுடம்பில் சுழுமுனை நாடியே ஆலயத்தின் கொடிமரத்தால் அறிவிக்கப்படுவதென்றும் சொல்லப்பட்டது.

இனி, ஆலயத்தில் (3,3,3,5) என்ற எண்கொண்ட பாகம் மனிதனுடைய மூன்றாவது உடம்பை அறிகுறியாகக் காட்டுவது ; அது இச்சையுடம்பு என்றழைக்கப்படும். ஒவ்வொரு மனிதனும் அறிவு, இச்சை, செயல் என்ற முத்தன்மைகளை யுடையவன். அத்தன்மைகள் ஒவ்வொன்றும் தொழிற்படுவதற்கு அவனுக்குத் தனித்தனியாக வெவ்வேறு உடம்புகள் அல்லது கருவிகள் ஏற்பட்டிருக்கின்றன. அவற்றுள், செயலுக்கு அன்னமய பிராண-மய உடம்புகளும், இச்சைக்கு இச்சையுடம்பும், அறிவுக்கு உருவமன அருவமன உடம்புகளும் அமைந்துள்ளன. ஒருவன் ஒரு வேலையைச் செய்யும்போது, அவனுடைய ஸ்தூல உடம்பில் அதற்குத் தக்க அசைவுகள் ஏற்படுவது நாம் அறிந்தது. அன்ன-மய பிராணமய உடம்புகளின் அசைவின்றி, பூலோகத் தொழில் ஒன்றும் நடைபெறுவதில்லை. ஆனால் அந்த அசைவு இருவிதங்-களில் நடைபெறலாகும் ; ஒன்று அவனாகக் கையை அசைத்து விரும்பிய ஒரு வேலையைச் செய்தலாகும் ; மற்றது, அவனை யறியாமலே உறக்கத்தில் கொசுக்கடித்த இடத்தைச் சொறிவது போன்று அவன் கை, தானே அசைந்து, வேலை செய்தலாகும் ; இந்த இருவிதங்களிலும் வேலை நடைபெறும். ஒரு அசைவு அகத்திருந்து ஏவப்படுவது, மற்றது புறவுலகத் தாக்குதலுக்கு ஈடுபட்டு நிகழ்வது.

அவ்வாறே மனிதனுடைய இச்சைகளும் அவை தொழிற்-படும் முறையும் ஆகும். காமக்குரோத லோப மோகங்கள், பசி, தாகம், சிற்றின்ப நாட்டங்கள், மண் பெண் பொன்னாசைகள், இவையெல்லாம் இச்சைகளெனப்படும். ஒருவன் இவற்றைத்-தானாக உண்டுபண்ணும்போது, அவனுடைய இச்சையுடம்பு ஏற்றபடி சலனமடையும் ; அல்லாமல், அவனுடைய இச்சை-

யுடம்பு வெளியிலிருந்து வரும் இச்சை அலைகளால் அலைக்கப்படும் போது, அவன் அவ் இச்சைகளைப்பற்றி அச்சமயம் எண்ணு திருப்பினும் அந்த இச்சைகள் தாமாகவே அம் மனிதனிடம் பிறக்கும். ஒருவன் தன் உடம்பை அசைவின்றி இருத்தி, சற்று நேரம் கைகட்டிக் கண்மூடி உட்கார்ந்து கொண்டு, தன் இச்சை-களையும் எழ ஒட்டாமல் அடக்கிப் பார்ப்பானுனல், அப்போது தன்முயற்சி யின்றியே தனக்குள் இச்சைகளும் எண்ணங்களும் எழுவதை அவன் உணர்வான். அப்போது, புறவுலக இச்சை-யலைகள் அவனைத் தாக்குவதும், அதனுல் அவனுடைய நுண்-ணுடம்புகள் மிக வேகமாகச் சலனமடைவதும் நெற்றிக்கண் பார்வைக்குப் புலப்படும். அச்சலனம், அசைவின்றி மிதக்கிற மரக்கலத்தைக் கடல் அலைகள் ஆட்டுகிற மாதிரியும், அது நம் புறக்கண்ணுக்குத் தோன்றுவது போலவும் ஆம்.

இங்கு, இச்சையுடம்பில் தொழிற்படும் ஆசைகளுக்கும், அறிவுடம்பில் தொழிற்படும் எண்ணங்களுக்கும் நினைவுகளுக்கும், வேறுபாடு அறியப்படல்வேண்டும். இச்சைகள் உண்டாகும்போது பருவுடம்பில் ஒருவித பரபரப்பும் இரத்தத்தில் ஒருவித வேகமும் உள்ளத்தில் ஒருவிதக் கிளர்ச்சியும் ஏற்படும். எண்ணங்கள் மாத்-திரம் உண்டாகும்போது அவ்வித உணர்ச்சி ஏற்படாது. ஒருவன் பவுன் என்று மாத்திரம் நினைப்பானுனல், அது வெறும் எண்ணம்; ஒரு பவுனை இழந்துவிட்டு நினைப்பானுனல் அது இச்சை; அப்-போது அவன் கும்பி கொதிக்கும், நெஞ்சு குமுறும், மனது வருந்தும், முகத்தில் ஒரு வாட்டமும் காணப்படும். ஒரு பெண்-மணி பிறர் குழந்தைகளைக் கண்டறிவது எண்ணம், தன் குழந்தை-யைக்கண்டு உடம்பு சிலிர்ப்பதும் மனம் புளகிப்பதும் இச்சை.

ஆனுல் பெரும்பாலான மக்களிடம் இச்சைகள் எண்ணங்களை விட்டுத் தனியாக இயங்குவது மிகவும் அரிதாகையால், பண்டைய தத்துவமுறைகளில் இச்சைகளை மனத்தின் ஒரு பாகமாகவே கொண்டு, அவற்றிற்குரிய உடம்புகளை மனோமயகோசம் என்ற ஒரே பெயராலேயே அழைத்தனர்; சித்தம், புத்தி, மனம், அகங்-காரம் என்பன மனத்தின் வேறுபாடுகள் என்றுங் கூறினர். ஆயினும் இச்சையுடம்பும் மன உடம்பும் வேறு வேறும். மனிதன்

உயிர்த்திருக்கும்போது அவை நெற்றிக்கண் பார்வைக்குத் தனித் தனி உடம்புகளாகக் காணப்படுவதோடு, மனிதனுடைய மரணத்தின்பின்னும் அவை தனித்தனி வாழ்க்கையும் தனித்தனி பிறப்பும் இறப்பும் உடையனவாகக் காணப்படுகின்றன. பண்டையோர் இதனை நன்கறிந்திருந்தாரென்பது, "மனிதன் தன் பூத உடம்பு மரித்தபின்பு யாதனா சரீரமெடுத்து புவர்லோகத்திலும், அந்த உடம்பும் மரித்தபின்பு பூதசார சரீரமெடுத்து சுவர்க்கலோகத்திலும் தங்கியிருந்து, பின் திரும்பவும் உலகில் பிறப்பான்," என்று கூறியிருப்பதாலும், அதற்கேற்றவாறு அபரக்கிரியைகளை அமைத்திருப்பதாலும் தெளியப்படும். மரணத்தின் பின் மனிதர் நிலையைப்பற்றிப் பின் வரும் பாகங்களில் கூறும்போது இவ்வுண்மை சற்று விரிவாக விளக்கப்படும்.

அண்ட பிண்டங்களுக்கு அப்பெயர்கள் கொடுக்கப்பட்டிருப்பது அவை கோழிமுட்டை போன்றிருப்பதாலேயாம். பிண்டமாகிய இச்சையுடம்பும், கோழிமுட்டைபோன்று, மனிதனைச் சுற்றி நாற்புறமும் மேலுங்கீழும் சுமார் 18 அங்குலம், அதாவது கைக்கு ஒரு முழம் விரிந்திருக்கும். (படம் பக்கம் 128 பார்க்க)

2. அமைப்பு. காலின் கீழ் உள்ளபாகம் பூமிக்குள் புகுந்திருக்கும். இந்த உடம்பு புவர்லோகப் பொருள்களால் ஆக்கப்பட்டிருப்பதால் இது பூலோகப்பொருள்களை ஊடுருவி வியாபித்து நிற்கும்; அதனால் பூத உடம்பும இந்த புவர் உடம்பும் ஒரே இடத்தில் இருக்க வல்லனவாம். இந்த இச்சையுடம்பில் ஏற்படும் அலைகள், சலனங்கள், மாறுதல்கள் முதலியன புவர்லோகத்திலேயே காணப்படுவன. அந்த அலைகள், சலனங்களின் காரணமாக விளையும் காரியமே பலபல இச்சைகளாகும். பூலோக அலைகளின் பலன் செயல்களாவதுபோல, புவர்லோக அலைகளின் பலன் இச்சைகளும், சுவர்லோக அல்லது மன உலக அலைகளின் பலன் எண்ணங்களும் நினைவுகளுமாம்; மனிதன் ஏதாவது நினைக்கும்போதும் இச்சிக்கும்போதும் தொழில் இயற்றும்போதும் அந்தந்த உரிய உடம்புகளை அசைக்காமல் அவ்வினைகளை நடத்துதல் அவனுக்கு இயலாது.

இனி, பூலோகத்தைப்போலவே புவர்லோகமும், கட்டி, நீர், வாயு, ஆகாயம், நுண்ணாகாயம், திரட்டணு, அணு என்ற சப்த

பூதங்களாலும் அவற்றின் பலவித சேர்க்கைகளாலும் ஆக்கப்பட்டுள்ளது. இவற்றுள், திண்ணமான பூதங்கள் மந்தமான சலனங்களையும் பருப்படியான அலைகளையும் உடையனவாயிருக்கும். அவற்றால் ஏற்படுவன கீழ்த்தரமான இழிந்த தமோகுண ரஜோகுண இச்சைகளும் ஆசைகளும் விருப்பங்களுமாம். மற்று நுண்மையான பூதங்களோ நுணுக்கமான அலைகளையும் மிகத் தீவிரமான சலனங்களையும் உடையனவாய், உயர்ந்த சத்துவகுண இச்சைகளைக் கொடுக்கும். ஆகவே புவர்லோக தத்துவங்களாலாக்கப்படும் இச்சையுடம்புகளில், பருப்படியான பொருள்களால் ஆக்கப்பட்ட இச்சையுடம்பைக் கொண்டவர்கள், காமக்குரோத லோப மோக மத மாற்சரியம், மண் பெண் பொன்னாசைகள் போன்ற தாழ்ந்த குணங்களை யுடையவராயிருப்பர். அன்பு, பக்தி, இரக்கம், ஈகை, பொறுமை, ஒப்புரவு முதலிய நற்குணங்களையுடையவர் நுண்மையான தத்துவங்களால் அமைக்கப்பட்ட இச்சை யுடம்பை உடையவராயிருப்பர். மனிதன் நற்குணங்களைப் பழகப் பழக இச்சை யுடம்பிலுள்ள பருப்பமான அணுக்கள் வெளியே உதறி எறியப்பட்டு அந்த உடம்பு செம்மைப்படும்; அதாவது அந்த உயர்குண அலைகளுக்கு ஈடுபடமாட்டாத பொருள்கள் பிடிப்பில்லாமையால் அங்கிருந்து நழுவிவிடும். அவ்விதம் செம்மைப்படாதவரை, அந்த உடம்பே புறத்திருந்துவரும் மந்தமான இழிந்த அலைகளால் எளிதில் இயக்கப்பட்டு, அம்மனிதனிடம் இயற்கையாகவுள்ள இழிகுணங்களை மாறி மாறித் தூண்டவும் விருத்தி பண்ணவும் செய்யும். நல்ல மணமும் துர்நாற்றமும் அந்தந்தப் பொருள்களிலிருந்து அலைகளாக நாற்புறமும் வீசிக்கொண்டே யிருப்பதுபோல, இழிகுணத்தோர் இச்சை யுடம்பிலிருந்து இழிவான அலைகள் இடைவிடாது வெளியே வீசிக்கொண்டே யிருக்கும். அவையே புறத்திருந்துவந்து நம்மையும் பிறரையும் தாக்கும் அலைகள். இந்த உண்மை பற்றியே "தீயாரைக் காண்பதுவும் தீதே" என்ற மூதுரை ஏற்பட்டது. அம்மக்களைக் காணுந்தூரம்வரை அந்த அலைகள் நாற்புறமும் சென்று அவ்வட்டாரத்திற் குட்பட்ட அனைவருடைய உடம்புகளையும் தாக்கித் தம்மாலான கெடுதிகளை அவருக்கும் உலகுக்கும் உண்டுபண்ணும். கொக்கிபோன்ற அந்த இச்சை யுருவங்களைப் படத்திற் காண்க. (Thought Forms—C. W. Leadbeater.)

அவ்வாறே நல்ல இச்சைகளும் நல்லெண்ணங்களும் பிறருக்கும் உலகுக்கும் நற்பலனைக் கொடுப்பனவாம். அவற்றை வெளியனுப்பும் மேன்மக்கள், நுண்மையான இச்சையுடம்புகளை உடையவராய், உயர்ந்த இச்சை அலைகளையே எப்போதும் நாற்புறமும் விசிறிக்கொண்டிருப்பர்; அவர் புறத்திருந்து வரும் உயர்ந்த அலைகளை மாத்திரமே உட்கொண்டு, தாமும் சாந்தியும் இன்பமும் எய்தியிருப்பர். ஏனெனில், சடம்புக்கயிற்றில் வீணைக்கான அலை ஏற்படாதது போலவும், வீணைத் தந்தியில் வில்லுப்பாட்டோசையை எழுப்ப இயலாதது போலவும், உத்தம உடம்பில் இழிவான இச்சை அலைகள் சார்ந்து ஒட்டாது விலகிப் போம்; முரட்டு அலைகளும் நுண்ணிய உடம்புக்குள் புகமாட்டாது ஒதுங்கிவிடும். இந்த இச்சைகளும் குணங்களும் நெற்றிக்கண் பார்வைக்கு நிறங்களாகக் காணப்படும். பூலோகத்து நிறங்கள் சப்த பூதங்களின் சலனத்தின் விளைவென்பது நன்கறியப்பட்டது. அவ்விதியே புவர்லோகத்திலும் காணப்படுவது. இச்சையுடம்பில் கறுப்பு நிறம் பகையைக்காட்டும்; கருஞ்சிவப்பு காமத்தைக் காட்டும்; இளஞ்சிவப்பு (ரோஸ்) அன்பைக்காட்டும். பகவதிக்கு உரியதான மஞ்சளைச்சிவப்பு மாறுத அன்பையும் மனேவல்லமையையும் திடசித்தத்தையும் உணர்த்தும். மஞ்சள் நிறம் அறிவையும் கிச்சிலி வர்ணம் தற்பெருமையையும் குறிக்கும் இருண்ட தவிட்டு நிறம் நயவஞ்சகத்தையும் சாம்பல் நிறம் பயத்தையும் குறிக்கும். இந்நிறங்களைத் தமது இச்சையுடம்புகளில் உடையவர் அவ்வக்குணங்களை உடையவராயிருப்பர்; அவரிடமிருந்து வெளிவரும் நினைவுருவங்களும் இச்சையுருவங்களும் அந்தந்த நிறங்களை யுடையனவாகவே இருக்கும்; அக்குணங்கள் மாறும்போது, உரிய நிறங்களும் மாறிவிடும். விரிவைப் படங்களிற் காண்க.

இச்சையுடம்பு பிராணமயகோசத்தையும்விட சூட்சுமமானதாகையால், அது கடற்பஞ்சுக்குள் தண்ணீர் நிறைந்திருப்பது போல அன்னமயகோசம் பிராணமயகோசம் இரண்டினுள்ளும் நிறைந்துநின்று அப்பாலும் பரந்து நிற்கும். அதன் அணுக்கள் அன்னமய கோசத்திற்போல ஒரு இடத்திலேயே ஒட்டிக்கொண்டிருப்பதில்லை. அடுப்பில் கொதிக்கிற வெந்நீர் கீழ்மேலாகச்

## இச்சை (புவர்லோக) உடம்பு.



அதமர்



மத்திமர்



உத்தமர்

சுழன்று கொண்டிருப்பது போலவும் ஓடுகிற நீரில் மகிழி புரள்வது போலவும், இச்சையுடம்பின் அணுக்களும் தாதுக்களும் அந்த முட்டைக்குள் உள்ளும் புறமும் அமளி குமளியாகச் சுழன்று கொண்டேயிருக்கும். அதற்கு ஊண், உடை, உறக்கம் ஒன்றும் தேவையில்லை. அதன் அணுக்கள் இச்சைகளாகவும் எண்ணங்களாகவும் உருவெடுத்து வெளியே செல்லும்போதும், வேறு பல காரணங்களாலும் உடம்பிலிருந்து கழியும்போதும், அக்குறைவைப் பூர்த்திசெய்வதற்கு அதே குணமுடைய வேறு அணுக்களை புவர்லோகத்திலிருந்து அது உறிஞ்சிக்கொள்ளும்; அதனால் அவ்வுடம்பிற்குப் பசி ஏற்படுவதில்லை. மழை, வெயில், சூடு, குளிர்ச்சி முதலியவை அதனைத் தாக்காமையால் அதற்கு உடை வேண்டுவதில்லை; வீடுங்கூரையும் தேவையில்லை. அதில் களைப்பு ஏற்படாதாகையால் அதற்கு உறக்கம் வேண்டுவதில்லை. அதனால் அது பகல் முழுவதும் அன்ன உடம்போடு ஒட்டி வேலை செய்து விட்டு, இரவு தூக்கத்தில் அதனை விட்டுப்பிரிந்து அதற்கு மேலாக மிதக்கும். அப்போது அது பெரிய கோழிமுட்டை போலிருக்குமாயினும், கொழுக்கட்டை வெந்தபிறகும் அதன் மத்தியில் கை முஷ்டி காணப்படுவதுபோல இதன் மத்தியிலும் அன்ன உடம்பு போன்ற ஒரு இறுகின சூக்கும உருவம் காணப்படும். நமக்குக் கனவில் காணப்படும் உருவங்கள் இவைகளே, இயற்கையான அன்ன உடம்பன்று. ஒருவன் இறந்தபின்பு அன்ன உடம்பு போலப் புலப்படும் தோற்றமும் இதுவே. இது தூலக் கண்ணுக்குப் புலப்படுவதில்லை, கைக்குத் தட்டுப்படுவதுமில்லை.

பிராணமய கோசத்திலுள்ள சக்கரங்களைப் பற்றியும் அவற்றின் ஆர்க்கால்களைப் பற்றியும் முன்னே சொல்லப்பட்டிருக்கின்றது. மனிதன் விழித்திருக்கும்போது இந்த ஆர்க்கால்கள் கப்பலைக் கரையுடன் பற்றிப்பிடிக்கும் நங்கூரம்போல இச்சையுடம்பையும் பிராண உடம்பையும் இறுகப் பிணைக்கும். மனிதன் உறங்கும்போது அவை நெகிழ்ந்து, அன்ன உடம்பும் பிராண உடம்பும் படுக்கையில் கிடந்து இளைப்பாரவும், இச்சையுடம்பு மற்ற நுண்ணுடம்புகளுடன் வெளிப்பட்டுப் பிரிந்துவிடும். அப்போது அன்ன உடம்போடு அது மின்னல்போன்ற ஒரு மெல்லிய

கம்பியால் மாத்திரம் பிணைபட்டு நிற்கும்; அதற்கு எப்பிணைப்பு எதுவும் இன்மையால் அது தனியாக வேலை

**3. வேறுபாடுகள்.**

செய்யவும் தொடங்கும். பலர் படுத்துறங்குஞ் சாவடி ஒன்றினுள் நெற்றிக்கண் பார்வையுடைய யோகி ஒருவன் புகுவானானால், அங்கு அவனுக்குப் பல அற்புதங்களும் அதிசயங்களும் வாணவேடிக்கைக் காட்சிகளும் புலப்படும். முதலாவது அவன் நெற்றிக்கண்ணுக்குக் காணப்படுவது, மேலே கூறையை யொட்டி மிதந்துகொண்டிருக்கும் பலவித வர்ணங்கள் கொண்ட கோழிமுட்டைப்பலூன் போன்ற உருவங்கள்; இரண்டாவது அவற்றிலுள்ள வேறுபாடுகள். சிறு பிள்ளைகள் ரப்பரால் செய்யப்பட்ட சுரைக்காய் போன்ற பலவர்ணப் பலூன்களை வாயினால் ஊதிக் காற்றடைத்துக் கயிற்றில்கட்டி உயரப் பறக்கவிட்டு விளையாடுவதைப் பலரும் கண்டிருப்பர். அம்மாதிரியாக சுமார் ஆறு, எட்டடி உயரமுள்ள முட்டை உருவங்கள், உறங்கும் உடம்புகளுக்கு மேலாக மிதந்து கொண்டிருப்பது முதற் காட்சியாகும். அவற்றுட் சில, முட்டை உருவம்போல வரையறுக்கப்படாமல், விளிம்புகள் சிதறி வெறும் புகைச்சுருள் போலவும் வெட்டின பஞ்சுக்குவியல் போலவும் உதிரியான மேகங்கள் போலவும் மிதந்து கொண்டிருக்கும். அந்த இச்சையுடம்புகளில், இருண்ட நிறங்களும் ரத்தச் சிவப்புகளும் தவிட்டு வர்ணங்களுமே அதிகமாகக் காணப்படும். இவையெல்லாம் தன்னல இச்சைகள், தீய இச்சைகள் இவற்றின் நிறங்களாகும். இந்த முட்டை உருவங்கள் அன்ன உடம்பை விட்டுப் பிரிந்தபோது தாமாக வேலைசெய்யச் சக்தியின்றி உயிரற்ற உடம்போல மிதந்து கொண்டிருக்குமாயினும், புறத்திருந்து இழிகுண இச்சை அலைகள் அவற்றைத் தாக்குவதால் மேற் சொன்ன அருவருப்பான வர்ணங்கள் அங்கு மின்னல்போலக் கொழுந்துவிட்டெரிவதும் மறைவதுமாகவிருக்கும்; இதுவே மேற்சொன்ன இரண்டாவது காட்சி. இக் காட்சி பார்வைக்கு அருவருப்பாகவும் அச்சந்தருவதாகவுமிருக்கும். அப்பேர்ப்பட்ட உடம்புகள் மிகத் தாழ்ந்த ஆன்மாக்களுடைய இச்சையுடம்புகளாம்; அவற்றிற்கு அன்ன உடம்பை யொட்டியல்லது தனியாக இயங்கும் ஆற்றல் இருப்பதில்லை. அங்கு காணும் நிறங்களும் வர்ணங்களும் அவருடைய தன்னல இச்சைகளையும் முரட்டு சுபாவங்களையும் குரூர

குணங்களையும் வஞ்சகத்தொழிலையும் காட்டுவனவாம். அந்த இச்சையுடம்புகள் உறங்குகிறவனுக்கு மேலாக மிதப்பதைத் தவிர வேறிடங்களுக்குச் செல்லச் சக்தியற்றவையாயிருக்கும். இந்த உடம்புகளே அதம உடம்புகள் என்று படத்தில் காட்டப்பட்டிருப்பவை.

வேறுபல இச்சையுடம்புகள் அவ்வளவு அருவருப்பாக இராவிடினும் அவற்றின் நிறங்களெல்லாம் சுயநலத்தைக் காட்டுவதான மங்கல் நிறங்களாகவே யிருக்கும்; மிகக் கொடிய குணங்களைக்காட்டும் இருண்ட கறுப்புகள் அங்கு காணப்படுவதில்லை. இந்த மத்திம உடம்புகள் யாவும் அறைக்குள்ளேயே மிதந்து கொண்டிருக்குமென்றும் சொல்வதற்கில்லை. சில அங்ஙனம் மிதந்துகொண்டு மிருக்கலாம்; வேறு சில வீட்டை விட்டு வெளியே செல்வதும் சற்று நேரத்தில் உள்ளே வருவதுமாயிருக்கும். அந்த உடம்புகள் முன் கூறப்பட்ட உடம்புகளைவிடப் பிரக்ஞை கூடுதலாக உடையன; அதனால் உறங்குகின்ற அன்ன உடம்பைவிட்டுச் சற்று தூரம் செல்லவும் திரும்பவும் சக்தி யுடையன. புவர்லோக அலைகள் புறத்திருந்து இவரைத் தாக்கும்போது மிக இழிவான அலைகள் அவரைத் தாக்க முடியாது போகும்; ரஜோகுண அலைகளும் சில சத்துவகுண அலைகளும் அவற்றில் எதிரொலிக்கும் போது அங்கு பல அழகான வர்ண மின்வெட்டுகள் தோன்றுவதும் மறைவதும் பார்வைக்கு விலையுயர்ந்த வாண வேடிக்கைகள் போன்று இன்பகரமாயிருக்கும். இந்த உடம்பையுடைய மக்கள் மத்திமர் என்று படத்தில் காட்டப்பட்டிருக்கின்றனர். இவர்கள் விதி விலக்குகளை ஒருவாறு அனுசரிப்பவராய், "ஊரோடு ஒக்க ஓடு" என்ற கொள்கையைக் கடைப்பிடித்தவர்கள். இவர்களிடம் கொலை, களவு, காமம், கள்ளுண்டல், பொய்ச்சாட்சி முதலிய பஞ்சமகா பாதகங்கள் பெரும்பாலும் காணப்படுவதில்லை; குடும்ப அன்பு, இனப்பற்று, நாட்டுப்பற்று முதலிய நற்குணங்களும் பக்தி, சத்தியம் போன்ற நற்குணங்களும் அம்மக்களிடம் காணப்படுவனவாம்.

இனி மூன்றாவதாக, மிகமிக அழகான இச்சையுடம்புகளும் அபூர்வமாக அந்த உறங்கும் கூட்டத்திடையே காணப்படலாம்.

அவை மிகச் சில்வாகவே இருக்கும். அவை உத்தம மக்கள் உடம்புகள்; அவற்றைப் படத்தில் காண்க. அந்த ஆன்மாக்கள் அறைக்குள் காணப்படுவதில்லை. அவர்களுடைய ஸ்தூல உடம்பு இளைப்பாற உறங்கிக் கிடக்கும்போது, அந்த மேன்மக்கள் தம் நுண்ணுடம்பில் பரோபகார வேலையின் பொருட்டு உலகம் முழுவதிலும் சுற்றித்திரிவர்; அல்லாது உணர்ச்சியின்றி அங்கு அறைக்குள் மிதந்துகொண்டிருப்பதில்லை. அவர்கள் உடம்புகளும் மிக அற்புதமாகப் பல அழகிய வர்ணங்களால் நிறைந்திருக்கும்; புறத்திருந்து புவர்லோக அலைகள் அவர்களைத் தாக்குவதற்குப் பதிலாக, அவர்கள் தாமாகவே உத்தம அலைகளை உண்டு பண்ணி உலகநன்மையின் பொருட்டு அவற்றை நாற்புறமும் வெளியே இடைவிடாது அனுப்பிக்கொண்டிருப்பர். அவை உயிர் வருக்கங்களுக்கே ஆசீர்வாதமாயிருக்கும். இம் மூவகை மக்களும், உறங்கிக்கிடக்கும் அன்ன உடம்பிற்கு ஏதாவது இடைஞ்சல் நேருமாயின் இமைகொட்டும் நேரத்திற்குள் உள்ளேவந்து புகுந்து கொள்வர்; அவர்கள் அச்சமயத்து எத்தனை ஆயிரக்கணக்கான மைல்களுக்கப்பா லிருப்பினும் சரியே, மனோவேகத்தில் அவர் வீடுவந்து சேருவர்.

இச்சையுடம்புகளில் இவ்வளவு அதிகமான வேறுபாட்டிற்குக் காரணமென்ன என்பதை இனிக் காண்போம். இச்சையுடம்பிலும் பிராண உடம்பிற் போலவே பிரம்மரந்திரம் தவிர ஆறு ஆதாரங்கள் அல்லது சக்கரங்கள் இருக்கின்றன. உண்மையில் இந்த ஏழு ஆதாரங்களும், இனிக்கூறப்போகும் நுண்ணுடம்புகள் எல்லாவற்றிற்குமே தனித்தனி உள்ளன. அவையாவும் பிராண உடம்பின் ஆதாரங்களை யொட்டி அவற்றின் மேலாக நிற்பதாலும், அந்த நுண்ணுடம்புகள் பிராண உடம்பைவிட ஒரு முழம் அகன்றிருப்பதாலும், அவை நுண்ணுடம்புகளின் வெளிப்புறத்தில் அல்லாமல் உள்ளாகவே அமைந்திருக்கின்றன

**4. சக்கரங்கள்.**

அவற்றிலும் முன் சொன்ன குண்டலினி, ஜீவசக்தி, பிராணசக்தி ஆகிய மூன்று சக்திகளும் வேலை செய்து அந்தந்த உடம்பிற்கு உருவத்தையும் உயிரையும் இயக்கத்தையும் கொடுக்கின்றன. இந்த மூன்று சக்திகளையும் அச்சக்கரங்கள் உறிஞ்சக்-

கூடிய அளவைப் பொறுத்தனவாம் அந்தந்த உடம்புகளின் வளர்ச்சி நிலைமை, உயர்வு தாழ்வு, சிறுமை பெருமை முதலியன. ஆன்மாக்களில் இழிந்தவரென்றும் கெட்டவரென்றும் யாரு-மில்லை. தாழ்ந்த மக்களென்றும் அதமரென்றுஞ் சொல்லப்படு-பவர் ஆன்ம வளர்ச்சியில் ஆரம்பப்படியிலுள்ளவர். அதனால் ஆன்மாக்களை உத்தமர், மத்திமர், அதமர் என்று குறைகூறும் முறையில் அழைப்பதற்குப் பதிலாக அவரைக் குழந்தைகள், வாலிபர், முதியவர் என்று பிரிப்பதே பொருத்தமுடையது. அவருள், குழந்தை ஆன்மாக்களுடைய இச்சையுடம்பு கட்டுப்-பட்ட வரம்புடைய முட்டை உருவமாக இல்லாமல், புகைச்சுருள் போலவும் பறந்துசெல்லும் மேகம் போலவும் மொத்தாகாரமாய் விளிம்பு சிதறி, உதிரி உதிரியாய் அலை வீசிக்கொண்டிருக்கும். அவர்கள் உறங்கும்போது, அவை அன்ன உடம்பிற்கு மேலாகப் புகைச்சுருள்போல அதிகமான உணர்ச்சியொன்றுமின்றி மிதந்து கொண்டிருக்கும்.

அன்ன உடம்பிலும் அவர்கள் நரம்புகள் மிகத்திண்மையான-வையாக இருக்குமாகையால், நுண்மையான உணர்ச்சிகள் அவர்கள் மூளைக்குள் புகுவதில்லை. எங்ஙனமெனில், பருப்படி-யான பம்பையாட்டம், வெறியாட்டம், விலையாட்டுப்போன்-றவை அவருக்குக் களிப்பை யூட்டுமே தவிர நுண்மையான பண்-களும் இசைகளும் விஞ்ஞானங்களும் அவருடைய நரம்புகளில் ஆழப்பட அலைகளை யுண்டுபண்ணுவதில்லை. பயத்தினால் மாடன் கோவில், காளி கோவில்களில் வழிபட முடியுமே தவிர, பக்தி யென்பதை அவர்கள் உணரமுடிவதில்லை. அவர் காமத்தைத்-தவிரக் காதலென்பதை அனுபவிக்க இயலாதவர். கள்ளுக் கிடைக்கக்கூடிய சமயத்து வெறுங் காப்பியை விரும்பார். கருவா-வாடு கிடைக்கக்கூடிய சமயத்துக் காராபூந்தியை விரும்பார். அது அவர்களுடைய உடலமைப்பே தவிர அவர்கள் குற்றமல்ல. அவர்கள் விகாசமுறையில் விலங்குகளுக்கு அடுத்த படியில் நிற்பதால், மிருகங்களைப் போலவே அவரும் விதி விலக்கென்பன-வற்றை அறியார். அதனால் தமக்கு முரட்டு சுபாவமுள்ள உணர்ச்சி அலைகள் கிட்டும் வண்ணம் அவர்கள் பஞ்சமா பாதகங்-களைச் சிறு பிள்ளைகள்போல யாதொரு தயக்கமுமின்றி இயற்-

றுவர் ; தமோகுண உணவுகளும் குரூரமான செயல்களும் உடலை வருத்தும் ஆட்டபாட்டங்களுமே அவர்களுக்கு உயிர்வாழ்க்கை உணர்ச்சிகளைக் கொடுக்கவல்லன. அம்மக்கள் உலகில் ஆயிரக்கணக்கான முறை பிறந்துபிறந்து, தங்கள் வளர்ச்சிக்கு ஆவசியப் படுகின்ற பஞ்சமா பாதகச் செயல்களை இயன்றபோதெல்லாம் இயற்றி, பதிலாக அடியும் மிதியும் பட்டுச் சிறிது சிறிதாகப் பகுத்தறிவு எய்தப்பெறுவர். அப்போது அவர்கள் உடம்பிலுள்ள நரம்புகளும் சிறிது பண்படுமாகையால், மூலாதாரத்திருந்து மிகக் குறைவாகவே வேலை செய்துவந்த குண்டலினியும் கூடுதலாக எழும்பி மற்ற ஆதாரங்களைச் சற்று அதிகமாக விரிய வைக்கும்.

இச்சையுடம்பிலுள்ள நாபி ஆதாரம் அவ்வாறு சிறிது கூடுதலாக விரியும்போது, புகைச்சுருள் போலச் சிதறி நின்ற இச்சையுடம்பு வரம்புடைய முட்டை யுருவம் பெற்றுத் தன்மேற் படும் புவர்லோக அலைகளை, நாம் காற்றின் சூடு குளிர்ச்சியை உணர்வது போலப் பொதுப்படையாக உணரும்; குண்டலினி ஈரல் ஸ்தானத்தை இயக்கும்போது, தூக்க நேரத்தில் ஆன்மா அன்ன உடம்பின் மேலாக மிதப்பதைவிட்டு இச்சையுடம்பில் அங்கிங்கு செல்லத் தொடங்கும். இதயச் சக்கரத்தைக் குண்டலினி விரிக்கும்போது, இறந்தவருடையவும் தன்னைப்போல உறங்குவோருடையவும், அதாவது அன்ன உடம்பைப் பிரிந்து இச்சையுடம்பில் தங்கி நிற்பவருடைய, இன்பதுன்பங்களை ஆன்மா மந்தமாக உணரும் ; கழுத்துச் சக்கரம் ஊக்கப்பட, அவர் பேசுவதைக் கேட்கும் ; நெற்றிச் சக்கரத்தால் புவர்லோகக் காட்சிகளையும் இறந்தவரையும் உயிர்த்திருப்பவருடைய இச்சையுடம்புகளையும் காணும் ; இவையனைத்தும் மனிதன் உறக்கத்தின்போது நடைபெறுவனவாம்; விழிப்பு நிலையில் அல்ல. இத்தகைய குழந்தை ஆன்மாக்கள் பட்டுப் படிக்கும் ஆன்மாக்களெனப்படுவர்.

இவர்கள் நெடுங்காலம் பிறந்து பிறந்து முன்னேறி, வாலிப நிலையை அடையும்போது மத்திமர் என்னும் நிலையை எய்துவர் ; அப்போது இதுவரை பட்டுப் படிக்கும் குழந்தை ஆன்மாக்களாக இருந்தவர் கேட்டுப் படிக்கும் வாலிப ஆன்மாக்களாவர். பின்

பல பிறவிகளுக்கப்பால் முதியோர் நிலையெய்திச் சிற்றின்பங்களை வெறுத்தும் ஒதுக்கியும் பேரின்பத்தைப் பெரிதும் விரும்பியும் முத்தி நெறியில் நடக்கத் தொடங்குவர். அப்போது அவர் உத்தம மக்களாய்ப் பார்த்துப் படிக்கும் ஆன்ம நிலையில் நிற்பர். இவ்விதம் ஆன்மாவின் அறிவு இச்சை செயல்கள் பண்படப் பண்பட இச்சையுடம்பும் பண்பட்டு வருவதாலேயே, பலபல விதமான தரங்கள் அவ்வுடம்பின் அமைப்பில் காணப்படுவது.

இனி, நமது ஊனக்கண்ணுக்கே உலகிலுள்ள எல்லா நிறங்களும் புலப்படுவதில்லை. ஓவியர் காணும் நுண்ணிய நிறங்களை மற்றப் பெரும்பாலார் காண்பதில்லை. அம்மாதிரியே உலகிலுள்ள ஓசைகளும் மணங்கள் முதலியவைகளும், எல்லாம் நமக்குப் புலப்படாமலும் எல்லோருக்கும் ஒருப்போலப் புலப்படாமலும் இருப்பதை அறிவுடையோர் நன்கறிவர். அதற்குக் காரணம் மனிதருடைய மெய் வாய் கண் மூக்குச் செவிகளின் பண்பாட்டிலுள்ள ஏற்றத்தாழ்ச்சியேயாம். நமது ஊன உடம்பே இவ்விதம் பக்குவமடையா திருக்கும்போது, சூட்சும உடம்புகளின் நிலையைச் சொல்லவும் வேண்டுமா? இரவில் உறங்கும்போதுள்ள அனுபவங்கள் பகலில் ஞாபகத்திற்கு வராதிருப்பதற்கும், அங்ஙனம் வருவனவும் பெரும்பாலும் அசம்பாவிதமான கனவுகளாகவும் இயற்கைக்கு விரோதமான நிகழ்ச்சிகளாகவும் இருப்பதற்கும் இச்சையுடம்பின் இவ்வளர்ச்சிக் குறைவே காரணமாகும்.

இச்சையுடம்பு பூரணநிலையடைந் திருப்பவருக்குங் கூட உறக்கத்து நிகழ்ச்சிகளை அதாவது கனவு நிகழ்ச்சிகளை, நடந்தபடியே, அதாவது உள்ளது உள்ளபடியே நினைவுக்குக் கொண்டு வருவது எளிய காரியமல்ல. பிராண உடம்பிலுள்ள சக்கரங்களுக்கும் இச்சை யுடம்பிலுள்ள சக்கரங்களுக்கும் இடையே வட்டமான மெல்லிய ஜவ்வுபோன்ற அணுவலையொன்று பரவியிருப்பதால், அது நம் கனவைப் பூரண நனவாக்கத் தடையாக இருந்துகொண்டிருக்கும். விலையுயர்ந்த பட்டுச்சேலை யொன்றைப் பொதிந்து வைத்திருக்கும் சல்லாத்துணிமூலம் அதனைப் பார்க்கும் போது, அதன் பூரண அழகு நம் கண்ணுக்குப் புலப்படுவதில்லை, அம்மாதிரியே இந்த வலையின் வேலையும் உள்ளது. யோக முயற்சி-

யால் அந்த அணுவலையைப் பண்படுத்திக் கண்ணாடிபோலத் துலக்கி, இருஉடம்புச் சக்கரங்களையும் இடையீடின்றி ஒன்று பிணைக்கும்போது, அவருக்குக் கனவு நனவென்ற வேறுபாடு முழுவதும் நீங்கிவிடும். அவர் பகலில் கண்விழித்திருக்கும்போதே பூலோகத்தைக் காண்பதுபோல புவர்லோகத்தையுந் துலக்கமாகக் காண்பர்; மரித்தவருடன் உரையாடுவர்; அவருக்குப் பகல் இரவென்பதில்லை; உயிரோடிருப்பவர், இறந்தவரென்பதும் இல்லை. இந்த ஆற்றலைப் பெறுவதற்கு ஒரு சுருக்க வழி யோகப்பயிற்சி; அது ஒரு செங்குத்தான கடும்பாதை; பக்குவமில்லாதவருக்கு ஆபத்தானது. அவ்வித முயற்சியின்றியே ஒவ்வொரு மனிதனும் இந்த ஆற்றல்களைக் காலக்கிரமத்தில் அடைந்தே தீருவான். ஆனால் அது சுற்றுப்பாதை வழியாகப் பல யுகங்கள், பிறவி-களுக்குப்பின் அடையப்படுவது; அப்பாதை மிகமிகத் தாமச-மானது, நாம் பெரும்பாலார் இன்று பின் பற்றுவது, அபாய மற்றதுமாம். இப்பாடத்தில் கூறப்படுவனயாவும் இச்சையுடம்பி லுள்ள ஆதாரங்களைப்பற்றியன என்பதை ஞாபகத்தில் வைத்துக்-கொள்ளவேண்டும்.

மரணத்தருவாயில் பலர், இறந்துபோன தம் கணவர் மனைவி பெற்றோர் பிள்ளைகள் முதலியோர் வந்து தம்மை அழைப்பதாகக் கூறுவதை அனேகர் கேட்டிருப்பர். இதில் உண்மையில்லாமல் இல்லை. இறந்துபோனவர் பெரும்பாலும் அவரவர் வீட்டையும் உற்றார் உறவினரையுஞ் சுற்றியே திரிந்துகொண்டிருப்பர். அதனால் அந்த உறவினரில் யாருக்காவது மரணம் நெருங்கும்-போது, அந்த இறந்துபோன அன்பர்களே பிணியாளியின் இச்சையுடம்பின் மூலம் அதனை முன்னதாக அறிவர்; அங்ஙனம் அறிந்தது முதல் அவரைத் தம் உலகிற்கு வரவேற்க அவரைச்-சுற்றிக் குழுமி நிற்பர். இது நாம் எல்லோருக்கும் நேரிடுவது. மனிதனுக்குச் சாவு நெருங்கும்போது அவனுடைய பிராண உடம்பிலுள்ள ஆதாரங்களும் அவற்றின் ஆர்க்கால்களும் நெகிழ்ச்சியடையும் என்று மேலே கூறப்பட்டது. அதனால் இச்சையுடம்பில் பிராண உடம்பாலேற்படும் திரை மறைவு சிறிது மெல்லிதாகவே, இச்சையுடம்பின் பார்வை சிறிது துலங்கு-கின்றது; அப்போது சாதாரண காலத்தில் மரித்துப்போன தம்

பந்துக்களைக் காணுதிருந்த நோயாளி, அச்சமயம் அவர்களைச் சிறிது விளக்கமாகக் காணத் தொடங்குகின்றான். வேறு பல நோயாளிகள் அந்தியகாலம் நெருங்கும்போது இறந்துபோன உறவினரைக் கனவில் அடிக்கடி காண்பதுவும் இக்காரணத்தாலேயாம்.

5. இச்சையுடம்பைப் பேணும்முறை.

இச்சையும் அது சம்பந்தமான எண்ணமும், சேர்ந்தே தொழிற்படும்; அவையிரண்டும் தொழிற்படும் விதிகளும் ஒன்றே; அதனால் இச்சையுடம்பு தொழிற்படும் முறைகளைப் பின்னல் மன உடம்புப் பாடத்தில் சேர்த்துக் கூறப்படும். இச்சையுடம்பின் மேன்மையும் தாழ்மையும், நாம் உண்ணும் உணவுகளையும் எண்ணும் எண்ணங்களையுமே அதிகமும் பொறுத்திருப்பதால் அதன் நிலை ஒரு புறம் ஸ்தூல உடம்பையும் மற்றொருபுறம் மன உடம்பையும் பெரிதும் பொறுத்ததென்றே கூறல்வேண்டும். "இனம்இனத்தோடே, வெள்ளாடு தன்னோடே" என்பது மூதுரை. அதனால் தமோகுண உணவை உண்பவரிடம், புவர்லோகத்திலும் தமோகுணப் பொருள்களே அவர்கள் இச்சை யுடம்பில் வந்து சாரும்; அவற்றிலிருந்து மிகவும் இழிவான இச்சைகளே பிறக்கும்; அமைதியின்மையும் மனக்குழப்பமுமே அம் மக்கள் காணும் பலன். அத்துடன் சூட்சுமமாகவும் பல இடைஞ்சல்களையும் தொல்லைகளையும் அவர்கள் சம்பாதித்துக் கொள்வர். ஏனெனில், அத்தன்மையுள்ள உடம்புகள் வெளியே அனுப்பும் தமோகுண அலைகள், இறந்துபோன தமோகுண மக்களையும், குடி கொலை காமம் முதலியவற்றில் முழுகிக்குளித்து அவைகாரணமாக மரித்தோரையும், மற்றும் சிலவகை அருவருப்பான (Nature spirits) பூதகணங்கள், கூளிகள், குறளிகள், குட்டிச்சாத்தான்களையும் தம்மிடம் கவர்ந்து இழுக்கும். அவை அத்தமோகுண மக்களையண்டி, அவருடைய தீய ஒழுக்கத்தில் தாமும் திளைத்து, அவரை மேலெழவொட்டாமல் தடுத்து நிற்பதோடு மேலும் தீயவழிகளிலேயே அவரை ஏவும். அதனால் இந்த உணவினங்களும் உயிரினங்களும் தமோகுண எண்ணங்களைத்தாமும் உண்டுபண்ணுவதோடு, அண்டினவருடைய இச்சை-

யுடம்பின் தமோகுணத் தன்மையையும் மேன்மேலும் வலுப்படுத்தும்.

அன்றி ஒருவன், உத்தம சத்துவ உணவையே உட்கொள்பவனு யிருந்தாலும் காமக்குரோத லோபங்கள், சிற்றின்ப ஆசைகளைப் பற்றியே சதா எண்ணிக்கொண்டிருப்பானுனால், அவையும் தமோகுண அலைகளை யுண்டுபண்ணி அவற்றின்மூலம் இச்சையுடம்பிலுள்ள தமோகுணப் பொருள்களை விருத்தி பண்ணும், அவனைத் தமோகுண நடையிலும் தூண்டி அல்லலுக்குள்ளாக்கும் அவ்வாறு அவனுடைய நினைவுகளும் ஆன்ம முன்னேற்றத்திற்குத் தடையாகவிருக்கும். அதனுலேயே இச்சையுடம்பானது ஒருவன் உண்ணும் உணவு, எண்ணும் நினைவு ஆகிய இருபக்கங்களிலுமிருந்து பாதிக்கப்படுமென்று மேலே கூறப்பட்டது

அம்மாதிரியே ரஜோகுண உணவும், சுயநலத்திற்காக ஊரோடு ஒத்துவாழும் ஒழுக்கமும் அவற்றை அனுசரித்த நினைவுகளும் இச்சையுடம்பை மத்திம நிலையில் வைத்திருக்கும். சத்துவகுண ஆகாரமும் உத்தம எண்ணங்களும் பக்தி அன்பு முதலிய பரோபகாரச் சிந்தனைகளும் இச்சையுடம்பைத் தூயதாக்குவதோடு, புறத்துள்ள தூய இச்சை அலைகளையும் உத்தம பூதகணங்களையும் உயர்ந்த எண்ண உருவங்களையும் வசீகரித்துக் கவர்ந்து, பக்தி, அன்பு, பச்சாதாபம் முதலிய உணர்ச்சிகளில் அம்மனிதனை நிலைக்கச்செய்து அவனுக்கு ஆனந்தத்தையூட்டும். நமது இச்சையுடம்பின் தன்மை நாம் இறக்கும்போதிருக்கும் நிலையிலேயே திரும்பப் பிறக்கும்போது நமக்கு அமையுமாகையால், உலகில் வாழும்போதே ஒவ்வொருவரும் தம்தம் இச்சையுடம்பைச் செம்மைப்படுத்த வேண்டிய ஆவசியம் நன்கு அறியப்படல்வேண்டும். உத்தம இச்சையுடம்பின்றி மனச்சாந்தியோ இன்பவாழ்க்கையோ ஒருவனுக்கு ஏற்படுவது கூடாத காரியம். பன்றி இறைச்சியையும் பனங்கள்ளையும் வயிறுபுடைக்க உண்பவரும், அழுக்கு மனத்தில் எப்போதும் ஆழ்ந்திருப்பவரும் பார்வைக்கு இருகால் மக்களாகக் காணப்படினும், மனப்பண்பில் இருகால் மாக்களாகவே (மிருகங்களாகவே) இருப்பர்.

பாடம் 11.

## மனிதன்—மன உடம்புகள்.

ஒவ்வொரு மனிதனுக்கும் ஏற்பட்டுள்ள ஏழு உடம்புகளில், அன்னஉடம்பு, பிராணஉடம்பு, இச்சையுடம்பு என்ற மூன்றும் இதுவரை கூறப்பட்டன. இனி அவனுடைய உருவமனஉடம்பு, அருவமனஉடம்பு என்ற வேறிரண்டு உடம்புகள் கூறப்படும். அன்ன-

1. முன்னுரை.

உடம்பும் பிராணஉடம்பும் பூலோக சப்தபூதங்களால் சமைக்கப்பட்டு, பூலோக வேலையைச் செய்வதற்கு உதவுகின்றன. இச்சையுடம்புகள் புவர்லோக சப்தபூதங்களால் ஆக்கப்பட்டு, புவர்லோக வேலைக்குரிய கருவிகளாயிருக்கின்றன. அடுத்த உருவமன-உடம்பும் அருவமனஉடம்பும் மனஉலக சப்தபூதங்களால் படைக்கப்பட்டு அறிவின் வேலையைச்செய்யுங் கருவிகளாக மனிதனுக்கு அமைந்திருக்கின்றன. அறிவானது கடல், மலை, காடு, வீடு போன்ற உருவங்களை நினைக்கும் அறிவென்றும், அழகு, அன்பு, அருள், ஆண்மைபோன்ற அருவங்களை நினைக்கும் அறிவென்றும் இருவகைப்படும். மேற்சொன்ன உருவங்களைப்பற்றி மனம் நினைக்கும்போது அந்த உருவங்கள் அம்மனிதனுடைய நெற்றிக்கு நேரே மிதந்துகொண்டிருக்குமாகையால், அந்நினைவுகளை சாதாரண யோகக்காட்சியரும் எளிதில் கூறிவிடுவர். ஆனால் அருவ நினைவுகள் உண்டாகும்போது, அங்ஙனம் உருவங்களும் வர்ணங்களும் அலைகளும் தோன்றுமாயினும் அவற்றை விளக்குவது அத்தனை எளிய காரியமல்ல. (எண்ண உருவங்கள் படம் பார்க்க.)

இனி, மனஉலக சப்தபூதங்களில் கட்டிப்பொருள், நீர்ப்பொருள், வாயுப்பொருள், ஆகாயப்பொருள் இந்த நான்கையும் கொண்டது சுவர்லோகமென்றும், எஞ்சிய நுண்ணாகாயம், திரட்டணு, அணு என்ற மூன்று தத்துவங்களையும் கொண்டது மகர்லோகமென்றும் அழைக்கப்படுகின்றன. இவற்றுள் சுவர்லோகம் உருவநினைவுக்கிடம்; அந்நினைவைச் செய்யுங்கருவி உருவமன உடம்பு; அது சுவர்லோகத்திற்குரிய நான்கு பூதங்களால் மாத்திரம் ஆக்கப்பட்டிருப்பது. அருவ நினைவுக்கிடம் மகர்லோகமாம்; அந்நினைவைச்செய்யுங்கருவியே அருவமன உடம்பு; அது மகர்லோ

க்ப்பொருள்களால் மாத்திரம் ஆக்கப்பட்டிருக்கும். சுவர்லோகம் உருவமன உலகமென்றும் கூறப்படும்; பெட்டிசட்டி போன்ற உருவங்களைப்பற்றி நாம் நினைக்கும்போது உண்டாகும் உருவங்களும் அலைகளும் சலனங்களும், அந்த சுவர்க்கலோகப்பொருளிலேயே காணப்படும். அவற்றிற்குரிய மாறுதல்களும் பலன்களும் உண்டாவதும் உருவமன உடம்பிலேயே. அம்மாதிரியே மகர்லோகம் அருவமன உலகமாம்; அருவ எண்ணங்கள் அங்கு அலைகளைப்பரப்பும், அருவமன உடம்பிலும் மாறுதல்களைக்காட்டும். "அழகு என்று சிந்திக்கும்போது அது அருவமனவேலை; அழகிய பெண்ணொருத்தியைப்பற்றி நினைக்கும்போது அது உருவமனவேலை. அனேகமான பேர்களுக்கு அருவமனஉடம்பு முட்டையுட் கருப்போல வித்துப்பருவமாய்ச் செயலற்றுக் கிடக்கின்றபடியால், அழகிய பொருளையின்றி அழகு என்பதொன்றை நாம் நினைக்கவும் வல்லமையற்றிருக்கிறோம்.

நாம் இப்போது இருக்கும் இடத்திலேயே சப்த உலகங்களும் நம்மைச்சுற்றி நாலா பக்கத்திலும் பரந்து வியாபித்திருக்கின்றன எனபதை நாம் மறந்துவிடக்கூடாது. அதனல் அவ்வுலகங்களில் வேலை செய்வதற்கு நாம் இருக்கும் இடததைவிட்டு வேறு எங்கோ செல்லவேண்டியதில்லை. இருந்த இடத்தில் இருந்துகொண்டு சப்த உலகங்களிலும் விவகரிக்கலாம்; அன்றி இப்பூமியில் அவசியத்திற்கேற்றபடி இடம்விட்டு இடம் பெயர்ந்தும் நாடுவிட்டு நாடுபோயும் வேலை செய்வதுபோல, அந்த ஏழு உலகங்களிலும் வெவ்வேறிடங்களுக்குச்சென்றும் வேலை செய்யலாம். ஆயினும் பூ, புவர், சுவர் இந்த மூன்றுலகங்களே நாம் மனித வர்க்கத்தின் தற்காலப் பக்குவநிலையில் நமக்குப் பள்ளிக்கூடங்களாகவும் நாம் உபயோகிக்கத்தக்க உடைமைகளாகவும் இருப்பவை. மகர்லோகத்தில் உணர்வோடு வேலைசெய்யும் பக்குவம் இன்று பதினயிரத்தில் ஒருவருக்குக்கூட இல்லையென்னலாம். அதனல் பெரும்பாலான மக்கள் உயிரோடிருக்கும்போது விவகரிப்பதும் வேலை செய்வதும் இந்த மூன்று உலகங்களிலேயே; இறந்தபின் திரும்பப் பிறக்கும்வரையில் தங்கியிருப்பதும் புவர்லோக சுவர்லோகங்களிலேயே. இந்த மூன்று உலகங்களிலேயே மனிதன் இன்பதுன்பங்களை அனுபவிக்கிறன்; இந்த மூன்றடுக்குமேடை

வாழ்க்கைப்பள்ளியிலேயே அவன் பட்டுப்படிக்கின்றான், பார்த்-துப் படிக்கின்றான், கேட்டுப் படிக்கின்றான்; அவற்றின் மூலம் தன் அறிவு இச்சை செயல்களைத்திருத்தியமைக்கின்றான், பண்படுத்துகின்றான், விருத்திபண்ணுகின்றான். முதலாவது சுயநலத்தில் தொடங்கி, அதன் பலன் துன்பமாவதைப் பல பிறவிகளில் அனுப-வத்தாலறிந்து, அதனைச்சிறிது சிறிதாக மாற்றிப் பின் உற்றார் உற-வினர்மீது அன்புருவாகி, அதுவும் கலப்பற்ற இன்பமாகாததைக் காலக்கிரமத்தில் கண்டு, அதன்பின் எல்லா உயிரினங்கள் மீதும் வேற்றுமை பாராட்டாத அருளுருவாகும்படிப் படிப்படியாகப் பல பிறவிகள் மூலம் தன்னை மாற்றியமைக்கின்றான். அப்போது அவனுடைய அருவமன உடம்பும் மற்ற மேலுடம்புகளும் வளர்ச்சியுற்று அவன் மகர்லோகம் முதலிய மேலுலகங்களில் சஞ்சரிக்க வல்லவனாகின்றான். அன்றே அவன் இறைவனோடு ஒன்றி நிற்கும் முடிவான நிலையை எய்துகின்றான். "அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே" என்று திருமூலர்கூறிய நிலையே அது. இதுவே பேரின்ப நிலை. இந்த நிலையை அறிகுறியாக அறிவிப்பதே பிள்ளையாருக்குத் தேங்காய் விடலை எறிவது. பக்தி-யுடன் ஆலயஞ்சென்று இறைவனைத்தொழுது வெளியே வருப-வன், தான் இறைவனருளாலும் பிரசாதத்தாலும் விடுதலை பெற்ற-தற்கு அடையாளமாக, வெளியே வந்து பிள்ளையாருக்கு விடலை-யெறிகின்றான். மூன்று கண்களையுடைய மூட்டைக்கொண்ட தேங்காய் ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களால் அனாதியாகவே கட்டுப்பட்டிருக்கும் ஆன்மாவை விளக்கும். காயை வீசி உடைத்துச் சிதறுவது அம் மலக்கட்டை அறுத்துத் தன்னலத்தை அறவேநீக்கி ஆன்மாவை இறைவனுக்கு அர்ப்-பணம்பண்ணி இறைபணியில் ஈடுபடுவதைக்காட்டுவதால், சிதற-விட்ட தேங்காயைத் தானே திரும்ப எடுப்பது குற்றம்; சிதறிய துண்டுகளைத் தாம் பொறுக்கிப் பிறருக்குக்கொடுப்பதுவும் குற்றம். ஏனெனில் துண்டுகள் பெரிதும் சிறிதுமாகவேயிருக்கும்; அவற்-றைப் பகிர்ந்து கொடுக்கும்போது, சிலருக்குப் பெரிய துண்டு-களும் சிலருக்குச் சிறிய துண்டுகளுமாகக் கொடுக்காமல் தீராது. அது வேற்றுமை பாராட்டுவதாக முடியுமாகையால், அருளான்-மாவுக்கு அது குற்றமாகும். அதனால் விடலையைப் பொறுக்கு-வோருடைய நல்வினை தீவினைக்குத் தக்கபடி பெரிதுஞ் சிறிது-

மாக அவரவர் கைக்கு அகப்பட்டதை எடுத்துக்கொள்ளும்படி விட்டுவிடுவதே முறையாகும். அதுவே ஆலயங்களில் நடைபெறுவதும். விடலை சிதறுவதின் வேறு பல பொருள்களை மேலே காண்க.

உருவமனஉடம்பு, அருவமனஉடம்பு இரண்டின் வடிவங்களும் நிறங்களும் அவற்றின் வளர்ச்சியையும் தன்மையையும் காட்டுவனவாயிருக்கும். இவற்றுள் உருவமன உடம்பைக் குறிப்பது ஆலயத்தில் 4.4.4.4. என்ற பிரகாரம். இந்த உடம்பும் இச்சையுடம்பைப்போலவே கோழிமுட்டை வடிவமாயிருக்கும்; சுவர்லோகப் பொருள்களாலாக்கப்பட்டிருக்கும். அந்தப்பொருள்கள் பூலோக, புவர்லோகப் பொருள்களைவிட மிக நுண்ணியனவாகையால், இந்த உடம்பு, அன்ன உடம்பையும் பிராண உடம்பையும் இச்சையுடம்பையும் ஊடுருவி, அவற்றின் உள்ளும் புறமும் வியாபித்திருக்கும். கீழுலகங்களைப்போலவே சுவர்க்கலோகப் பூதங்களும் தத்துவங்களும் மாயைக்குரியதான சத்துவம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களையும் உடையனவாகையால், அவற்றுள் தமோகுணப் பொருள்களால் ஆக்கப்பட்டுள்ள உருவமன உடம்புகள் கெட்ட எண்ணங்களையும் தீய நினைவுகளையும் இச்சைகளையுமே அம்மனிதரிடம் உண்டுபண்ணும். அவர் நல்லெண்ணங்களையும் உணர்ச்சிகளையும் விரும்பினாலுங்கூட, அவற்றைத் தொழிற்படவிடாமல் அந்த உடம்புகள் தடுத்து நிற்கும். அவ்விதமான தீய உடம்புகள் கறுத்து இருண்ட நிறங்களையுடையனவாய்ப் பார்வைக்கு அருவருப்பாயிருக்கும். அம்மக்கள் எண்ணங்களெல்லாம், முழுவதும் சுயநலங்கொண்ட இழிசெயலுக் குரியனவாகவேயிருக்கும். அவர் மிகக் கடுமுயற்சி செய்து அந்த உடம்புகளைச் சிறிது சிறிதாக மாற்றி அமைத்தே ஏகதேசமாக நல்லோராக முடியும்.

2. அமைப்பு.

சுவர்லோகத்து ரஜோகுணப் பொருள்களால் ஆக்கப்பட்ட உடம்புகள் அவற்றிற்குரிய நிறங்களைக்காட்டி நிற்கும். அவையும் பார்வைக்கு அழகாயிருப்பதில்லை. அவ்வுடம்புகளின் மூலம் காமக் குரோத லோப மோக சம்பந்தமான எண்ணங்களையே

எளிதில் வெளியிடமுடியும். சத்துவ குணங்கொண்ட உருவமன உடம்புகள் மிக அழகிய நிறங்களையும் இளவர்ணங்களையும் காட்டி ஆயிரஞ் சூரியன்போல ஒளி வீசிக்கொண்டிருக்கும். அவ்வுடம்பை அண்டுவோக்கு மற்ற மனிதருக்கும் வனவிலங்குகளுக்கும் ஒரு மன நிம்மதியையும் மகிழ்ச்சியையும் கொடுக்கும்; அக்குணங்களைக்கொண்ட வல்லமை வாய்ந்த எண்ண அலைகளை அவ்வுடம்புகள் இரவும் பகலும் இடைவிடாது நாற்புறமும் பரப்பிக்கொண்டேயிருக்கும். இதுவே சத்சங்கத்தின் உட்கருத்து; அவர் வாயிலிருந்து பெறும் வெறும் படிப்பினை மாத்திரமல்ல.

உத்தம மக்கள் என்பாரிடம் இன்றியமையாது காணப்பட வேண்டிய உயர்குணங்கள் ஐந்தாகும். அவை பகுத்தறிவு, அறிவுடைமை, பக்தி, அன்பு, பச்சாதாபம் என்பனவாம். இவ்வைந்தையும் உடையாரிடம், மற்ற நற்குணங்களெல்லாம் இவற்றை அடிப்படையாகக் கொண்டு தாமே பிறக்க வல்லன. அதனுல் உத்தம மக்களுடைய உருவமன உடம்பில், முறைப்படி ஐந்து நிறங்களே ஒளிவீசித் திகழ்ந்து கொண்டிருக்கும். அவர் தலைக்குமேல் பகுத்தறிவையும் பரமார்த்த விருப்பையும் உணர்த்தும் கரு (வயலற்) நீலமும், தலையைச்சுற்றித் தோள்வரை அறிவையுணர்த்தும் அழகிய மாற்றிலாச் செப்பொன்னிற மஞ்சளும், மார்பைச்சுற்றி பக்தியை விளக்கும் புனிதமான ஆகாய நீல ஊதா நிறமும், இடுப்பைச்சுற்றி அன்பை விளக்கும் அழகிய ரோஸ் இளஞ்சிவப்பும், அதன் அடியில் கருணையையும் பச்சாதாபத்தையும் காட்டுவதாகிய இளம்பச்சை நிறமும் ஒளிவீசிப் பொலிந்து கொண்டிருக்கும். மத்திமர், அதமரிடம் இவ்விதம் தூய நுண்ணிய நிறங்களுக்குப் பதிலாகப் பகுத்தறிவுநிறம் இல்லாமலும், அறிவு மந்தமான மஞ்சளாகவும் பெருமைகலந்த ஆரஞ்சி நிறமாகவும், பக்தி பயத்தால் இருண்ட கறுப்படர்நததாகவும், அன்பு காமக்கடுஞ்சிவப்பாகவும், பச்சாதாபப் பச்சை நிறத்திற்குப் பதிலாகத் தன்னலத்தைக் காட்டும் தவிட்டு நிறங்களுமே அதிகமும் காணப்படும். அத்துடன், உத்தம உடம்புகளில் மேற்சொன்ன ஐந்து நிறங்களே அழகுடன் அதனதன் இடத்தில் ஒழுங்காக அலைவீசி நிற்பதுபோலல்லாமல், மற்ற இருவகை உடம்புகளிலும் பல பல

3. வேறுபாடுகள்.

நிறங்கள் சுழி சுழியாக உடம்பு முழுவதும் சிதறிக் கிடக்கும். அம்மக்களிடம் அறிவும் அன்பும் ஆற்றலும் வளர வளர, இந்த நிறங்கள் தூய்மையும் அழகும் பெறுவதோடு, பலபல சுழிகளாக உடம்பு முழுவதும் சுற்றித் திரிவதைவிட்டு அந்தந்த இடத்தில் நிரந்தரமாக நிலைத்து நிற்கும். பூலோக நிறங்களோடு ஒப்பிடும்-போது, புவர்லோக சுவர்லோக நிறங்களில் மிகமிக இருண்டவை-கூடக் கோடி சூரியப் பிரகாசமாகவே யிருக்கும். அதனால் அங்கு நுண்மை, மென்மை, திண்மை, கருமை என்பன அங்குள்ள தார தம்மியங்களைப் பொறுத்தனவாம்; இவ்வுலக நிறங்களோடு ஒப்-பிட்டல்ல.

இனி, அன்ன உடம்பும் பிராண உடம்பும், உலகில் எந்நாட்-டிற் பிறந்தாலும், எம்மக்களிடம் பிறந்தாலும், எத்தனை பிறவிக-ளெடுத்தாலும், தோற்றத்தில் மாத்திரமே வேறுபடுவதன்றி, அளவில் அதிகமாக வேறுபடுவதில்லை. அவ்வாறே இச்சை-யுடம்பும் யாவருக்கும் சுமார் பதினெட்டங்குலம் அன்ன உடம்-பைச்சுற்றி நாற்புரமும் மேலுங்கீழும் விரிந்திருப்பதன்றி, மற்று அளவில் வேறுபடுவதில்லை. பக்குவப்படாத ஆன்மாக்களிடம் அவை இருண்ட நிறங்களைக்கொண்ட புகைச்சுருள் போன்றும், மேன்மக்களிடம் அவை கட்டுப்பட்ட முட்டைபோன்று அழகிய வசிகரமான நிறங்களைக்கொண்ட வடிவமாகவும் இருப்பது, தோற்ற வேறுபாடேயன்றி அளவின் வேறுபாடல்ல. ஆனால் மனிதனுடைய உருவமன உடம்பும், இனிக் கூறப்படும் அருவ-மன உடம்பு, விஞ்ஞானமய உடம்பு, ஆனந்தமய உடம்பு ஆகிய-வைகளும் ஆன்மா பாரமார்த்திக பக்குவம் பெறப்பெற அவ்-விதம் உருப்பெற்றுப் பண்பட்டு இலங்குவதுடன், அளவிலும் வளர்ந்து விரிந்து கொண்டே போகும். முத்திநெறியில் கால் வைக்காத நமக்கு இந்த உடம்புகளெல்லாம் இச்சை யுடம்பைப்-போல நாற்புறமும் ஒருமுழம் விரிந்த முட்டைகளாகவே யிருக்கும். ஆனால் பகவான் புத்தர் உலகில் அவதரித்திருந்த போது அவருடைய மன உடம்பு மூன்று மைல் விஸ்தீரணங் கொண்டதா யிருந்ததாம். அதனால் அவர் ஞானவிளக்கம் செய்துவந்த காலத்து அவரைக் கேட்டிருந்தவரெல்லோரும் அவருடைய மனஉடம்புக்குள்ளாகவே உட்கார்ந்திருந்தனராம்.

அதுகாரணமாக அவர்கள் பக்குவம் மிகத்தீவிரமாய் முதிர, அந்த அவதார காலத்தில் பல்லாயிரக்கணக்கான மக்கள் ஜீவன் முக்த-ராயினரென்று கூறப்படுகின்றது. இந்த மூன்று மைலுக்கும் மூன்று முழுத்திற்கு மிடையே பலவித அளவுகள் கொண்ட உடம்புகள் பக்குவத்திற்கேற்ப இயற்கையில் காணக்கிடக்கின்றன வென்று நெற்றிக்கண் பார்வையுடைய யோகியர் கூறுகின்றனர்.

**4 சக்கரங்கள்.**

பிராண உடம்பிற் போலவே உருவமன உடம்பிலும் ஆறு-தாரங்களும் பிரம்மரந்திரமும் இருக்கின்றன; அவற்றின் வழி-யாகக் குண்டலினி, ஜீவசக்தி, பிராணசக்தி மூன்றும் சுவர்க்கலோகத்திற்குரிய அவற்றின் மேல்நிலைகள் மூலம் தொழிற்பட்டு அந்த உடம்பிற்கு உருவத்தையும் இயக்கத்தையும் கொடுக்கின்றன. என்றாலும் அந்த ஆதாரங்களை உருவமன உடம்பின் புலன்கள் என்பது பொருந்தாது. நமது ஸ்தூல உடம்பில் நாம் காண்பது கண்ணால் மாத்திரமே; கேட்பது காதால் மாத்திரமே. முகர்வது மூக்கால் மாத்திரமே; சுவைப்பது நாக்கால் மாத்திரமே. ஒவ்-வொரு புலனும் ஒரு வேலையை மாத்திரமே செய்வதோடு அதனையும் அரைகுறையாகவே செய்யும்; ஒலியின் சுவை நாவுக் கெட்டுவதில்லை. நிறத்தின் மணம் மூக்குக்கெட்டுவதில்லை. அதனால் உலகில் எதையும் பூரணமாக அறிய முடியாமல் அரைகுறை-யாகவே அறிய முடிகின்றது. ஆனால் சூட்சும உடம்புகளில் அவற்றின் ஒவ்வொரு அணுவும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்தையும் ஒருங்கே உணரும் ஆற்றலுடையன. அதனால் காண்பது, கேட்பது, முகர்வது, சுவைப்பது எல்லாம் உடம்பின் ஒவ்வொரு ஊசிமுனையிலும் உணரப்படும்; அதாவது உடம்பு முழுவதுமே காதுபோலக் கேட்கும்; கண்போலக் காணும்; மூக்குப்போல முகரும். அதற்குக் காரணம் யாதெனில், ஸ்தூல உடம்பில் ஐம்புலன்களிலுள்ள தாதுக்களும், தத்துவங்களும் உயிரணுக்களும் (Cells) அந்தந்த இடத்திலேயே பந்தப்பட்டு நிற்கின்றன; கண்ணிலுள்ளவை காதுக்குச் செல்வதில்லை; காதி-லுள்ளவை நாவிற்குச் செல்வதில்லை. அதனால் அவை ஒரு தனிப்-பட்ட பயிற்சி மாத்திரமே பெற்று சப்தபூத அலைகளால் ஏற்படும் ஏழு பலன்களில் ஒரு பலனை மாத்திரமே பிரதி பலிக்கக்கூடிய-

வையா யிருக்கின்றன. ஆனால் சூட்சும உடம்பிலுள்ள உயிரணுக்-களும் சப்தபூதங்களும் அவ்வுடம்பின் ஒரே இடத்தில் பந்தப்-பட்டு நிற்பதில்லை. கொதிக்கிற வெந்நீர் கீழும் மேலுமாகப் புரண்டு பாத்திரம் முழுவதும் சுழன்று வருவதுபோல, சூட்சும உடம்பிலுள்ள அணுக்களெல்லாம் உடம்பு முழுவதிலும் சுழன்று அலைந்து கொண்டேயிருக்கும். அவ்விதம் ஒவ்வொரு அணுவும் ஆறு ஆதாரங்களிலும் சென்று அவ்வவற்றிற்கேற்ற சலனங்களில் ஈடுபட்டுப் பண்படுவதால், ஒவ்வொரு அணுவும், அந்த அணுத் திரளாகும் உடம்பு முழுவதும், ஐம்புல வேலைகளை ஒருங்கே செய்யும் ஆற்றல் வாய்ந்தவையாயிருக்கின்றன. அதனால் மன உடம்பு யாதாமொரு பொருளைக் கவனிக்கும்போது அதனை உள்ளும் புறமும் அதன் தன்மைகள் முழுவதையும் ஒருசேர அறிவதைத் தவிர, அதன் நிறம் உருவம் வாசனை எனத் தனித்-தனியாக அறிவதில்லை.

அன்னமய, பிராணமய உடம்புகளிலிருந்து மனிதன் விவ-கரிக்கும்போது அது அவனுடைய நனவுநிலை அல்லது *சாக்கிர-நிலை எனப்படும். அவன் உறக்கத்தில் அவ்வுடம்புகளை விட்டு நீங்கித் தன் இச்சையுடம்பில் வேலை செய்யும்போது அது கனவு நிலையென்றும் சொப்பனநிலை யென்றும் கூறப்படும். அதிலும் நீங்கித் தன் உருவமன உடம்பில் விழித்திருப்பானானால் அது அவனுடைய சுழுத்திநிலை யென்னப்படும். ஆனால் இன்றைய மக்களில் பெரும்பாலாருடைய உருவமன உடம்புகள் குழந்தைப் பருவத்திலேயே இருப்பதால், நாம் ஆழ்ந்த உறக்கத்தில் சுழுத்தி நிலைக்குச் செல்லும்போது, அங்கு பாஷாணம்போல், அதாவது கல்லுப்போல மூடமாகவே உணர்வற்றுக் கிடப்பதாக யோகியர் கூறுகின்றனர். ஆனால் சுழுத்தி நிலையில் விழித்திருந்து வேலை செய்யக்கூடிய பெருமக்களும், சுவர்லோக வாசிகளாகிய தேவர்-களும், தம்முள் அளவளாவும்போது வகை வகையான அற்புத வர்ணங்களும் உருவங்களும் இன்னிசைகளும் நறுமணங்களும் ஒருங்கே கலந்து ஒருவரிடமிருந்து மற்றவரிடஞ் செல்வதும், அவரும் அத்தனையும் ஒருமித்துணர்ந்து அவ்விதமே திரும்பப் பதிலளிப்பதுவும், காணவல்லவருக்கு ஓயாத அற்புதக்காட்சியா யிருக்குமென்று அந்த யோகியரே கூறுகின்றனர். இவ்விதம்

மனத்துக்கு மனம் பரிமாறிக்கொள்ளும் முறையே தேவபாஷை யெனப்படுவது. தேவர்களுக்கு ஸ்தூல உடம்போ அதற்குரிய வாயோ இருப்பதில்லை.

பிராண உடம்பிலுள்ள ஆதாரங்களனைத்தும் பூரண மலர்ச்சி பெறும்போது அம்மனிதன் மலைக்குள் காணவல்லவனுகின்றான்; தரைக்குள்ளும் தெளிவாகக் காண்பான்; தொலையில் நடைபெறுவதை அறிவான், காண்பான், கேட்பான். அம்மாதிரியே இச்சையுடம்பிலுள்ள ஆதாரங்கள் பூரண மலர்ச்சி பெறும்போது, உறக்க நேரத்தில் முழு உணர்ச்சியுடன் அவன் வாழவல்லவனுவான். அந்நிலையில் அவனுடைய பிரக்ஞை புவர்லோகத்தில் இருக்கும். ஆயினும் அவ்விரண்டு உடம்புகளின் ஆதாரங்களினிடையே அமைந்திருக்கும் மெல்லிய ஐவ்வு அணுவலையானது பக்குவப்படுத்தப்பட்டு அந்த ஆதாரங்கள் ஒன்ருெடொன்று இணைக்கப்பட்டாலன்றி அவன் இரவில் செய்யுங் காரியங்களைப் பகலில் பூரணமாக நினைவுக்குக்கொண்டுவர மாட்டாதவனு யிருப்பானென்பது மேலே கூறப்பட்டுள்ளது. பின் அவனுடைய உருவமன உடம்பிலுள்ள ஆதாரங்கள் யாவும் பூரண மலர்ச்சி பெறும்போது, சுவர்லோகத்திலும் அவன் முழு உணர்ச்சியுடன் நன்கு விவகரிக்க வல்லவனுவான்; ஆனல் அந்த ஆதாரங்களும் இச்சையுடம்பின் ஆதாரங்களுடனும், பின் பிராண உடம்பிலுள்ள ஆதாரங்களுடனும மேலே சொன்ன படி தொடுக்கப்பட்டாலன்றி அவனுடைய சுவர்லோக விவகாரங்கள் அவன் மூளைக்கெட்டி அவனுடைய ஞாபகத்திற்கு வருவதில்லை. இவ்வாறு மனிதனுடைய பல உடம்புகளிலுள்ள ஆதாரங்களை ஒன்ருெடொன்று இணைப்பதற்குச் செய்யும் யோகப்பயிற்சி முறை சித்திநெறி என்னப்படும்; இம்முறையில் முத்தியடைபவர் வித்தகச் சித்தர்கள் எனப்படுவர். அவ்விதம் முத்தியும் சித்தியும் ஒரு சேரப்பெற்ற பலருள், ஒரு சிலர் உலகின் விகாச முறையை நடத்திவைக்கும் அதிகார முத்தராவர். அக்கூட்டத்துள்ளோரே உலகோருக்கு குருநாதர்களாகவந்து, பக்குவமுடையோருக்குப் பயிற்சி கொடுத்து, அவருக்கு ஆபத்து நேராத முறையில் அவரை யோக நெறியில் பழக்கி அவரைப் பூரண மனிதராக்குவர். ஆலயங்களில் நடைபெறும் திருவிழாக்களின் பல பொருள்களுள் ஒன்று, இந்த சித்தி நெறியாலாகும் ஆன்ம

முன்னேற்றமும் முத்தி நிலையுமாம். அன்றாட ஆலய வழிபாடும் அது அறிகுறியாக உணர்த்தும் ஒழுக்கத்தோடொட்டிய உலக வாழ்க்கையும், மனிதனை முத்தி நிலையிற் சேர்க்கும் சுற்றுப் பாதையாம். அது பொதுமுறை. ஆலயங்களின் சிறப்பு நிகழ்ச்சிகளாகிய கொடியேற்றத் திருவிழாக்களோ அவனை முத்தியிற் சேர்ப்பிக்கும் செங்குத்தான குறுக்குப் பாதைகளாம். அங்கு ஆச்சாரியர் கொடியேற்றுவது, குருநாதர் பக்குவான்மாக்களிடம் குண்டலினியை எழுப்புவதைக் குறிக்கும். முதல் திருநாளன்று அன்ன உடம்பும் பிராண உடம்பும் அவற்றின் ஆதாரங்களும் பூரண நிலையடையும். இரண்டாந்திருநாளன்று இச்சையுடம்பும், மூன்றும் நாள் அவனுடைய உருவமன, அருவமன உடம்புகளும் பண்பட்டுப் பொலிந்து விளங்கும். நான்காந் திருநாளில் அவனுடைய விஞ்ஞான உடம்பும், ஐந்தாம் நாளில் அவனுடைய ஆனந்தமய கோசமும் பூரணப் பிரக்ஞையுறும். அப்போது அவன் அன்பு அறிவு ஆற்றல் மூன்றிலும், மக்களும் தேவரும் மெச்சும் நிலை யெய்துவன், இறைவனோடு இரண்டறக்கலந்து நிற்பன், பிறப்பிறப்பைக் கடந்தவனாவான், பேரின்பப் பிழம்பாயமர்ந்திருப்பன், ஜீவன்முத்தனெனப் பேர் பெறுவன். அதனை விளக்குவதே ரிஷபவாகனக் காட்சியும் கருடசேர்வையுமாம். இந்த ஜீவன்முத்தருள் ஒரு சிலர், தாம் பிறவிப் பிணியைக்கடந்தவராயினும், உலகநன்மையின் பொருட்டு மாறி மாறி உலகிற் பிறந்து இறைவனுடைய விகாசமுறைத் திட்டத்தை யுகங்கள்தோறும் இங்கு நடத்திக்கொண்டிருப்பர். அவரே அதிகார முத்தரென்று அழைக்கப் படுபவர். அவருடைய திருக்கூட்டமே பழவடியார் கூட்டமென்றும் வித்தகச் சித்தர்கண மென்றும் அழைக்கப்படுவது. இவர்கள் ஆறாந்திருநாளன்று அதிகார முத்தருக்குரிய சில பேறுகளைப் பெறுவர். ஏழாம் நாளன்று அவர்கள் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலுக்கும் அதிகாரியாகின்றனர். அதனைக் குறிப்பதே அன்று இறைவன் பிரம்ம விஷ்ணு ருத்திராம்சங்களென்ற மூன்று மூர்த்தங்களாகப் புறப்பாடு செய்தல். ஏழுக்கு மேலுள்ள நிலைகள் சூரிய மண்டலத்திற் கப்பாற்பட்ட அண்டத்துக்குரிய நிலைகள். அண்டத்தின் உறுப்புக்களையும் உலகங்களையும் புவனங்களையும் உருப்படுத்திக் காட்டுவதே ரதம் அல்லது தேரோட்டம்.

இனி, இந்த உருவமன உடம்பு தொழிற்படும் முறையைச் சிறிது ஆராய்வோம். இந்த உடம்பும் இச்சை யுடம்பும் ஒரேவிதமான விதிகளுக்குட்பட்டே வேலை செய்வதால் இரண்டும் இங்கு ஒன்றாக வைத்தெண்ணப்படும்.

**5. வேலை செய்யும் முறை.**

(1) குடிப்பழக்கமுடைய ஒருவன் வேறு வேலையில் ஈடுபட்டிருக்கும்போது திடீரென்று கள்ளில் இச்சை கொள்கின்றான். இது ஒரு சாதாரணமான அநுபவம். அந்த இச்சை உண்டானவுடனே அவன் இச்சையுடம்பு முழுவதிலும் ஒரு புதிய சலனம் ஏற்படுகின்றது. அச்சலனம் அந்த உடம்பு முழுவதற்கும் அழுகல் இறைச்சிபோன்ற ஒரு அசங்கியமான நிறத்தைத் தற்காலிகமாகக் கொடுக்கின்றது.

(2) உலகில் தரை, தண்ணீர் இரண்டைத்தவிர மற்ற வாயு ஆகாயம் எல்லாம் நம்மைச்சுற்றி நாற்புறமும் மேலுங் கீழும் கடல் போலப் பரந்திருப்பதை நாம் அறிவோம். அம்மாதிரியே புவர்லோகமும் சுவர்லோகமும் நம்மைச் சுற்றி எல்லாப் பக்கங்களிலும் கடல்போலப் பரவியிருப்பதால் அவற்றைப் புவர்லோக, சுவர்லோகக் கடல்களென்றும், அவற்றுள் நாம் அமிழ்ந்து உள்ளே மிதப்பதாகவும் கருத்தில் வைக்கவேண்டும். மேற்சொன்ன கள் இச்சையால் ஏற்பட்ட சலனம் புவர்லோகக் கடலில் சலனங்களையும் அலைகளையும் கொந்தளிப்புகளையும் உண்டுபண்ண, அவை தம் வலிமைக்குத் தக்கபடி எட்டுந்தூரம பரவி அங்குள்ள எல்லா இச்சையுடம்புகளையும் தாக்குகின்றன.

(3) அவற்றுள், கள் இச்சையோ அவற்றிற்குரிய தமோகுணப்பொருள்களோ இல்லாத இச்சை யுடம்புகள், அவற்றை ஏற்காமல் உதறிவிடும். மற்ற உடம்புகள் அந்த அலைகளை ஏற்று அம்மக்களிடம் கள் இச்சையை உண்டுபண்ணும். அப்போது அவர்கள் இச்சையுடம்பிலும் அழுகல் இறைச்சி நிறமும், சுற்றியுள்ள புவர்லோகக் கடலில் அந்த இச்சைக்குரியதான அலைகளும் ஏற்பட்டு, அவை எதிரொலியாக வந்த வழியே திரும்பி முதல் குடிகாரனையே வந்து சார்ந்து, அவனுடைய தீய இச்சையை மேலும் ஊக்கப்படுத்தும். இவ்விதம் மாறி மாறிப் பந்தடிப்பது

போல இந்த இச்சைகளும் அலைகளும் குறுக்கும் மறுக்குமாகப் பாவாடி, கடைசியில் அம்மக்கள் கள்ளை அளவுக்குமிஞ்சி அருந்தி அலுத்த பின்னரே அவரைத்தாக்க மாட்டாது நிற்கும். எதுபோலெனில், ஒரு மடுவில் பெரிய கல்லொன்றை எறிந்தால் அது உடனே அலைகளை யுண்டுபண்ண, அவ்வலைகள் கரையைநோக்கி வட்டமிட்டுச்செல்லும். கரையைச் சென்று தாக்கியதும் எதிரலைகள் புறப்பட்டு, அவை மீண்டும் மடுவினுள் கல்லெறிந்த இடத்தை நோக்கிச்செல்லும். அவ்வாறு அவற்றின் வேகம் தீரும்வரை இங்ஙனம் மாறி மாறிச்செல்வதுடன், வழியில் நீரில் உள்ள செடி கொடி செத்தை முதலியவற்றிற்கும் அந்த அசைவைக்கொடுக்கும். ஆனால் பாறையோ நட்டுக்கல்லோ அவ்வலைகளின் பாதையில் இருக்குமாயின், அவற்றை அங்ஙனம் அசைக்க மாட்டாது போகும். அம்மாதிரியே மேலுலகத்து அலைகளும் சலனங்களுமாம். ஒரே மாதிரியான இயற்கை விதிகளே எல்லா உலகங்களிலும் நடை பெறுவன. தூய இச்சையுடம்புகள் இங்கு பாறைபோல்வன; அவை இவ் இழிந்த அலைகளுக்கு அசையாதும் எதிரொலிக்காதும் நிற்குமென அறிக.

(4) இதுவரை கூறப்பட்டது இச்சையின் பலன். இனி, ஒருவனுக்குக் கள்ளைக் குடிக்க வேண்டுமென்ற பசியுண்டான நொடியிலேயே, அவனுக்குக் கள்ளைப்பற்றிய எண்ணமும் எழுகின்றது. கள்ளைக் குடியாதவன் ஒருவன், அதாவது கள்ளை வெறுப்பவன் கள்ளைப்பற்றி நினைப்பானாயின், அவ்வெண்ணம் கள்ளுக்கலயம் அல்லது குடம்போன்ற ஆவியுருவெடுத்து அவன் உருவமன உடம்புக்குள் நெற்றிக்கு நேராகச் சிறிது நேரம் மிதந்து கொண்டிருந்து, அவன் அதை மறந்த சற்று நேரத்தில் புகைபோலக் கலைந்து உருவம் உலைந்து மறைந்துவிடும. மரம, மலை, வீடு, காடு என்ற எந்த உருவத்தை நினைப்பினும் இவ்விதமே நடைபெறும். அப்போது சூட்சுமப் பார்வையுள்ள ஒருவன் அம்மனிதனைக் காண்பானாயின், அவன் கள்ளைப்பற்றி நினைக்கின்றான், காடு மலைகளை நினைக்கின்றான், என்று கூறிவிடுவான். ஆனால் இச்சையும் எண்ணமும் ஒன்றாக நேரிடும்போது வேறொரு நிகழ்ச்சியும் நடைபெறுகின்றது. அதாவது கள்ளைப்பற்றிய இச்சையும் எண்ணமும் உண்டானவுடனே அம்மனிதனுடைய

இச்சையுடம்பு, உருவமன உடம்புகளிலிருந்து முன் சொன்ன அழுகல் இறைச்சி நிறத்தில் நண்டுக்கால்கள் போலவும், நட்டுவக்காலிக் கொடுக்குகள் போலவும், பல கொக்கிகளைக்கொண்ட அருவருப்பான உருவங்கள் வெளிக்கிளம்புகின்றன. இவை நாற்புறமும் சென்று, அங்குள்ள குடிகாரருடைய சூட்சும உடம்புகளில் குருவிக் கூடுகள் போலப் பற்றிக்கொண்டு தொங்கும். அதே நேரத்தில் இவனுடைய உடம்பும் காந்தம் ஊசிகளை இழுப்பதுபோல வெளியிலிருந்து இம்மாதிரி உருவங்களைத் தன்னை நோக்கி இழுக்க, அவையும் வந்து இவனைப் பற்றிக்கொண்டு இவனுடைய நுண் ணுடம்புகளுக்கும் மிக்க அருவருப்பான தோற்றத்தைக் கொடுக்கும். இந்த உருவங்கள் பேய்கள் போல மனிதனை விடாது பற்றி நிற்குமாகையால், அவற்றை எதிர்த்து உலைத்தெறிந்து, அவை தூண்டும் குடிப்பழக்கத்தை விட்டு நீங்குவது மிக மிகக் கடினமான காரியம். இவ்வித மக்களோடு நல்லோரும் குழந்தைகளும் அடிக்கடி நெருங்கி உறவாடுவதால், அக்குடியரிடமிருந்து இடைவிடாது கழிந்து கொண்டிருக்கும் அன்ன உடம்பு, பிராண உடம்பு, இச்சை உடம்புகளின் கழிவணுக்கள் இந்த நன்மக்கள், குழந்தைகளுடைய உடம்புகளிலும் சிறிது சிறிதாக வந்து ஒட்டிக்கொள்ளும்; அவ்வணுக்கள் திரளாகச் சேரும்போது அவற்றின் வாசனைப்பழக்கம் இவர்களுக்கு முதலாவது கள்ளிலுள்ள வெறுப்பைக் குறைத்துப் பின் அதனை அலக்ஷியம் செய்யவைத்து, அதன்பின் அதை விருப்பாக்கி முடிவில் அவரையும் குடியராக்கிவிடும். "பன்றிகூடச் சேர்ந்த கன்றும் மலந்தின்னும்," "தீயாரோ டிணங்கி யிருப்பதுவுந்தீது," என்று கூறப்பட்ட உண்மைகள் நடைபெறும் முறை இதுவே.

5. பிணநாற்றங் கண்டவிடத்துப் பிணந்திண்ணிப் பறவைகளும் நாய் நரிகளும் வந்து கூடும். துர்க்கந்தமுள்ள விடத்து ஈ, கொசு, தொற்றுநோய்க் கிருமிகள் முதலிய தாமாகவே வந்து மொய்க்கும். அம்மாதிரியே கள், கருவாடு, இறைச்சி முதலிய விற்கப்படும் இடங்கள் மிகவும் அருவருப்பான சிலவகைக் கூளிகளையும் (Nature Spirits) குறளிகளையும் யக்ஷிகளையும் குட்டிச்சாத்தான்களையும் புவர்லோகத்துள்ள சிலவகை அருவருப்பான

பூதகணங்களையும் தம்மிடம் கவர்ந்திழுக்கும். இவையாவும் மேற் சொன்ன மக்களைச் சுற்றிநின்று, அவர்கள் உண்டுபண்ணும் தீய அலைகளில், தண்ணீரில் குதித்தாடும் சிறுவரைப்போலத் திளைத்து விளையாடிக் கும்மாளம்போட்டு நீந்திக்களித்து நிற்கும். அதனால் அந்த அலைகளின் வேகங்கள் அதிகப்பட, அவ்விதம் ஏற்படும் தீமைகளுக்கு எல்லையே இல்லையென்று கூறப்படுகின்றது.

(6) கடைசியாக, உயிரோடிருந்த காலத்தில் குடி, கொலை, களவு, காமம் முதலிய கொடுஞ்செயல்களை தொழிலாகக் கொண்டிருந்தவர், இறந்த பின்னர் அந்த ஆசைகளுக்கு அங்கு அனுபவங் கிட்டாமையால் பிறர் மூலம் அவற்றை அனுபவிக்கும் பொருட்டு அத்தன்மைகளையுடைய மக்களை வளையவளையச் சுற்றி வருவர்; அன்றை இடைவிடாது தொடர்ந்து, சமயம்நேரும்போ-தெல்லாம் அவரிடம் அடங்கிக்கிடக்கும் கள்ளாசை, பெண்ணாசை பண ஆசை, பதவி ஆசை முதலியவற்றைத் தூண்டிக்கொண்டே யிருப்பர். அங்ஙனம் ஏவப்பட்ட மக்கள் அவற்றை அனுபவிக்கும் போது இந்த இறந்த மக்களும் அவருடைய சூட்சும உடம்போடு ஒன்றி நின்று, அங்கு ஏற்படும் தீய அலைகளை உறிஞ்சிக் களிப்பர். இது கையில் காசில்லாதவன் சந்தைகளிலும் சாராயக் கடை-களிலும் நின்று அங்கு எழும்பும் கள் வாடையையும் கருவாட்டு நாற்றத்தையும் உறிஞ்சிக் களிப்பது போலாம். அது பூரண திருப்தியைக் கொடாவிடினும், ஒரு புகலும் இல்லாதவருக்குக் கிடைத்தது போதுமென்ற தன்மையை ஒத்தது அது. நெற்றிக் கண் பார்வையை யுடையவர், பேய் போன்ற இம் மக்கள் கசாப்-புக்கடைகளில் வெட்டுண்டு கிடக்கும் ஆடுமாடுகளையும், அவற்றை வாங்க வந்து நிற்கும் மக்களையும், ஒட்டிக்கொண்டு எக்களிப்-பதைக்கண்டு, அருவருத்து மயிர்க்கூச்செறிவர். கள்ளுக் கடை-களிலும், சாராயக் கிடங்குகளிலும், வியபிசாரி விடுதிகளிலும், சூதாடும் இடங்களிலும், இம்மாதிரியான கோர மனித ஆவிகள் அங்காத்துத் திறந்தவாயும் செந்தழல் வீசும் கண்களுமாய் ஆசைக் கொதிப்போடு மிதந்துகொண்டு, அங்கு வருவோரைப் பிடித்-தாட்டி, அவர் மூலம் ஒரு சிறிது அனுபவம் பெறுவது பார்க்க வல்லவருக்கு மிகப் பயங்கரமாகவும் பரிதாபமாகவும் இருக்கு-மென்று நெற்றிக்கண் பார்வையுள்ள யோகியரால் கூறப்படு-

கின்றது. அவ்வாறே தற்கொலை செய்துகொள்வோரும் கொலைத் தொழிற் குரூரகுண முடையோரும், இறந்தபின்னும் பிறரை இயன்ற வரையில் அந்நெறியில் தூண்டிக்கொண்டே யிருப்பராம். மேற் சொல்லிய முறையிலேயே எல்லாவிதமான இச்சைகளும் எண்ணங்களும் வேலைசெய்வன. அவற்றுள் தீய இச்சைகள், எண்ணங்கள் மிகவும் அருவருப்பான நிறங்களோடும் உருவங்களோடும் வெளிப்படும். நல்லவை மிக அழகான உருவங்களாய், நிறங்களாய், இன்பத்தை யளிப்பனவாயிருக்கும். தீயோரிடம் தீய அலைகளும் எண்ணங்களும் வந்து ஒட்டி அவரை மேலும் மேலும் கீழோராக்கும். நல்லோரை நல்ல எண்ணங்களும் அலைகளும் வந்து ஒட்டி அவருக்கு ஊட்டங்கொடுத்து அவரைமேலும் மேலும் மேன்மக்க ளாக்கும். சுயநல விருப்பங்களெல்லாம் கொரட்டி யுருவங்களாக வெளிவந்து தம்மையும் பிறரையும் சூட்சும உடம்புகளில் பற்றிக்கொண்டு தொங்கும். பரோபகார எண்ண உருவங்கள், ஆகாயத்தை நோக்கி விருசுவாணம் அழகாகப் பலநிற ஒளிவீசிச் செல்வது போன்று, உலகத்திற் பரந்து மழைபோல வேற்றுமை பாராட்டாது உயிர்களனைத்திற்கும் நன்மை பயக்கும்.

இதுவரை கூறப்பட்டவை பொது விதிகள்; இனிச் சில சிறப்பு விதிகளை நோக்குவோம். ஒருவன் தனிப்பட்ட வேறொருவன்மீது கோபமோ பகையோ பொறாமையோ கொள்வானாயின், அப்போது உண்டாகும் இச்சை—நினைவுருவங்கள் வாயுவேகம் மனோவேகத்தில் அந்தக் குறிப்பிட்ட மனிதனை நோக்கி நேரடியாகப் பறந்து சென்று அவனையே தாக்கும். அது செல்லும் வழியில் புவர்லோகக் கடலில் அலைகளை உண்டு பண்ணுமாயினும், அதனால் ஏற்படும் பலன் எதிர்ப்பட்டாரிடமும் பொதுவாக நேரிடுமாயினும், அவ்வுருவம் சென்று ஒட்டிக்கொள்வது அந்தக் குறிப்பிட்ட மனிதனையே; வேறு யாரையும் அது அண்டுவதில்லை. இதுவே ஏவுதல் என்ற கருத்தொழிலின் அந்தரங்கம். ஆனால் அதன் பலன் பல நிபந்தனைகளைப் பொறுத்தது. சுவரில் ஒருவன் கல்லை எறிந்தால், அவன் கைபலத்தைப் பொறுத்தும், அவன் நிற்கும் தூரத்தைப் பொறுத்தும், சுவரின் கட்டுமானம் கல்லோ,

செங்கலோ, மண்ணோ என்ற தன்மையைப்பொறுத்துமே சுவரில் வடு ஏற்படும். அம்மாதிரியே தீய நினைவை அனுப்புகிறவன் மனோபலம் உடையவனானாலும், அல்லது எதிரியின் சமீபத்தி லிருந்தாலும், அவ்வுருவம் கூடுதலான தீமையை எதிரிக்கு விளை-விக்கக்கூடும். அல்லாதபோது அது அதிக பாதகஞ் செய்யாமற் போகும். இரண்டாவது, எதிரியானவன் மிகத்தூயோனாய் உத்தமனாயிருப்பின் அவ்வுருவம் அவனை நெருங்கமாட்டாது அவனுடைய உத்தம அலைகளால் விரட்டப்பட்டுச் சுவரில் எறிந்த ரப்பர்பந்து தன்னையே நோக்கித் திரும்புவதுபோல, வந்த வழியே திரும்பிப்போய் அனுப்பியவனையே தாக்கி நிற்கும். மாந்திரீகர் பலர், தாம் ஏவிய கொடிய நினைவுருவங்களாலும் குட்டிச்சாத்தான்களாலும் அறைபட்டுச் சாவதாகச் சொல்லப்-படுவது இந்த இயற்கை விதியை அநுசரித்ததாம். இந்த மாந்தி-ரீகத் தொழிலும் பலன்களும் மரண சம்பவங்களும் பண்டை-யோர் எழுதி வைத்த வெறுங் கட்டுக்கதைகளல்ல; உண்மையை அடிப்படையாகக் கொண்டவையே அவை அநுபவத்தால் என்-றைக்கும் அறியக்கிடப்பன. பள்ளிச் சிறுவருக்குள் அடிக்கடி சண்டைகள் வருவது வழக்கம்; அவர்கள் கைகலக்க இயலாத போதும், கைகலந்த வேளைகளிலும் வாயில் வந்தபடி வைது கொள்வதும் வழக்கம்; பக்கத்து நிற்கும் பிள்ளைகள் "அடே நீ திரும்ப வையாதேடா, அப்போது அந்த வசவு அவனையேசேரும். நீ திரும்ப வைதாயோ அது உன்னைச் சேர்ந்துவிடும்" என்று புத்தி கூறுவதும் நாம் பலருக்கும் அநுபவமானதொன்று. "பாலகர் வாயிலிருந்து பேருண்மைகள் விளங்கும்," என்றார் ஒரு பெரியார். பிள்ளைகள் பொருளறியாது கூறும் மேற்படி வார்த்-தைகள் முன்னே விளக்கிய ஆழ்ந்த கருத்தை அடிப்படையாகக் கொண்டவை. எதிரி கோபங்கொள்ளாது சாந்தமா யிருந்து விடுவானாயின், அந்தப்பிரதிகூல நிலையினால் வசவு அவனை நெருங்க மாட்டாது வந்த வழியே திரும்பிச் சென்று, அவ்வசவை அனுப்பியவனையே சார்ந்து, அவன் கோபத்தை மேலும் அதிகப்-படுத்தி அவன் தீக்குணத்தையும் விருத்தி பண்ணிவிடும், என்ற உண்மையை விளக்குவதே அது.

இனி, தீய எண்ணங்களைப்போலவே நல்லெண்ணங்கள்—இச்சைகளும் இந்த விதிகளுக்குக் கட்டுப்பட்டனவாம். வெளியே சென்றிருக்கும் தாயானவள் வீட்டிலிருக்கும் குழந்தையை மிகுந்த ஆர்வத்தோடும் அன்போடுந் தேடும்போது, அவளிடமிருந்து மிக மிக அழகான அன்புருவொன்று இளஞ்சூரியன் போலச் சிவந்த ஒளியுடன் மின்னிக்கொண்டு குழந்தையிடம் மனோவேகமாய்ச் சென்று, அதன் உடம்போடு ஒன்றாய்விரவி அக்குழந்தைக்குப் பரமானந்தத்தை யுண்டுபண்ணும். நோயாளிகளை நோக்கி அடிக்கடி ஆரோக்கிய உருவங்களை அன்போடு அனுப்பிவந்தால், அந்நோயாளிகள், தேகத்தில் நல்ல பலன் பெறுவதோடு, மனச்சாந்தியும் பெறுவர். வீடுவாசல், கைப்பொருள், உற்றார் உறவினரை இழந்து தவிக்கும் மனிதரை மனத்தில் எண்ணி, அவர்களை நோக்கி மனோதைரியம், சாந்தம், சந்தோஷம் ஆகியவற்றை உள்ளன்போடு அடிக்கடி அனுப்பிக்கொண்டிருந்தால், அவர்கள் தம்மை யறியாமலே சிறிது சிறிதாக ஆறுதலடைந்து, துன்பத்தினின்றும் மனச்சோர்வினின்றும் நீங்குவார்கள். நல்லெண்ணங்களை ஆவசியங்கண்டு இவ்விதம் நாள்தோறும் அனுப்பி வேலை செய்வது, மிகுந்த நற்பலனைக் கொடுக்கும் புண்ணிய கைங்கரியமாம். வறுமை, படிப்பின்மை முதலியவற்றால் அன்னதானமோ கல்விதானமோ செய்ய இயலாதவர்கள், இப்புண்ணியத்தைச் செய்து நற்பலன் பெறுவது எளிய காரியம். மனோ பலமும், அதற்கேற்ற அன்பும் அறிவும் ஆற்றலுமுடைய உத்தம மக்கள், ஒரு நினைவுருவத்தை ஒரேமுறை யனுப்பி இக் குறைபாடுகளைப் பூரணமாகச் சீர்திருத்தி விடுவர். ஆனால் பெரிய ஆள் ஒருவன் ஒரே கூடை மண்ணால் நிரப்பக்கூடிய பள்ளத்தைச் சிறு குழந்தைகள் கைப்பிடியால் பலதரம் இட்டே நிரப்பமுடியும். அம்மாதிரியே வல்லமையற்றதாய், அலைந்தோடித் திரியும் மனத்தையுடைய சாதாரண மக்களாகிய நாம், நல்லெண்ணங்களை அடிக்கடி அனுப்புவதாலேயே சித்திபெற முடியும். அதனால் விடாமுயற்சியுடன் இப்புண்ணியத்தைச் செய்துவரின் கோரிய பலன் கைகூடுவது உறுதி. அத்துடன் அந்த அப்பியாசிக்கு மனோவல்லமையும் அன்பும் ஆற்றலும் நாளுக்குநாள் வளர்ந்துகொண்டும் வரும். இதனை அனுபவத்தில் காணலாகும்.

கலியாணப் பந்தலில் மணமக்களை ஆசீர்வதிக்கும்பொருட்டு அவையோரை வேண்டிக்கொள்வது மேற்சொன்ன காரணத்தைக் கொண்டே. ஆனால் இந்த உண்மையைச் சிறிதும் அறியாத இக்காலத்து அவையோர் அதை ஒரு விளையாட்டாகக் கருதி முகத்தைச் சுளித்தும், உடம்பைக் குலுக்கியும் பிலுக்கியும், ஒரு-வரையொருவர் உந்தித்தள்ளியும், எழுந்துவர மறுத்தும் நேரத்தை வீணாக்குகின்றனர் நிர்ப்பந்தமாய் மணவரைக்குக் கூட்டிச் செல்லப்பட்டவர்களும், சிறிது விபூதியையும் அக்ஷதையையும் அள்ளி மணமக்கள் கண்களில் தூவிவிட்டுத் திரும்பி விடுகிறார்-கள். அதில் அன்பெண்ணமோ ஆசீர்வாதமோ காணப்படுவ-தில்லை. இம்முறை மணமக்களுக்குக் குற்றத்தைச் செய்வதைத்-தவிரக் குணத்தை உண்டுபண்ணுவதில்லை. இத்தகையோர் ஆசீர்வதிக்க வராதிருப்பதே உத்தமம்; அன்னோரை வலுக்கட்-டாயமாக அழையாதிருப்பதும் முறையாகும்.

உலக விவகாரங்கள் நடைபெறும் இடங்களில் பக்தி, தியானம் முதலியன செய்வது மிகப் பிரயாசமானது; அங்கு நிறைந்து நிற்கும் நினைவு அலைகளும் உருவங்களும் அதற்குப் பெருந்தடையாக இருக்கும். அதனாலேயே மேல்நிலை பெற விரும்பும் மக்கள் காடு, மலை, மடங்கள், ஆலயங்களைத் தேடிச் செல்வது. வீடுகளிலும் பூசைமடங்கள், தியான அறைகளைத் தனியாக வைத்திருப்பதும் இதற்காகவே. இந்த எண்ண உருவங்-களையும் அலைகளையும் அடிப்படையாகக் கொண்டவையே பண்-டைக்காலத்து ஏற்படுத்தப்பட்ட ஆலயப்பிரவேச விதிகள். அங்கு தக்கார், தகவிலர் என்னப்பட்டது குணங்களைப் பொறுத்தவை-யாம், பிறப்பைப் பொறுத்தவையல்ல. அவ்விதிகளின் காரணங்-களை யறியாத பிற்கால மக்கள் அவற்றைச் சீர்குலைத்து விட்டனர்.

அறிவு, இச்சை, செயல மூன்றினாலும் மனிதன் செய்யும் நல்வினைகளும் தீவினைகளும் அவற்றாலேற்படும் பலா பலன்களும் "ரோகிணி, அல்லது, மறுபிறப்பு வரலாறுகள்" என்ற நூலில் விளக்கமாகக் கூறப்பட்டிருக்கின்றன. உலகம் பலவிதமெனக் காணும் நமக்கு அனைத்துயிர் ஒன்றென்ற உபதேசத்தில் நம்-பிக்கை உண்டாவதில்லை. வைசூரி, பேதி, விஷக்காய்ச்சல், பிளேக்

முதலிய தொற்று வியாதிகள், வலியோர் எளியோர் முதியோர் இளையோர் கற்றோர் மற்றோர் என்ற பாகுபாடு பாராட்டாமல் அனைவரையும் ஒன்றுபோல எமலோகத்திற்கு ஏககாலத்தில் இழுத்தடிக்கும்போது, இந்த உண்மை ஒரு சிலருக்குப் புலப்படலாம். ஆனால் புவர்லோக சுவர்லோகங்களைக் காணவல்லவருக்கு, ஒவ்வொரு இச்சையும் எண்ணமும், அவற்றின் உருவங்களும் அலைகளும் சலனங்களும் எதிரலைகளும், ஏககாலத்தில் எப்புறத்தும் நொடிப்பொழுதில் பரவுவதையும் எல்லோரையும் ஒருப்போலத் தாக்குவதையும் நேரில்கண்டபின், உலகத்தில் ஒவ்வொரு மனிதனும் தனிவாழ்க்கை வாழமுடியுமென்ற எண்ணம் அறவே நீங்கிவிடும். மலரானது தன் நறுமணத்தையும் துர்நாற்றத்தையும் தன்னைச்சுற்றி இடைவிடாது பரப்பி நிற்பது போலவே, ஒவ்வொரு மனிதனும் தன் நல்ல தீய குணங்களையும் இச்சைகளையும் நோய் ஆரோக்கியப் பிராண வாயுவையும் அணுக்களையும் தன்னைச்சுற்றி ஓயாது பரப்பித் தன் சூழ்நிலையையும் அங்கு அணுகுவோரனைவரையும் இடைவிடாது பாதித்துக்கொண்டேயிருக்கின்றான். அது பிறர்க்கு நன்மை பயக்குமாயின் இவனுக்கும் புண்ணியம் உண்டாகும்; தீமை பயக்குமாயின் பாவத்தைத்தரும். அதனால், எவ்வளவு ஒதுங்கி யிருந்தபோதிலும் எவனும் தனக்காக மட்டும் வாழுதல் இயற்கையில் இல்லாத காரியம்.

இனி, ஒருவன் விழிப்பு நிலையில் ஒன்றை நினைக்கும்போது, அந்த எண்ணம் அதற்கேற்றதான சலனத்தை அவனுடைய மன

6. மனஉடம்பைப் பேணும்முறை.

உடம்பில் உண்டு பண்ணும்; அந்தச் சலனங்கள் இச்சையுடம்பிற்குத்தாவி, அங்கு சலனங்களை யுண்டுபண்ண, அவை பிராண உடம்பைத் தாக்கி அசைக்க, அவை அன்ன உடம்பில் மூளையைத் தாக்கிய பின்னரே அது நமக்கு எண்ணமாக உருவாகின்றது. அவ்விதமே முள்ளொன்று காலில்தைக்குமானால், அது நரம்புகள் வழியாகச் சலனமாக மூளைக்குச்செல்ல, அங்கிருந்து பிராண உடம்பிற்கும், அதன் மூலம் இச்சையுடம்பிற்கும், அங்கிருந்து மன உடம்பிற்கும் அச்சலனங்கள் சென்றபின்னரே, முள் குத்திய அறிவும் அதனாலாகும் வலியும் நமக்குப்புலப்படும். இத்தொடர்ச்சி மனோவேகத்தில் நடைபெறுவதால், எல்லாம் ஒரே நேரத்தில்

நடைபெறுவதாக நமக்குப் புலப்படுகின்றது. இவ்விஷயங்களை யெல்லாம் மேனாட்டு மேதையர் நன்கு ஆராய்ந்து வருவதால் அங்கு ஆரம்பக்கல்வி மாத்திரமுள்ள சாதாரண மக்களும் இவ்வுண்மைகளை யறிந்திருக்கின்றனர். இந்த உடம்புகளுள் ஏதாவது ஒன்று சீர்கேடாயிருந்தால், மேற்சொன்ன தொடர்ச்சி நீங்கி, அம்மனிதன் பிராந்தன், கோட்டிக்காரன், அல்லது குறைபாடுள்ளவனுகின்றான். இணைக்கும் கம்பி அறுந்துபோனல் இரண்டு ஊர்களுக்கிடையே தந்தி பேசமுடியாதது போலவாம இந்த இயற்கை நிகழ்ச்சி. பிணத்தை அறுத்தாலும் பொசுக்கினலும் அதற்கு வலி தோன்ருத காரணம் இறக்கும்போது ஏற்படும் இத்தொடர்ச்சி நீக்கமே. உடம்புகளின் சீரைப்பொறுத்தே மனிதனுடைய தன்மையும் இன்ப துன்பங்களும் அமையுமாகையால், மேற்கூறிய உண்மைகளை யறிந்தபின் தன் உடம்புகள் யாவற்றையும் தக்கமுறையில் பேணவேண்டுவது ஒவ்வொருவருக்கும் இன்றியமையாக் கடமையாகும் என்பதை எடுத்துச் சொல்ல வேண்டுவதில்லை.

அன்ன, பிராண உடம்புகளைப் போலவே, மன உடம்பைப் பேணும் முறைகளையும் அழுக்கை அகற்றல், ஆகாரம் ஊட்டல் என இரண்டாகப் பிரிக்கலாம். ஆனல் மன உடம்பு ஸ்தூல உடம்பைப்போல ஓய்வெடுப்பதில்லை; அலுப்படைவதுமில்லை; அன்றி ஓயாமல் ஒன்றைவிட் டொன்று எண்ணிக்கொண்டேயிருக்கும். இது எல்லோரும் அனுபவத்தில் காணக்கூடியது. அதனல் அழுக்காகிய தீய எண்ணங்களை அதினின்றும அகற்றுவதானல், உடனே நல்ல எண்ணங்களை அங்கு புகுத்தாவிட்டால் அது திரும்பவும் வேறு தீய எண்ணங்களையே நாடி நிற்கும். கிறிஸ்து நாதர் ஒருவனிடமிருந்து ஒரு பேயை விரட்டினராம்; உடனே ஒன்பது பேய்கள் வந்து அங்கு குடியேறினவாம். வேத புஸ்தகத்திலுள்ள இவ்வரலாறு, மேற் சொன்ன உண்மையை விளக்குவது. ஆகவே தீய நினைவுகளை நீக்குதலும் நல்லெண்ணங்களைப் பயிரிடுதலும் ஏககாலத்தில் நடைபெறல் வேண்டும். தீய எண்ணங்களை நீக்குதற்கு நல்ல எண்ணங்களைப் பழகுவதே ஒரு முக்கியமான வழியாகும.

நாம் ஒரு வேலைசெய்துகொண் டிருக்கும்போது, திடீரென்று அதை நிறுத்திவிட்டு நம் மனத்தில் என்ன நிகழ்கின்றதென்று கவனிப்போமானால் நம் நினைவுகள் பெரும்பாலும் அவ்வேலையுடன் சம்பந்த மற்றவையாகவே காணப்படும். மேலும் சற்றுக் கவனிப்போமானால், நம்மை யறியாமலே பல பல எண்ணங்கள் உள்ளே வருவதும் நொடிப்போதில் வெளியே செல்வதும், ஒரு சில சற்றுக் கூடுதலாக மனதில் நிலைப்பதும் விளங்கும். இவற்றுள் பல ஒரு காரியமுமில்லாத வீண் நினைவுகளாகவே இருக்கும்; மற்றும் பல மண், பெண், பொன் சம்பந்தப்பட்டனவாய், காமக்குரோத லோப மோக சுயநல எண்ணங்களாக இருக்கும்; அவற்றுள் நீடித்து நிற்கும் சில, நம்மிடம் நிலையாகவிருக்கும் இச்சைகளை யொட்டினவாயிருக்கும்; மற்றப்படி தன்னலமற்ற, பிறர்நல எண்ணங்கள் என்று சொல்லக்கூடியவை மிக மிக அபூர்வமாகவே காணப்படும்; அநேகமாக இல்லாமலே இருக்கும். மன உடம்பு வேலை செய்யும் விதிகளைக் கற்றறிந்தவர், மேற்சொன்ன நிலையை அறியும்போது தன் மனம் தன் சுயாதீனத்திலில்லை யென்பதை அறிவர்; எங்கிருந்தோ வருவது போன்ற எண்ணங்கள் பிறர் மனத்திலிருந்து வெளிவரும் எண்ணங்களும் அவற்றின் உருவங்களும் அலைகளுமென்பதை உணர்வர். தம் முந்திய நினைவுருவங்களும் தம்மைச்சுற்றி நின்று மாறி மாறித் தம்மைத் தாக்குவதையும் அறிவர். அவையாவும் தம்முடைய தகவலன்னியில் உள்ளே புகுவதும் வெளியே செல்வதும், தம் மனத்தின் இயற்கை அவற்றை யொத்து அவற்றைக் காந்தம்போல இழுப்பதாலேயே என்றும் அறிவர். இதனைக் கட்டுப் படுத்தாதவரை தம் மனம் வலிமை பெறுதென்பதையும் மேன்மையுறு தென்பதையும் அவர் உடனே உணர்வர். அதனால் அழுக்கு நீக்குவதில் முதல் அப்பியாசம் அடிக்கடி நம் மனத்தில் எழும் நினைவுகளை ஆராய்வது; இரண்டாவது, அவற்றுள் தீயனவற்றையும் தன்னல எண்ணங்களையும் உடனே களைந்து விடுவது. மூன்றாவது பக்தி, அன்பு, பகுத்தறிவுபோன்ற தமக்குப் பிரியமுள்ள நல்லெண்ணங்களை மனத்தில் நாட்டுவது. இவற்றைத் தொடர்ந்து சில காலம் செய்து வருவோமானால், நல்லெண்ணங்கள் நம் முயற்சியின்றியே இயல்பாக எழுவதும், தீய எண்ணங்கள் சிறிது சிறிதாகக் குறைந்து, பின் தோன்றாமலே விலகி விடுவதும் அனுபவத்தால் அறியப்படும்,

அது மனதிற்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் கொடுத்து நம் முயற்சியில் நம்பிக்கையையும் உண்டுபண்ணும்.

இனி, மனத்திற்கு ஆகாரம் ஊட்டுவதில் முதலாவது பயிற்சி செய்வன திருந்தச்செய்தல். "கையொன்று செய்ய விழியொன்று நோக்கக் கருத்தொன் றெண்ண" என்று தாயுமானப் பெருந்தகையார் கூறியபடி, நாம் ஒன்றைச் செய்யும்போது நம் மனம் அதிலேயே கருத்தூன்றி நிற்பதில்லை. அதனால் நாம் செய்யுங் காரியம் திறமையுடன் நடைபெறாததோடு, மனமும் சிதறிப் பலவீனப்பட்டுப் போகின்றது. அதனால் உண்ணல், உறங்கல், உலாவல், கற்றல், கேட்டல், ஆடல், பாடல், தொழில் செய்தல் எல்லாவற்றிலும் கருத்தொருமித்து வேலைசெய்யப் பழகவேண்டும். இது நாள் முழுவதிலும் செய்யக்கூடிய தொன்று; எல்லோரும் செய்யக்கூடியதுமாம்; ஏனெனில் இதற்குத் தனிப்பட்ட இடமோ நேரமோ தேவையில்லை; இன்னவேலைதான் என்ற கணக்குமில்லை.

இரண்டாவதாக, மனத்தை ஒருவழிப்படுத்த முயல வேண்டும். ஒரு பத்திரிகையை எடுத்துப் பார்ப்போமானால், செய்திகள் லண்டனிலிருந்து லாப்லந்துக்கும், சென்னையிலிருந்து சிக்காகோவுக்கும், பர்மாவிலிருந்து பாதாளத்திற்கும் தாவிக்கொண்டேயிருக்குமே தவிர ஒரே தொடர்ச்சியாக இருப்பதில்லை. இது மனதைச் சிதறடிப்பதொன்று. ஒருவழிப்படுத்தலாவது ஒரு விஷயத்தையும் அதற்கு அனுசரணையான காரியங்களையுமே தொடர்ச்சியாகக் கவனிப்பது. இது நம் ஆலய வழிபாட்டிலும் சந்தியாவந்தன முறையிலும் நன்கு அறியப்படும். ஆலய வழிபாட்டில் மூர்த்தி தெரிசனமே முதன்மையாவது. ஆனால் நின்ற இடத்தில் நின்று திடீரென்று பக்திப் பெருக்கைத் தம்பால் உண்டுபண்ணிக் கொள்வது அநேகருக்குக் கூடுவதில்லை. அதற்காகப் பிரதக்ஷிணம் வருவதும், அப்போதும் ஒரே உருவத்தை மனத்தில் இருத்துவது சாதாரண மக்களுக்குக் கூடாத காரியமாகையால், அங்கும் இறைவனுடைய பல திவ்யமங்கள ரூபங்களை அடுத்தடுத்து வைத்து, மனம் ஒன்றைவிட் டொன்றிற்குத் தாவும்போது இறையுருவங்களையே பற்றும் படிக்கும், அவ்விதம் இறைவன் சம்பந்தமான கருத்துக்களிலேயே ஈடுபட்டு, முடிவில்

மூர்த்தி தெரிசனம் செய்யும்படிக்கும் நம் வழிபாடு அமைக்கப்-
பட்டுள்ளது.

இம்மாதிரியே சந்தியாவந்தன முறையும்; அதில் முக்கிய-
மாவன தர்ப்பணமும் தியானமுமாம். இவற்றில் கருத்தூன்-
றாமல், பாவைக் கூத்துப்போல வெறும் பாவனை மாத்திரமாக
இவற்றைச் செய்வது யாதொரு பலனையுந்தருவதில்லை. அவ்விதம்
கருத்தூன்றும்படி மனத்தை வழிப்படுத்துக்கொண்டு செல்-
வனவே முன்னோட்டமாக அங்கு செய்யப்படும் கிரியைகள்.
இம்மாதிரியான பயிற்சியே மனத்தை ஒருவழிப்படுத்தல் என்பது.
ஆலய வழிபாடு, சந்தியா வந்தனங்களிற் பற்றில்லாதவர், திருக்-
குறள்போன்ற ஆழ்ந்த கருத்துக்கொண்ட நூல்களை யெடுத்து,
அங்கு ஒவ்வொரு அதிகாரத்திலும் பத்துக் குறட்பாக்கள் ஒரே
கருத்தை நாலாபுறத்து மிருந்து துருவி ஆராய்வதைக் கூர்ந்து
கற்கவேண்டும். அப்போது மனத்தைப் பிற விஷயங்களில்
புகாமல் காத்துக் கொள்ளலும் வேண்டும். பத்திரிகைகள்,
நாவல்கள், கட்டுக்கதைகள் இப்பயிற்சிக்கு உகந்தவையல்ல.
அவை பிரதிகூலஞ் செய்யும். அதிகமும் இவற்றிலேயே நேரம்
போக்குபவர் மனது சிதறுண்ட மனமாகவே இருக்கும்.

அடுத்த பயிற்சி மனத்தை ஒருமுனைப் படுத்தல். இது
தியானம் என்னப்படும். தியானத்திற்கு ஒரு எளியமுறை உருவ-
வழிபாடு. அது, தம் வழிபடு கடவுளைப் புருவ நடுவிலோ, இதயக்
குகையிலோ உருவகப்படுததிப் புறஉலகத்தை முற்றிலும்
மறந்து, அந்த உருவில் பிரசன்னமா யிருக்கும் மூர்த்தியிடம்
ஆழ்ந்து மூழ்கிக்கிடத்தலாம். அப்போது அம்மூர்த்தியின்
குணாதிசயங்கள் தம்மிடத்தும் ஊறிஉறைவதான உணர்ச்சி
மனத்தில் பிறக்கவேண்டும். இது போலி தியானமாகாமல்,
அதாவது தியானம் போன்றதாக இராமல், உண்மையான
தியானமாயிருக்குமாயின், தியானம் நீங்கிய பின்பும் நம் உலக
விவகாரங்களில் அக்குணங்கள் சிறிது சிறிதாகவே வெளிப்பட்டு,
தியானம் முதிர முதிர அவை பெருகி ஒளி வீசும். உதாரணமாக,
முருகனைத் தியானிப்பவர் தம் மனம், மொழி, மெய்கள் மூன்றி-
லும் அழகையே வெளிப்படுத்தவேண்டும். அம்முயற்சியில் தளரா
ஊக்கத்தையும் வீரியத்தையும் கைக்கொள்ளவேண்டும்; மும்மல,

முக்குண அசுரத்தன்மைகளைத் தமது அகத்திலும் புறத்திலு மிருந்து அகற்றவும் இடைவிடாது முயலவேண்டும். இதுவும் அழகாகவே செய்யப்படல்வேண்டும். முரட்டுத்தனமாகச்செய்தல் அழகலாதென செய்தலாகும். பார்க்குமிடமெங்கும், இறைவன் படைப்பு முழுவதிலும், அவன் முருகைக்கண்டு மகிழவேண்டும். முருகு என்பது வடித்தெடுத்த அழகு; அழகே உருவாயது; அழகின் திரட்டு.

அவ்வாறே பிள்ளையாரை வழிபடுபவர் பொறை, சாந்தம், ஞானம், விக்கினங்களை நீக்கும் ஆற்றல் இவற்றையும், ராமபிரான், கிருஷ்ண பகவான், கிறிஸ்து நாதர் முதலிய மூர்த்திகளை வழிபடு-வோர் அவரவர் வாழ்க்கையில் உலகிற்கு உதாரணமாக நடத்திக் காட்டிய சத்தியம், சாந்தம், துறவு, அன்பு, அறிவு, ஆற்றல்-களையும் தம் வாழ்க்கையில் உருப்படுத்த முயலவேண்டும். இந்த அனுபோக முறையின்றிச் செய்யப்படும் ஆலய வழிபாடு தீவிர பாரமார்த்திக பலன் ஒன்றையும் கொடுத்து விடாது.

ஆகவே மன உடம்பைப் பேணும் முறைகளில் மிக முக்கிய-மான சில :—

1. தீய எண்ணங்களைக் களைந்து நல்லெண்ணங்களைப் பயிர் செய்தல்,

2. செய்வன திருந்தச் செய்தல்,

3. மனத்தை ஒருவழிப் படுத்தல்,

4. மனத்தை ஒருமுனைப் படுத்தல்,

என்பனவாம். இவையனைத்திற்கும் நம் ஆலய வழிபாட்டு முறையில் வசதிகள் போதியமட்டும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

மனப்பயிற்சி சம்பந்தமாக, மூர்த்தி உபாசனையைப்பற்றி மேலே விளக்காது விடப்பட்ட ஒரு சிறு குறிப்பு இங்கு மிகை-யாகாது. பெரு மழை பெய்து நின்றவுடன், நிலத்திலுள்ள குண்டு குழிகளெல்லாம் தண்ணீர் நிரம்பிச் சிறு சிறு மடுக்கள் போலக் காணப்படும். அவற்றினுள் தனித்தனியே உற்று நோக்குவோ-மானால், அங்கு ஒன்றில் நீலம், ஒன்றில் ஊதா, மற்றொன்றில் சிவப்பு, வேறொன்றில் மஞ்சள்போன்ற பல பல அழகிய நிறங்-களும், ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு வடிவமான மேகமும் பிரதி

பலித்துக் காணப்படும். அந்நேரம் தலைக்குமேலே வானத்தை அண்ணாந்து நோக்கினால், தனித்தனியே நீருக்குள் காணப்படும் இவை யனைத்தும் அங்கு ஒரே வானமாக விளங்கும். அதாவது, வானம் ஒன்றே; அது முழுவதும் நாம் காணும் நீருக்குள் அடங்குவதில்லை; அதன் சிறு சிறு பாகங்கள் தனித்தனியே வானத்தின் நிறங்களையும் அழகையும் காட்டிநின்ற போதிலும், அவையாவும் அந்த ஒரே வானத்திருந்தே அத்தன்மைகளைப் பெறுகின்றனவென்பது இங்கு அறியவேண்டிய உண்மை.

அதுபோன்றதே அழகு, அன்பு, பொறுமை, சாந்தம், ஈகை, வீரம் முதலிய ஒவ்வொரு குணமுமாம். அதாவது, பரம்பொருள் ஒன்றாயிருப்பது போலவே அழகும் ஒன்றாகவே உள்ளது. அது அப்பரம்பொருளிடத்தேயே உள்ளது. அதன் முழு வல்லமையையும் மக்கள் பூரணமாகக் காண வல்லவரல்லர். அதனால், வையமீது தன் பல அழகையும், வகை வகையாக ஐயன் வகுத்துக்காட்டும்போது, அவற்றையெல்லாம் தனித்தனியே கண்டனுபவிக்கும் ஆற்றலை முதலில் பெற்றுப் பின் அம்முறையைத் தமது முத்தி சாதனமாகக்கொண்டு மக்கள் முன்னேறிச் செல்வாரானால், அந்த அழகுகள் அனைத்தும் ஒரே பேரழகின் சிறு சிறு சாயல்களென்பதையும், அப்பேரழகில் நின்றே அச் சிறுசிறு பிரதி பலிப்புகள் உலகில் உலாவுகின்றன வென்பதையும், அவற்றைக்கொடிபோல் பற்றி மேலேறிச் செல்லும்போது அவற்றின் மூலம் அப்பேரழகனாகிய இறைவனை அடைதல் கூடுமென்பதையும் அம்மக்கள் அனுபவத்தால் அறிவர்.

எவ்விதமெனின், முருகனை உண்மையாக உபாசிக்க விரும்புவோர், தம்மைச்சுற்றிக் காணப்படும் மக்கள் விலங்குகள் பறவைகள், மரங்கள் செடிகள் கொடிகள், மலைகள் இலைகள் தழைகள், காய்கள் கனிகள் பூக்கள், உலோகங்கள் ரத்தினங்கள், இயற்கை வனப்புகள் செயற்கை வனப்புகள், இசை நுணுக்கங்கள், மணங்கள் முதலிய எல்லாவற்றிலும் தனித்தனியாகக் காணப்படும் அழகை அறிந்து அனுபவிக்கும் ஆற்றலை முதலாவதாகப் பெறவேண்டும். ஏனெனில் முருகு என்பது கடைந்தெடுத்த அழகு என்று மேலே கூறப்பட்டுள்ளது. அதனால் அம்முருகனைப் பின்-

பற்றுவோருக்கு, அவனுடைய உண்மைத் தொண்டருக்கு, பார்க்குமிடமெங்கும் அழகே நீக்கமறப் புலப்படவேண்டும். அத்துடன் தூய உள்ளத்தராய், "அழகலாதன செயேல்" என்றமூதுரையை இடைவிடாது கடைப்பிடித்து ஒழுகலும் வேண்டும். அல்லாத-போது அவர் முருகனாகிய பேரழகன் சேவைக்குப் பதிலாக அவர் கொல்லவந்த அசுரரின் சேவகராகத் திருவர். உள்ளக்கண்ணாடி அவலக்ஷணமாக உள்ளபோது புறவுலகும் அவலக்ஷணமாகவே அங்கு பிரதிபலிக்கும், ஆதலால் உண்மைத் தொண்டர், தம் மனம் மொழி மெய்கள் மூன்றிலும் அழகையே கற்பித்து உலகில் ஒழுகிவரவேண்டியது இன்றியமையாதது. இவற்றோடு முருகன் தியானத்தையும் முறைப்படி ஒழுங்காகச்செய்து, அவன் நாமத்-தையும் இடைவிடாது ஜெபித்து வருவாராஞல், முடிவில் அந்த சாதனம் அழகே உருவாக அமர்ந்திருக்கும் முருகன் காட்சியைக் கொடுத்து, அந்த முருகென்னும் எழிற்சோதியும் இறைவனுடைய ஒரு பூரண நிலையென்பதையும் புலப்படுத்தி, அந்த இறைவனோடு அவரை இரண்டறக்கலக்கச்செய்யும். அப்போது அழகு என்பது ஒன்றேயென்றும், அது இறைவனிடத்துள்ளதேயென்றும், அது இறைவனே யென்றும், அந்த ஒரே அழகின் பல அணுக்களின் பிரதிபலிப்பே உலகில் ஒவ்வொன்றிலும் தனித்தனியாகவும வேறு வேறாகவும் காணப்படுகின்றன வென்றும் ஒரு அனுபவ உணர்வு அவருக்கு ஏற்படுகின்றது; அவரும் அழகே உருவாகப் பேரின்பத் தமர்கின்றனர், அவர் சொல்லும் செயலும் எல்லாம் அழகாகவே வெளிப்படும்.

அதேபோன்று அன்பு, பொறுமை, சாந்தம், வீரம், ஈகை எல்லாமே இறைவனிடத்து மாத்திரமேயுள்ள தனிப்பட்ட பூரண குணங்களென்பதையும், அவற்றுள் தமக்குகந்த ஏதாவதொன்றை உறுதியாகப்பற்றி, அதனைச் சிறப்பாக உலகுக் குணர்த்தும் மூர்த்தியைத் தூய உள்ளத்தோடு உபாசித்து, அக்குணத்தை வாழ்க்கையில் காட்டியும் பிறரிடம் கண்டும் பழகி வருவதே ஒருவனைக் கடவுளை அடையச்செய்யப் போதுமான தென்பதை-யும் அனுபவ வாயிலாக அறிந்த மெய்ஞ்ஞானிகளே, மூர்த்தி உபாசனையைப் பலவகையாக வகுத்துவைத்துள்ளனர். பெரிய ஆறுகளில் எதனைப் பின்பற்றினும் அது சமுத்திரத்திற் கொண்டு

சேர்ப்பதுபோல, மூர்த்திகளில் எவரை உபாசித்தாலும் அது முத்தியில் கொண்டு சேர்க்கும், இதுவே மூர்த்தி உபாசனையின் உண்மை. இது பற்றி ஒரு ஞானகுரவர் அருளியுள்ளதாவது, "அன்பு ஒன்றேயாவதுபோல அழகும் ஒன்றே யென்பதும் உனக்குப் புலப்படவில்லையா? அழகாயிருப்பனவெல்லாம், அது எவ்வுலகிலாயினுஞ் சரியே, அந்த ஒரே அழகின் பாகமா யிருப்பதனாலேயே, அவ்விதம் அழகாயிருக்கின்றன. அதன் மூலத்தை யறிய அதனைப் பின்பற்றிச் செல்வோமானால், அதன் தொடர்ச்சியும் சம்பந்தமும் புலப்படும், அன்பனைத்தும் கடவுளதாயிருப்பதுபோலவே, அழகனைத்தும் கடவுளதே. இந்த அவரது குணங்கள் மூலம் தூய உள்ளமுடையோர் என்றும் அவரைச் சென்றடைதல் கூடும்," என்பதே. இவ்வுபதேசத்தை சாதகர்கள் நன்கறிவாராக.

நூலின் விலைவிரிவஞ்சி மனிதனுடைய நினைவுருவங்கள், சூக்ஷ்ம உடம்புகள் இவற்றின் வர்ணப்படங்கள் சிலவற்றைக்கூட இங்கு கொடுக்க இயலவில்லை. அதனால் குணங்களும் சூட்சும உலகில் அவை வெளிப்படுத்தும் நிறங்களும் இனிச்சுருக்கமாகக் கூறப்படுகின்றன:—

1. பகை, இருண்டு அடர்ந்த மேகச்சுருள்போலக் காணப்படும்—கடுங்கோபம் நள்ளிருள் படலத்தில் ரத்தச்சிவப்பு மின்னல்களாக வெளிவரும். இந்த மின்னல்கள் ஈட்டிகளாக வெளிச்சென்று எதிரியின்மேல் பாய்ந்து அவருடைய நுண்ணுடம்புகளில் வேதனையை உண்டுபண்ணும்.

2. காமம் தணல்போன்ற சிவப்பாகவும், கருணையும் மன உறுதியும் மஞ்சளை நிறச்சிவப்பாகவும், தாயன்புபோன்ற, தன்னலம் சிறிதுமற்ற அன்பு மிக அழகிய ரோஸ் இளஞ்சிவப்பாகவும் தோற்றங்கொடுக்கும்.

3. பணத்தாசையும் கஞ்சத்தனமும் இருண்ட தவிட்டு நிறமாகவும், சுயநல இச்சைகள் யாவும் சாம்பல் நிறத்தவிடு போலவும் காட்சியளிக்கும்.

4. மனச்சோர்வு கருஞ்சாம்பல் நிறத்தையும், பயமும் திகிலும் சோகை பிடித்தது போன்ற சாம்பல் நிறத்தையும் நுண்ணுடம்புகளுக்குக் கொடுக்கும்.

5. வஞ்சகம் கோழை போன்ற வழுவழுத்த அசங்கியமான பச்சை நிறத்தையும், பொறாமை தவிட்டுநிறம் பாய்ந்த பச்சை-யையும், ஒளிவீசும் அழகான இளம்பச்சை நிறம் பரோபகாரச் சிந்தனையையும் செயல்வன்மையையும் ஆற்றலையும் விளக்கும்.

6. சூரியஒளி வீசும் பசும்பொன்னிற மஞ்சள் உயர்ந்த அறிவையும், அதில் மங்கல் ஏற்பட ஏற்பட படிப்படியாக அறிவு மந்தத்தையும் தன்னல முயற்சிகளையும் உணர்த்தும்.

7. ஆரஞ்சு நிறம் ஒளிவீசி நின்றால் புகழில் இச்சையையும் அதற்கான முயற்சியையும் வெளிப்படுத்தும். அது மங்கலாகவும் தவிட்டு நிறம் அடங்கியும் காணுமானால், அது தற்பெருமையைக் குறிக்கும்.

8. நவரத்னங்களில் ஒன்றாகிய நீலக்கல் நிறம் உத்தமமான பகுத்தறிவையும் உன்னத பாரமார்த்திக நிலையையும் வெளியிடும். இது சூட்சும உடம்புகளில் சகஸ்ராரத்தை ஒட்டியே நிற்கும். மற்று ஆகாய நீலம் உயர்ந்த இறை பக்தியையும், அது அழுக் கடைந்து இருளடர்ந்தும் காணப்படுமானால் காளிகோவில், மாடன் கோவில்களில் காணப்படும் பயங்கொள்ளி பக்தியையும் காட்டும். மறுவின்றிய ஊதா நிறம் உத்தமமான குரு பக்தியும் சேவையுமாம்.

இவற்றின் விரிவையும் விளக்கப்படங்களையும் விரும்பு முடையோர் ஆங்கில நூல்களிற் காண்க. (Vide-Thowght Forms & Man-Visible and Invisible by C. W. Leadbeater.)

---

பாடம் 12.

## மனிதன்—பிற உடம்புகள்.

இதுவரை மனிதனுடைய அன்ன உடம்பு, பிராண உடம்பு, இச்சையுடம்பு, உருவமன உடம்பு என்ற நான்கு உடம்புகளும் கூறப்பட்டன. இவைபோக மனிதனுக்குள்ள வேறு உடம்புகள் அருவமன உடம்பு, விஞ்ஞான உடம்பு, ஆனந்தமய உடம்பு என மூன்றும். இவற்றுள் அருவமன உடம்பு தொழிற்படும் நிலையில் உள்ளவர் இன்றைய உலகில் மிகச்சுருக்கமாக இருப்பர். விஞ்-ஞான உடம்பு தொழிற்படுபவர் அதைவிட மிக அரிதாவர்; ஆனந்தமய உடம்பு தொழிற் படுபவரை விரல் விட்டெண்ண-லாகும். அதனால் அந்த மூன்றுடம்புகளும் ஆலயத்தில் வெளி வீதியாலும் அதற்கப்பாலுள்ள வெட்டவெளியாலும் ஒரே தொகுதியாகக் குறிப்பிடப்படுகின்றன. ஸ்ரீரங்கமும், அது போன்ற ஏழுமதில்களும் பிராகாரங்களுங்கொண்ட ஆலயங்களில் இந்த மூன்றுடம்புகளும் தனித்தனி ஆவரணமாகக் காட்டப் பட்டுள்ளன.

இவற்றுள் அருவமன உடம்பு மகர்லோகத்திற்குரியது, அங்குள்ள தத்துவப் பொருள்களாலாயது, அவ்வுலகில் வேலை செய்வது—அதாவது அவ்வுலகத்திலேயே அலைகளையும் சலனங்-களையும் உண்டுபண்ணுவது, அங்கு ஏற்படும் சலனங்களுக்கும் அலைகளுக்குமே ஈடுபடுவது. அம்மாதிரியே விஞ்ஞான உடம்பு ஜனலோகத்திலும் ஆனந்தமய உடம்பு தபோலோகத்திலும் வேலை செய்தற்குரியன. இவையனைத்தும் அன்ன உடம்பிற்கு நாற் புறத்திலும் மேலும் கீழும் கைக்கு ஒரு முழம் விரிந்த கோழி முட்டைபோல ஒன்றுக்குள் ளொன்றாக வியாபித்து நிற்கும். உலகில் இன்று பெரும்பாலாரிடம் இந்த உடம்புகள் அவற்றின் உயிர்நிலைக்குரிய பன்னிறங்களோ மின்வெட்டுகளோ இன்றி வெறும் நீர்க்குமிழி போன்று தொழிற்படாது கிடக்கும். இவ் வுடம்புகளெல்லாம் வெவ்வேறு உலகங்களில் அலைகளையும் சலனங்களையும் பரப்பித் தொழிற்படினும், அவ்வுடம்புகள் அனைத்தும், அந்த உலகங்கள் யாவும், ஒன்றையொன்று ஊடுருவி ஒன்றுக்குள்ளொன்று வியாபித்து நாம் இருக்கும் இடத்திலேயே

எல்லாம் இருக்கின்றன வென்பதையும், அவற்றின் வேலைகளை யெல்லாம் நாம் இருந்த இடத்தில் இருந்துகொண்டே இயற்ற வல்லோ மென்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது. அதாவது, இங்கு கூறப்படுவன வெல்லாம் எங்கோ எப்போதோ நடைபெறு கின்றன வென்று எண்ணிக்கொள்ளாமல் நாம் இருக்கும் இடத்தி லேயே இன்றும் இப்போதும் என்றும் எப்போதும் யாவும் நடை பெற்றுக்கொண்டிருக்கின்றன வென்பது நன்கு அறியப்பட வேண்டியது.

இந்த மூன்றுடம்புகளும் உருவமன உடம்பிற்கு அப்பாற் பட்டவையாகையால் அந்த மனத்தால் அவை அறியத்தக்கன-வல்ல; ஆகவே சொல்லால் விளக்கத்தக்கனவுமல்ல; அவற்றின் தன்மையும் வேலையும் அனுபவத்தாலேயே அறியக்கூடியவை. மகர்லோகத்தில் துன்பம், தீமை என்பவற்றிற்கு அறவே இட-மில்லை. ஏனெனில் அவற்றைக் கொடுக்கும் சலனங்களும் அலை-களும் இமயமலையைக் கடல் அலைகள் எவ்வாறு அசைக்கமாட்-டாவோ அவ்வாறு அவ்வுலகப் பொருள்களை ஆட்டமாட்டாது போகும். அதனால் நமது அருவமன உடம்பு, பூலோகத்தில் நம்முடைய நல்லொழுக்கத்தாலும் நாம் செய்யும் நல்வினைக-ளாலும் மாத்திரமே வளர்ச்சி பெறும். நன்றல்லவை அவ்வுடம்-பைச் சாருவதில்லை. நல்வினைகள், நல்லொழுக்கங்கள் என்பன தன்னலங் கருதாது, உலகநலங் கருதிச் செய்யப்படுவனவாம். சுயநல நோக்கத்துடன் ஒருவன் புண்ணியஞ் செய்தாலும், அந்நோக்கங்கொண்டே அவன் விதித்தன செய்தாலும் விலக்கி-யன ஒழித்தாலும், அவற்றின் பலன் அருவமன உடம்பைச் சிறிதும் தாக்காதுபோம். உலகில் நமமிற் பெரும்பாலாருடைய நடவடிக்கைகளைக் கவனிப்போமானால் நம் அருவமன உடம்பு வளர்ச்சி பெறுவதற்குரிய ஊட்டம் அங்கொன்றுமில்லையென்பது நன்கு விளங்கும். அத்தகையோர் அருவமன உடம்புகள் முட்-டைக்குள் கரு வளர்ந்து வருவது போலச் சிறிது சிறிதாக உருப்-பெற்று வருகின்றனவென்னலாம். விஞ்ஞான உடம்பு, ஆனந்தமய உடம்பு இரண்டும் ஒரு மிகச் சிலருக்கன்றி மற்றையோருக்கு முளைபெறாத வித்தாகவே இன்று அமைந்து கிடக்கின்றன. பொதுவாக மகர்லோகத்து அலைகள் இன்பகரமாகவே யிருப்பி-

னும் வேற்றுமை உணர்ச்சியையே கொடுப்பன ; நண்பர் இருவர் அன்பால் பிணிக்கப்பட்டிருப்பினும் இருவரும் வேறு வேறு என்ற எண்ணம் இல்லாமற் போவதில்லை. அம்மாதிரியே அன்பே மகர்லோகத்தின் இயற்கையாயிருப்பினும், நான்வேறு பிறர்வேறு என்ற உணர்ச்சி அவ்வுலகில் நீங்காதிருக்கு மாகையால், அவ்-வுலகம் அசுத்தமாயா உலகம் என்னப்படும். ஜனலோகத்து அலைகள் வேற்றுமையையும் ஒற்றுமையையும் ஏக காலத்தில் கொடுப்பன ; ஒரு குடும்பத்திலுள்ளவர்கள் தம்மை வேறு வேறாகவும் ஒன்றாகவும் உணர்வதும, தாயும் பிள்ளையும் தம்மைத் தனித்தனியாகவும் ஏகமாகவும் உணர்வதும் இந்த அநுபவத்தை ஒரு கடுகளவு காட்டவல்ல சிறு உதாரணங்களாம். இவ்விதம் ஒற்றுமையும் வேற்றுமையும் ஏககாலத்துண்டாகும் இந்த இரு-வகை உணர்ச்சி காரணமாக, ஜனலோகம் சுத்தாசுத்த மாயா வுலகம் என்னப்படும். தபலோகத்திலும் அதற்குரிய உடம்பாகிய ஆனந்தமய கோசத்திலும் ஒற்றுமை யுணர்ச்சியன்றி வேறொன்-றிற்கும் இடமே யிருப்பதில்லை. உயிர்வருக்கத்தின் பேரானந்தத்-திற்குக் காரணமாய் நிற்பது இந்த ஒற்றுமை உணர்ச்சியே யாதலின், தபலோகமும் அதற்கு மேற்பட்டவைகளும் சுத்த மாயா உலகங்கள் என்னப்படும். அங்கு ஏற்படும் சலனங்களும் அலைகளும் ஒற்றுமையைத் தவிற வேறு யாதொரு அநுபவத்-தையும தருவதில்லை. அவையே அண்டத்தில் மிக மிக நுண்மை-யான சலனங்களாம்.

இந்த மூன்றுடம்புகளிலும் பூரணமாக வேலை செய்யவல்லவர் ஜீவன்முத்தரும் வித்தகச் சித்தருமாவர். அரைகுறையாக வேலை செய்யும் ஆற்றல் பெற்று, மேலும் முன்னேறிச் சென்றுகொண்-டிருப்பவர் ஜீவன்முத்தி நிலையை அணுகியுள்ளவர். அங்ஙனம் அணுகியுள்ளவரில் ஒருவராகிய வங்கப்பணி முனிவர் தம்மை வினவிய சிஷ்யர்களுக்காகத் தம் அநுபவத்தை ஒரு சிறிது விளக்க முயன்றனர். அவற்றிலிருந்து சில குறிப்புகள் கீழே-தரப்படுகின்றன :—

மன உலகிலுள்ள சப்த பூதங்களில் கட்டிப்பொருள், நீர்ப்-பொருள், வாயு, ஆகாயம் என்பவற்றாலாயது சுவர்லோக மென்-

பது. எஞ்சியுள்ள நுண்ணுகாயம், திரட்டணு, அணு என்ற மூன்று பூதங்களையே கொண்டுள்ளது மகர்லோகம். இந்த மகர்லோகத்திற்குரிய அருவமன உடம்பும் மேற்சொன்ன அணு, திரட்டணு, நுண்ணுகாயம் என்ற மூன்று பூதங்களாலேயே ஆக்கப்பட்டுள்ளது. பூவுலகச் சலனங்களோடு ஒப்பிடும்போது, இந்தப் பூதங்களின் சலனங்களும் தன்மாத்திரைகளும் பலகோடி மடங்கு மேற்பட்ட நுணுக்கமுடையனவா யிருத்தலின், இந்த உடம்பின் வேலையைச் சொல்லால் விளக்குவது கூடிய காரியமல்ல. இவ்வுடம்பிலுண்டாகும் எண்ணங்கள் முன்னம் கூறியதுபோன்று உருவெடுத்து மிதந்துகொண்டு மற்றவரை நோக்கிச் செல்வதில்லை. அருவமன உடம்பில் ஒருவரோ டொருவர் விவகரிக்கும்போது, அவருடைய எண்ணங்கள் மின்வெட்டுப்போல ஒருவரிடமிருந்து மற்றவரிடம் பாயும். இங்கே காரண காரியங்கள் இரண்டும் ஒரு நாணயத்தின் இருபுறம்போல ஒரே இணைப்பாக ஒரே நேரத்தில் நடைபெறும். நமக்குள் ஒருவன் பேசுவது காரணம், அதைப் பிறர்கேட்பது காரியம். இது எவ்வளவு வேகமாய் நடைபெறினும் இடையில் சிறிது நேரம் பிடிக்கவே செய்யும். அவ்விதமே இச்சையுடம்பிலும் மன உடம்பிலும் இந்நிகழ்ச்சி மனோவேகமாகவே நடைபெறினும், அந்த எண்ணங்களும் இச்சைகளும் உரிய உருவங்களை யெடுத்து ஒருவரிடமிருந்து ஒருவரை நோக்கிப் பறந்து செல்வதும் அதற்குரிய நொடிப்போதும் நன்கு காணப்படும். ஆனல் மகர்லோகத்தில் அவ்வாறன்றிக் காரண காரியங்கள் ஒரே நொடியிலேயே நடைபெறும். தூரம் என்பது அங்கு இல்லை யென்னலாம் "பிண்டம் பிண்டம் இராத்தங்காது," என்றபடி நினைப்பும் செயலும் அங்கு அதே நேரத்தில் நடந்துவிடும். இது நம் சிற்றறிவிற்குள் அடங்காத தொன்றே.

இனி, அழகு என்ற ஒன்றைப்பற்றி அங்கு அறிய விரும்பினுல், அதனை ஒவ்வொரு அங்கமாக ஆராயவேண்டுவதில்லை. சாதாரணமாக அதனைப்பற்றி நாம் நினைக்கும்போது, நாம் அழகென்று கருதும் ஏதேனும் உருவங்களே நம் மனக்கண்ணுக்குத் தோன்றுவதைத்தவிர, உருவ சம்பந்தமில்லாத அழகு இன்னதென நமக்கு உணரமுடியாது அதாவது, அப்போது வேலை செய்வது நமது நான்காவது உடம்பாகிய உருவமன உடம்பே.

யாம். இந்த அருவமன உடம்பின் வேலை அவ்விதம் அல்ல அங்கு அழகு என்பதென்ன, என்று அறிய விரும்பியவுடனேயே அதன் சாராம்சம் முழுவதும் மனத்தின்முன் கோர்வை கோர்வையாகவும் பந்தி பந்தியாகவும் ஒரே நொடியில் ஆன்மா பிரமிக்கும் முறையில் கணக்கற்ற வர்ணங்களாகவும் இசையொலிகளாகவும் நறுமணங்களாகவும் இன்னும் சொல்லால் விளக்கக்கூடாத விதங்களாகவும் உணர்ச்சியில் படியும். அவ்விதமே அன்பு, பொறுமை, பக்தி முதலிய குணங்களுமாம். நூற்றுக்கணக்கான நூல்களால் விளக்கவேண்டிய ஒரு தத்துவ தரிசன முறையை அதாவது வேதாந்தம், சித்தாந்தம் போன்ற ஏதாவதொன்றை அங்கு ஒரே எண்ணத்தால் ஒருவருக்கொருவர் பரிமாறிக்கொள்வர். உலகில் அந்த நூற்றுக் கணக்கான நூல்களைக் கற்றவருள்ளும் ஐயப்பாடுகளும் விபரீதக் கருத்துக்களும் அவை சம்பந்தமான வாதங்களும் தர்க்கங்களும் பிணக்குகளும் மலிந்தே கிடக்கும். இங்கு அதற்கிடமின்றி, ஒரு பொருளின் உள்ளும் புறமும் அது சம்பந்தமான கருத்துக்களும் சார்புகளும் திரட்டிவடித்த ஒரே இணைந்த கருத்தாக ஒளிவிசித் திகழுமாகையால், சந்தேக விபரீதங்களுக்கு அங்கு யாதொரு இடமுமிருப்பதில்லை. ராமாயணம், பாரதம், சிலப்பதிகாரம்போன்ற பெருங்காப்பியங்கள் ஒவ்வொன்றும், ஒரே முழுக்கருத்தாகக் காணப்படும். அவ்வாறே பைபிள், குரான், வேதாந்தம், சித்தாந்தமுதலியனவுமாம். அது எவ்விதம் என்பது அனுபவத்தாலறியப்படவேண்டுமே தவிற, வாக்கினுல் விளக்கக்கூடியதல்ல.

சூரியமண்டல மெங்கும் யாதொரு தடையுமின்றி உலாவித் திரியவல்ல உயர்நிலையிலுள்ள தேவகணங்கள் இங்கே வசிப்பர். கோடிசூரியப் பிரகாசமான அவர்கள் உடம்புகளையோ, அவர்கள் உலக சேவையாக இறைவன் பணியை இயற்றிவரும் முறைகளையோ நமக்கு அறிவதுகூட எளிதல்ல. (Akashic Records) சித்திரபுத்திர நயினர் கணக்குப் பதிவு செய்யப்படும் இடம இதுவே. அதனை ஆராய வல்லவருக்குப் பண்டைக் காலங்களும் அப்போது நடைபெற்ற நிகழ்ச்சிகளும், இனி வருங்கால நிகழ்ச்சிகளின் அறிகுறிகளும் அங்கு படம்போல விளங்கும். அச்சித்திர புத்திரர் கணக்கை இன்றையத் திரைப்படம்போல முன்னேக்கிச்

செலுத்தி நோக்கவோ, பின்னேக்கிச் செலுத்தி ஆராயவோ, ஒரு கட்டத்தைக் கண்முன் நிறுத்திவைத்து வேண்டுமளவும் ஆராயவோ, அங்கு இயலும். அங்ஙனம் அறியவல்லாருக்கு விசாச-முறை என்ற உலக முன்னேற்ற முறையைப் படிப்படியாகக்-கண்டு, ஒவ்வொரு படிக்கும் இறைவன் விதித்துள்ள முடிவையும் தெரிந்து, அதற்குத் துணையாக நின்று இறை பணியை வழுவாது இயற்றமுடியும். நமக்குள் நயினர் நோன்பன்று படிக்கப்படும் சித்திரபுத்திரநயினர் கதை என்ற பண்டைய நூலில் இவ்வுண்மை குறிப்பாகக் காட்டப்பட்டிருப்பதோடு, அவருடைய கணக்கு எழுதப்படும் முறையும், அது உபயோகப்படும் முறையும், அங்கு நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன. சாதாரண மனிதருடைய அருவமன உடம்பு கூரிய உணர்ச்சியொன்றுமின்றி ஒரு ஒளி-யற்ற முட்டைபோலவே காணப்படும். அவனும் அவ்வுடம்பில் கல்லுப்போல மூடமாக, அதாவது பிரக்ஞையின்றியே கிடப்-பான். ஆனல் அங்கு பூரணப் பிரக்ஞை யடைந்துள்ள பக்கு-வான்மாக்கள், கோடிசூரியப் பிரகாசமாய், பல பல அழகிய வர்ணங்களைக்கொண்ட மிகப்பெரிய முட்டைபோன்ற உடம்பு-களை யுடையவராய், பார்வைக்கு மிகவும் அற்புதக் காட்சிகளாக விளங்குவர். ஆலயங்களிலுள்ள சுவர்கள், மேற்கூரையின் அடிப்-புறங்கள் முதலிய இடங்களெங்கும் பலவர்ணங்கொண்ட சித்திரங்-களைத் தீட்டி வைப்பது, புராணக்கதைகளை விளக்குவதோடு சூக்கும உடம்புகளின் உயர் நிலையாகும் பக்குவத்தை அறிகுறி-யாகக் காட்டுவதற்குமாம். மல்லாந்து படுத்திருக்கும் மனித-னுடைய சூட்சும உடம்புகளின் மேலோட்டைக் காட்டுவதே ஆலயத் தட்டட்டியின் அடிப்புறம்.

மகர்லோகத்தில் தீமையென்பதே இல்லையென்று முன்னே கூறப்பட்டது. பூலோக, புவர்லோக, சுவர்லோகங்களில் நன்-மையுந் தீமையும் தனித்தும் விரவியும் நடைபெறுவனவா யிருக்கும். அதாவது அம்மூன்றுலகங்களிலுமுள்ள அலைகள், சலனங்களிற் சில, இன்ப உணர்ச்சிகளையும், வேறு சில, துன்ப உணர்ச்சிகளையும் தரவல்லன. மகர்லோக அலைகளோ இன்ப உணர்ச்சி யொன்றையேதரும்; துன்ப உணர்ச்சியைக் கொடுக்கக் கூடிய சலனங்கள் மந்தமானவை யாதலால் அங்குள்ள மிக

நுண்ணிதான தத்துவங்களோ அவை இயக்க முடியாதுபோம். அங்கு மனிதருக்கு பந்தத்தைக் கொடுக்கக்கூடிய சலனம் ஒன்று மாத்திரமேயுள்ளது; அதுவே வேற்றுமை யுணர்ச்சியைக் கொடுப்பது. அவ்வுலகில் தொழில் செய்யக்கூடிய ஆன்மாக்களெல்லாம், அனைத்துயிர் ஒன்றென்ற உண்மையை நன்கறிந்திருப்பினும், அனுபவத்தில் தான், பிறர் என்ற தன்மை நீங்கப் பெறாதவரா யிருப்பர். அந்த உணர்ச்சிக்குக் காரணத்தையே ஆணவமலம், அஞ்ஞானம், அவித்தையென்று பலவாகப் பல தத்துவமுறைகளும் அழைக்கும். அந்த “நான்” என்ற உணர்ச்சி முற்றிலும் நீங்குகிறவரை அவ்வான்மா பூவுலகில் மாறி மாறிப் பிறந்தும் இறந்தும் வருமாகையால், அங்ஙனம் பிறவித்துன்பத்திற்குக் காரணமாயிருக்கும் இந்த அருவமன உடம்பு, காரண உடம்பென்றும் அழைக்கப்படும்.

இந்தக் காரண உடம்பிற்கு மேற்பட்ட அடுத்த உடம்பு விஞ்ஞான உடம்பு, அல்லது விஞ்ஞானமய கோசம் என்றழைக்கப்படும். இது ஜனோ லோகத்தில் வேலை செய்வதற்கு ஏற்பட்ட உடம்பு; அவ்வுலகப் பொருள்களால் ஆக்கப்பட்டிருப்பது. இது உலக மக்களில் முக்காலே முண்டாணி மூன்று வீசத்தாருக்கு வித்துக்குள் முளைபோல அடங்கிக்கிடப்பதைத்தவிர வேறே வேலை யொன்றுஞ் செய்வதில்லை. ஆனால் அது வேலைசெய்யத் தொடங்கியவுடன், அம்மனிதன் பல பல யுகங்களாகப் பலவாயிரக்கணக்கான பிறவிகளாகச் சிறிது சிறிதாகத் திரட்டிவந்த அனுபவங்களெல்லாம் தலைகீழாக மாறிப் புதியதொரு அனுபவத்தைப் பெறுகின்றான். அன்ன உடம்பிலும் இச்சையுடம்பிலும் உருவமன உடம்பிலும் அவனுக்குப் புறப்பொருள்களையும் மனிதர் விலங்குகளையும் அரைகுறையாகவே அறிய முடிந்தது. அருவமன உடம்பில் வேலை செய்யும்போது அவற்றை உள்ளும் புறமும் பூரணமாகக்கண்டு அவனுக்கு அறிய முடிந்தாலும், அவனுக்கு வெளியிலுள்ள பொருள்களாகவே அவை தென்படுமாகையால், அவற்றின் ஆன்ம நிலையை அவனுக்கு அறிய இயலாது போகின்றது. ஒருவன் ஒரு கற்கண்டுத்துண்டை வாயில் போடக் காண்கின்றோம்; அவன் வாயை உதப்புவதையும் மொச்சட்டங் கொட்டுவதையுங் காணும்போது அது இனிப்பா

யிருக்கிறதென்பதையும் அறிகின்றோம். ஆயினும் நம் வாயில் கற்கண்டுத்துண் டிருப்பதுபோன்ற உணர்ச்சி நமக்கு ஏற்படுவ-தில்லை. அதனால் அந்த அனுபவம் புறப்பொருட் காட்சியாகவும் வெறும் அறிவு மாத்திரமாகவுமே இருந்து விடுகின்றது. ஆனால் நாம் விஞ்ஞான உடம்பில் வேலை செய்யும்போது, காண்பான், காட்சி, காணப்படுபொருள் எல்லாம் ஒன்றாகி விடுகின்றன; அங்கு நாம் ஒன்றை, ஒருவனை நோக்கினால் அப்பொருளாகவே, அம்மனிதனாகவே நின்று அறிகின்றோம், உணர்கின்றோம், அனு பவிக்கின்றோம். சாதாரணமாக நம்முடைய மனதில் எழும் எண்ணத்தை எப்படி அறிகின்றோமோ, நம் விரலில் எறும்பு கடித்தால் என்ன உணர்கின்றோமோ, அம்மாதிரியே மற்றவன் அனுபவங்களும் நமக்குப் புலப்படுகின்றன. ஆயினும் அதே சமயத்தில் அவை நம்முடையவையல்ல என்றும் மற்றவருடைய அனுபவங்களை நாம் ஒன்றிநின்று உணர்வதாகவும் நமக்கு விளங்குகின்றது. [சைவசித்தாந்த முறையில் ஒன்றாகாமலும் இரண்டாகாமலும் ஒன்றும் இரண்டும் இன்றாகாமலும் நிற்கும் நிலையொன்று கூறப்படுகின்றது. அதனையொத்த நிலை இவ்வுடம்-பிலேயே அடையப்படுகின்றது போலும்.] இவ்வுடம்பு தொழிற் படாதவரை அவ்வுணர்ச்சி உண்டாவதில்லை.

இத்தகைய புத்துணர்ச்சி உண்டாவதாலேயே நம்முடைய இரண்டுபட்ட பழைய அனுபவங்களெல்லாம் இப்போது தலை கீழாக மாறிப்போகின்றன வென்று மேலே கூறப்பட்டது. எங்ஙனமெனில் :—

(1) விஞ்ஞான உடம்பில் நாம் வேறொரு மனிதனைக் கவனித்தவுடன், நாம் அவன் மூலமாக நினைப்பதாகவும் உணர்வ-தாகவும் தொழில் இயற்றுவதாகவும் நம்மிடம் ஒரு அனுபவம் உண்டாவதோடு, அவன் நம் உடம்பில் ஒரு பாகமாயிருப்பது போலவும் தோன்றுகின்றது. இவ்விதம் பல மனிதரோடும் பல பொருள்களோடும் ஒன்றி நின்று அனுபவம் பெறும்போது, "நான்" என்ற ஒன்று இல்லவேயில்லை யென்றும், அனைவரும் ஒரு மகத்தான உடம்பின் அணுக்களா யிருப்பதாகவும், அந்த மகத்தானது ஒவ்வொருவர் மூலமும் எண்ணுவதும் இச்சிப்பதும்

உணர்வதும் தொழிலியற்றுவதும் தவிர, வேறு "நான்" என்ற கொள்கை வெறும் மயக்கமே யென்றும் பூரணமாக அவனுக்குப் புலனாகின்றது. [அப்போது "ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடா-தாரே" என்ற அப்பர் சுவாமிகள் தேவாரத்தின் கருத்து அவனுக்கு அனுபவமாகாமல் என்ன செய்யும்!] தன்னை இறை-வன் கையிலுள்ள ஒரு கருவியாக அவன் அனுபவத்தில் காண்கின்றான்.

(2) குடியன், பொய்யன், கொலைகாரன் முதலிய தீய மக்களைக் காணும்போது, அதுவரை அவரை வெறுத்துப்பழித்து ஒதுக்கி வந்த அவன், இப்போது அவரைத் தன்னில் ஒரு பாக-மாகவும் அவர்கள் மூலம் தானே அப்புன்தொழில்களை இயற்று-வதாகவும் அனுபவிக்கும்போது, அவரைக் குறைகூற அறியாமல் திகைக்கின்றான்; அவர்களைத் தன்னிலுள்ள பலவீனமான உறுப்-புகளாகவே உணர்கின்றான். அந்தப் பலவீன நிலையிலுள்ளவருக்கு அச்செயல்கள் இயற்கையென்றும் முறையென்றும் காண்கின்றான். அவர் நிலையில் தானிருப்பின், தன் நடையும் அவ்விதமே யிருக்கு மென்பதை உணர்கின்றான். அது காரணமாக அவரிடம் பச்சா-தாபமும் அன்புங்கொண்டு அவரைக் கைதூக்கிவிடும் அவாவை அதிகமாக அடைகின்றான். ஏனெனில் அவரைச் சீர்திருத்தாது தான் தனியாகவோ அன்மவர்க்கம் மொத்தமாகவோ சீர் திருந்து-வது முடியாதகாரியம் என்ற உறுதி அவனுக்கு அந்த அனுபவத்-தால் பிறக்கின்றது; உலகில் எதனையும் நன்று தீதென்றறைத நிலையும் அவனுக்கு வந்தடைகின்றது.

(3) விஞ்ஞான உடம்பில் வேலைசெய்யும்போது, தன்னோடு விவகரித்து நிற்பவர்கள் தன்னுடைய பாகங்களென்ற உணர்ச்சி யிருக்குமே தவிர, தான் அவரிடத்து அடங்கிக் கிடப்பதான உணர்ச்சி உண்டாவதில்லை. விஞ்ஞான உடம்பில் விழித்திருக்கும் பதின்மர் ஒன்றுகூடுவாராயின், அவரில் ஒவ்வொருவரும் தம்முடைய உறுப்புக்களாகவே மற்ற ஒன்பது பேர்களும் இருப்-பதாக உணர்வர். தம்முடைய முற்பிறப்புகள், அனுபவங்கள், முயற்சிகள் எல்லாவற்றையும் தம் உடம்பில் நின்று அனுபவித்த-தாகவும், மற்ற ஒன்பது உடம்புகள் மூலம் வேறு விதமான முற் பிறப்புகளையும் அனுபவங்களையும் முயற்சிகளையும் நடத்திவந்த-

தாகவுமே ஒவ்வொருவரும் நினைப்பர். இம்மக்களை முத்தி நிலையைவிட்டுப் பிரித்துவைப்பது இந்த ஒரு மயக்கமே. இவருக்குப் "பார்க்குமிட மெங்கும் பரமன் காணம்மானே," என்ற உண்மை மறைபட்டு, "பார்க்குமிட மெங்கும் "நானே" காணம்மானே" என்ற அனுபவமே நிறைந்திருக்கும். [இதுவே அகம்பிரம்ம ஞானம் என்ற மயக்கமென்றும், (படர்) பசு ஞான மென்றும் சைவசித்தாந்த முறையில் கூறப்படுவதுபோலும்.]

மானிட வர்க்கத்திற்கு இந்த நிலையே மிக மிக அரியதொரு நிலையாம். மனித வர்க்கம் வைவசுவதமன்வந்தரத்தில் ஒரு பாதியே கடந்து வந்திருக்கிறது; அதாவது, இன்றைய விகாச முறையென்ற பரிணாமமுறையில் நாம் படிக்கவேண்டிய பாடங்களும் தேறவேண்டிய பரீக்ஷைகளும் அரைப்பங்கே நடைபெற்றிருக்கின்றன. அவற்றின் பலனாக நமக்கு அன்ன உடம்பு, பிராண உடம்பு, இச்சையுடம்பு, உருவமன உடம்பு இந்நான்கும் ஒருவாறு வளர்ந்து வந்திருக்கின்றன. மேதாவிகளிடம் அருவமன உடம்பும் ஒரு சிறிது வேலை தொடங்கி யிருக்கிறது. அதனால் இன்று விஞ்ஞான உடம்பில் வேலை செய்ய விரும்புபவர் மாசு மறுவில்லாத ஒழுக்கத்தாலும், முறுகின அன்புத் தொண்டாலும் மற்று யோகப்பயிற்சியாலுமே, அந்த வளர்ச்சியை அடைய முடியும். ஆனால் மனிதர் முன்னேறி வருவது போலவே, அவர் உடம்புகளை ஆக்கும் சப்த பூதங்களும் முன்னேறிப் பரிணமித்துக் கொண்டிருப்பதால், காலக்கிரமத்தில் மக்களுடைய ஆற்றலும் கூடிவரும்; அவர்கள் உடம்புகளின் அணுக்களும் தாதுக்களும பண்பட்டுத் தேறியிருக்கும். அப்போது அதிகக் கடினமான முயற்சியில்லாமலே எல்லா மனிதருக்கும் இந்த விஞ்ஞான உடம்பின் அனுபோகமும், மன்வந்தர முடிவுகாலத்தில் ஜீவன் முத்தியும் கைகூடும். அதற்கு இன்னும் கோடிக்கணக்கான ஆண்டுகள் செல்லுமாகையால், அதுவரை பிறவித்துன்பங்களைச் சகிக்கலாற்றாதவர், இன்றே மேலே கூறிய மாசுமறுவின்றிய உத்தம ஒழுக்கத்தையும், அன்போடு கூடிய ஓய்வின்றிய உலக சேவையையும், அருட் குரவர்மூலம் யோகப்பயிற்சியையும் கைக்கொள்ளுதல் முறையாகும்.

---

[] இக்குறியினுள்ளவை நூலாசிரியர் கருத்துக்கள்—வங்கப்பணிமுனிவர் கூற்றல்ல.

மேலே கூறியவை யாவும் வங்கப்பணி முனிவர் அநுபவக் குறிப்பைத் தழுவியன. இனி, மனிதனுக்கு ஆதியில் ஏற்பட்ட உடம்பே ஆனந்தமயகோசம் எனப்படுவது. அதனால் அதை அவனுடைய முதலாவது உடம்பென்பதே பொருத்த முடையது; ஆயினும் அதுவே அவனிடம் கடைசியாகத் தொழிற்படுவதால், அது அவனுடைய ஏழாவதுடம்பு எனவும்படும். அந்த ஆனந்த-மய உடம்பின் பூரண மலர்ச்சியைப்பற்றி, "இருந்து பாருங்கள்," என்பதைத்தவிர வேறொன்றும் கூறுவதற்கில்லை. உடம்பின் பெயரே ஆனந்தமயம்; அதன் பலன் பேரானந்தமாகவே இருக்கு மென்பதற்கு ஐயப்பாடு வேண்டுவதில்லை. நம் அநுபவத்திற்குட்பட்ட சிற்றின்பமே சொல்லால் ஒருவருக்கொருவர் விளக்கிக்கொள்ளக் கூடாததா யிருக்கும்போது, நம் மனத்திற்கே அப்பாற்பட்டதும் பெரும்பாலார் அநுபவித்திராததுமான இப்-பேரின்பத்தைப்பற்றி யாது கூறமுடியும், எவ்வாறு விளக்க முடியும். "கண்டவர் விண்டாரிலர், விண்டவர் கண்டாரிலர்," என்பதைத்தவிற வேறு சொல்வதற்கில்லை. இந்த உடம்பில் நின்று பூரணமாக வேலை செய்பவரே ஜீவன் முத்தராவர். அந்த தெய்வ புருஷர்கள், உலகின் பல பாகங்களிலும் பல நாடுகளிலும் பல மக்களிடையும் அவதரித்து, அரசியல், சமுதாயம், சமயம், கல்வி, கலைகள், நாகரிகங்கள், மொழி வளர்ச்சி முதலிய எல்லாத் துறைகளிலும் செய்துள்ள அற்புத வேலைகளைச் சிறிதளவு ஆராய்ச்சி யுடையவரும் எளிதில் அறிவர். அவர்களுடைய ஆற்றலும் அன்பும் அறிவும் மனிதவல்லமைக்கு மிகமிக மிஞ்சிய-தாகவும் தெய்வத்தன்மை வாய்ந்ததாகவும் விளங்கும். அவர்களைப் பற்றிய குறிப்புகளும் நிகழ்ச்சிகளும் உலகத்திலுள்ள பல நாட்டுப் புராணங்களிலும் இதிகாசங்களிலும் சரித்திரங்களிலும் சமயங் களிலும் காணப்படும். அவர்கள் ஒரு நாட்டுக்கோ மதத்திற்கோ மக்களுக்கோ மாத்திரம் உரியவரல்லர்; அவர்கள் உலகப் பொது மக்கள். அவர்களைப்பற்றி "ஆலயத் திருவிழாக்கள்," என்ற பாகத்தில் விரிவாய்க் கூறப்படும். இவர்களே "பார்க்குமிட மெங்கும் பரமன் காணம்மானே," என்றும், "ஸர்வம் பிரம்ம-மயம்," என்றும், "அவனன்றி ஓரணுவும் அசையாது," என்றும் "தத்துவ மஸி" என்றும், பலவாகக் கூறப்பட்டுள்ள முதுமொழி களைத் தம் அநுபவத்திலிருந்து நமக்கு எடுத்துரைப்பவர்; எடுத்

துரைத்துள்ளவர்; இன்றும் எடுத்து விளக்கத் தயாராகக் காத்து நிற்பவர். அவரே "இறைவன் ஆலயத்தைத் தாங்கி நிற்கும் தூண்கள்" எனப்படுபவர். அன்னார் திருவடி நீடூழி வாழ்க.

இதுவரை கூறப்பட்டுள்ள மனிதனுடைய ஏழு உடம்பு-களையும், உலகிலுள்ள பலவகையான தத்துவ முறைகள் பலவிதங்-களாகத் தொகுத்தும் விரித்தும் கூறும்; ஆலயங்களும் அவ்வாறே அறிகுறியாகக் காட்டும். சந்திகளில் காணப்படும் பிள்ளையார் கோவில்கள் போன்று மூலஸ்தானமும் மூர்த்தியும் மாத்திரங் கொண்டுள்ள ஆலயங்கள், உயிரையும் உடம்பையும் பொதுவாகக் குறிப்பிடும்; மூலக்கிரகமும் ஒரு மதிலுமுள்ள ஆலயங்கள் ஸ்தூல சூட்சும உடம்புகளையும், இருமதில், அதாவது மூன்று ஆவரணங்-களைக் கொண்டவை ஸ்தூல சூட்சும காரண உடம்புகளையும், ஐந்து பிராகாரங்களை யுடையவை அன்னமய பிராணமய மனோமய விஞ்ஞானமய ஆனந்தமய கோசங்களையும், ஏழு பிரா-காரங்களைக் கொண்டவை மேலே சொன்ன ஏழுவிதப் பாகு பாட்டையும் அறிகுறியாக விளக்குவனவாம்; இத்தொகை விரிகளைக் கண்டு தத்துவ நூல்கள் தம்முள் பிணங்குவதாகக் கொள்வது முறையாகாது. அவ்வாறே ஆலயங்கள் சப்த உலகங்-களைக் குறிக்கும்போதும் இந்தப் பாகுபாட்டை மனதில் வைத்துக் கொள்ளுதல் முறையாகும். அதனை மேலே காண்க.

---

பாடம் 13.

## மனித உடம்புகள்—முடிப்புரை.

மேற்சொன்ன மனித உடம்புகளில், அன்னமய உடம்பும் பிராணமய உடம்பும் பெரிதும் சட இயற்கையுடையன; இச்சை-யுடம்பில் விலங்கியற்கையும், உருவமன உடம்பில் மனித இயற்-கையும் நிறைந்திருக்கும். இவற்றிற்கு மேற்பட்ட உடம்புகள் தெய்விக இயற்கையைப் படிப்படியாகக் காட்டத் தொடங்கும். வெறுஞ் சோம்பேறியாய்க் கையிற் கிடைத்ததை அருந்திக் கண்ட இடத்தில் உறங்கிக் கிடப்பது சட இயற்கை. உண்டு உடுத்து உறங்கியும், அந்த அனுபவங்களுக்காகப் பயத்திற்கும் காம

இச்சைக்கும் உட்பட்டுப் பணந்தேடி உழைப்பதும், விலங்கியற்கை. நன்மைதீமையறிந்து, நன்மையை நாடித் தீமையை விலக்கி, உடலையும் உள்ளத்தையும் ஒருவாறு அடக்கியாள்பவனிடத்து மனித இயற்கை தலையெடுக்கிறது. அந்தப் பகுத்தறிவே மனிதனை விலங்கைவிட்டுப் பிரிப்பது. உரிய சாதனங்களால் மனிதன் உடலையும் உள்ளத்தையும் நினைத்தபடி ஆட்டுவிக்கும் திறமையையும், அவற்றின் ஆற்றலைப் பூரணமாய் வெளிப்படுத்தும் வல்லமையையும் எய்தும்போது, அங்கு மனித இயற்கை முற்றுப் பெறுகின்றது. காமம் வெகுளி மயக்கும் யான் எனதென்னும் செருக்கும் அறவே ஒழிந்து, அனைத்துயிரிடத்தும் அருட்செயலாற்றும் பான்மையுடையோரிடத்து தெய்விக இயற்கை தலையெடுத்துக் காட்டும்; சீவத்தன்மை நீங்கும்போது சிவத்தன்மை உண்டாகும் என்றது இந்த முடிந்த நிலையையேயாம். இவற்றுள் கீழான இயற்கை அடங்கும்போதே அதற்குமேற்பட்ட இயற்கை விருத்தியாகத் தொடங்கும்; ஏனெனில் ஒளியும் இருளும் ஒரே இடத்தில் தங்குவதில்லை.

இனி, மனிதன் தரையில் வண்டி யோட்டுகின்றான், தண்ணீரில் கப்பலோட்டுகின்றான், ஆகாயத்தில் விமானமோட்டுகின்றான், அவன் மாத்திரம் அதே மனிதனாக இருக்கின்றான். அம்மாதிரியே அவனுக்கு ஒவ்வொரு உலகத்தில் வேலை செய்வதற்கு ஒவ்வொரு தனிக்கருவியாகிய உடம்பு அமைந்திருக்கின்றது; ஆயினும் அவன் அவற்றினின்றும் வேறாகவேயிருக்கின்றான்; உடம்புகள் எத்தனை மாறினாலும் அவன் மாத்திரம் அதே மனிதனாகவே இருக்கின்றான். இந்த உண்மையை அறியாமல் தன்னைத் தன் உடம்புகளாகக் கொள்வது, ஒருவன் அணிந்திருக்கும் உடுப்பை அம்மனிதனாகவோ, அவன் குடியிருக்கும் வீட்டை அம்மனிதனாகவோ கொள்வது போன்ற மூடத்தனமானதே. ஆனால் இவ்வுடம்பைவிட்டு நீங்கிநின்று நாம் பெரும்பாலாருக்கு வேலை செய்ய முடியாமையால், இந்த உடம்பே நாமென்று நினைக்க ஏது உண்டாகின்றது. ஆயினும், ஆலயந்தொழக்கூடிய பக்குவம் வந்தவர்கள், இந்த மயக்கத்தை சுருதி, யுக்தி, அனுபவங்களைக்கொண்டு தம்மால் கூடியவரை ஆராய்ந்து, தம்முடைய இயற்கையையும் தமது பலவேறு உடம்புகளின் தன்மைகளையும் தெரிந்து,

அறிவினாலாவது தம்மை எப்போதும் ஆன்மாவாகக் கருதும் பழக்கத்தை அடைய முயலல் வேண்டும். ஆலய வழிபாடு செய்யும்போதும், அன்றாடம் தியானம்பண்ணும் போதும், இப்பழக்கத்தை சாதகஞ்செய்தல் வேண்டும். இப்பழக்கம் முதிரமுதிரப் புறவுலக நிகழ்ச்சிகள் அவரை அதிகம் பாதிக்காது போம்; அப்போது அவருக்கு ஒரு மனச்சாந்தியும், வாழ்க்கை இடைஞ்சல்களைச் சகிக்கப் பொறுமையும், ஓரளவிற்குப் புடைபெயரா நிலைமையும் ஏற்படும். சாதாரண மக்கள் சமுசாரக் கடலில் தத்தளிக்கும்போது, இவர் காலின்கீழ் ஊன்றுபாறை யுடையவர் இடுப்பளவு நீரில் நிற்பது போலத் தம்மைச் சமாளிக்க வல்லவராயிருப்பர். தம்மையும் உடம்புகளையும் பிரித்தறியும் பழக்கத்தாலேற்படும் குணங்களே இவை.

மேற்சொன்ன உடம்புகளெல்லாமே, உபயோகத்தைப்பொறுத்து ஆன்மாவிற்கு உதவுங் கருவிகளாகவோ சிறைக்கூடுகளாகவோ அமைந்து விடலாம். அவை எவ்வளவுக்கெவ்வளவு வளர்ச்சியுற்று மேன்மையடைந்திருக்கின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு அவன் தன்னுடைய அறிவு இச்சை செயல்களையும், அன்பு ஆற்றல்களையும, கூடுதலாக உலகில் தொழிற்படுத்தக்கூடியவனாவான். அவை உயர்ந்து பண்பட்டவையாயிருப்பின் அங்கு வீணாகானத்தையும் ஆன்மாவின் ஜங்கார சுருதியையும் எழுப்பித் தனக்கும் பிறர்க்கும் அவன் ஆனந்தத்தை விளைவிக்கலாகும். அன்றிக் கீழ்த்தரமான உடம்புகளாயின், அங்கு வில்லோசையும் பறையோசையும் பம்பைமேளமும் வெளிப்படுமே தவிர இனிமையொன்றும் அங்கு பிறக்காது. அப்போது அவை அவனைச் சிறை செய்யுங் கூடுகளாகவே இருக்கும். இது அப்பிறப்பிற்கு மாத்திரமல்ல; ஏனெனில்

"உறங்குவது போலுஞ் சாக்காடு, உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு."

உறங்கி விழித்தவன் வேற்று மனிதனாக எழுந்திருப்பதில்லை: முன்னைய மனிதனாகவே யிருப்பான். அம்மாதிரியே இறந்தவன் திரும்பப் பிறக்கும்போது, பழைய இயற்கைகள் மாறியவனாகப்பிறப்பதில்லை. அது, ஒரு உடையைக் களைந்துவிட்டு வேறு

உடை உடுத்தியவன் வெளித்தோற்றத்தில் வேறாகக் காணப்படினும், உள்ளிருப்பவன் அதே மனிதனாக இருப்பது போன்றதே. மனிதன் பிறப்பதாகவும், இறப்பதாகவும் தோன்றினாலும், உண்மையில் ஆன்மாவின் வாழ்க்கை ஒன்றேயாகும்; ஒவ்வொரு பிறப்பும் அதில் ஒவ்வொரு நாளேயன்றி வேறல்ல. அதனால் அவன் இறக்கும்போது இருந்த உடம்பின் தன்மைகளே, அவனுடைய அறிவு இச்சைகளின் நிலைமைகளே, அடுத்த பிறப்பில் முன்னிருப்பாக, அதாவது பழைய முதலிருப்பாகத் தொடர்ந்துவரும். அங்ஙனம், ஒருவனுடைய முற்பிறப்பு, இப்பிறப்பு, மறுபிறப்பு எல்லாம் காரண காரிய முறையாக ஒன்றோடொன்று இணைந்து நிற்கும் இயற்கை விதிகளையறிந்து, அவரவர் இன்று நிற்கும் நிலையிலேயே தம் தம் தூல சூட்சும உடம்புகளைப் பண்படுத்த முயற்சிப்பதே அறிவுடைமை. அவை பண்படாதவரை நமக்கு நல்வாழ்வோ இன்ப வாழ்க்கையோ எய்தாதாகையால், அவ்வேலையை அன்று செய்வோமென்று அசட்டையாயிருந்துவிடாமல், இன்றே இப்போதே தொடங்குவதே இந்நூலைக் கற்கும் பயனாகும். இவ்வுலகில் மண், பெண், பொன்னாகிய உடைமைகள் ஒரு சிலருக்கு ஏற்படுவதும் ஏனையோருக்கு அமையாது போவதும் நாம் யாவரும் காண்பது. மேற்சொன்ன உடம்புகளாகிய உடைமைகளோ இறைவன் ஒவ்வொரு மனிதனுக்கும் கொடுத்திருக்கும் நிலபுலங்களாகும், தனிப்பட்ட சொத்தாகும். அவற்றிற்கு வளமிடுவதும் அவற்றைப் பயிரிடுவதும் அவரவர் கையிலேயே உள்ளது. அவற்றின் பலன்களும் அவரவருக்கே உரிமையாகுமன்றி வேறு எவராலும் பறிமுதல் செய்யக்கூடியவையல்ல. அதனால் அவற்றை விருத்திபண்ணுவதில் கண்ணுங்கருத்துமாயிருப்பவன், அங்கு ஆழ்ந்து மறைந்து கிடக்கும் புதையல்களை அனுபவிக்கவல்லவனாவான்.

---

பாடம் 14.

## மனிதன்—ஆன்மா.

“ தன்னையறிந் தின்பமுற வெண்ணிலாவே,
ஒரு தந்திரம் நீ சொல்லவேண்டும் வெண்ணிலாவே!”

“ தன்னையறிந்தார் தலைவனையறிந்தார்,” என்பன நம்நாட்டு ஞானியர் கூற்றுக்கள். “உன்னையறி,” (Know Thyself) என்பது பண்டைக் கிரேக்க ஞானியர் உபதேச மொழி. “ உள்ளே மறைந்துள ஒளியை அறி,” (Know the Hidden Light) என்பது பண்டைய எகிப்தியர் ஞான உரை. இந்த உள்ளொளியை, உண்மையாகிய தன்னை, அறிவதற்காகவே தானல்லாத உடம்புகள் இதுவரை தொகுத்து விளக்கப்பட்டன; அந்த உடம்புகளைத் தானாகக் கொள்ளும் மயக்கமும் எடுத்துரைக்கப்பட்டது. ஆயினும் அந்த உடம்புகளையே நன்கு விளக்க ஒண்ணாதபோது, அந்த உடம்புகளுக்கெல்லாம் அப்பாற்பட்டதும், அவற்றிற்கு உயிராயிருப்பதும், அவற்றை ஆட்டுவிப்பதுமான ஆன்மாவைப்பற்றி எவ்வாறு கூற இயலும்! ஆனால் அறிய முடியாத தொன்றில் பற்றுண்டாவதில்லை; பற்று இல்லாத இடத்து அன்பு உண்டாவதில்லை; அன்பு இல்லாத போது ஒழுக்கமும் அதனாலாகும் இன்பமும் இல்லாதுபோம். அதனை எண்ணியே அனுபூதிமான்கள் ஆன்மாவைப்பற்றியும் கடவுளைப்பற்றியும் நமக்கு அரைகுறையாகப் பல நாட்டிலும் பல மதங்களிலும் பல சமயங்களிலும் கூறியிருக்கின்றனர். ஆனால் இந்த அரைகுறை விளக்கத்தை அந்தந்த மதத்தவர் பூரண அறிவென்று கொண்டுவிடுவதே உலகெங்கும் காணப்படும் ஓயாத சமயப்பூசல்களுக்குக் காரணமாயிருப்பதால் அதனை ஒரு சிறிது ஆராயவேண்டியதாகின்றது.

கடவுள் என்ற சொல், உள்ளத்தைக் கடந்தது, மனம் மொழி மெய்களுக்கப்பாற்பட்டது, தத்துவங்கள் அனைவற்றையும் கடந்து நிற்பது, உள்ளுள்ளே கடந்துபோய் அனுபவிக்க வேண்டுவது, எனப் பலவகையான பொருள்களைக் கொண்டது. அவற்றுள் ஒவ்வொன்றும் உண்மையான பொருளேயாம். அவ்வாறு எல்லையற்ற தொன்றை எல்லைக்கு உட்படுத்தி விளக்க முயலும் போது, அந்தப் பரந்த பொருளின் ஒரு அணுவத்தனை துகளையே

எடுத்துக்கூற முடியும். சமீபகாலத்திருந்த அனுபூதிமானாகிய பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் இந்த உண்மையை விளக்கும்போது, "உண்மையை, அதாவது கடவுளை, இமயம் போன்ற கற்கண்டு மலையாகக் கொண்டால், அதில் இதுவரை மக்கள் கண்டுபிடித்துள்ளது ஒரு சிற்றெறும்பு கடித்தெடுக்கும் அளவேயாகும்," என்று நகைச்சுவைத் ததும்பக் கூறியுள்ளனர். இதனை விளக்க நமக்குள் பல கதைகள் இருக்கின்றன. நான்கு பிறவிக்குருடர்கள் யானை பார்க்கச் சென்றனர். அவருள் காலை மாத்திரம் தடவிப் பார்த்தவன் யானை மரம்போன்றதென்றான்; துதிக்கையைத் தடவினவன் யானை உலக்கைபோன்றதென்றான், காதைத்தடவிப் பார்த்தவன் யானை முறம்போன்றதென்றான், உடம்பைத்தடவிப் பார்த்தவன் அது மலைபோன்றதென்றான்; அவர்களுக்குள் வாதம் இறக்கும் வரை ஓயவேயில்லை. இந்தக் கதை உலகச் சிறுவரெல்லோரும் அறிவர். ஆயினும் மக்கள் அதன் உட்பொருளை உணர்வதில்லை. கண்ணுடையவனுக்குக் குருடர் கண்டவையாவும் யானையின் பாகங்களேயென்றும், யானை அவற்றிற்கும் மேற்பட்டதென்றும் நன்கு தெரியவரும். மலையின் நாலு சரிவுகளில் நால்வர் நின்று அவரவர் காணும் மலையை எழுதி வைத்துச் செல்வாரானால் அவை ஒன்றுக்கொன்று ஒவ்வாததாகவே இருக்கும். ஆனால் மலை உச்சியில் நின்று பார்ப்பவனுக்கு அவையாவும் உண்மையென விளங்கும். அவ்வாறே அனுபூதிமான்கள் மக்களுடைய சிற்றறிவையும் சிறுதொழிலையும் கருதி, தாம் அமைத்த ஒவ்வொரு மதத்தில் இறைவனுடைய ஒவ்வொரு தன்மையை அழுத்தமாக விளக்கிவைத்தனர். மலையடிவாரத்தில் எந்த இடத்திலிருந்து மேல்நோக்கி ஏறினாலும் மலையுச்சியை அடைவது திண்ணம் அதற்காக மலையின் வடபாரிசத்திலுள்ளோர் வட்டஞ்சுற்றிக் கீழ்பக்கம் மேல்பக்கஞ் சென்று ஏற வேண்டுமென்பதில்லை. அதுபோலவே, அந்தந்த நாட்டுக்கு எளிதாயுள்ள இறைவனுடைய அருங்குணங்களை அவருக்கமைத்த மதத்தில் அப்பெரியார் விளக்கி வைத்தனர். அந்த முறையைப் பின்பற்றுவதே இறைவன் திருவடியைச் சென்றுசேரப் போதுமானதென்பது இன்று ஸ்ரீராமகிருஷ்ணராலும் அனுபவவாயிலாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. அம் மகாபுருஷர் சாக்தம், சைவம், வைஷ்ணவம், கிறிஸ்தவம், மகம்மதியம், பௌத்தம்

ஆகிய இன்றைய எல்லா மதங்களையும் தனித்தனியே பின்பற்றி அவையனைத்தும் ஒரே முடிவுநிலைக்குக் கொண்டு சேர்ப்பதைக் கண்கூடாகக் காட்டிவைத்தனர். அம்மாதிரியான அவதார புருஷர்கள் பண்டைய கிரேக்க மக்களுக்கு அழகையும், பண்டைய எகிப்தியருக்கு அஞ்ஞான இருளை அகற்றும் ஒளியையும், பண்டைய பாரசீகருக்குப் பரிசுத்தத்தையும் அதனை ஆக்கவல்ல அக்கினியையும், பண்டைய ரோமருக்கு விதி, ஒழுங்கு என்பனவற்றையும், பௌத்தருக்குத் தன்முயற்சியையும் நியதியையும், ஜைனருக்கு ஜீவகாருண்யத்தையும், கிறிஸ்தவருக்கு சேவையையும், மகம்மதியருக்கு இறைவன் வல்லமை, அவன் திருவுள்ளத்திற்குப் பணிவு என்பவற்றையும், இந்துக்களுக்கு "பார்க்குமிடமெங்கும் பரமன் காணம்மானே" என்ற இறைவன் அந்தரியாமித்துவத்தையும், இறை உருவாக வகுத்து வைத்தனர். இவற்றுள் ஏதேனுமொன்றை ஒழுங்காகப் பின்பற்றுபவர் எவரும், இறைவனடி சேர்வது திண்ணமென்பதை அவர்கள் சுய அனுபவத்தால் அறிந்திருந்ததனாலேயே இவ்வாறு செய்து வைத்துப் போயினர்; அல்லாது, பின்வரும் மக்கள் அவரவர் நடைமுறையைக் கைவிட்டுப் பிறரோடு வாதாடிக்கொண்டிருக்க வேண்டும் என்ற நோக்கத்தோடல்ல.

இனி, அப்பெரியார் அவ்வாறு செய்து வைத்தமைக்கு வேறொரு காரணமும் காணலாம். பலமரங் கண்ட தச்சன் ஒரு மரமும் வெட்டமாட்டான்; கிணற்றை ஆழத்தோண்டினாலன்றி அகலத்தோண்டித் தண்ணீரை அடைவாரில்லை; இவை உலக இயல் அனுபவங்கள். அதனால், இறைவனுடைய அநந்தகல்யாண குணங்களை ஏகமாகக் காட்டிச் சிற்றறிவுடைய மக்களின் மனத்தைக் குழப்பாவண்ணம், இறைவனைச் சிறப்பாக ஒரு முறையிலேயே வழிபடும்படி, அவருக்கேற்ற மதங்களை அமைத்தனரென்பதும் பொருந்தும். ஆயினும், உலகம் பலவிதமாகையால், வெவ்வேறு சிறப்புக்குணங்களைப் பின்பற்ற விரும்புவோருக்கும் ஒவ்வொரு மதத்திலும் இடம் அமைக்கப்பட்டிருக்கின்றது. அந்த ஏற்பாடுகளே உபாசனா மூர்த்திகள், வழிபடு தெய்வங்கள் என்று அழைக்கப்படுவன. இந்நூலில் ஆராய்ந்துவரும் சிவாலயத்தை எடுத்துக் கொண்டால், அன்பு, அருள் இவற்றின் உச்ச நிலையைச்

"செம்மைத் தன்மை" என்ற "சிவம்" என்றும், பக்தியை நந்தியாகவும், ஆற்றலை நடேசராகவும், சக்தியை அன்னையாகவும், ஞானத்தை தக்ஷிணாமூர்த்தியாகவும், சாந்தத்தை விநாயகராக-வும், அழகையும் வீரியத்தையும் முருகனாகவும், வீரத்தை பைரவ-ராகவும் உபாசனா மூர்த்திகளாகக் கொள்ள ஏற்பாடு செய்திருப்-பது எளிதில் விளங்கும். ஆயினும், நம் பலவேறு வழிபாடு-களின் முடிவுநிலை, "சர்வம் பிரம்மமயம்", "பார்க்குமிடமெங்-கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தமே" என்ற அனுபூதி நிலையேயாகும்.

இதுவன்றி, ஒரு சாரார் இறைவனை உருவத்தில் வழிபடுபவர், மற்றொரு சாரார் அவரை அருவமாகக் கொள்வர், வேறொரு சாரார் அவரை அருவுருவாகவும் கொண்டாடுவர். இந்த ஏற்-பாடுகளும் மக்களுடைய இயற்கை மனப்பான்மைக்குத் தக்க-படியே வகுக்கப்பட்டுள்ளனவாம். இறைவன் எல்லா நிலையிலும் இருக்கவல்லவனாகையால், இவையனைத்தும் உண்மை பொதிந்த-வைகளேயாம். இந்த உண்மையும், சர்வ சந்தேகம் பிடித்த இந்-நூற்றாண்டில், பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரால் தமது சுய அனுபூதியிலிருந்தே விளக்கப்பட்டிருப்பதுவும் அவருடைய வாழ்க்கை வரலாற்றை வாசித்துள்ளவர் யாவரும் அறிவர்.

இனி, கடவுளைப்பற்றி இத்தகைய கொள்கை வேறுபாடுகள் இருந்து வருவது போலவே, ஆன்மாவைப்பற்றியும் வேறுபட்ட கொள்கைகள் இருந்து வருகின்றன. இந்த ஆன்மாவின் இயல்பை உள்ளபடி நேரிற்கண்டறிந்த அனுபூதிச் செல்வர், அதனை மூன்று வகையில் விளக்க முயன்றிருக்கின்றனர். ஆன்மா பரம்பொரு-ளுக்கு அடிமை என்பர் ஒரு வகையார்; ஆன்மா பரம்பொருளின் அம்சம் என்பர் இன்னொரு வகையார்; ஆன்மா பரம்பொருளே என்பர் மூன்றாவது வகையார். அனுபூதிமான்கள் அனை-வரும் பரம்பொருட்கடலில் மூழ்கியவரேயாவர்; மனமெனும் வாயிலைக்கடந்து ஆ—லயத்துட் சென்றவருக்கே அனுபவம் வரு-வது; அது துரிய நிலை, துரியாதீதநிலை; அங்கு மோனமே உண்டு, அது அவர் அனைவருக்கும் ஒப்ப முடிந்ததொன்று.

ஆனால் அங்கிருந்து அவர்கள் நனவு நிலைக்கு இறங்கித் தம் அனுபவத்தை விளக்க முயலும்போதே வேறுபட்ட பொருள்கள் நமக்குக் காணப்படுகின்றன. ஏனெனில், அறிவு இச்சை செயல் என்பன மனிதனுடைய முத்தன்மைகள் என்பது முன்னே கூறப் பட்டது. மெய் வாய் கண் மூக்குச் செவி ஆகிய ஐம்புலன்களையும் ஒரே நேரத்தில் முழு பலத்துடனும் இயக்குவது நமக்கு இயலா-ததுபோல, இம்மூன்று தன்மைகளையும் ஒரே சரிசம நிலையில் உபயோகிப்பவர் இலரென்றே சொல்லலாம். அவ் அனுபூதி-மான்களில், நனவு நிலையில் அறிவை, அதாவது ஞானத்தை வாயி-லாகவும் இச்சை செயல்களைப் பலகணிகளாகவும் கொண்டு தம் அனுபவங்களைக் காண்பவர், ஆன்மா பரம்பொருளே யென்பர்; இச்சையை வாயிலாகவும் மற்ற இரண்டையும் பலகணிகளாகக் கொண்டு அவற்றைக் காண்பவர், ஆன்மா பரம்பொருளின் அடிமை என்பர்; கிரியை அல்லது செயலை வாயிலாகவும் மற்ற இரண்டையும் பலகணிகளாகவும் வைத்து இறைவனை நோக்கு-வோர், ஆன்மாவைப் பரம்பொருளின் அம்சமென்பர். அதனால், அனுபவம் சிறிதுமில்லாத சிற்றறிவுடைய நாம் இக்கொள்கை-களைப்பற்றி வீண்வாதம் பண்ணிக்கொண்டிருப்பதைவிட்டு, அவ-ரவர் மனதிற்கிசைந்ததைக் கடைப்பிடித்து, அனுபூதி நிலையடைய முயற்சிப்பதே ஆண்மையும் அறிவுடைமையுமாகும். ஏனெனில், மனிதனுடைய இன்பவாழ்க்கைக்கு இன்றியமையாதவை, முத-லாவது ஒழுக்கமும், இரண்டாவது சாதனமுமாம். இவ்விரண்-டையும் நடைமுறையில் கொண்டு வருவதற்கு எக்கொள்கை அவனை ஊக்கப்படுத்தி உதவுகின்றதோ அதுவே அவனுக்கு உரிய கொள்கை. பிறர் எக்கொள்கையைக் கொள்கின்றாரென்பது இவனுடைய வேலையல்ல.

1. "அவா இல்லார்க் கில்லாகும் துன்பம்,"
2. "அருளில்லார்க் கவ்வுலக மில்லை,"
3. "தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்,"

என்பன எவராலும் எம்மதத்தாராலும் எக்கொள்கையாராலும் எந்நாட்டாராலும் மாற்றவும் மறுக்கவும் ஒண்ணாத இயற்கை நியதிகள். இங்கு கருமம் என்பதனை, முன்வினையால் ஏற்பட்ட

கடமை எனப்பொருள் கொள்க. "அவ்வுலகம்", பேரின்ப உலகம்.

இவ்விதிகளே, அவாவில்லார்க்குத் துன்பமில்லை,
அன்பில்லார்க்கு இன்பமில்லை,
கடமை செய்வார்க்குக் கருமமில்லை,

அதாவது மேல்வினையில்லை, ஆகாமிய கர்மமில்லை, என்று மாற்றியுங் கூறலாம். அதனால், நாளுக்கு நாள் அவாவினைக் குறைக்க எது உதவுமோ, நாளுக்கு நாள் அன்பைப் பெருக்க எது உதவுமோ, விருப்பு வெறுப்பின்றித் தத்தம் கடமைகளை இயற்ற எது தூண்டுமோ, அது பக்தி, ஞானம், கருமம், யோகம் போன்ற எம்மார்க்கமாயினுஞ்சரியே, வேதாந்த சித்தாந்த துவைத அதுவைத எக்கொள்கையாயினுஞ்சரியே, இந்து, பௌத்த, கிறிஸ்தவ, மகம்மதிய எம்மதமாயினுஞ்சரியே, அதுவே அவனுக்கு ஆலயக் கதவைத் திறக்க ஏற்பட்ட திறவுகோலாகும். இங்ஙனம் தினசரி வாழ்க்கைக்கு உதவாத கொள்கை வறட்டுக் கொள்கையாம்; அது வெறும் வாய்ஞானம், கவைக்குதவா ஏட்டுச்சுரைக்காய், விதண்டா வாதத்திற்கமைந்தை வீண்கருவி.

இறைவன்-ஆன்ம நிலைகளைப்பற்றி பகவான் இராமகிருஷ்ணர் கூறியுள்ள சுவைமிகுந்த கதையாவது:—ஒரு உப்புப் பொம்மை கடலைப்பற்றிக் கேள்விப்பட்டது. சென்று காண ஆசைப்பட்டது. கண்டதும் மெய்மறந்து நின்றது; (துவைதம்).

கொஞ்சம் நீரை எடுத்து நாவில் ஊற்றியது. அப்போது அதுவும் தானும் ஒரே உப்புத்தானென்று உணர்ந்தது; (விசிஷ்டாத்வைதம்).

அந்த உப்பு நீருக்குள் என்ன இருக்குமென்று ஆசை கொண்டு உள்ளே இறங்கிற்று. அப்போது கரைந்து கடல் நீரோடு ஒன்றிவிட்டது: (அத்வைதம்). என்பதே அக்கதை.

இனி, மேலே சொன்னபடி அவாவைக் குறைத்து அன்பைப் பெருக்கிக் கடமையைச் சரிவரச் செய்ய முயலுவோருடைய குறி குணங்கள், *"குருநாதர் திருவடியில்" என்ற நூலில் விளக்கமாகக்

* (T.P.H. அடையார், சென்னை)

கூறப்பட்டிருக்கின்றன. அது பண்டைய சாதன சதுஷ்டயத்-தைப் புதிய முறையில் விளக்கும் ஒரு சிறுநூல்; அதன்படி நடக்க வல்லவர் முத்திநெறியில் இறங்கியவரேயாவர்; நடக்க முயல்பவர் பேரின்பத்திற் பேராவாக் கொண்டவராவர். சிவாலயங்களில் நந்திபெருமானுடைய அனுமதியில்லாதபோது சிவதரிசினமும் அதன் பலனாகிய சிவப்பேரின்பமும் அடியார்-கள் அடையார், என்று ஆகமநூல்கள் கூறுகின்றன. நந்தி-தேவர் தனக்கு ஆதாரமாக ஊன்றி நிற்கும் நான்கு கால்களும் நான்கு வேதங்களாகவும் நான்கு தகுதிகள், குணங்களாகவும் நான்கு சாதனங்களாகவும் கூறப்படுகின்றன; அந்த சாதனங்-களைப் பழகுவோருக்கே அவருடைய அனுமதி கிட்டுமென்பதே அதன் கருத்தாகும். அந்த சாதனங்களை விளக்கும் அந்நூலை அனுசரிப்பவர் குருவின் திருவடியை அடுத்தவராவர், சிவதரி-சனத்திற்கும் அருகராவர்.

உலகில் வாழ்வோரில் ஜீவன்முத்த ரென்று இன்று கருதப்-படும் மகான்களில், ஜிட்டு கிருஷ்ணமூர்த்தி யென்பார் ஒருவர். இவர் 1896-வது கிறிஸ்தவ ஆண்டில், தெலுங்க நாட்டில், மதனப்பள்-ளியில் அந்தணர் குலத்தில் அவதரித்து, தமது முப்பதாவது வயதில் முத்தி நிலையை அடைந்தனர் எனப்படுகின்றது. இப்-பெரியார், "திருவருட்பயன்" என்ற சைவசித்தாந்த நூலானது,

"கள்ளத்தலைவர் துயர்கருதித் தம்கருணை
வெள்ளத்து அலைவர் மிக".

என்று "அணைந்தோர் தன்மை"யைக் கூறுவது போன்று, தாமும் இன்றைய உலகத்துன்பத்தைப் போக்கும் பொருட்டு உலகம் முழுவதும் ஓயாது சுற்றித்திரிந்து உபதேசம் செய்து வருகின்றனர். அவருடைய அனுபவங்களும், கடவுள் ஆன்ம விளக்கங்களும், வீடுபேற்றிற்குரிய நெறிகளும், அவருடைய பல பல சொற்பொழிவுகள், பேச்சுக்கள், வினாவிடைகளில வெளிவந்-திருக்கின்றன. ஒரு நாட்டையோ ஒரு மதத்தையோ அனுசரி-யாமல், ஒன்றே குலமும் ஒருவனே தேவனும், என்ற பொது நோக்கிலேயே அவ்வுபதேசங்கள் இருக்கின்றபடியால், இக்கால மனநிலைக்கு அவை பெரிதும் பொருத்தமுடையனவாகப் புலப்-படுகின்றன. விருப்பமுடையோர் அவற்றைக்கற்று ஆராய்வதும் நற்பலன் தருவதாகும்.

பாடம் 15.

## பிண்டம்—உலகம்.

இதுவரை தனிப்பட்ட மனிதனைப் பிண்டமாகக் கொண்டு, ஆலயப்படம் அவனை அறிகுறியாக விளக்கும் விதங்கள் ஆராயப்பட்டன. இனி, பல கோடி மக்கட்கு உறைவிடமாகவுள்ள இந்த உலகத்தைப் பிண்டமாகக்கொண்டு, அதனையும் ஆலயங்கள் எங்ஙனம் விளக்குகின்றனவென்று ஒரு சிறிது ஆராய்வோம்.

தற்கால மேனாட்டு அறிவியல் நூல்களின்படி பூமியானது சுமார் 8000 மைல் குறுக்களவும் 25000 மைல் சுற்றளவும் கொண்ட ஒரு பெரிய பந்தாகும். அது கிச்சிலிப்பழம் போன்று உருண்டு, இரண்டு துருவங்களிலும் சிறிது தட்டையாயிருப்பது. அது பம்பரம் சுற்றுவதுபோல, மணிக்கு 2000 மைல் வேகத்தில் திரிகைபோலத் தன்னைச்சுற்றி ஓயாது சுழன்று கொண்டிருக்கும். அதனாலேயே நமக்குப் பகல் இரவு உண்டாவது ; சூரியனை நோக்கும் பாகத்தில் பகலும் மறுபுறத்தில் இரவுமாக இருக்கும். சுற்றுகிற பம்பரம் இடத்தைவிட்டு இடம் நகருகிற மாதிரி, பூமியும் சூரியனைச் சுற்றி ஓயாது வட்டமிட்டுக் கொண்டும் இருக்கும். ஒரு தடவை தன்னைச் சுற்றுவது 24 மணி நேரங்கொண்ட ஒரு நாளாகும்; ஒருதடவை சூரியனைச் சுற்றுவது 365 நாள் கொண்ட ஒரு வருஷமாகும். சூரியனைச் சுற்றிவருகிற பாதை வட்டமாயிராமல் கோழிமுட்டை போன்றிருக்கின்றது. அந்த முட்டையின் இரு பக்கமும் சூரியனைக் கொஞ்சம் நெருங்கி இருப்பதால் பூமி அங்கு வரும்போது கூடுதல் வேகமாகச் சுழலுமாம் ; அல்லாவிடின் பூமியைச் சூரியன் இழுத்து விழுங்கிவிடுமாம். முட்டைப் பாதையின் இரு நுனிகளிலும் வரும்போது, பூமி சிறிது மந்தமாகச் சுழலுமாம். முன்னைய வேகத்திலேயே சுழலுமாயின் சூரியனாகிய கட்டுத்தறியில் அதனைப் பிணைத்திருக்கும் தும்பு அறுந்து, பூமியானது போன இடம் தெரியாமல் போயே போய்விடுமாம் ; அவ்வளவு அழகாகவும் துல்லியமாகவும் அதன் வேகம் ஒழுங்குபடுத்தப்பட்டிருக்கிறதாம். அத்துடன் அதன் சுழற்சிவேகம் ஒரு சிறிது அதிகரிக்குமாயின், கார்த்திகைப் பண்டிகையில் நம்

பிள்ளைகள் கிறுகிறு வாணம் சுற்றுயபோது, அதன் பொறிகள் நாற்புறமும் பரந்தோடுவது போல, நாமும் மற்ற மிருகங்களும் பிராணிகளும் மரம் மட்டைகளும் ஆகாயத்தில் பறந்துவிடுவோமாம். அவ்வளவு துலா நிறையில் இந்தச் சாட்டையிலாப் பம்பரம் ஆட்டப்படுகின்றதாம், அல்லது ஆடுகின்றதாம்.

சமீபகாலத்தில் மேனாட்டு மேதையர் கண்டு பிடித்துள்ள வேறு சில உண்மைகள் யாவையெனில், பூமிப் பந்தின் வெளித் தோடு சுமார் 40 மைல் கனமேயுள்ளதென்றும், பூமியின் நடுப் பாகம் முழுவதும் அக்கினிக்குழம்பு மயமாயிருப்பதாகவும், அங்குள்ள அமுக்கமும் அழுத்தமும் அனலும் நம்முடைய கருவிகளால் அளக்கத் தக்கனவல்லவென்றும் அவர் கூறுகின்றனர். கடல்நீரில் காணப்படும் சில மாறுதலைக் கொண்டும் வேறு பலவகை அளவுகளைக் கொண்டும், பூமியானது மனிதனைப்போலவே சுவாசிக்கின்றதென்றும், மனிதன் மூச்சுவிடும்போது உடம்பில் ஒரு பூரிப்பு உண்டாவது போலப் பூமியிலும் இருபத்துநான்கு மணிநேரத்திற் கொருமுறை ஒரு பூரிப்பு உண்டாகி இறங்குவதாகவும் கூறுகின்றனர். அத்துடன் சுமார் 20000 ஆண்டுகளுக்கொருமுறை பூமியானது புரண்டு படுக்கிறதாம். அதாவது பூமியின் வடதுருவத்தையும் தென்துருவத்தையும் ஒரு கோட்டால் இணைப்போமானால் அது பூமியின் அச்சு என்னப்படும்; இதனை நம்மவர் மேருதண்டமென்றும் பிரம்ம தண்டமென்றுங் கூறுவர். இக்கோடு வடக்கு ஆகாயத்தில் துருவ நக்ஷத்திரத்தை நோக்கிக் கொண்டிருக்கும். பூமி, ஒருமுறை புரண்டு படுக்கும் போது இக்கோடு வேறொரு நக்ஷத்திரத்தை நோக்கவே, அப்போது நமக்குப் புதியதொரு துருவ நக்ஷத்திரம் ஏற்படுகின்றது. இதுவே துருவனின் தபசும் வரப்பேறும். இவ்விதம் புரண்டு படுப்பது காரணமாக, உலகிலுள்ள கண்டங்களும் சமுத்திரங்களும் புடைபெயர்ந்து விடுகின்றனவாம். சீத, உஷ்ண நிலைகளில் பெருத்த மாறுபாடுகள் ஏற்பட்டு, அவை காரணமாக சமுத்திரங்கள் வற்றி நிலப்பரப்பாகின்றனவாம். நிலப்பரப்புகள் பனியால் மூடப்பட்டுப் பின் சமுத்திரங்களாகி விடுமாம்; பருவங்கள், காலங்கள் எல்லாமே மாறி எங்கும் புதிய உலகமாகத் தோன்றுமாம்.

சிறிது காலத்திற்குமுன், சூரியனுடைய ஒளியையும் சூட்டையும் மக்கள் கணக்கிடத் தொடங்கியபோது, இன்னும் இவ்வளவு காலத்தில் சூரியன் குளிர்ந்துவிடுமென்றும், அப்போது பூமியும் குளிர்ந்துபோய் வெறும் பிணமாய் மானிட வாழ்க்கைக்குத்தகுதியற்றதாய் விடுமென்றும், அந்தக் காலமும் நெருங்கி விட்டதென்றும் மேனாட்டார் கருதினர். பின்னர், சூரியனிடத்திருந்து பகலில் நமக்கு வரும் சூடுமுழுவதும் இரவில் வெளியே கழிந்துவிடுவதாகவும், உலகில் ஒரு புறம் பகலாயிருக்கும்போது மற்றப்புறம் இரவாயிருப்பதால், தண்ணீர்க் குழாயைப்போல, பகற்புறம் இறங்கும் சூடு இரவுப் புறமாகக் கழிந்து விடுவதையும் அவர்கள் அறிந்தனர். ஆயினும் பூமியின் சூடு நிலையாயிருப்பதைக் கண்டு, அதனால் பூமியின் கையிருப்புச் சூட்டிற்குக் காரணங்காணாது மலைந்தனர். அப்போது ரேடியம் என்ற அற்புத உலோகமொன்று கண்டுபிடிக்கப்பட்டது. சிலந்தி தன்னுள்ளிருந்தே நூலை நூற்பது போல இந்த ரேடியமும், விறகோ கரியோ விளக்கோ எண்ணெயோ யாதொரு துணையுமின்றித் தன்னுள்ளிருந்தே ஒரு கதகதப்பை இடைவிடாது நாற்புறமும் பரப்பிக் கொண்டிருக்கும் வல்லமையுடையதாயிருக்கின்றது. நம் உடம்பில் ரத்தம் பரவியிருந்து உடம்பு முழுவதிற்கும் சூடு கொடுப்பது போன்று, அது மிகமிக நுணுக்கமான அளவில் பூமியெங்கும் வியாபித்திருந்துகொண்டு, பூமியின் சூடு குறைவுறாதவண்ணம் அதனைப் பாதுகாத்து வருகிறதென்றும், அதனால் பூமிக்கு அந்திய காலம் சமீபத்திலில்லையென்றும் அம்மேதையோரே இன்று கூறுகின்றனர்.

இனி, நம் பண்டைய ஞானிகள் பூமியை ஆராய்ந்து, ஆலயத்துள் அவ்வறிவை அமைத்து வைத்திருப்பதை ஒரு சிறிது கவனிப்போம். அவர்கள் புறக் கருவிகளின் குறைபாட்டுத் தன்மையை நன்கறிந்திருந்தபடியால் அவற்றைப் பெரிதாகப் பாராட்டவில்லை. ரேடியம் என்ற உலோகத்தைப் போலவே அவர்களும் தம் அகத்து அடங்கிக்கிடக்கும் சக்திகளை யோகப் பயிற்சியால் வெளிப்படுத்தி, அவற்றின் மூலம் உலகத்தைத்துருவி ஆராய்ந்தனர். அந்த அற்புத சக்திகளுள் ஒன்று நெற்றிக்கண் பார்வை எனப்படுவது. அதன் உதவிகொண்டு அவர்கள் இப்-

பூமியை வெறும் மண்ணுருண்டையெனக் கருதாமல், அதனை ஒரு உயிர் எனக் கூறியுள்ளனர்.

> " வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
> ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
> கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
> வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே."

என்ற அருள் வாக்கின்படி, அவனே மண்ணாகி யிருக்கும்போது, அந்த மண் உயிரற்றதாக எங்ஙனம் இருக்கமுடியும்? மண்ணும் கல்லும் எல்லாமே உயிருள்ளன என்ற உண்மையை, இன்று மேனாட்டு மேதையரும் ஒப்பும்படி செய்தவர் நம் நாட்டு ஞானியராகிய ஜேகதீசச் சந்திரவசு என்ற பெரியாராவர். அவர் நம் பண்டைய ஞானியர் வாக்கில் முழுநம்பிக்கை யுடையவர். அதனை மெய்ப்பிக்க எண்ணி அவர் பலபல ஆண்டுகள் முயன்று மிக நுணுக்கமான யந்திரங்களைக் கண்டுபிடித்து, அவற்றின் மூலம் இவ்வுண்மையைப் புறக்கண்ணுக்கும் விளங்கும்படிச் செய்தனர். மண், கல், இரும்பு, இலை, எலி, மனிதன் அனைவர் மீதும் முள்ளொன்றைக் குத்துவோமானால், அப்போது உண்டாகும் நரம்பு அதிர்ச்சியின் படங்கள் ஒன்றுபோலவே காணப்படுகின்றன. அவ்வாறே அனைவருக்கும் மதுவை ஊட்டினால் அப்போது ஏற்படும் நரம்பின் ஊக்கமும், மது அதிகமாகும்போது ஏற்படும் போதையின் மயக்கமும் ஒரே தன்மையுடைய (Graphs) கோட்டுப் படங்களைப் பிடித்துக் காட்டுகின்றன. இவற்றிலிருந்து, சடப்பொருள் என்று நாம் கருதும் யாவுமே மனிதனைப்போலவே உணர்ச்சி யுடையன என்பது நிரூபிக்கப்பட்டது. இறைவன் திட்டப்படி நடைபெறும் பரிணாமமுறையும் மானிட முன்னேற்றமும் உயர உயர, ஒவ்வொரு மனிதனுக்குமே நெற்றிக்கண் திறக்குங்காலம் வரும். அப்போது அனைவருமே ஐயந்திரிபின்றிப் பூமியின் தன்மையை நன்கறிந்து கொள்வர்.

எனவே நாம் வாழும் இந்தப் பூமியானது ஒரு உயிரின் ஸ்தூல உடம்பென்று அறியப்படுகின்றது. அந்த உயிர் ஆணுமல்ல, பெண்ணுமல்ல; ஆனால் மக்கள் மண்ணினின்றும் பயிர் பச்சைகள் தோன்றுவதையும், பெண்ணினின்றும் பிள்ளைகள்

தோன்றுவதையும் கண்டார்கள்; பயிர் பச்சைகளைத் தோற்று-விக்கும் நிலத்தைத் தாய்க்கடவுளாகக் கொண்டு வழிபடுவா-ராயினர். அன்றியும் பூமியானது அகழ்வாரையும் தாங்கும் பொறுமையையும் அனைவர்க்கும் உணவளிக்கும் தாயன்பையும் உடையதாயிருப்பதால் அது பூமிதேவி என்று பெண்ணாக உருவகப்படுத்திக் கூறப்படுகின்றது. அவள் வேலைக்கு உகந்த உத்தம வடிவம் உருண்டை வடிவேயாம்; அதில், ஆகாயத்தைப் பிளந்துகொண்டு ஆயிரக் கணக்கான மைல் வேகத்தில் நீந்திப் பறப்பதே அவளுக்குப் பெரிய குதூகலமாம். அது மோட்-டாரிலும் ஆகாய விமானத்திலும் மக்கள் மிக வேகமாகச் செல்லும்போது அடையும் மகிழ்ச்சி போன்றது அவளுடைய ஒரு பிறவியின் ஆயுள் ஒரு கற்ப காலமாம், அதாவது பதினான்கு மன்வந்தரங் கொண்டது. நம் உடம்பில் சுவாசமும் இதயத்-துடிப்பும் ஒழுங்காக நடைபெறும்போது நமது வாழ்க்கை அமைதியாக நடைபெறும்; அதிர்ச்சி, பயம், இன்பவெறி முதலி-யவை நம்மைத் தாக்கும்போது, நம்மிடம் படபடப்பு, மேல் மூச்சு, கூடுதலான சூடு குளிர்ச்சிகள், வேர்வை முதலியன உடம்பில் உண்டாவது நம் அனுபவம். அம்மாதிரியே பூமிதேவி இயற்கையாக வாழும்போது அவள் உடம்பில் அமைதியும் ஒழுங்கும் நடமாடும். அவளுடைய அறிவு இச்சைகளில் சிறு மாறுதல்கள் ஏற்படும்போது, சீதோஷ்ண வேறுபாடுகளும் காற்றும் உண்டாகும்; மன அதிர்ச்சி முதலிய மாறுதல்கள் புயல் காற்று, சண்டமாருதங்கள், சூறாவளிக்காற்றுகளை உண்டு பண்ணும்; மிகப் பெரிய இன்பதுன்ப உணர்ச்சிக் குழப்பங்கள் பூமி யதிர்ச்சி, பூகம்பம், எரிமலைகளையும் எங்கும் நாசத்தையும் ஏற்படுத்திவிடும்.

பூமியின் மீது வாழும் மனிதர்கள், மிருகங்கள், பிராணிகள், மரஞ்செடிகள் முதலியவை யெல்லாம் அவளுக்கு உடம்பிலுள்ள பேன், பூச்சி, புழு, கிருமிகள் போன்றே யிருக்குமாம்; நம் இருக்-கையை அவள் பூரணமாக அறிகின்றாளென்று சொல்வதற் கில்லையாம். ஆனால் உத்தம மக்கள் பலர் உலகில் வாழும்போது அவளுக்கு உள்ளப் பூரிப்பு உண்டாகுமாம்—குளிர் காலத்தில் இளவெயில் காயும் மனிதனுக் குண்டாகிறமாதிரி. இயற்கை

வனப்பெல்லாம் பூமிதேவியின் அழகாகும். ஒரு பெண்மணியின் அழகைக்கண்டு பலர் களிக்கும்போது அப்பெண்ணுக்கு எங்ஙனம் மகிழ்ச்சியும் முகக்களையும் ஊக்கமும் உற்சாகமும் மனதிலுண்டாகுமோ, அவ்வாறே இயற்கையழகைக்கண்டு பலர் களிக்கும்போது பூமிதேவிக்கும் ஒரு மகிழ்ச்சி ஏற்படுகின்றதாம்; இயற்கை யழகை மனிதன் பாழாக்கும்போது அவளுக்குத் துன்பம் ஏற்படுவதால், அது காரணமாக உயிரினங்களுக்குக் கேடே விளையுமாம். உலகில் தீமை அதிகரிக்கும்போது அவளுக்கு மூச்சுத் திணறுதல் போன்ற உணர்ச்சி ஏற்பட்டு, பூமி பாரம் குறைக்க ஏற்பாடு செய்து விடுவாளாம். பூமிபாரமென்பது வெறுஞ்சுமையாலேற்படும் பளுவல்ல. மக்கள் மிகுதியால் ஏற்படுவதுமல்ல. எத்தனை கோடி மக்கள் திரண்டாலும் பளுவில் இமயமலை ஒன்றுக்கே அவர்கள் ஈடாகார். ஆதலால் பூமிபாரம் என்பது தீமையால் ஏற்படும் உள்ளத் திணறுதலேயே.

பூமியின் உட்பாகத்தை விளக்குவது எளிய காரியமல்ல. அங்கு அக்கினிக் குழம்பாகவே யிருப்பினும் அதனுள்ளும் மிகப் பிரமாண்டமான பல பல குகைகள் இருக்கின்றனவாம். உலகின் மேற்பரப்பிற் போலவே, அங்கும் விதம் விதமான உயிரினங்கள் உயிர்வாழ்ந்து அவற்றிற் கமைந்த பரிணாம முறைக்குக் கட்டுப்பட்டு முன்னேற்ற மடைகின்றனவாம். இங்கு நம்மைச்சுற்றி நிறைந்துள்ள ஆகாயத்தைப் பிளந்துகொண்டு நாம் நடமாடுவது போலவே, அங்குள்ள உயிர் வகைகளும் அந்த அக்கினிக்குழம்பின் ஊடாக நடமாட வல்லவராம். அழிக்கும் ஆற்றல் மிகுந்துள்ள சிங்கம் புலி கரடி முதலிய காட்டு மிருகங்களினிடையே நன்மை தீமையென்ற பாகுபாட்டுணர்வு காணப்படுவதில்லை. அது அவற்றிற்கு இறைவன் அமைத்த அமைப்பாகையால், நாம் அதனைக் குற்றமாகக் கூறுவதில்லை. அம்மாதிரியே இடி, மின்னல், எரிமலை முதலிய இயற்கை நிகழ்ச்சிகளும் நடைபெறும்போது அவற்றிற்கு அஞ்சி ஒதுங்குவதைத் தவிற, அவற்றை நாம் குறைகூறுவ தில்லை; அவற்றிற்கு அச்செயல்கள் குற்றமுமாகாது. அம்மாதிரியே பூமியின் உள்ளே வாழும் உயிர் வர்க்கங்களுக்கும் நன்மை தீமையென்ற கொள்கை இயற்கையமைப்பிலேயே ஏற்படவில்லையாம். அதனால் அவர்கள் மனித-

ரோடு பழகி உறவாடுவது மனிதவர்க்கத்திற்கு நன்மை பயப்பதல்ல என்று கூறப்படுகின்றது. அவர்கள் மிகப் பயங்கரமான தோற்றமுடையோராம்—அபாரமான சக்தி மயமானவர்களாம், —வீரபத்திரர், பத்திரகாளி முதலியோருக் கமைந்த கணங்கள் போலும். அவருக்கும் இன்றைய மனிதருக்கும் சாதாரணமாகத் தொடர்பொன்றும் இல்லையென்று கூறப்படுகின்றது. ஆற்றல் மிகுந்த சில மாந்தரீகருக்கு அத்தொடர்பு ஏற்படுமாயின், அது ஏழேழ் பிறப்பிற்கும் அன்னாருடைய அழிவிற்கேயாம் என்னப் படுகின்றது.

பூமிப்பந்தின் நடுவிலுள்ள அமுக்கமும் அழுத்தமும் சூடும் மனிதருடைய கருவிகளால் அளக்கத்தக்கனவல்ல. அவற்றின் உதவிகொண்டு, அங்கு பிரம்மதேவர் திட்டத்தின்படி தேவகணங் களிலும் பூதகணங்களிலும் ஒரு தனி வகையார்—கொல்லர்— ரேடியம், தோரியம், உரேனியம் போன்ற புதிய புதிய உலோகங்களை அந்தக் குண்டலினி சக்தியில் காய்ச்சி யடித்து உற்பத்தி செய்து பூமியின் வெளிப்புறத்திற்குத் தள்ளுவதாகத் தெரிகிறது. அம்மாதிரியே சூரியன் முதலிய நவக்கிரகங்களின் நடுவிலும் புதிய உலோக உற்பத்திகள் நடந்துகொண்டிருக்கின்றனவாம். அவ்விடங்களே இறைவனுடைய பட்டறைகள், கொல்லுலைகள், உலைக்களங்கள். ஒரு உலையின் நடுவிலே ஒரு புதிய உலோகம் படைக்கப்பட்டவுடனே, அதன் சூக்ஷ்ம நிலையில் அது இறைவனுடைய அற்புத சக்தியால் மற்ற உலகங்களுக்கும் அனுப்பப்படுகின்றதாம்; அதனாலேயே நம் பூமியில் காணப்படும் உலோகங்களெல்லாம் சூரியன், சந்திரன் முதலிய கிரகங்கள், மற்றுள்ள நக்ஷத்திரங்கள் எல்லாவற்றிலும் இன்று காணப்படுகின்றனவாம்.

---

பாடம் 16.

## உலகம்—7 ஆதாரங்கள்.

ஈ எறும்பு முதல் மக்கள் ஈறுகவுள்ள எல்லா உயிர்களும் உணர்வு அல்லது பிரக்ஞையோடு வாழப் பிரியப்படுகின்றன. ஒருவன் இறந்தவுடனே அவனுடம்பில் உணர்வு நீங்கிவிடுவதை நாம் காண்கின்றோம். அப்புறம் உள்ள நிலை இன்னதென அறியப் படாமையினாலேயே, நம்மிற் பலர் மரணத்திற்கு அஞ்சுகின்றனர்.

நாம் உறங்கும்போதும் நம் உணர்வு நீங்கி விடுகின்றது. ஆயினும் வழக்கமாக நாம் உறங்கி விழித்துவிடுகிறபடியினாலும், எல்லா உயிர்களுமே அவ்விதம் உறங்கி உணர்வுபெற்றுவிடுவதைப் பார்ப்பதினாலும், மரணத்தைப்போல நாம் உறக்கத்திற்கஞ்சுவ-தில்லை. மக்களிற் பெரும்பாலார் பிணி மூப்புச் சாக்காடு, வறுமை முதலியவற்றால் மிகுந்த துன்பம் அடைந்தபோதுங்கூட இறந்து-பட விரும்பாததற்கு ஒரே காரணம் இந்தப் பிரக்ஞை வாழ்க்கை, அல்லது உணர்வு வாழ்க்கை மீதுள்ள ஆரா விருப்பேயாம். மனிதன் இந்த உணர்வு வாழ்க்கையை விரும்புவதோடு, கூடுமான வரை இன்பமாகவும் வாழ விரும்புகின்றான்; இந்த இன்ப வாழ்க்-கைக்கு அறிவு இன்றியமையாததென்றும் காண்கின்றான்; அவ்வறிவால் நினைத்தவற்றை முடிக்கும் ஆற்றலும் ஆவசிய-மென்றும் உணர்கின்றான். அதாவது, எல்லா மனிதரும் தத்தம் இன்பம், அறிவு, ஆற்றலைப் பெருக்கி வளர்க்கும்போதே தாம் உயிர்வாழ்வதாகக் கருதுகின்றனர்.

இனி, இன்பம் என்பது அன்பினால் விளைவதாகும்; அன்-பில்லாத இடத்து இன்பம் உதிப்பதில்லை. இனிப்பை வெறுக்கும் போது, சர்க்கரையை வாயிலிட்டால் அது தெவிட்டுமேயன்றி இன்பம் பயப்பதில்லை; பதிலாக ஒரு குமட்டலும் அருவருப்புமே ஏற்படும். இந்நாக்கைப்போன்றே மெய் கண் மூக்கு செவியாகிய புலன்களின் அனுபவங்களுமாகும். மனத்தின் நிலையும் அந்த விதியை ஒட்டியதே. அன்பு இல்லாதவிடத்துக் கணவன் மனைவியர் கூடிவாழச் சமமதிப்பதில்லை. அதனால் இன்ப வாழ்க்கையென்பதை அன்பு வாழ்க்கையென மாற்றி, மக்கள் அனைவரும் அன்பு, அறிவு, ஆற்றலைப் பெறுவதற்கும் பெருக்கு வதற்குமான நோக்கத்தோடேயே உலகில் வாழ்ந்தும் உழைத்தும் வருகின்றனர், என்று கூறுதல் தவறாகாது. அம்மூன்று குணங்-களிலும் மக்கள் பயிற்சி பெறும் இடமே இந்த உலகப் பள்ளிக்-கூடம். அப் பள்ளிக்கூடத்தில், 7 பெரும் வகுப்புகளென்ற மூல வகுப்புகளும் (Root Races), அவை ஒவ்வொன்றிலும் ஏவ்வேழு சிறு வகுப்புக்களான (Sub Races) கிளை வகுப்புகளுமாகப் பாடங்கள் நடைபெறுகின்றனவென்று அறிந்தோர் கூறுகின் றனர்.

சிறு முயற்சியால் பெறக்கூடிய பொருள் எதுவும் அற்ப விலையுள்ளதாகவே இருக்கமுடியும். கால்ரூபாய்க் கண்ணாடிக்கல்லுக்கும் அதே பருமன் வைரக்கல்லுக்கும் விலை வேறுபாடு சொல்லவும் வேண்டுமா? அம்மாதிரியே எளிதில் அடையப்படும் அன்பு அறிவு ஆற்றல்கள் அற்பமாகவே யிருக்கமுடியும். அத்துடன் மனிதனிடம் இன்று காணப்படும் அன்பு அறிவு ஆற்றலுக்கும் இறைவனிடத்துள்ள முற்றறிவு, பூரண அன்பு, வரம்பிலா ஆற்றலுக்கும் இடைவெளி மனத்தால் நினைக்கவோ வாக்கால் சொல்லவோ வொண்ணாததாகும். அதனால் மனித வளர்ச்சியும் எல்லையில்லாததாகும். ஆகவே மேற்சொன்ன ஏழு மூலவகுப்புகளும், ஆயிரக்கணக்கான யுகங்களாக இந்த உலகில் நடைபெறுமென்றும், அதன் பின்னரும் வேறு புதிய உலகங்களில் அதன் மேற்பாடங்கள் நடைபெறு மென்றும் சொல்லப் படுகின்றது. அத்துடன், மனிதர் ஒரே பிறப்பில் ஒரு வகுப்புப் பாடங்களைப் படித்துவிடுவதில்லை யாகையால், ஒரு வகுப்பிலேயே ஒவ்வொரு ஆன்மாவும் எண்ணற்ற பிறவிகளெடுத்துப் பாடங்களைத் திரும்பத் திரும்பப் படிக்கு மென்றும் தெரிகிறது.

நமது ஆலயப்படத்தில் 1.1.2.2. எண்ணிட்ட பாகம் நம் பூலோகத்தையும், ஆலயத்துள்ள ஏழு ஆதார ஸ்தானங்கள் பூமியிலுள்ள ஏழு மூல வகுப்புக்களையும் குறிப்பனவாம். இப்பூமியின் இந்த ஆதார ஸ்தானங்களைப்பற்றி விளக்கமாகத் துலங்காத சில குறிப்புகள் மாத்திரம் நம் பண்டை நூல்களில் காணப்படுகின்றனவே தவிர வேறு விரிவாக ஒன்றும் சொல்லப்படவில்லை. அந்த ஏழு ஆதாரங்களும் சப்த தீவுகள் என்று நம் புராணங்களில் கூறப்பட்டுள்ளன. உலகின் நிலப்பரப்புகளெல்லாம் நாற்புறமும் நீராலேயே சூழப்பட்டிருக்கின்றன வாதலால் அவற்றைத் தீவுகளென்றழைப்பது பொருத்த முடையதே. இந்த ஆதாரஸ்தானங்களைப்பற்றி நாம் அறியக்கூடிய விதத்தில் ஒரு சிறிது விளக்கமாகக் கூறியிருப்பவர், சமீபகாலத்திருந்த வெள்ளைக்கார யோகியர்களாகிய பிளவட்ஸ்கி அம்மையார் (H.P.B. 1831—1891) அன்னை வசந்தையார் (A. B: 1847—1933) லெட்பீற்றர் துரை என்ற வங்கப்பணி முனிவர் (C. W. L. 1847—1934) ஆகிய மூவருமாவர். அவர்கள் கூறியிருப்பது வெறும் மனக்கோட்-

டையோ, கயிறு திரிப்போ அல்லவென்றும், அவை முழுவதும் சித்திரபுத்திரர் கணக்கில் எக்காலத்தும் காணப்படக்கூடியவை யென்றும், அதனை வாசிக்குந் தகுதிபெற்றோர், அதாவது நெற்றிக்கண் திறக்கப்பட்ட ஆண்பெண் பாலார் எவரும், எந்நாட்டவராயினும் எமமதத்தவராயினும் எவ்வயதினராயினும் எப்பொழுது வேண்டுமாயினும் அவற்றைக் கண்கூடாகக் கண்டு அவற்றின் உண்மையைத் தெளியக்கூடுமென்றும் அவர்கள் உறுதி கூறுகின்றனர். இன்னும் சிறிது காலத்தில் அங்ஙனம் கண்டு உண்மையறியக்கூடிய மக்கள் பலர் உலகில் பிறப்பரென்றும் அவர்கள் கூறுகின்றனர். நெற்றிக்கண் பார்வையென்பது நம் இந்து மதம் ஒப்புக்கொள்ளும் ஒரு ஆற்றலாகையால், அது நம் யோகியர் கூறும் அஷ்ட மகா சித்திகளில் ஒன்றாகையால், மேல் வரும் வரலாறுகளை ஒருவாறு நம்புதற்கு நமக்கு இடமிருக்கின்றது. மேற்சொன்ன இம்முப்பெரு மக்களுடைய வாழ்க்கை வரலாற்றைப் பற்றியும் யோக சக்தியைப்பற்றியும் இங்கு விளக்க இந்நூல் இடந்தராது. ஆயினும் அவரைப்பற்றிய ஒரு உண்மையை இங்கு கூறுவது மிகையாகாது. தமிழ்நாடு செய்த தவப் பயனாக நம்மிடையே அவதரித்து, யோக சித்திகளின் உச்ச நிலையை அடைந்து 1873-ம் ஆண்டில் தம் பூத உடம்போடேயே மறைந்து சென்றதாகச் சொல்லப்படும் அருட்பிரகாச வள்ளலார் ராமலிங்க சுவாமிகள், நம்மிடத்தும், நம்மூலம் உலகிலும், "சமரச சுத்தசன்மார்க்க"த்தை நிறுவப் பெரிதும் பாடுபட்டாரென்பது யாவருமறிந்த உண்மை. சுவாமிகளிடம் தமிழ் கற்ற மாணவருள், தொழுவூர் வேலாயுத முதலியார் ஒருவர்; அவர் சுவாமிகளிடம் உபதேசம் பெற்ற சிஷ்யருள் ஒருவருமாவர்; சென்னையில் துரைத்தனக் கல்லூரியில் (பிரஸிடென்ஸி காலேஜ்) தமிழ்ப் பேராசிரியராயிருந்தவர்; சுவாமிகளுடைய தோத்திரப்பாக்களைத் திருமுறையாக வகுத்துத் "திருவருட்பா" என்ற பெயரால் வெளியிட்டவர்; சுவாமிகளைப்பற்றிப் பல பாடியுள்ளவர். "சமரச சுத்தசன்மார்க்க சங்க"த்தை நிலைநாட்டுவதற்கு சுவாமிகள் எடுத்துக்கொண்ட பெருமுயற்சியானது, தமிழ் நாட்டில் உறம் பெற்றிருந்த ஜாதி சமயச் சழக்குகளால் வீணாகுவது கண்டு, சுவாமிகள் சொல்லியதாக முதலியார் கூறுவது யாதெனில்:—

"இந்த " சமரச சுத்தசன்மார்க்க சங்க "த்தில் நீங்கள் சேர அருகரல்லர். இந்த சகோதரக் கூட்டத்தின் உண்மையான உறுப்பினர் வெகு தூரத்திற்கப்பால் இந்தியாவின் வட திசையில் வசித்து வருகின்றனர். நீங்கள் நான் சொல்வதைக் கேட்கின்றீ-ரில்லை. நான் கூறும் உண்மைகளைக் கைக்கொள்கின்றீரில்லை. நான் சொல்வதைக் கேட்டுத் திருந்தக்கூடாதென்றே தீர்மானித்-திருக்கிறீர்கள் போலும். என்றாலும், ருஷியாவிலும் அமெரிக்-காவிலுமிருந்தும் (இவ்விரு நாடுகளையும் சுவாமிகள் அடிக்கடி குறிப்பிட்டனர்.) மற்று அன்னிய நாடுகளிலுமிருந்தும் சில பெருமக்கள் இந்தியாவிற்கு வந்து, இதே சமரச சன்மார்க்கக் கொள்கையையும் சகோதரத்துவத்தையும் உங்களுக்கு எடுத்துச் சொல்லுங்காலம் அடுத்தே வருகின்றது. இன்று பயனில்லாது நான் உங்களுக்குப் புகட்ட முயலும் இந்த அரிய உண்மைகளை, அன்று நீங்களாகவே ஒப்புக்கொண்டு வழிபட எண்ணுவீர்கள். வடக்கே வெகு தொலையில் வாழ்ந்துவரும் அச்சகோதரர்கள் இந்தியாவில் பல அற்புதங்களை இயற்றி, இந்நாட்டிற்கு அளவற்ற நன்மைகளை நல்குவதையும் நீங்கள் சீக்கிரத்தில் காண்பீர்கள்." என்பதே.

அண்டமும் அண்டத்தில் நடைபெறுவனவும் இறைவனு-டைய திட்டம், தீர்மானம், சங்கற்பம். அத்திட்டத்தை அவ-னுணையின்படி நடத்திவைப்பவர் அதிகாரமுத்த ரெனப்படுவர். அவர்கள் " பழவடியார் திருக்கூட்டம் " என்று மணிவாசகரா-லும், " வித்தகச் சித்தர் கணம் " என்று தாயுமானுராலும், "சன்-மார்க்க சங்கம் " என்று அருட்பிரகாச வள்ளலாராலும் " வெள்-ளியம்பலச் சோதர சங்கம் " (The Great White Brotherhood) என்று திவ்யஞான சபையாராலும் அழைக்கப்படுவர். அருட் பிரகாச வள்ளலாரும் அதிகாரமுத்தர் குழாத்தைச் சேர்ந்தவ-ரென்பது,

> " சாவா வரமும் சித்தியெலாம் தழைத்த நிலையும்
> சன்மார்க்க சங்க மதிப்பும் பெற்றேன், "

என்ற அவருடைய அருட்பாவினுல் விளங்குகின்றது. அவரால், ருஷியர் அமெரிக்கர் என்று குறிப்பிடப்பட்டவர்கள் பிளவட்ஸ்கி

அம்மையாரும் ஆல்காட்துரையும் என்று கருதப்படுகின்றது. அவருள் முன்னவர் ருஷியரும் பின்னவர் அமெரிக்கருமாவர். "வடக்குள்ள சகோதரர்" என்னப்பட்டவர் இமயமலையில் தங்கியிருக்கும் சில அதிகாரமுத்தரென்று எண்ணப்படுகின்றது. அவருடைய ஏவுதலின் பேரிலேயே ஆல்காட்துரையும் பிளவட்ஸ்கி அம்மையாரும் கி. பி. 1875ல், அதாவது வள்ளலார் மறைந்த இரண்டாண்டுகளுக்குள், சர்வ சமய சமரச சன்மார்க்க சங்கமாகிய திவ்யஞான சபையை (Theosophical Society) அமெரிக்காவில் ஆரம்பித்து வைத்ததாக அவ்விருவரும் கூறியுள்ளனர். பின்பு அம்முத்தருடைய உத்தரவின் பேரிலேயே 1878ல் அச்சங்கம் இந்தியாவில் பம்பாய்க்கு மாற்றப்பட்டு, அங்கிருந்து 1882ல் அதன் ஏழாவதுவயதில், அருட்பிரகாச வள்ளலார் மயிலையில் தங்கியிருந்தபோது முன்னேக்குடன் புனிதப்படுத்திவைத்திருந்த அடையாற்றுக்குக் கொண்டுவரப்பட்டது. அங்கு அது ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரூன்றி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக இன்றுவரை வளர்ந்து வருகின்றது. அச்சங்கத்தைச் சேர்ந்த A. O. ஹியூம் என்ற வேறொரு வெள்ளையராலேயே இந்திய சுதந்திரத்திற்கு அடிகோலிய "காங்கிரஸ்" ஸ்தாபனம் 1886ல் ஆரம்பிக்கப்பட்டதும் கவனிக்கத்தக்கது. இந்த திவ்யஞான சங்கத்துப் பெருமக்களிற் சிலர் நெற்றிக்கண்ணுல் ஆராய்ந்தெழுதியுள்ள, "மனிதன் கோடிவழி," "மனிதன் எங்கிருந்து. எவ்வாறு, எவ்விடம்," என்ற நூல்களிலிருந்து கீழ்க்கண்ட குறிப்புகள் திரட்டப்படுகின்றன.

| மூல வகுப்புகள் | ஆலய ஸ்தானம் | புராணப் பெயர்கள் | பூமியின் கண் இடம் | மக்கள் பெயர் | உடம்பும் உயரமும் | உற்பத்திமுறை (பிள்ளைப்பேறு) |
|---|---|---|---|---|---|---|
| 1 | கொடிமரம் | கிரௌஞ்சத் தீவு | வடதுருவத்தில் இருந்து, ஆழ்ந்துபோன பெரிய கண்டம். | — | பிராணமய கோசம் மாத்திரம். அது சுமார் 175 அடியில் தொடங்கிப் படிப்படியாகக் குறுகல். | பிளவுமுறை |
| 2 | அம்பிகை | குசத்தீவு | இப்போதுள்ள நோவா ஸெம்லா, ஸ்பிற்ஸ்பர்கன், ஐஸ்லாந்து முதலியவற்றை இணைத்துக் குதிரை லாடம் போன்றிருந்த ஒரு கண்டம். | — | கோணிப்பை அன்ன உடம்புகள் சுமார் 120 அடியில் தொடங்கிப் படிப்படியாகக் குறுகல். | குருத்து வெடித்தல் |
| 3 | அதிகார நந்தி | சால்மலித்தீவு | கடல் கொள்ளப்பட்ட லெமூரியா கண்டம்—இன்றைய பஸிபிக் மகா சமுத்திரமும் சுற்றியுள்ள நாடுகளும். | லெமூரியர் | அன்ன உடம்பு சுமார் 30 அடி முதல் படிப்படியாகக் குறுகல். | 1 வேர்வைக்கிருமி<br>2 முட்டையிடல்<br>3 அர்த்தநாரிகள்<br>4 ஆண்பெண்பிரிவும், இன்றையமுறையும். |
| 4 | நடராஜர் | பிலட்சத்தீவு | கடல் கொள்ளப்பட்ட அத்லாந்தியக் கண்டம்—இன்றைய அத்லாந்திக் மகா சமுத்திரமும் சுற்றியுள்ள நாடுகளும். | அத்லாந்தியர் | அன்ன உடம்பு சுமார் 10 அடியில் தொடங்கிப் படிப்படியாகக் குறுகல். | இன்றையமுறை |
| 5 | வாகன நந்தி | ஜம்பூத்தீவு | இன்றைய உலகம் | ஆரியர் | அன்ன உடம்பு சுமார் ஆறடி உயரம். | ஷை |
| 6 | சிவலிங்கம் | சாகத்தீவு | அமெரிக்காவின் மேல் பாகத்தை யொட்டி இனித் தோன்ற விருப்பது. | — | — | — |
| 7 | விமானம் | புஷ்கரத்தீவு | ஆஸ்ற்ரேலியாவையும் தென் துருவத்தையும் ஒட்டி இனித் தோன்ற விருப்பது. | — | — | ... |

பல பல யுகங்களுக்கு முன்பு, அதாவது எத்தனையோ கோடி வருஷங்களுக்கு முன்பாக, இந்த பூமியானது அதன் ஆரம்ப நிலையில் வெறும் ஆவிப் பந்தாகவே இருந்தது. இன்றுள்ளது போன்று உறைந்து கட்டியாயிராமல், அது பிரம்மாண்டமான தீப்பந்தம் போன்று அனலைக் கக்கிக் கொண்டு சூரியனைச் சுற்றிச் சுழன்று கொண்டிருந்தது. பூமியைச் சுற்றி மூச்சுத்திணறும் புகைப்படலம் மூடியிருந்தது. பின் நெடுங்காலத்திற்குப் பிறகு, செம்பு, இரும்பு முதலிய உலோகங்களெல்லாம், ஆவியாயிருந்தவை உருகிப்பொங்கிக்கொண் டிருக்கும் இளக்கங்கொண்ட குழம்புபோன்ற நிலைக்கு வந்தன. அக்காலத்தில், பூமியானது மந்தர மலையை நடுவிலிட்டுக் கடைவது போன்ற கொந்தளிப்பை உடையதாயிருந்தது. நாளா வட்டத்தில் சிறிது உறைந்து கட்டிப்பட்ட இடங்களில், அது கொதித்துக் குமிழி பொரியும் சேற்றுக் குழம்பாக இருந்தது; அதன் நிலப் பரப்பும் அடிக்கடி இடம் விட்டு இடம் பெயர்ந்து கொண்டேயிருந்தது. நமது போன்ற உடம்புகள் உயிர்த்திருக்கலாகாத அந்த நிலைமையில், பூமியின் வடதுருவத்தைச் சுற்றி மனிதர் முதல் மூலவகுப்புத் தொடங்கினர். அங்கு அவருக்கு ஆரம்பப் பாடமாகப் பிராணமய கோசம் வகுக்கப்பட்டது. முதல் உடம்புகள் அதிகார முத்தரால் ஆக்கிக் கொடுக்கப்பட்டன. அந்த உருவங்கள் கட்டுப்பட்ட வடிவமின்றி, காற்றில் அலையும் பிண்டாகாரமான மேகங்கள் போல், நடுவில் திரட்சியும் வெளிப்புறத்தில உதிரியுமுடையதாய், அதாவது புகைச்சுருள் போலப் பூமியின்மேல் மிதந்து கொண்டிருந்தன. அவற்றிற்குப் பிறப்பு இறப்பு இல்லையென்னலாம். முதல் மூலவகுப்பின் ஏழு கிளைவகுப்புகளும் பல கோடி வருஷங்களாக நடைபெற்றன. ஆரம்பித்திலேற்பட்ட ஒரு பிராணமய உடம்பே ஒவ்வொரு ஆன்மாவிற்கும் அந்த ஏழு கிளை வகுப்புகளுக்கும் போதுமானதாயிருந்தது. அந்த உடம்புகளில் கழிவு ஏற்படும்போது, கடற்பஞ்சு, மையொற்றித்தாள் போன்றவை நீரை உறிஞ்சிக் கொள்வது போலவும், நாம் இன்று காற்றைச் சுவாசிப்பது போலவும், அவை தம்மைச் சுற்றியுள்ள ஆகாயத்திலிருந்து தமக்கு ஆதாரமானவற்றை உறிஞ்சிக் கொள்ளும். புதிய ஆன்மாக்கள் பிறப்பெடுக்க வேண்டிய போது,

முதலாவது மூலவகுப்பு.

அதாவது பிரளயத்தில் ஒடுங்கிக்கிடந்த ஆன்மாக்கள் பூமிக்குத் திரும்பவேண்டிய காலம் வந்தபோது, இந்தப் பிராணமய கோசங்கள் இரண்டாகப் பிளந்து இருவேறு உடம்புகள் ஆகும். இது மேகங்கள் துண்டுபடுவது போலாம். அந்த ஆன்மாக்கள் ஏகதேசம் இன்றையத் தாவரங்கள் போன்ற உணர்ச்சியும் அறிவுமே உடையனவாயிருந்தபடியால் இவ்வித உடம்புகளும் இம்மாதிரி பிறப்பு முறைகளுமே அவற்றின் பக்குவத்திற்கு ஏற்றவையாயிருந்தன. இவ்விதம் எத்தனையோ கோடி வருஷங்களுக்குப் பின்னுல், மேற்சொன்ன பிராண உடம்புகள் இறுகிக் கட்டிப் பட்டபோது மனித வர்க்கத்திற்கு இரண்டாம் மூலவகுப்புத் தொடங்கப்பட்டது.

இரண்டாம் மூலவகுப்பு.

இரண்டாவது வகுப்பு பூமியின் வடதுருவத்தை விட்டுச் சற்று தெற்காக அமைந்திருந்தது. அக்காலத்தில் பூமியின் இரு துருவங்களிலும் ஒருவிதமான தரை காணப்பட்டது; ஆயினும் சிறிய குழி கிளினுலும் அங்கிருந்து அக்கினி, சுவாலையாக வெளிவரும். செம்பு முதலிய உலோகங்கள், சில இடங்களில் கட்டியாயும் மற்ற இடங்களில் இளகியுமே இருந்தன. செப்பு உருகுவது 3500 டிகிரி சூட்டில்; அதனுல் பூமியின் பெரும்பாகம் அதற்கு மேற்பட்ட சூடுள்ளதாக அன்று இருந்திருக்கவேண்டும். இந்நிலையில் முன்னைய பிராண மயகோசங்களைக் கருவாகக் கொண்டு ஆன்மாக்களுக்கு அன்ன உடம்புகள் மெள்ள மெள்ள அமைக்கப்பட்டன. அவை முதலில் அவயவங்களொன்றுமில்லாமல் காற்றடைத்த பெரிய கோணிப்பைகள் போன்றிருந்தன. சற்று இறுகிக் கட்டிப்பட்ட காலத்தில் அவை கொஞ்சம் இளக்கமான மெழுகால் ஆக்கப்பட்டது போன்று, ஏதாவது பட்டால் உள்ளே குழிந்து சிறிது நேரத்திற்குப் பின் தாமே நிரம்புந் தன்மையவாய் இருந்தன. சில சமயம் அக்கோணிப்பை உடம்புகள் நட்டமாக மிதக்கும்; பெரும்பாலும் அவை தரையிலேயே புரண்டு உருண்டு செல்லும். சூடு குளிர்ச்சி முதலியவற்றுல் இன்ப உணர்ச்சி ஏதாவது தட்டும்போது, கைகள் கால்கள் இன்று காணப்படும் இடங்களில் முளைகள் போன்ற உறுப்புக்கள் வெளியே நீளும்; அவை, நததை கூட்டை விட்டுத் தலையை

வெளியே நீட்டி உள்ளுக்கிழுத்துக் கொள்வதுபோல விருக்கும். இவ்விதம் பல்லாயிரமான ஆண்டுகளாக அவை அடிக்கடி வெளிப்பட்ட பழக்கத்தின் பேரில் ஒருவிதமான கால் கை-களாக உருப்பெற்று நிலைத்தன. அப்போது அவற்றை ஊன்றி நடக்கும்போது அம்மாக்கள் இன்றைய நீர் யானை போன்ற மிருகங்கள் போலக் காணப்பட்டனர். இவ்வாறு உடம்பு இறுகிக் கட்டிப்படக் கட்டிப்பட, அத்தேகமானது தன் மேற்பரப்பு முழுவதையுங்கொண்டு ஆகாரத்தை உறிஞ்சுந் தன்மையை இழந்துவிடவே, மேற்படி கோணிப்பையின் மேல்-மட்டத்தையொட்டி ஆகாரம் உண்பதற்கு ஒரு குழாய் தோன்றி, நாளா வட்டத்தில் அது வாயாகவும் வயிறாகவும் மாறியது. அக்-காலத்திய அம்மிருக மக்கள், இன்று சாக்குகளை நாம் உள்ளும் புறமும் புரட்டி உதறுவது போலத் தம் வயிற்றை வெளியே கவிழ்த்து, வயிற்றிலுள்ள கல் மண் முதலியவற்றை வெளியே கொட்டவும் பின் அதனை உள்ளுக் கிழுத்துக் கொள்ளவும் வல்ல-வராயிருந்தனர். நிறைந்திருக்கும் கோணிகள் சுருங்கிப்போதல், அவருக்கு இறப்பு; அவர்கள் பிறப்பு முறை, குருத்து வெடிப்பு; அதாவது உயிரோடுள்ள உடம்புகளில் குருத்து வெடித்து, அது வளர்ந்து கொண்டே வந்து ஒரு பருவத்தில் வேறு துண்டாகி விடும். பின் அது தானே ஆகாரத்தை உட்கொண்டு வளருந்-தன்மையுடையதாயிருந்தது. இப் பிறப்புமுறை இன்று ரத்தக கிருமிகள், (Ameoba) அமீபா முதலியவற்றுள் காணப்படுகின்றது; தாவர வகையிலும் காணப்படுவது. இந்த 2ம மூல வகுப்பில் பாடங்கற்று வந்தோர் பக்குவத்தில் ஆன்மக் குஞ்சுநிலையிலுள்-ளோரராவர்.

---

பாடம் 17.

## உலகப்பள்ளியில் மூன்றும் மூல வகுப்பு.

**மூன்று கோடி வருஷங்களுக்கு முன்.**

இரண்டாம் வகுப்பில் மனிதர் தரித்திருந்த காற்றுக் கோணிப்பை உடம்புகள், உலகம் குளிரக் குளிர அவையும் இறுகிக் கட்டிப்பட்டுக் கைகால் முதலிய அவயவங்களைப் பெற்ற பின்னர், சுமார் 3 கோடி வருஷங்களுக்கு முன் அம்மானிடர் முப்பது நாற்பது அடி உயரமுள்ள பெரிய

மனிதக் குரங்குகளாயினர். அது மூன்றும் மூலவகுப்பின் ஆரம்ப காலம். வட துருவமும் அதையடுத்த தென் கண்டமும் மெள்ள மெள்ளக்கடல் கொள்ளப்பட்டன. இன்று பசிபிக் மகாசமுத்திரமாயிருப்பது அன்று காடுகளும் மலைகளுங்கொண்ட பெருங் கண்டமாயிருந்தது. இதுவே ஆலயத்தில் அதிகார நந்தி அமர்ந்திருக்கும் நாபிச்சக்கரம்.

அந்தக் குரங்குருவ மனிதர் கன்னங்கரேலென்று அண்டங்காக்கை நிறமாயிருந்தனர். பெரிய முட்டைத்தலை; அது முட்டைகளைப்போன்று ஒரு நுனி சிறுத்தும் மற்றது பெருத்தும் இருக்கும்; அதன் குறுகிய நுனி தலையுச்சியும் பருத்த பாகம் நாடியுமாக நெற்றியென்பதே இல்லாதிருந்தது; உச்சந்தலைப் பக்கம் ஒரே கண்; கை கால்கள் மிக நீளம்; கைகள் அனேகமாய்த் தரை வரை நீண்டிருந்தன. முழங்கால், முழங்கைகள் வளைந்து தொங்கின. அவர்கள் ஒரு மாதிரியாக நிமிர்ந்து நடந்த போதிலும், ஓடவோ வேகமாய் நடக்கவோ வேண்டுமாயின், கைகளையும் ஊன்றிக்கொண்டு நாலுகாற் பிராணிகள் போலவே செல்வர். உள்ளே எலும்புக்கூடு வளரத் தொடங்கிற்று; மேலே மயிர் முளைக்கத் தொடங்கிற்று; உடம்பில் விரலைக் கொண்டு குற்றினால் அங்கு பள்ளம் பாய்ந்து வெகு நேரத்திற்குப் பின் குழி நிரம்பும். முன் போல முளை வெடிப்பதும், வேர்வையிலிருந்து கிருமிகள் வெளிவந்து வளர்வதும் பிள்ளைப்பேறு முறைகளாயிருந்தன.

2 கோடி வருஷங்களுக்கு முன்.

இடையிலுள்ள இந்த ஒரு கோடி வருஷங்களில் உடம்புகள் இறுகிக் கட்டிப்பட்டன. நெற்றிக்கண் சிறிது சிறிதாகத் தலைக்குப் பின்புறம் சென்று, முன்புறம் இரண்டு சிறு கண்கள் தோன்றின. ஆக மூன்று கண்களும் தேங்காய்க்குக் கண்கள்போல அமைந்திருந்தன. அதனால் அவர் முன்னும் பின்னும் ஏக காலத்தில் பார்ப்பர். எப்பொழுதும் நிமிர்ந்தே நடக்கவும் ஓடவும் இப்போது வல்லவராயினர். அவர்கள் பாதங்கள் மொங்கான் கட்டைகள் போலக் காலுக்கு முன்னும் பின்னும் நீண்டிருந்தன; அதாவது நமக்கு முன்புறம் உந்தியிருக்கும் பாதம் போல அவர்களுக்குப் பாதம் பின்புறமும் வளர்ந்திருந்-

ந்தது. நட்டுக்கால், அகன்று நீண்ட பாதத்தின் நடுவாக அமைந்திருந்தது. அது அவர்கள் முன்னும் பின்னும் நடக்க உதவியாயிருந்தது. அத்துடன் அவருக்கு உச்சிக்கண் பார்வை பின்புறமாக இருந்ததால், அவர்கள் முன்னோக்கியும் பின்னோக்கியும் முதுகைத் திருப்பாமலே ஓடுவர். பச்சை இறைச்சியே அவர்கள் உணவு. இம்மக்களுடைய உருவத்திற்கு ஏற்றாற்போலவே அக்காலத்து விலங்கினங்களும் தாவரவகைகளும் அமைந்திருந்தன. மனிதர் இப்போது முட்டையிட்டுக் குஞ்சு பொரித்தனர். ஆண் பெண் பாகுபாடுகள் அக்காலம்வரை ஏற்படாமையால், அனைவருமே முட்டையிடுவர். இம்முறை இப்போது சில செடி கொடிகளிடத்தும் சில கிருமி வகைகளிலும் காணப்படுகின்றது.

ஒரு கோடி வருஷங்களுக்கு முன். (10,000,000 கி.மு.)

மேற்சொன்ன நிலையில் அரைக்கோடி வருஷங்களாக, அதாவது ஐம்பது லக்ஷம் ஆண்டுகளாகச் சிறிது சிறிதாக ஏற்பட்ட மாறுதல்களால், உலக நிலை அனேகமாய் இன்றைய நிலைக்கு அடுத்தது. பிறப்பு முறையிலும், ஆரம்பத்தில் மிகத்தடித்திருந்த முட்டையோடுகள் கொஞ்சங் கொஞ்சமாக மெல்லியதாயின; அதனால் வெகு காலஞ்சென்று வெடித்த மனிதக் குஞ்சுகள் இப்போது சீக்கிரம் வெளிவரலாயின. ஆண் பெண் என்ற முறையே இல்லாதிருந்த அக்குஞ்சுகள், அவற்றின் மூளையும் நரம்புக்கூடும் உருப்பெற உருப்பெற அர்த்தநாரிகளாக வெளிவந்தன. அதாவது ஆண் பெண் அங்கங்கள் இரண்டையும் அனைவரும் உடையவராயிருந்தனர். அப்போது இருவர் சேர்ந்து கலவி செய்து இருவரும் முட்டையிடுவர். பின், ஆண் பெண் அங்கங்கள் இரண்டில் ஒரு உறுப்புக்கூடியும் மற்ற உறுப்புக் குறைந்தும் தோன்றலாயின. அப்போது பெண் அங்கம் கூடியிருப்பவர் மாத்திரம் முட்டையிடுவர். அதற்கு நெடுங்காலத்திற்குப் பின் ஆண் பெண் தனித்தனியாகி, முட்டையிடுவது நின்று இக்காலம் போலக் குழந்தைகள் பிறக்கத் தொடங்கின. அம்முட்டையோட்டின் மிச்சமே இன்று கன்னிக்குடமாக (Placenta) இருந்துவருவது. இந்த மிக மிகச் சாவதனமான மாறுதல் 50 லக்ஷம் ஆண்டுகளாகச் சிறிது சிறிதாக ஏற்பட்டு

இப்போது ஒரு கோடி வருஷங்களாக இன்றைய பிரசவ முறையே நிலவி வருகின்றது. இன்று மேற்சொன்ன அர்த்தநாரி முறையிலுள்ளவை நத்தைகளாம்.

இதற்குள் உச்சியிலிருந்த நெற்றிக்கண் நாளாவட்டத்தில் ஒளியிழந்து மண்டை ஓட்டுக்குள் மறைந்துவிட்டது. அது இப்போது அவரை விதைபோல மூளைக்குள் பிற்றுயிற்றரி (Pituitary gland) என்று அழைக்கப்படுகின்றது. இன்றைய நெற்றிச் சக்கரம் இத்துடனேயே இணைக்கப்பட்டிருக்கின்றது. (முகப்புப் படம் பார்க்க).

65 லக்ஷம் ஆண்டுகளுக்கு முன் (6500000 கி.மு.)

பஸிபிக் மகா சமுத்திரத்தில் மூழ்கிக் கிடக்கும் நிலப்பரப்பு பண்டைய கிரேக்க மக்களாலும் இன்றைய பூகோள சாஸ்திரிகளாலும் லெமூரியாக் கண்டம் என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. அதனுல் அங்கு வாழ்ந்துவந்த மக்கள் லெமூரியர் என்றழைக்கட்படுகின்றனர். சுமார் 65 லக்ஷம் ஆண்டுகளுக்குமுன் அவர்கள் 24 முதல் 27 அடி வரையுள்ள உயரமும் கரியநிறமும் பயங்கரத் தோற்றமும் மிருக வாழ்வும் உடையோராயிருந்தனர். அப்போது உலக முன்னேற்றத்தை ஊக்கப்படுத்தவும் ஆன்ம வளர்ச்சியைத் துரிதப்படுத்தவும் உலகில் ஒரு மகத்தான நிகழ்ச்சி இறைவன் அருளால் நடைபெற்றது. அதாவது, மத்திய ஆசியாவில் இன்று மணற்காடாகவிருக்கும் கோபிப் பாலைவனம் அன்று பெரிய கடலாயிருந்தது. அதன் மத்தியில் சுவேததீபம் அல்லது சம்பளத்தீவு என்ற நிலப்பரப்பு நீர்வளம் நிலவளம் பொருந்தியதாய் அழகுமிக்கு அமைந்திருந்தது. அவ்விடத்தில், இந்த 65 லக்ஷம் ஆண்டுகளுக்கு முந்தின காலத்தில், சுக்கிர மண்டலத்திலிருந்து சனகர், சனந்தனர், சநாதனர், சனத்குமாரர் என்று நான்கு குமாரர்களும் அவருடன் துணைவர்களாக முப்பது உதவியாளர்களும் அக்கினி ரதங்களில் சுப முகூர்த்தத்தில் வந்திறங்கினர். அவருள் சனத்குமாரர் குமரக் கடவுளின் அம்சமாவர். அன்றும் இன்றும் 16 வயதுப் பிராயமாகவே இருந்து வருபவர். அவ்வருகையின் பயனுக அதுவரை கூட்டல் வாய்ப்-

பாட்டு வேகத்தில் நடந்துவந்த விகாசமுறை அன்றுமுதல் பெருக்கல் வாய்ப்பாட்டு வேகத்தில் நடைபெறத் தொடங்கியது. ஆன்ம முன்னேற்றம், 6+6+6=18 என்ற நடை போய் 6×6×6=216 என்ற வேகம் பெற்றது. பண்டு பல்லாயிர ஆண்டு-களாக நடைபெற்ற வளர்ச்சி இவர் அருட்சக்தியால் இப்போது சில ஆண்டுகளுக்குள்ளாகவே உருப்பெற்றன. மனிதருக்கு இச்சையுடம்பு தழைத்தது, மனவுடம்பு முளை வீசியது. அன்ன உடம்புகளும் அவற்றிற்கேற்ப மாறுதல்களை அடைந்தன, அவற்-றின் உயரமும் நாளா வட்டத்தில் குறைந்து நிறமும் அண்டங்-கறுப்பிலிருந்து ஆகாய நீலமாகிப் பின் சாம்பல் வர்ணமாயிற்று.

லெமூரிய மக்களும் அவர்கள் கண்டமும் (படம் பக்கம் 210) இப்போது பெரும்பாலும் மறைந்துவிட்ட போதிலும், அக்கா-லத்துச் சிலைகள் லெமூரியக் கண்டத்தின் ஒரு பாகமாயிருந்த (Easter Islands) ஈஸ்ற்றர் தீவுகளில் இன்றும் காணப்படுகின்றன. அவற்றின் படங்களைப் பல நூல்களிற் காணலாகும். அறுபது எழுபதடி உயரங்களில் சிறு குன்றுகள் போன்ற அக்கற்சிலைகள் எவ்விதம் அங்கு நகர்த்திக் கொண்டு வரப்பட்டனவென்று இக்-காலத்து யந்திர மேதாவிகளே அதிசயிக்கின்றனர். அவற்றின் நீட்டுப்போக்கான முகங்கள், நாடி நீண்டு ஏறு நெற்றியுடன் குதிரை முகம் போலிருக்கின்றன. அவற்றின் சப்பை மூக்கும் தடித்துத் தொங்கும் உதடுகளும் இப்போதைய நிகிரோ இனங்-களிற் காணப்படுகின்றன. பெரும்பாலான மக்கள் இந்த வகுப்-பில் தேறி நான்காம் வகுப்பிற்குச் சென்றுவிடவே, எஞ்சிய சிறு பகுதியினர் உடலுங்குறுகி நாகரிகமுங்குன்றி, லெமூரிய ரத்தக் கலப்பைக் கொண்ட எதியோப்பியர், நிகிரோவர், பிக்மிக்குள்ள-ராக இன்று பிறந்துவருகின்றனர்.

இந்த லெமூரிய மக்கள் உலகில் மூன்றாவது மூலவகுப்பா-ராவர். அவ்வகுப்பில் மூன்றாவது கிளைவகுப்பு நடைபெறும் போது, சுக்கிரமண்டலத்திருந்து நான்கு குமாரர்களும் மற்றை யோரும் உலகிற்கு அதிகாரிகளாகவும் ஆசிரியராகவும் வந்து சேர்ந்தனர். அன்றுமுதல் லெமூரிய வகுப்பின் 4, 5, 6, 7வது கிளைகள் சுமார் 40 லக்ஷம் ஆண்டுகள்வரை பெற்றுப்பெருகி வாழ்ந்து வந்தன.

பாடம் 18.

## உலகப்பள்ளி—நான்காம் மூலவகுப்பு.

பகவான் சனத்குமாரர் உலகிற்கு வந்ததும், அவர் ஆணை-யின் பேரில் நான்காம் மூலவகுப்புக்கு அடிகோலப் பட்டது. இன்றைய உலகில் விவசாயப் பண்ணைகள், கால் நடைப்பண்ணை-கள் ஏராளமாக எங்கும் காணப்படுகின்றன. அங்கு தெளித்தும் பொறுக்கியும் இணைத்தும் கழித்தும் பல்லாண்டு முயற்சிகளின் பேரில் புதிது புதிதான ஒட்டு மரங்கள், பழச்செடிகள், தானிய வகைகள், குதிரைகள், ஆடுமாடுகள், பன்றி முதலிய மிருகங்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. அவையெல்லாம் அவற்றின் ஆதி வர்க்கங்களை விடப் பலவிதங்களில் மேன்மையுடையனவாயிருக்-கின்றன. அவ்விதமே உலோகங்களிலும் சாதாரணமானவற்றை உருக்கியும் காய்ச்சியும் ஒன்றுசேர்த்தும் புதிய கலப்புகளை உண்டுபண்ணி உபயோகிக்கிறோம். இம்மாதிரியான வேலைகளை மானிடப் பண்ணையில் நடத்துவதே மனித மேல்வகுப்புகளுக்கு அடிகோலுவதாகும். இவற்றை நடத்தும் மேதாவிகள் மனுக்க-ளென்றும் உலககுருவென்றும் அதிகாரபுருஷரென்றும் அவ-ரவர் பொறுப்பேற்றுக்கொண்ட வேலைக்கேற்பப் பலபெயர்களால் அழைக்கப்படுவர். இவரெல்லோரும் ஜீவன்முக்தராயிருப்பவர்.

சுக்கிரமண்டலத்திலிருந்து உதவியாளராக வந்த மேதாவி-களின் ஆட்சியின்கீழ் லெமூரிய மக்கள் செழிப்புற்று அன்றைய உலகம் முழுவதிலும் பரவி வரும்போது, அவர்களில் அங்கங்கே காணப்படும் நிறபேதம், உருவ பேதம், அறிவு பேதமுடைய மனிதர்கள் பல இடங்களில் திரட்டப்பட்டும் இணைக்கப்பட்டும் தெளிக்கப்பட்டும் ஒதுக்கப்பட்டும் பல லக்ஷக்கணக்கான ஆண்டுகளாகப் பண்படுத்தப்பட்டனர். கடைசியாக இன்றைக்-குச் சுமார் இருபது லக்ஷம் ஆண்டுகளுக்குமுன், நம்போலொத்த உயரம் வண்ணம் உருவமுடையவராய், ரத்தச் சிவப்பு நிறமான ருமோகல் என்ற மக்கள் உருவெடுத்தனர். அவரே புதிய மூல வகுப்பின், அதாவது நான்காம் மூலவகுப்பு மக்களில் முதற்கிளை வகுப்பார். நான்காம் மூலவகுப்பு மக்கள், கடல்கொள்ளப்-பட்ட அத்லாந்தியக் கண்டத்தில் உச்சம் பெற்று வாழ்ந்துவந்த-

படியால் அவர் அத்லாந்தியரென்று இன்று அழைக்கப்படு-கின்றனர்.

அத்லாந்தியரின் கிளைவகுப்பு மக்கள்,

1. ருமோகல்லியர், (Romoahal).
2, த்லவத்லியர், (Tlavatli).
3. தால்த்தக்கியர், (Toltecs).
4. துரானியர், (Turanian).
5. ஸெமிற்றிக் மக்கள், (Semitic).
6. அக்காடியர், (Akkadian).
7. மங்கோலியர், (Mongolian). எனப்படுவர்.

இன்றைய உலகில் பெரும்பாலான மக்கள் பின்னுள்ள நான்கு இனங்களைச் சேர்ந்தவரே யாவர். இவர்களும் லெமூரிய மக்களாகவுள்ள ஒருசிலரும் போக மீதியுள்ள இன்றைய மக்கள், இவருக்கு நெடுங்காலத்திற்குப் பிறகு தோன்றிய ஐந்தாம் மூல வகுப்பாகிய ஆரியரும் அவருடைய கிளைகளுமாவர்.

பத்து லக்ஷம் ஆண்டுகளுக்குமுன் (கி. மு. 10,00,000.)

அக்காலத்தில் இன்றைய அமெரிக்கா, ஐரோப்பா, ஆப்பிரிக்காக் கண்டங்கள் பெரும்பாலும் சமுத்திரமாயிருந்தன. இவற்றை இன்று இணைத்து நிற்கும் அத்லாந்திய மகா சமுத்திரம் அன்று பெரிய நிலப்பரப்பாய்



நிழல் பாகம்: லெமூரியாக் கண்டம். 10 லக்ஷம் வருஷங்களுக்குமுன்.

உலகின் இதயச் சக்கரமாக இருந்து வந்தது. மேற்சொன்ன காலத்தில், அவதார புருஷராய் விளங்கிய பல அரசரின் கீழ், மூன்றாவது கிளையாகிய தால்தக்கியர் அங்கு ஆண்டுவந்தனர். அந்தச் செந்தவிட்டு நிற மக்கள் போரில் மிகவும்வல்ல வீர மக்களாயிருந்தனர். இவர் அன்றைய உலகமுழுவதையும் வென்று எல்லா நாடுகளிலும் மேல்வகுப்பு மக்களாய் விளங்கினர். அக்காலத்தில் அவர்கள் அத்லாந்திய நாட்டில் நிருமாணித்திருந்த பொற்கபாடபுரம் என்ற தலைநகர், இன்றைய நாகரீகத்தையும் விட மிகமிக மேம்பட்டு விளங்கியது.

8½ லக்ஷம் ஆண்டுகளுக்கு முன் (கி. மு. 8,50,000.)

உலக இயற்கைப்படி, நாகரிகம் முதிர முதிர அங்கு அசுரத்தன்மையும் பெருகியது. அக்காலத்து மக்கள் இடைவிடாத சிற்றின்ப நுகர்ச்சியையே முக்கிய குறிக்கோளென்று கொண்டனர். அபிசார ஓமங்கள், அஞ்சன மைகள், தைலங்கள், கருந்தொழில்கள் முதலியவற்றில் வல்லவராய், அவற்றைச் சிற்றின்ப நுகர்ச்சிகளுக்காகவே அம்மக்கள் பயன்படுத்தினர். யக்ஷிகள், குறளிகள் முதலிய பூதகணங்களைத் தம் ஆணைக்குட்படுத்தித் தம் சிற்றின்பத்திற்குப் பயன்படுத்த வல்லவராயிருந்தனர். இவற்றின் உதவியால் அவர்கள் இராக்காலங்களில் பயங்கரமான மிருக உருக்கொண்டு ஊரெங்கும்



நிழல் பாகம் : அத்லாந்தியக் கண்டம். 8 லக்ஷம் வருஷங்களுக்குமுன்.

ஊனையிட்டுத்திரிந்து மனிதரையும் மிருகங்களையும் கடித்து இரத்தத்தை உறிஞ்சுவர், அந்தப் பச்சை இறைச்சியைப் பிய்த்துத் தின்பர். பெண்டு பிள்ளைகளைப் படாதபாடு படுத்துவர். அவர்கள் செய்த அலங்கோலங்களும், அட்டூழியங்களும் ஆன்ம முன்னேற்றத்திற்குப் பெரும் இடைஞ்சலாக முடியவே, பூமிபாரந் தீர்க்கும்பொருட்டுப் பகவான் சனத்குமாரர் ஆணையால் சுமார் கி. மு. 8,50,000-ல் பெரும் பிரளயமொன்று தோன்றி அக்கண்டத்தின் பாகங்களை அழித்தது. இதற்குமுன்னாகவே, லெமூரிய மக்களின் உன்னதம் குறையக் குறைய பசிபிக் கண்டத்தின் பல பாகங்கள் கடலுக்குள் மூழ்கியிருந்தன. இப்பிரளயத்தில் அதன் எஞ்சியிருந்த வேறு பாகங்கள் கடல்கொள்ளப்பட்டன.

(கி. மு. 2,00,000) 2 லக்ஷம் ஆண்டுகளுக்குமுன். இது அத்லாந்திய மூலவகுப்பில் 4, 5-வது கிளைமக்கள்தோன்றி வளர்ந்து செழிப்புற்றிருந்த காலம்.

மக்களின் போக்கு மறுபிரளயத்திற்கு வழிவகுக்கவே, இக்காலத்தில் இரண்டாவது பெரும் பிரளயம் உண்டாயிற்று. அத்லாந்திக் கண்டத்தில் இரண்டு மிகப்பெருந் தீவுகளைத் தவிர மற்றநாடு



நிழல் பாகம்: அத்லாந்தியக் கண்டம். 2 லக்ஷம் வருஷங்களுக்குமுன்.

முழுவதும் இச்சமயம் அடிக்கடலுக்குள் ஆழ்ந்தது. தீவுகள் சிறு கண்டங்களையொத்து மிகப்பெரியவையாயிருந்தன. அவை ருதம் என்றும் தைத்தியம் என்றும் அழைக்கப்பட்டன.

(கி. மு. 75,025) சுமார் எண்பதினாயிரம் ஆண்டுகளுக்கு முன்.

பழைய கீழான நிலை இப்போது திரும்பவும் நேரவே, மூன்றாவது பிரளயம் பொங்கியது. அதில், போஸிதானிஸ் என்ற ஒரு பெருந்தீவைத் தவிர மற்ற பாகங்கள் முழுகிப்போயின; இமயமலை மேலெழும்பி இன்றைய உயரத்தை அடைந்தது; தமிழ்நாட்டின் தென்பாகமாகிய குமரிநாடும் அங்கிருந்தமக்களும் இப்பிரளயத்தில் ஒழிந்தனர்.

வட அமெரிக்காவிற்கும் ஆப்ரிக்காவிற்கும் இடையிலுள்ள பெருந்தீவே போஸிதானிஸாக இருந்தது.

கி. மு. 9564.

பின் கி. மு. 9564ல் மண்மாரி, கல்மாரி, மழைமாரி, அக்கினிமாரி பொழிந்து, போஸிதானிஸ் என்ற பெருந்தீவு 24 மணி நேரத்தில் அழிந்து, அத்லாந்திக் மகா சமுத்திரம் இன்றைய வடிவம் அடைந்தது. அரேபியாவில் சகாராக் கடலும் சீனாவில் கோபிக்கடலும் நீர்வடிந்து முதலில் சதுப்பு நிலங்களாகி நாளாவட்டத்தில் வறண்டு கொடிய பாலைவனங்களாயின.



அத்லாந்தியக் கண்டம். கி. மு. 9564 பிரளயத்தின்போது.

பாடம் 19.

## உலகப்பள்ளி—நான்காம் மூலவகுப்பு. (2)

அத்லாந்தியரும் அவர் கிளைமக்களும், தமது உச்சநிலைக் காலத்தில் உலகத்தின் பெரும்பாகங்களிலும் பரவினர். அவர் குடியேறிய இடங்களிலெல்லாம் உயர்ந்த நாகரிகத்தையும் அமைத்தனர். எகிப்து தேசம், மெஸபொட்டாமியா, இந்தியா, சீனு, ஜப்பான், வட அமெரிக்கா, தென் அமெரிக்கா இந்நாடுகளி-லெல்லாம் அவர்கள் அமைத்து ஆண்டு வந்த சாம்ராஜ்யங்கள், இன்றும் ஆரிய மக்கள் அடைந்திராத அவ்வளவு உன்னத நாகரிகத்தையும் பொலிவையும் பெற்றிருந்தன. அவ்விடங்களில் புதைந்து கிடக்கும் சின்னங்களில் மிகமிகச் சிலவே இன்று கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அவையே இக்காலத்து மக்களுக்கு மிகுந்த அதிசயத்தைத் தருவனவாயிருக்கின்றன.

அவர்களுடைய பெரிய நகரங்களெல்லாம் வட்டமாகவும் சதுரமாகவும் வகுக்கபபட்டு, மாட மாளிகை, கூட கோபுரங்கள், ஆலயங்கள், சத்திரஞ்சாவடிகளைக் கொண்டனவாய், பெரு வீதிகள், சாக்கடைப் போக்கிகள், நடுக்கால்வாய்கள், பலவித நீர் வசதிகள், பூங்காவனங்கள் நிறைந்தனவாய், நீண்ட கோட்டை மதில்களாற் சூழப்பட்டிருந்தன. நிலம் முழுவதும் அரசனைச் சேர்ந்ததாயிருந்தது. ஒவ்வொரு கணவனுக்கும் மனைவிக்கும் உண்ணப் போதுமான நிலம் பங்கிட்டுக் கொடுக்கப்பட்டது. பிள்ளைகள் பிறக்கப் பிறக்க அவருக்கு வேறு நிலம் விடப்பட்டது. கலியாணமான மக்கள் உடனே தமக்குரிய நிலத்தை தனியாகப் பெற்று வேறு குடித்தனம் நடத்தினுர்கள். அதனுல் அவருக்குள் வறுமைப் பிணியும் பசிப்பிணியும் அறவே இல்லாதிருந்தது. பிள்ளைகள் ஆணும் பெண்ணும் 12 வயது வரையில் கட்டாய ஆரம்பக் கல்வி புகட்டப்பட்டனர். எல்லாம் இலவசமாகவே செய்யப்பட்டன.

அவர்கள் பலவகையான கைத்தொழில்களில் வல்லவரா-யிருந்தனர். ஆகாய விமானங்கள் அமைப்பதில் மிகத்திறமை-வாய்ந்திருந்தனர். பெரிய மரக்கலங்கள் கட்டினர். இவற்றை

யெல்லாம் அணுச்சக்தி போன்ற ஒரு சக்தியால் ஓட்டினர். பொன், வெள்ளி முதலிய உலோகங்களில் மிக நுணுக்கமான வேலை செய்தனர். இந்த உலோகங்களைத் தோண்டியெடுக்காமல் ரஸவாதத்தாலேயே உண்டுபண்ணினர். சிலர் உலோகங்களைக் கலந்து உருக்கைவிடக் கெட்டியானவையாக்கினர். இனாமல், பளிங்கு, கண்ணாடி முதலிய வேலைகளிலும் கைத்தேர்ந்திருந்தனர். அவர்கள் இனாமல் வேலைக்கு இன்றும் ஈடு உண்டாகவில்லை. அந்த வித்தைகளெல்லாம் இப்பொழுது மறைந்தொழிந்தன.

யுத்தங்களில் விமானங்களிற் பறந்து சென்று விஷப்புகைக் குண்டுகளை வீசினர். விருசு பாணங்கள், அக்கினியாஸ்திரங்கள், வேறுபல கொடிய விஷபாணங்கள் செய்யவல்லவராயிருந்தனர். விஞ்ஞான முறையில் தேர்ச்சி மிகுதியால் சூரிய ஒளியைப் பல நிறக் கண்ணாடி வழியாக ஊட்டிப் பலபல பயிர்களை வளர்த்-தனர். விவசாயப் பண்ணைகள், மிருகப் பண்ணைகள் முதலியவை-களில் புதிய மரங்கள், செடிகள், பறவைகள், மிருகங்களை உண்டு பண்ணினர். அமெரிக்காவில் இன்று காணப்படும் பலநிற அலங்காரத்தோகைப் பறவைகள், கலப்பு இணைப்புகளால் (Cross-Breeding) அவர்கள் உண்டுபண்ணியவையாம். விதை நிறைந்த ஒருவிதக் கக்கரிக்காயிலிருந்து இன்றைய விதையில்லாத வாழைப்பழம் அவரால் வருவிக்கப்பட்டது. இயற்கைச் சக்தி கொண்டு நீர்க்கப்பல்களையும் ஆகாயக் கப்பல்களையும் ஓட்டியது போலவே, வேறொரு சக்தியால் மிகப்பெரிய கற்களையும் பாறை-களையும் மேலே உயர்த்த வல்லவராயிருந்தனர். எகிப்து தேசத்-திலுள்ள பிரமாண்டமான பிரமிட் என்ற கோபுரங்கள் இந்த அத்லாந்திய மக்களாலேயே சுமார் லக்ஷம் ஆண்டுகளுக்குமுன் கட்டப்பட்டன. அம்மக்களிற் பரவியிருந்த சூட்சும திருஷ்டி-யினால் அவர்கள் மேலே கண்ட அனேகங் காரியங்களைச் செய்ய வல்லவராயிருந்தனர். சுருங்கச் சொல்லில், நமது புராணங்கள், இதிகாசங்கள், இவற்றிற் காணப்படும் நாகரிகச் சின்னங்களெல்-லாம் அன்று உண்மையாகவே நிலவியிருந்தன. இவற்றையெல்-லாம் கர்ணபரம்பரையாகக் கேட்ட சமீபகால மக்கள், தங்களுக்-கியலாத அந்த அற்புதச் செயல்களோடு, பத்துத் தலைகள், யானை முகங்கள், சிங்க முகங்கள், பேசுகின்ற வாற்குரங்குகள் முதலிய

அசம்பாவித அற்புதங்களையும் இணைத்துக் கதைகள் கட்டியபடி-யால், உண்மையாக நிகழ்ந்தவைகளும் இன்று ஐயப்படும்படி-யாயின. ஆயினும் வருங்காலத்தில் திரும்பவும் நெற்றிக்கண் பார்வை பலருக்கும் ஏற்படுமாகையால், அதன் உதவியால் இங்கு கூறப்பட்டுள்ளவை ஆராயப்பட்டதுபோலத் திரும்பவும் சித்திர புத்திரர் எட்டைச் சோதிப்பதாலோ, அல்லது இப்போது அமெரிக்காவின் பல பாகங்களிலும் புதைபட்டுக் கிடக்கும் பண்டைய நகரங்களை அப்பார்வையால் கண்டு தோண்டி வெளிப் படுத்துவதாலோ, அத்லாந்திய மக்களின் நாகரிக உச்சநிலை ஐயத்திற்கிடமில்லாமல் தெளியப்படும்.

உலகியல் துறையிற் போலவே அவர்கள் பாரமார்த்திக நிலையிலும் மேம்பாடுற்று விளங்கினர். குமாரர்கள் நால்வரும் இப்பூமிக்கு விஜயஞ்செய்தது முதலே, பல பக்குவான்மாக்கள் பிறப்பெடுக்க வேண்டிய நிலையிலிருந்தோர், பொன்னாடு விட்டு மண்நாடுவரத்தொடங்கினர். இன்றைய உபநிஷதங்களிற்பல அவ-ரிடத்திருந்தே வந்தனவாம். கடோபநிஷதம் பெரும்பாலும் அவருடையதாம், நசிகேதன் கதைமாத்திரம் இன்று புதிதாய்ச் சேர்க்கப்பட்டுள்ளதாம். கீதையின் பல பாகங்களும் அங்கு காணப்பட்டனவாம். இவை ஆரிய-திராவிட வகுப்புவாதக்கார-ரால் கூறப்படுவனவல்ல. இவற்றை நெற்றிக்கண் ஆராய்ச்சி கொண் டெழுதிய திவ்யஞான சங்கத்துப் பெருமக்கள் மூவரும் ஆரியருட்சிறந்த ஆங்கில ரஷ்ய மக்களாம். இவ்வுண்மைகள் இன்-னும் பலராலும் சில நூற்றாண்டுகளில் தெளியப்படுமென்று அவர்களே கூறுகின்றனர். விரிவை அவர்கள் நூல்களிற் காண்க.

பிற்காலத்தில் பகவான் புத்தராய்த் தோன்றியவர் இடைக்-காலத்தில் வேதவியாசராக அவதரிக்கு முன்பு அத்லாந்திய மக்களிடம் பல பிறவிகளெடுத்துப் பலபல உத்தம மதங்களை அங்கு ஸ்தாபித்தனர். உலக இயற்கையை ஒட்டி அவையாவும், நாளா வட்டத்தில் அருகிக்கெட்டன. ஒரே வித்தகச் சித்தர் கணத்திருந்தே உலகமதங்களெல்லாம் வெளிவருவதால், இன்றுள்ள வேதங்களும் உபநிஷத்துக்களும் அன்றும் இருந்தன, என்றும் இருப்பனவென்று கொள்வதில் இழுக்கொன்றுமில்லை.

உண்மை என்றும் ஒன்றேயாகையால், அது உலகந்தோன்றியது முதலே உள்ளதாகையால், முற்காலங்களிலும் அது வெளிப்படுத்தப்பட்டிருந்ததென்று கொள்ள நாம் தயங்கவேண்டுவதில்லை. அங்ஙனம் தயங்குவது கிறிஸ்தவ மதத்திற்கு முன்பு உலகம் அஞ்ஞானமயமாகவே யிருந்ததென்று சாதிக்கும் பிடிவாதக்காரர் கொள்கை போன்றதேயாம். அக்குறுகிய மனப்பான்மை இந்து மதத்தின்கண் இடம் பெறாதது என்பதை இந்துக்கள் யாவரும் நன்கறிவர்.

பண்டு அத்லாந்தியரிடையே பல முத்தான்மாக்களும் முனிவர்களும் பிறந்து, கல்விமுறை, அரசியல் முறை, கைத்தொழில் முறைகளையெல்லாம் அவருக்கேற்றவாறு வகுத்துத் தமக்கென ஒன்றும் வேண்டாது பிறர்க்கென வாழும் பெருமக்களாய்ப், பட்சபாதமின்றி எல்லா மக்களையும் ஒன்றுபோற் பாராட்டி அங்கு நாகரிகத்தைப் பெருக்கினார்கள். அப்பெரியார் இடையிடையே மறைந்த காலத்தில், சுயநல மக்கள் செழிப்புற்று வளர்ந்து பல பிரளயங்களுக்கு அடிப்படையிட்டனர்; அளவற்ற செல்வமும் செழிப்பும் திரண்டு, அந்த அருமையான நாகரிகத்தைக் குலைத்தது. அத்லாந்திய வகுப்புகளிற் கற்று வளர்ந்த மேதையோர் பலரும் இன்று ஆரிய வகுப்பில் பிறந்துவிட்டபடியால், முன்னவர் தாழ்ந்து இப்போது ஆரிய நாடுகள் மேலோங்கி நிற்கின்றன. ஆயினும் அவர்கள் தன்னலம் இட்டதே சட்டமென்று ஒழுகி வருவதாலும், கடமையை மறந்து உரிமையைப் பெரிதாகக் கொண்டாடுவதாலும், உலகில் பசியும் வறுமையும் இன்று தாண்டவமாடுகின்றன. இப்பொழுதும் பல முத்தான்மாக்களும் முனிவர்களும் உலகிற் பிறந்து மக்களிடம் அன்பைப் பெருக்கி, இன்றைய நாகரிகத்தையும் பழைய நாகரிகங்களைவிடப் பன்மடங்குக்கு மேலுயர்த்துங்காலம் நெருங்கி வருகின்றது. அதற்கு அடிப்படையே இன்று உலகில் நடைபெறும் கோர யுத்தங்களும் குழப்பங்களும். உலகை ஒன்றுகூட்ட இதைவிட எளிதான முறை இன்றில்லைபோலும்! திடீரென்ற மரணத்தை விடத் தம் நிலையைப்பற்றிச் சிந்திக்க நேரங்கொடுக்கும் கிடப்பு நோயே சாதாரண மனிதருக்கு அறிவுறுத்தவல்லதாதலால், பெரும் பிரளயங்களைவிட இப்புதுமுறை யுத்தங்களே இக்காலத்து மக்களுக்கு உகந்த முன்னேற்றப் படிப்புமுறையென இறைவனால் கையாளப்படுகின்றது போலும்!

பாடம் 20.

## உலகப்பள்ளி—ஐந்தாம் மூலவகுப்பு (1).

அத்லாந்தியக் கண்டம் நீரில் மூழ்க மூழ்க, ஐரோப்பாக் கண்டம் சிறிது சிறிதாகக் கடலின் அடியிலிருந்து நீர் மட்டத்திற்கு மேலே எழும்ப ஆரம்பித்தது. அதுவே ஐந்தாம் மூல வகுப்பாகிய ஆரியமக்களுக்கு விதிக்கப்பட்ட இடம். ஐந்தாம் மூல வகுப்பாகிய ஆரிய வகுப்பில் ஐந்தாவது கிளைவகுப்பார், அங்கு இன்று பிரசவ வேதனையால் அல்லோகல்லோலப்படுகின்றனர். சமீபத்தில் நடந்த உலகமகா பாரதப்போர் ஒரு தாயாதிச் சண்டை. ஆங்கிலேயரும் ஜெர்மானியரும் ஒரே ற்றியூட்டன் (Teuton) வகுப்பைச்சேர்ந்த இருபிரிவார். இந்த யுத்தத்தால் அவர்கள் அறிவும் ஆற்றலும் பண்படும்போது, அவருக்குள் அன்பும் ஒற்றுமையும் நிலவும்போது, பல பெரும் மேதாவிகள் அவர்களிடம் வந்து பிறக்கக் காத்திருக்கின்றனராம். ஆரியரின் உச்ச ஸ்தானம் அவர் கையிலுள்ளதாம். அக்காலம் நெருங்கி விட்டதாக அறிந்தோர் சொல்லுகின்றனர். இனி ஆரியரின் ஆரம்பத்தை நோக்குவோம்.

மேலே சொன்ன அத்லாந்திய மக்களின் ஏழு கிளைகளில் ஐந்தாவது கிளைவகுப்பார் ஸெமிற்றிக் மக்களெனப்படுவர். அவர்கள் அன்று பெரும்பாலும் மலைநாட்டு வாசிகள்; வெள்ளைத் தோலுடையவர். அவரில் ஒரு கூட்டம் ருதம் என்ற தீவின் வட பாகத்தில் வசித்து வந்தனர். ஆரியப் பண்ணைக்கு அதிபதியாகிய வைவஸ்வதமனுவானவர் இவரையே தம் பயிருக்குத்தக்க வித்துக்களாகப் பொறுக்கியெடுத்தனர்.

(கி. மு. 1,00,000) சுமார் லக்ஷம் ஆண்டுகளுக்கு முன்.

இக்காலத்தில் அன்றைய உலகத்தின் பல பாகங்களிலும் தலைமை தாங்கி நின்றவர் தால்த்தக்கியர் என்ற ஜாதியார். அவர் அத்லாந்தியரின் மூன்றாவது கிளைவகுப்பினர். ருதம் என்ற பெருந்தீவையும் அவர்களே ஆண்டு வந்தனர். அத்லாந்தியக் கண்டம் கடலில் மூழ்கியபோது தப்பி நின்ற பாகம் ருதம், தைத்தியம் என இரு பெருந்தீவுகள் என்று

முன்னே கூறப்பட்டது. அந்த ருதம் என்ற தீவின் வடபாகத்தில் வசித்த ஸெமிற்றிக் மக்களை வைவசுவதமனுவானவர், மேலே குறிப்பிட்ட காலத்தில் தனிமக்களாகப் பிரித்து வைத்தனர். எவ்விதமெனில், பகவான் புத்தராக நம் காலத்திலவதரித்த பெரியார் கௌதமமுனிவர் எனப்படுவர். அவர் அத்லாந்திய மக்களுக்கமைந்த உலககுரு ஆவர். அம்மக்களின் ஒவ்வொரு கிளைவகுப்பிலும் அவர் அவதரித்து, அம்மக்களுடைய முன்னேற்றத்திற்கு உதவியான பல்வேறு மதங்களை அவ்வப்போது அவர் வகுத்துவந்தனர். அவர் வைவசுதமனுவின் வேண்டுகோளின்படி ருதத்தின் வடக்கு மலைநாட்டில் தோன்றி அங்கு ஒரு புதிய மதத்தை ஸ்தாபிக்கவே, அதைப் பின்பற்றிய காரணமாக அம்மக்கள் பிற மக்களுடன் கலக்கலாகாது ஒதுங்கி விட்டனர். இது இக்காலத்திலும் நாம் காணும் நிகழ்ச்சியாம். இத்தனிப்பட்ட கூட்டத்தார் சுமார் இருபதினாயிரம் வருஷம் வரை அங்கேயே பெற்றுப்பெருகி வாழ்ந்துவந்தனர்.

கி. மு. 80,000. இவருள் ஆண், பெண், பிள்ளைகளாக ஒன்பதினாயிரம் பேர்வரை தம் வேலைக்குத்தகுதியுடையவரென மனுவால் பொறுக்கியெடுக்கப்பட்டனர். கி.மு. 75,025ல் வரவிருந்த பிரளயம் இம்மக்களுடைய சமய குரவர்களால் முன்னெச்சரிப்பாக இவர்களுக்கு எடுத்துரைக்கப்பட்டது. அதற்குத் தப்பி வாழும் பொருட்டுத், தம் தலைவரைப் பின்பற்றி எங்கு அழைக்கினும் கூடச்செல்லத் தயாராயினர் இச்சிறு கூட்டத்தார். வைவஸ்வதமனுவிற்கு வலது கையாக அன்றுமுதல் இன்றுவரை உதவி நிற்பவர், நம் நாட்டில் அகஸ்தியரென்றழைக்கப்படும் முனிவர் பெருமானவர். இவ்விரு சித்த புருஷர்களுடைய ஏற்பாட்டின் பேரில் இம்மக்கள் கப்பலேறிச் சில மாதங்களில் இப்போது அரேபியா என்னப்படும் நாட்டில் வந்து இறங்கினர். இந்த ஒன்பதினாயிரம் பேர்களில் பெரும்பாலார் இன்று ஜீவன் முத்தராய்த் திகழ்கின்றனர்.

அரேபியாவிற்கு வந்ததுமுதல் சுமார் 4000 ஆண்டுகள்வரை வேறு ரத்தக்கலப்பில்லாமல் அம்மக்கள் அங்கேயே வாழ்ந்து வந்தனர். கூட்டம் பெருகப்பெருக, அவரில் தகுதிக்குறை-

வாகக் காணப்பட்டவர், அவரையறியாமலே பலபல காரணங்களால் வெளியேற்றப்பட்டனர். சுற்றிலுமுள்ள நாடுகள் செழிப்பும் நாகரிகமும் அடைந்திருந்தபடியால், போரில் அவாவுடையவர் அந்நாடுகளை வென்று அரசாள ஏவப்படுவர். வேறு சிலர் நீர்வளம் நிலவளம் அமைந்த காடுகளில் குடியேற்றப் படுவர். சிலர் சமுதாயக்கட்டுப்பாட்டில் ஏற்படும் மாறுதல்களைக் கண்டித்துத் தாமாகவே பெருங்கூட்டமாக வெளியேறுவர். இவ்வாறு பலவிதங்களால் ஆரியவித்து தெளிக்கப்பட்டும் பொறுக்கப்பட்டும் இடையிடையே புதிய ரத்தத்துடன் கலக்கப்பட்டும் அங்கு பண்படுத்தப்பட்டது. சுற்றியிருந்த தூரானிய மக்களின் கொடுஞ்செயல்களை எதிர்க்கப்போதுமான வன்மை இவரிடம் குறைவாயிருப்பதைக் கண்டு ஒரு சமயம் மனுவானவர் சில தால்த்தக்கிய வீரரைக் கொண்டுவந்து கலப்புமணம் செய்தனர். இது தமது மதம் இடங்கொடாத சீர்திருத்தமென வாதித்து ஒரு பெருங்கூட்டம் அம்மக்களை விட்டுப்பிரிந்து ஆப்பிரிக்காவின் வடக்குக் கரையில் சென்று குடியேறினர். இவ்வாறு பலவகைகளால் கழிக்கப்பட வேண்டிய வித்துக்கள் கழிக்கப்பட்டன. ஒரு முக்கியமான உண்மை இங்கு மனதில் வைக்கப்படல்வேண்டும். ஆன்மாவில் ஆரியமென்றும் அத்லாந்தியமென்றும் லெமூரியமென்றும் வேறுபாடு ஒன்றுமே கிடையாது; ஆன்மா தன் உண்மை நிலையில் என்றும் ஆன்மாவே. ஆனால் அதன் ஸ்தூல சூட்சும உடம்புகளைப் பொறுத்தும் அவற்றின் பக்குவத்தைப் பொறுத்துமே இந்த வேறுபாடுகள் உலகத்தாரால் வகுக்கப்படுவனவாகும். மனிதனுடைய அறிவு இச்சை செயல்களின் நிலையைப் பொறுத்தும் அவனுடைய பிறப்பைப் பொறுத்தும் வேறுபாடுகள் புறத்தே காணப்படினும், அடிப்படையில் "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்ற உண்மையை ஒருபோதும் மறந்துவிடக் கூடாது.

கி. மு. 75,025. இருபத்தையாயிரம் வருஷங்களாகச் செய்த பகீரதப் பிரயத்தினத்தின் முடிவில், மனுவின் நோக்கத்திற்கு வாய்ப்பாக அமைந்த உடம்புகள் சுமார் எழுநூறேயிருந்தன. இப்போது நெருங்கி நின்ற பிரளயம் நேர்வதற்கு முன், இம்மக்களை மத்திய ஆசியாவிற்குக் கடத்தும்படி சனத்குமாரர் ஆணை வரவே, வைவசுதமனுவும் அவருடைய

சகாக்களுமாக இந்த எழுநூறு ஆண் பெண் பிள்ளைகளுடனே கால்நடையாக அரேபியாவிலிருந்து கிழக்கு நோக்கி நடந்து, மேற்குறித்த காலத்தையடுத்துச் சீனவுக்கு வடதிசை வந்து சேர்ந்தனர். இப்போது மத்திய ஆசியாவிலிருக்கும் கோபி என்ற கொடிய பாலைவனம் அன்று ஒரு பெரிய கடலாயிருந்தது. அதன் வடக்குக்கரையில், நெடுங்காலம் நடந்திளைத்த இம்மக்கள், அடுத்து ஏற்படவிருக்கும் பூமி அதிர்ச்சிகளால் உயிராபத்து நேரிடக்கூடாததான இடம் ஒன்றிற்குக் கொண்டுசெல்லப்பட்டு அங்கு குடியேற்றப்பட்டனர். இங்கு அவர் ஆயிரம் உருப்படிக-ளாகப் பெருகினர்.

இப்போது அத்லாந்திக் கண்டத்தில் தேவாசுரயுத்தம் தொடங்கியது. அது கி. மு. 75,025. அங்கு எஞ்சியிருந்த ருதம், தைத்தியம் என்ற இருபெரு நாடுகளிலும் பெரும்போர் நிகழ்ந்தது. தீயோர் கை மேலோங்கியது. கொடுமை எங்கும் வெற்றி பெற்றது. அத்லாந்தியக் கண்டம் மூப்பெய்தி இறக்கும் பருவம் எய்திவிட்டபடியால் சனத்குமாரர் தம் வேலாயுதத்தை உயர்த்தவே பூமி பல இடங்களில் வெடித்தது. கடல்நீர் பூகம்பங்-கள் போல மேலே பொங்கி ஆகாயத்தை நோக்கி எழுந்தது. அத்துடன் இயற்கைப் பூகம்பங்களும் சேர்ந்தன. ஆகாயத்திலும் பூமியிலும் பயங்கரமான இடிமுழக்கம். எங்கும் மண்மேகங்-களும் மழைமேகங்களும். அவற்றின் மறைப்பால் இரண்டு வருஷ காலம் சூரியனே உலகிற்குப் புலப்படவில்லை. ஓயாது கொட்டிக் கொண்டிருந்த மண் மழைமாரி அக்கினி மழையாகவே இருந்தது. உலகெங்கும் உயிர்ச்சேதத்திற்கு அளவேயில்லை. உலகின் பல பாகங்கள் உருத்தெரியாமல் மாறுதலடைந்தன. இமயமலை மேலெழும்பியது. தென்னிந்தியாவையொட்டியிருந்த பெரிய நிலப்பரப்பும் பெருந்திரளான மக்களும் கடலுக்கிரையாகினர். குமரிக்கண்டம் என்பது அதுவே போலும். எகிப்து தேசம் முழு-வதிலும் ஒரு பனை உயரம் தண்ணீர் தேங்கி ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப் பின்னரே வடிந்தது. அங்கு பிரமிட் (Pyramid) என்ற கோபுரங்கள் மாத்திரம் தலையைக்காட்டி நின்றன. மற்றப்-படி நாடு நகரங்கள், உன்னத நிலையடைந்திருந்த நாகரிகச்சின்-னங்கள், எல்லாம் அடியோடு மறைந்தன. இன்றைய ஸைபீரி-

யாவும் மத்தியஆசியாவும், அன்று வடதுருவக்கடலாயிருந்தவை, மேலெழும்பி நிலமாயின. இத்தகைய பெருங்குழப்பங்களின் போதும் மனுவின் கூட்டம் தங்கியிருந்த இடத்தில் அதிக மாறுதலேதும் இல்லாதிருந்தது. மண் மாரியாலும் மழை மாரி-யாலும் பூமியதிர்ச்சியாலும் உண்டான பயமும் திகிலும், உண்-ணக் கிடையாத பஞ்சமும், இரவுபோன்ற பகலும், அவர்களை வாட்டியதைத் தவிர வேறு ஆபத்தான இடைஞ்சல் அங்கு ஏற்படவில்லை. ஆயினும் இரண்டு வருஷத்தில் பிரளயம் ஓய்ந்த போது இம்மக்கள் ஆயிரவரில் முன்னூறு பேரே மிஞ்சினர்.

மேலும் ஐந்தாண்டுகள் சென்றன. ஆங்காரத்தாண்டவந்-தாங்கிய பூமிதேவி அலுப்பு நீங்கித் தன் நிலைமை அடைந்தனள். அப்போது சனத்குமாரர் ஆணையின்பேரில் இந்த முன்னூறு பேரும் கோபிக் கடலோரத்தில், குமாரர் நால்வரும் தங்கியிருக்-கும் சுவேததீபத்தின் எதிர்க்கரையில் குடியேற்றப்பட்டனர்.

கி.மு. 75,000 முதல் கி.மு. 70,000 வரை.

ஸெமிற்றிக் மக்களின் பொறுக்கு வித்துக்களாகிய இந்த முன்னூறு பேரும் இக் கால எல்லையில் பெருந்திரளாகப் பெருகியிருந்தனர். அப்போது சுற்று நாடுகளில் ஆண்டுவந்த துரானிய மக்கள் வெட்டுக்கிளிகள் போலத் திரண்டுவந்து, பயிர்-களை அறுவடை செய்வதுபோல அம்மக்களை ஏகமாய்க் காலி செய்தனர். மனுவின் மேல்வேலைக்கு உதவாத உடம்புகளெல்-லாம் இவ்விதம் காலி செய்யப்பட்டன. இப்போது எஞ்சியவர் மிக மிகச் சிலரே.

சுமார் கி.மு. 60,000.

உதவக்கூடிய உடம்புகளில் உயிர் தப்பிய அந்தச் சிறு தொகை மக்கள், திரும்பவும் இப்-போது பெருங்கூட்டமாகப் பெருகியிருந்தனர். அவரும் இக்காலத்தில் அத்துரானிய மக்களாலேயே இரண்டா-வது அறுவடையாக அறுக்கப்பட்டனர். ஒரு சில பிள்ளைகளும் அவர்களைக் காப்பாற்றி வளர்க்கச் சில பெண்களும் மாத்திரமே ஒளித்து வைக்கப்பட்டிருந்தனர். இப்பிள்ளைகள் அனைவரும் முத்தான்மாக்களும் அவருடைய நெருங்கிய சிஷ்யராயிருந்த

பக்குவான்மாக்களுமானவர். இவரைத் தவிர மற்ற எல்லா உடம்புகளும் இறந்துபட்டன. இக்குழந்தைகள் இருவரிடத்துக் கி. மு. அறுபதினுயிரத்தையொட்டி வைவசுத மனுவானவர் பிறந்தனர். அன்றுமுதல் ஆரிய மூலவகுப்பு ஆரம்பமாயிற்றென்னலாம். இன்றைய ஆரியமக்களனைவரும் வைவசுதமனுவின் வழிவழிப் பிறந்தவரும் அவருடைய ரத்தக்கலப்புடையவருமே யாவர்.

இவ்வளவு அரும் பிரயாசை ஐந்தாவது மூலவகுப்பாகிய ஆரிய வகுப்பிற்கு மாத்திரம் எடுக்கப்பட்டதென்று எண்ணி இறுமாந்துவிடலாகாது. அத்லாந்திய மக்களின் ஆரம்பவேலை இதனினும் கூடுதல் காலம் பிடித்தது; அன்றைய ஆன்மாக்கள் வெறுங் குழந்தைப் பருவத்திலிருந்தபடியால், அவரைப் பயிற்றுதற்கு அண்டப் பிரயாசை வேண்டிவந்தது; கூடுதல் நீடித்த காலமும் ஆயது. இன்று, ஆன்மாக்கள் ஒரு சிறிது முதிர்ச்சியுற்றிருக்கும் நிலைமையில், இனிவரும் ஆறுவது ஏழாவது மூலவகுப்புக்கள் இவ்வளவு கடும் பிரயாசையின்றித் தொடங்கப்பெறலாம்; பண்ணைகளின் கால அளவும் சுருங்கும். ஆன்மப் பண்பாட்டில் உடம்பும் மனமும் ஒன்றையொன்று பின்னியே வேலைசெய்யுமாகையால், இரண்டு அதிகாரபுருஷர் ஒவ்வொரு மூலவகுப்பிற்கும் கைகோர்த்தே வேலைசெய்வர். அரசியல் மூலமாகவும், சமூக வாழ்க்கை மூலமாகவும் உடம்பைப் பண்படுத்துபவர் மனு என்னப்படுவர். கல்விமுறை மூலமாகவும் சமயங்கள் மூலமாகவும் அறிவைப் பண்படுத்துபவர் மகாகுருவென்றும் உலககுருவென்றும் அழைக்கப்படுவர். ஆரியவகுப்பு மனு வைவஸ்வதர்; அவ்வகுப்பின் மகாகுரு மைத்திரேயர். கௌதமமுனிவர் அத்லாந்திய வகுப்பின் மகாகுரு ஆவர். உலகத்தின் பெருங்கூட்டம் இன்னும் அத்லாந்திய மக்களாகவிருப்பதால், அவர் கி. மு. ஐந்தாம் நூற்றுண்டுவரை உலகிலேயே மாறிமாறிப் பிறந்து, புத்தர் பிரானுகக் கடைசி அவதாரமெடுத்துப் பின் மைத்திரேய பகவானிடம் உலகமதங்களை ஒப்பிவித்துச் சென்றனர். அதனுல் இன்றைய உலககுரு மைத்திரேய பகவானுவர். அவரே இன்று உலகத்துள்ள எல்லா மதங்களையும் ஏற்ற கருவிகளைக் கொண்டு கண்காணித்து வருபவர், ஊக்கப்படுத்துபவர், ஒழிப்பவர், சீர்திருத்தஞ் செய்பவர்.

பாடம் 21.

## உலகப்பள்ளி—ஐந்தாம் மூலவகுப்பு (2).

கி. மு. 45,000. இப்போது மத்திய ஆசியாவில் கோபிக்கடற் கரையெங்கும் பெரிய நகரங்கள், பட்டணங்கள், வெள்ளைநிற மக்கள், நாகரிக உடைநடைகள், கைத்தொழில்கள், போக்குவரத்துவசதிகள், வர்த்தக வாணிபங்கள். இவர் ஆரிய மூலவகுப்பினர். முன் சொன்ன துரானியப் படையெடுப்பின் பின் இந்தப் பதினையாயிர வருஷ இடைக்காலத்தில் இவர்கள் பெருந்திரளாகிச் சைனு, ஜப்பான், சீயம், திபெத்து முதலிய மத்திய ஆசியா முழுவதையும் தம் ஆட்சிக்குள் ஆக்கியிருந்தனர். ஆயினும் அவ்விடங்களில் அத்லாந்திய மக்களாகிய துரானியர், மங்கோலியர் முதலியோர் புற்றீசல்போல நிறைந்திருந்தபடியால், இவருக்கு விரிந்து பரவ அங்கு இடமில்லாதிருந்தது. ஆகவே,

கி. மு. 40,000 சுமாரில், ஒன்றரை லக்ஷம் வீரர்களையும், ஒரு லக்ஷம் பெண்டு பிள்ளைகளையும் வைவசுத மனுவானவர் ஒன்று திரட்டி, அற்றைக்கு 40,000 ஆண்டுகளுக்குமுன் ருதத்தீவிலிருந்து சீனைவை நோக்கி அவர் பயணஞ் செய்தகாலத்தில் இடையில் தங்கியிருந்த அரேபியாவில் குடியேற அனுப்பினர். அவர்கள் அங்கு சென்று தங்கிப், பெற்றுப் பெருகி நாகரிகத்தை வளர்த்து, மேற்கு ஆசியா முழுவதிலும் பரவி, ஆப்பிரிக்காவையும் மற்றுள்ள இடங்களையும் கைப்பற்றிப் பலலாயிரம் ஆண்டுகளாகச் செழிப்புற்றிருநதனர். அக்காலத்தில் அன்றைய உலககுருவாகிய கௌதமமுனிவர் எகிப்தில் அவதரித்து, தெஹுதி, தாத், ஹேர்மீஸ் என்ற பெயரால் அந்நாடுகளெல்லாம் சுற்றிப் புதிய மதமொன்றை அவருக்கு வகுத்தனர்.

அவர் அன்றைய பாஷையில் இறைவனை ஒஸிரிஸ் (Osiris) என்ற பெயர்கொண்டு அழைத்தனர். அன்று அவர் அருளிய போதனையின் சாராம்சமாவது:—

“ உலகிற்பிறக்கும் ஒவ்வொருவருக்கும் ஒளியூட்டும் மெய்ச் சுடர் அவரவர் உள்ளத்துறையும் ஒஸரிஸ் ஆவர். ஒஸிரிஸ்

ஒளியினின்றும் உதித்தவர், ஒளியிலேயே உறைபவர். அவர் ஒளியாகவே இருப்பவர்.

"அச்சுடரொளி எங்கும் மறைந்து கிடக்கின்றது; அது தூணிலும் உள்ளது, துரும்பிலும் உள்ளது. எதையும்விட அண்மையாய், மனிதனுடைய உள்ளத்தினுள்ளேயே அது இருக்கின்றது. அவ்வொளியினின்றே யாவும் வெளிப்படுகின்றன. அவ்வொளியிலேயே யாவும் ஒடுங்குகின்றன.

"உலகமும் மற்றெல்லாமும் தோற்றங்களாகும்; அத்தோற்றங்களில் உள்ளொளியைக் காண்பவனே பேரின்பவான். ஆகையால் அவ்வொளியை நாடுக. அதனைப் பின்பற்றுக. நீயே அவ்வொளியாயிருக்கின்றாய். அவ்வொளி பிரகாசிக்கட்டும்."

என்று போதித்தார் ஒளிவேந்தாகிய தெஹ்ஹுதி என்பவர். அந்த ஒளியிலே இறைவனுடைய ஞானத்தைக் கண்டு வழிபடவும் அவர் கற்பித்தார்.

இக்கருத்தை மணிவாசகப் பெருமான் அருளியுள்ள :—

"இன்றெனக் கருளி இருள்கடிந்து உள்ளத்து
எழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்,
நீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந்
திருப்பெருந் துறையுறை சிவனே !
ஒன்று நீயல்லை அன்றி யொன்றில்லை
யாருன்னை அறியகிற் பாரே."

என்ற பதிகம் நன்கு விளக்கும். இம்மதத்தைப் பின்பற்றிப் பலர் மேன்மக்களாயினர், பலர் ஜீவன்முத்தரு மாயினர். இவர்களுடைய அந்தரங்கக்கிரியைகளிலொன்றே இன்றைய சுதந்திரச் சிற்பக்கிரியைக்கு (Free Masonry) அடிப்படையாகவுள்ளது. நாளாவட்டத்தில் இம்மக்களின் நாகரிகமும் மதமும் கால இயற்கையின்படி கெட்டொழிந்தன. இவர் ஆரிய மூலவகுப்பின் இரண்டாவது கிளைவகுப்பாராவர்; அரபியர் எனப்பெயர் பெறுவர்.

கி. மு. 30,000 சுமாரில். இக்காலத்தில் திரும்பவும் மனுவானவர் மூன்று லக்ஷம் வீரர்களை, ஆண்களை மாத்திரம், பாரசீகத்தில் போய்க் குடியேறும்படி அனுப்பிவைத்தார். அந்நாடு அன்று ஈரான் என்ற பெயரால் அழைக்கப்பட்டது. இம்மக்கள், செல்லும் வழியிலும் சென்ற இடத்திலும் பல ஆண்டுகளாகப் போர் புரிந்து, நாடிவந்த நாட்டில் தங்கி, அங்கு அமைதி நிலவியதும், தம் பெண்டுபிள்ளைகளை வரவழைத்துக்கொண்டனர். இவர் அங்கு பெற்றுப்பெருகி வரும்போது சுமார் கி.மு. 29700ல் உலககுரு கௌதம முனிவரானவர் ஸோரோஸ்த்தர், அல்லது ஸாரத்துஷ்ட்ரா என்ற திருநாமத்தோடு அவதரித்து, அவருக்கு அக்கினி வழிபாட்டை ஏற்படுத்தினர்.

"அக்கினியே பூதங்கள் யாவற்றினும் மிகப் புனிதமாயது, பொருள்கள் யாவற்றையும் புனிதமாக்குவது. அக்கினி முழுவதும் சூரியனுடைய புனித அனலே."

"அது வெப்பம், அது ஒளி, அதுவே உடல் நலமும் உரனும். அதன் துணைகொண்டே யாவும் உயிரும் இயக்கமும் பெறுகின்றன.

"மனிதனுடைய உள்ளத்துள்ளேயும் அப்புனித அக்கினி இருக்கின்றது. அவனுடைய ஆசைகளையும் அபிலாஷைகளையும் அது வளர்க்கின்றது; அவனுள்ளிருக்கும் அசுத்தங்களையெல்லாம் சுத்திகரிக்கின்றது.

"தன் உள்ளத்திலும் அறிவிலும் அந்த அக்கினி எரிந்துகொண்டிருப்பதைக் காண்பவனே பாக்கியவான். அப்போது அவன் உள்ளத்திருந்து தூய நினைவுகளும், அவன் வாயிலிருந்து தூய மொழிகளும் வெளிவரும்; அவன் கைச்செயல்களெல்லாம் தூய்மையும் சக்தியும் உள்ளனவாயிருக்கும்."

அவ்வாறு போதித்தார் அக்கினிவேந்தாகிய ஸாரத்துஷ்ட்ரா. அந்த அக்கினியிலே இறைவனுடைய ஆனந்தத்தைப் போற்றவும் அவர் கற்பித்தார். இம்மதத்தைப் பின்பற்றி மேன் மக்களானோரும், ஜீவன் முத்தரானோரும் மிகப்பலர். இம்மதத்தின் அம்சமே இன்று பம்பாயில் பார்ஸி மக்களிடம் நிலவுவது,

பாரசீகத்திலிருந்து அவர்கள் நம் நாட்டில் குடியேறியபோது கூடக் கொண்டு வந்தது. இம்மக்கள் ஒரு காலத்தில் மேற்கு ஆசியா முழுவதும் பரவி, வாணிபம், கைத்தொழில், கப்பலோட்டுதல் முதலியவற்றில் கைத்தேர்ந்தவராயிருந்ததால், அன்றைய உலகம் முழுவதிலும் வர்த்தகராய்ச் சுற்றித் திரைகடலோடித் திரவியந்தேடி வந்தனர். அத்தன்மை இன்றைய பார்ஸி மக்களிடமும் பெரிதும் காணக்கிடப்பது. இந்த நாகரிகமும் உலக இயற்கைப்படி காலக்கிரமத்தில் கை தாழ்ந்தது. இம்மக்கள் ஆரிய மூலவகுப்பின் மூன்றாவது கிளைவகுப்பாகிய ஈரானியர் என்னப்படுவர்.

கி. மு. 20,000 சுமாரில். வைவசுத மனுவானவர் இப்போது அழகிற் சிறந்தோரும் கலைகளில் விருப்புடையோருமாக ஒரு கூட்டத்தைப்பொறுக்கியெடுத்து, அவரைச் சிலகாலம் பண்படுத்திப் பின் பாரசீகத்தின் வடக்கெல்லை வழியாக ஐரோப்பாவை நோக்கி அனுப்பினர். இவர்கள் காக்கஸஸ் மலைப்பிராந்தியத்தில் நெடுங்காலந் தங்கிப் பெருந்திரளாகிக் கிரீஸ், ட்ராய் முதலிய நாடுகளில் குடிபுகுந்து நாளாவட்டத்தில் ஐரோப்பாவின் பல இடங்களிலும் பரவினர். ஐரோப்பியக் கலைகளின் உச்சநிலை இவர்கள் கையினாலேயே அமைக்கப்பட்டது. இன்றும் அழகிற் சிறந்த மக்கள் இவர்களின் வழித்தோன்றலே யாவர். இவருக்குள் சுமார் கி. மு. 7000ல் கௌதம முனிவர் ஆர்பியஸ் என்ற வேய்ங்குழல் வல்லோனாக அவதரித்தனர். அவர் பெரும்பாலும் மலைகளிலும் வனங்களிலும் சஞ்சரித்து, பக்குவம் வாய்ந்த மனிதரை அங்கங்கு திரட்டி அவருக்குக் கலைகள் மூலம் பேரின்பம் பெறும் வழிகளைப் போதித்தனர். அந்தப் புதிய மார்க்கம் அந்தரங்கம், பகிரங்கமென இரு வகுப்புகளாக அமைக்கப்பட்டிருந்தது. அந்தரங்க மார்க்கமே ஆர்பிக் குப்த வித்தை (Orphic Mysteries) எனப் பின்னால் பெயர் பெற்றது. அந்த உள்முறையில் சங்கீதக்கலை மூலம் மனிதனுடைய ஆறு ஆதாரங்களும் மலரும் முறைகளும், அவற்றையொட்டிய யோகாப்பியாச முறைகளும் போதிக்கப்பட்டன. இதில் பக்குவப்பட்டுப் பெருமக்களானோர் பலருடைய பெயர்களும் நூல்களும் இன்றையமேனாட்டுச் சரித்திரங்களில் காணப்படுவன.

ரோமாபுரி உச்சம்பெற்று அங்கு புவிபோற்ற ஆண்டுவந்த நாகரிக மக்களும் இந்த இனத்தைச் சேர்ந்தவரே. இக்கூட்டமும் காலச் சுழற்சியால் பண்டைப் பெருமை முழுவதையும் இன்று இழந்தே நிற்கின்றது. இம்மக்கள் ஆரிய வகுப்பின் நான்காவது கிளையாகும் கிரேக்க–ரோமர்.

ஆர்பியஸ் அவதாரத்தில் கௌதம முனிவர் வற்புறுத்திய கொள்கையாவது :—

"நாதமானது எல்லாப் பொருள்களிலும் இருக்கின்றது. நுண்ணிய அணுக்கள், பெரிய நக்ஷத்திரங்கள், இலைகளின் சலசலப்பு, மழையின் சடசடப்பு, இடியின் முழக்கம், அலைகளின் கர்ச்சனை, இவை யாவற்றையும் சுரங்களாகக்கொண்டு இயற்கையானது இறைவனைப்போற்றும் ஒரு அற்புதப் பண்ணை ஆக்குகின்றது. உயிரின் வாழ்வு ஒரு அழகு, அது ஒரு ஆனந்தம், படைப்பு முழுவதும் நாதப் பிரம்மத்தின் இன்னிசைக்கே ஒத்தொலிக்கின்றது.

"எண்ணத்தின் எழில், உணர்ச்சியின் அழகு, செயலின் வனப்பு, இவையே வாழ்விற்கும் இன்பத்திற்கும் மனிதருக்கு மூல காரணமாவன," என்று புகட்டி அந்த அழகை அவரவர் மனம் மொழி மெய்களில் போற்றும்படி அவர் கற்பித்தார்.

கி. மு. 18,875 முதல் கி. மு. 17,4[illegible]5 வரை. கோபிக் கடற்கரையில் இப்போது எஞ்சியிருந்த ஆரிய மக்களிற் பெரும்பாலாரை மனுவானவர் இந்தியாவிற்கனுப்பத் தீர்மானித்தனர். அவர்கள் இந்த 1500 ஆண்டுக்கால இடையில் நான்கு தொகுதிகளாகப் புறப்பட்டு இமயமலைக் கணவாய்கள் வழியாக இந்தியாவிற்குள் புகத் தொடங்கினர்.

கி.மு. 18,875:- முதல் தொகுதி நெடுங்காலம் வழிநடந்து பல அல்லல்களும் பட்டினியும் பசியும் அனுபவித்து, வடஇந்தியாவில் வந்துதங்கி இளைப்பாறி, பின்னுல் தென்னிந்தியாவில் குடியேறினர். இவரே தென்னிந்தியப் பிராமணரின் மூதாதையர்.

கி. மு. 17,520ல் இரண்டாவது தொகுதி புறப்பட்டு சிந்து தீரம், வங்காளத்தை இருப்பிடமாகக் கொண்டனர்.

கி.மு. 17,455ல் மூன்றாவது தொகுதி புறப்பட்டுப் பல போர்களில் ஈடுபட்டு இன்றைய டெல்லியின் ஸ்தானத்தை அடைந்து அங்கு ரவிபுரம் என்ற நகரத்தை அமைத்தனர்.

கி. மு. 15950 :—இப்போது புறப்பட்ட பெருங்கூட்டம் பல பல தொகுதிகளாகப் பிரிந்து பலபல பாதைகளாக நடந்து பல பல அல்லல்களிலும் சண்டைகளிகளிலும் ஈடுபட்டு இந்தியாவிற்குள் புகுந்து வடஇந்தியா முழுவதும் பரவிற்று.

இந்தியாவிற் குடியேறிய நான்கு தொகுதிகளான இந்தக் கூட்டமே ஆரிய மூலவகுப்பின் முதற் கிளைவகுப்பாவர். இவர்கள் இந்தியாவிற்குள் புகுந்த காலத்தில், அந்நாட்டில் அத்லாந்திய மக்கள் நிரம்பி நெருங்கியிருந்தனர். அவர்கள் நாகரிகத்தில் அன்று மிகவும் உயர்ந்திருந்தபடியால், வழியெங்கும் ஓயாத போர் புரிந்தே இந்த ஆரிய மக்களின் சிறு சிறு தொகுதிகள் அங்கங்கே குடியேற முடிந்தது. இந்த நிகழ்ச்சிகள் பலவற்றை அசுபதி புராணம் (Lives of Alcyone) என்ற திவ்யஞான சங்கத்து நெற்றிக்கண் ஆராய்ச்சி நூலில் பரக்கக் காணலாகும்.

அன்றைய உலககுருவான கௌதம முனிவர் ஆதியில் கோபிக்கரையில் வியாசராகவந்து இம்மக்களுக்கு அமைத்திருந்த மதமே இன்றைய சனாதனதர்மத்திற்கு அடிப்படையாயுள்ளது. அதுவே ஆரிய வகுப்பிற்கு முதல் முதலாக அமைந்த மதமாகும். அம்மக்கள் இந்தியாவில் வந்து குடியேறிய சில காலத்திற்குப்பின் உலககுருவானவர் திரும்பவும் வியாசராகவே இந்தியாவில் வந்து அவதரித்து, அங்கு தொன்னெடுங் காலத்திற்கு முன்பு அத்லாந்திய மக்களுக்குத் தான் அமைத்திருந்த பல மதங்களின் இன்றியமையாத உறுப்புக்களையும் சனாதன மதத்திற் கலந்து, இன்றுள்ள இந்துமதத்தை நிலை நாட்டினர். அவர் ஆதியில் அருளிய படிப்பினையாவது :—

“ஞாயிறிடங்கொண்ட பரம புருஷன்” ஆண்டானும் உயிரை அளிப்போனும் ஆவன்; ஜொலிக்கின்ற சூரியகோளம்

அவனுடைய புறப்புற ஆடையாகும். அவன் உயிரே நம் உயிர்; நம் உடம்புகட்கு உணவையும், உணர்ச்சிகட்குப் புலன்களையும், ஆன்ம ஊக்கத்திற்கு எண்ணங்களையும் ஊட்டி அவன் நம்மை வளர்க்கின்றான். அவனது சூரிய ஒளியே நாம் புனிதம் பெறுமிடம்.

"தேவாதி தேவனாய், உயிருக்கும் ஒளிக்கும் அன்புக்கும் ஒரே மூலமாய், கணந்தொறுந்தொறும் ஒளிவிசித் தானாக உள்ள அனைத்தையும் அவன் நமக்கு அருளுகின்றான்.

"அவனைத் தொழுக; அவன் ஈவது போலவே ஈக; அப்போது அவனது சோதியோடு நீயும் ஒன்றுவாய்; ஏனெனில் "அதுவே நீயாகின்றாய்."

சோதியின் தலைவராகிய வியாசர் அவ்வாறு போதித்து, இறைவனுடைய அந்தரியாமித்துவத்திலே அவனுடைய சக்தியைப் போற்றவும் அவர் கற்பித்தார். இது எகிப்தில் அவர் அமைத்த ஒளி மதத்திற்கும் முன்னதாயினும், அவ்விடத்துக் கூறப்பட்டுள்ள "இன்றெனக்கருளி" என்ற மணிவாசகப் பெருமான் திருவாசகம் இம்மதத்திற்கும் பூரணமாகப் பொருந்துமென்பது அறியத்தக்கது. பாசுரத்திலும் "ஞாயிறே" குறிப்பிடப்பட்டுள்ளதும் கவனிக்கத்தக்கது.

கி. மு. 10,000 சுமாரில். கடைசியாக, கோபிக் கடற்கரையில் மீதியாயிருந்த சிறுபான்மையான ஆரியமக்கள் அனைவரும், துரானிய மக்களின் நெருக்கடியைத் தாங்கமாட்டாது இமயத்திற்கு வடக்கு வழியாக ஐரோப்பாவை நோக்கி நடந்து, பல பல இடங்களில் இளைப்பாறிக் கடைசியாகப் போலந்தில் வந்து நெடுங்காலம் தங்கி, டியூட்டன் (Teuton) என்ற பெயர் கொண்ட வகுப்பாராய் ஐரோப்பாவில் பரவினர். இவர் ஆரிய வகுப்பின் ஐந்தாவது கிளை வகுப்பினராவர்.

இவரே இன்றைய உலகில் உச்சநிலையிலிருப்பவர். இக்கிளையைச் சேர்ந்தோரே ஆங்கிலேயர், ஜெர்மானியர், ரஷ்யர் முதலியோர். ஐரோப்பா, அமெரிக்கா, ஆஸ்திரேலியா முழுவதும்

அவரே வாழ்கின்றனர் ; ஆசியாவையும் ஆப்பிரிக்காவையும் அவரே ஆள்கின்றனர். வானமும் பூமியும் கடலும் கரையும் இன்று அவருடைய ஆதிக்கத்திலடங்கியிருக்கின்றன.

அவருக்கு ஏற்பட்ட மதம் கிறிஸ்து மதம். இதுவே ஆரிய மக்களின் உலககுருவாகிய மைத்திரேய பகவானால் அமைக்கப்பட்ட முதலாவது மதம். இதன் பின்னுள்ளவை சரித்திரகாலத்து நிகழ்ச்சிகளாம்.

---

பாடம் 22.

## உலகப்பள்ளி—ஐந்தாம் மூலவகுப்பு (3).

உலகப்பள்ளியில் ஐந்தாவது மூலவகுப்பு ஆரியவகுப்பு. அவற்றுள் முறையே :—

1. இந்தியப் பிராமணர்,
2. அரபியர்,
3. ஈரானியர்,
4. கிரேக்க—ரோமர்,
5. ஆங்கிலோ—ஜெர்மானியர்,

ஒன்று முதல் ஐந்து கிளைவகுப்புக்களாவர். ஐந்தாவது கிளையின் உச்சநிலை இன்னும் சில நூற்றாண்டுகளில் ஏற்படுமென்று கூறப்படுகின்றது. அடுத்துவரும் காலத்தில் மிகப் பெரிய மேதாவிகள் பலர் அங்கு பிறந்து, "உலகமென்பது உயர்ந்தோர் மாட்டே" என்றபடி, அவர்களின் உயர்ச்சியை நிலை நாட்டுவராம். அவருக்குப்பின் வட அமெரிக்காவில் ஆறாவது கிளைமக்களும் தென் அமெரிக்காவில் ஏழாவது கிளைமக்களும் உச்சம்பெற்று, பின்னர் ஆரிய வகுப்பும் முந்திய வகுப்புகளைப் போலவே இறங்குபடியெய்தும். அதற்கு இன்னும் பல நூறாயிரக்கணக்கான ஆண்டுகள் பிடிக்குமெனப்படுகின்றது.

இந்தப் பலவகையான புறத்தோற்றங்களுக்கிடையே ஆன்மா என்றும் ஆன்மாவேயென்ற உண்மையைத் திரும்பவும் ஒரு முறை ஞாபகப்படுத்துவது அவசியமாகின்றது. ஆன்மாவானது

அழிவில்லாதது; பிறப்பிறப்பற்றது. ஆன்மாவில் ஆரிய ஆன்மாவென்றும் திராவிட ஆன்மாவென்றும் ஆங்கில ஆன்மாவென்றும் அரபி ஆன்மாவென்றும் நினைப்பது வெறும் மனமயக்கமாம். பழனியப்பன் அரசன் வேஷம் போடும்போது ஆளுகவும், அரசி வேஷம் போடும்போது பெண்ணுகவும், ஆண்டி வேஷம் போடும்போது ஆண்டியாகவும் எண்ணவும் பேசவும் படுவானுயினும், பழனியப்பன் பழனியப்பனுகவே யிருப்பான். அம்மாதிரியே பிறந்து, இருந்து, இறக்கும் உடம்புகளின் பேதம்பற்றி ஆன்மா பேதப்படுவதில்லை. இதை மறந்து ஆன்மாக்களில் உயர்வு தாழ்வு கற்பிப்பதும் வேற்றுமை பாராட்டுவதும் அவை காரணமாக அன்பிற்கு விரோதமான செயல்களைப் புரிவதும் அஞ்ஞானமென்று அறிவுடையோரால் கொள்ளப்படும்.

அத்லாந்திக் சமுத்திரத்தில் ருதம், தைத்தியம் என்ற இரு பெருந் தீவுகளும் கடலில் ஆழ்ந்தபோது, போசைதானிஸ் என்ற ஒரு தீவு மாத்திரம் ருதத்தின் ஒரு பகுதியாக மிஞ்சி யிருந்தது. அது கி. மு. 9565ல் ஒரே நாளில் இருபத்து நான்கு மணிநேரத்திற்குள் நீரில் அமிழ்ந்ததனுல் அந்த உக்கிரவேகம் உலகின் கடற் கரைகளை யெல்லாம் அமளி குமளி யாக்கிற்று. ஆப்பிரிக்காவில் சகாராக் கடலும் மத்திய ஆசியாவில் கோபிக்கடலும் தரை மட்டம் உயர்ந்து தண்ணீர் வடிந்து பெரும் பாலைவனங்களாயின. அதனுல் ஆரியமக்களின் ஆதி நகரங்களும் நாகரிகச்சின்னங்களும் மணல் மூடிப்போயின. வருங்காலத்தில் இப் பாழ்நகரங்கள் மணல் பறிக்கப்பட்டுக் கண்காட்சிகளாகவும் யாத்திரா ஸ்தலங்களாகவும் அமைக்கப்படுமாம்.

மேலே சொல்லப்பட்டுள்ள நீண்ட காலப்பரப்புகளைக் காணும் நவீனநாகரிக மக்கள் இக்கூற்றை ஏளனமாகக் கொள்வது இயற்கை. சில நூற்றுண்டுகளுக்கு முன்பு மேல்நாட்டு மேதாவிகள் இவ்வுலகம் கி. மு. 4004ல் படைக்கப்பட்டதென்று ஜாதகம் வகுத்திருந்தனர். வகுத்தது மாத்திரமன்றி, அதனை மறுத்துரைப்போரைச் சுட்டுப் பொசுக்குவதும் கழுவேற்றுவதுமாகத் திருவிளையாடல் புரிந்தனர். பின்னர், சமீபகாலத்தில் ரேடியம், யுரேனியம் முதலியவை கண்டுபிடிக்கப்

பட்டபோது, இவ்வுலகத்தின் வயது 300 கோடிக்குக் குறையாதென்று ஐரோப்பிய அமெரிக்க விஞ்ஞானிகளே இன்று அபிப்பிராயப்படுகின்றனர். சில நூற்றாண்டுகளில், நெற்றிக்கண் திறந்த பல பெரியோர் உலகத்தில் பிறக்கும்போது, இவ்வதிகாரங்களில் சொல்லப்பட்டுள்ளவை யெல்லாம் உண்மையென்று மேல்நாட்டாரே ஒப்புக்கொள்வரெனக் கூறப்படுகின்றது. இவை யாவும் கூடமாக நமது புராணங்களில் கூறப்பட்டுள்ளன.

---

பாடம் 23.

## உலகப்பள்ளி—ஆறும் மூலவகுப்பு.

இதுவே உடம்பில் நெற்றிச் சக்கரமும், ஆலயத்தில் மூலஸ்தானமும் அறிகுறியாக விளக்கும் மனித வகுப்பு. உடம்பின் சக்கரங்களும் உலக வகுப்புக்களும் நெருங்கிய தொடர்புடையன. அந்தந்த வகுப்புக்களில் அந்தந்த ஆதாரச் சக்கரங்கள் கூடியவரை பண்படுத்தப்படும். ஆகவே ஏழு மூலவகுப்புக்களும் தீரும்போது எல்லா மனிதரும் ஏழு ஆதாரச் சக்கரங்களிலும் ஒருகலை விரிதல் பெற்று அதற்குத் தக்கபடி அறிவு, அன்பு, ஆற்றல்களின் விருத்தியை வெளிக்காட்டுவர்.

இந்த ஆறும் மூலவகுப்பு இன்னும் இரணிய கர்ப்பத்திலேயே உள்ளதாயினும், அதுவே நமக்கு அடுத்த மேல் வகுப்பாகையால் அதனைப்பற்றிக் கூடியவரை எல்லோரும் அறிந்து கொள்வது நமது முன்னேற்றத்திற்கு மிகவும் உதவியாயிருக்கும்; அத்துடன் அதன் ஆரம்பவேலையில் பங்குகொள்ள விரும்புவோருக்கு ஊக்கத்தையுங் கொடுக்குமாகையால், அதுபற்றிய ஒரு சில குறிப்புகள் அறிந்தமட்டில் கொடுக்கப்படுகின்றன.

நமது புராணங்களில் மரு, தேவாபி என்ற இரு முனிவர்கள் இமயமலையில் தவஞ்செய்து கொண்டிருப்பதாகவும், கல்கி அவதாரம் முடிவடையும்போது உலகப்பொறுப்பு அவ்விருவரிடம் ஒப்புவிக்கப்படுமென்றும் சொல்லப்பட்டுள்ளது. அந்த இருவரில் மரு சூரியகுலத்தவரென்றும், தேவாபி என்பவர் சந்திரகுலத்தவரென்றும் கூறப்பட்டுள்ளது. இக்கூற்றுகளின் உட்பொருளாகக்

கருதப்படுவது யாதெனில், "கல்கி யவதாரம் ஐந்தாவது வகுப்பாகிய ஆரிய வகுப்பாரின் அந்தியகாலம்; அப்போது அதர்மத்தை யொழிக்கக் கல்கி யவதாரத்திற்குத் துணையாய் நிற்பவர் ஆறுவது மூலவகுப்பு மக்கள். அம்மக்கள் அன்று பெருகியிருப்பராகையால் அதுமுதல் அவர்களே உலகில் தலைமை வகிப்பர். அவருடைய மனு மரு என்பவர்; மகாகுரு தேவாபி என்பவர். ஆதலால் அவர்கள் நிர்வாகத்தில் உலகத்தொழில் நடைபெறும்." இதுவே புராணக் கூற்றுகளின் உண்மையென அறிந்தோரால் கூறப்படுகின்றது. சூரியகுலம் ஆற்றலையுடைய மனு பாம்பரை; சந்திரகுலம் ஞானபரம்பரையாகும் மகாகுரு பரம்பரை. மகா குரு, லோககுரு, ஜகத்குரு என்பன ஒருபொருட் சொற்கள்.

முந்திய மூலவகுப்புக்கள் தொடங்கப் பெற்றபோது அதற்கெனத் தெரிந்தெடுக்கப்பட்ட மக்கள் கண்மூடித் தனமாகத் தலைவர்களைப் பின்பற்றுவோரும் கைப்பாவைகள் போல ஆட்டப் படுவோருமாகவே இருந்தனர். காரண காரிய முறைகளை அறிந்து அத்தலைவர்களோடு ஒத்துழைக்கப் போதிய பக்குவம் அவரில் ஒரு சிலரைத் தவிர மற்றவருக்கில்லாதிருந்தது. அதனால் தயாரிப்புக்காலம் மிகமிக நீண்டதோடு தலைவர்களின் பெரு முயற்சியில் ஒரு நல்ல பகுதி வியர்த்தமுமாயிற்று. இன்றைய மக்கள் எய்தி நிற்கும் அறிவு நிலைமையில் அம்மாதிரியான கழிவிற்கு அவசியமில்லை யென்பது கருதி ஆறுவது மூலவகுப்புக்கு வேண்டிய அருகதைகள் இப்போதே வெளியிடப்படுகின்றன.

மரு என்பவர் இப்போது இந்தியாவில் ரஜபுத்திரச் சிற்றரசராய்ப் பிறந்து மோரிய மகரிஷி என்ற பேரால் இமயமலையில் வசிக்கின்றனரென்னப்படுகிறது. தேவாபி என்பவர் காஷ்மீர பிராமணகுலத்திற் பிறந்து கூட்மீ மகரிஷி என்ற பேருடன் மோரியருக்குப் பக்கத்தில் வேறொரு மாளிகையில் வசிக்கின்றனராம். இருவருமாக இன்றையிலிருந்து ஏறக்குறைய 700 வருஷங்களில் ஆறும் மூலவகுப்பை ஆரம்பிப்பராம். அது பூலோகப் பரலோகம் என்று சொல்லப்படுவதான காலிபோர்னியாவில் நடைபெறுமாம். காலிபோர்னியா வட அமெரிக்காவின் பசிபிக்

கடற்கரையில் இருக்கின்றது. அது நீர்வளம், நிலவளம், சீதோஷ்ணச் சமநிலை முதலியவற்றால் உலகில் இன்று ஒப்புயர்வற்று விளங்குகின்றது. இங்கு ஆறும் மூலவகுப்பு மக்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகப் பண்படும்போது பசிபிக் மகாசமுத்திரம் சிறிது சிறிதாக மேலெழும்; ஆரிய ஆதிக்கத்திலுள்ள அமெரிக்கா ஐரோப்பாக் கண்டங்கள் சிறிது சிறிதாகச் சிதைவுறும். ஆரியமக்கள் தாழ்வுறுங்காலம் வரும்போது பசிபிக்கண்டம் பழையபடி மக்கள் நிறைந்து செழிப்புற்று விளங்கும். அதன் தலைமை பல்லாயிரக் கணக்கான நூற்றாண்டுகளாக நிலைபெற்றிருந்து, கால இயற்கையின்படி அதுவும் மறையும். அப்போது ஏழாவது மூலவகுப்பு மக்கள் தென்துருவத்தில் ஆட்சி செலுத்துவர். அவர்கள் காலமும் முடியும்போது பூமிதேவி சில யுகங்கள் இளைப்பாறுவாள் என்றெல்லாம் அறிஞர் கூறுகின்றனர். இந்நிகழ்ச்சிகளுக்குச் சான்றுகள் நமது புராணங்களிலும் காணக்கிடப்பன.

இந்த ஆறாவது வகுப்பைத் தொடங்குதற்கு முன்னேட்டமாக, மேற்சொன்ன முனிவர்கள் இருவரும் தமது இரண்டு பிரதான சிஷ்யர்களைக்கொண்டு கி. பி. 1875ல், அமெரிக்காவில், தியஸாபிக்கல் சங்கம் என்ற திவ்யஞான சங்கத்தை அமைக்கச் செய்தார்கள். சில வருஷங்களுக்கப்பால், அச்சங்கத்தின் தலைமைக் காரியாலயம் தென்னிந்தியாவில் சென்னையில் அடையாற்றுக்கு மாற்றப்பட்டது. தம் வேலைக்குரிய மக்களைத் தேர்ந்தெடுப்பதற்கு அம்முனிவர்கள் அச்சங்கத்தை உபயோகப் படுத்துவதாகக் கூறப்படுகின்றது. அப்பெரியார் திருவடிகளை அடைவதற்கு இந்த திவ்யஞான சங்கம் ஒரு சிறந்த கதவமாகும். இன்னும் எழுநூறு ஆண்டுகளில் காலிபோர்னியாவில் தொடங்கப்பெறும் ஆறாவது வகுப்பின் ஆரம்பகாலத்தில், இப்பெரியார் இருவருடன் வேறு பல முனிவர்களும் தேவர்களும் முத்தர்களும் சித்தர்களும் சேர்ந்து வாழ்ந்து வருவார்களாகையால், அவரோடு ஒத்துழைக்கும் அரிய பேற்றைப் பெறுபவர்கள், நம் போன்றவர் பல்லாயிர ஆண்டுகளாகக் கடும் முயற்சி செய்து அடையும் பேரின்ப நிலையைச் சில ஆயிரவாண்டுகளுக்குள் அடையலாகுமென்று கூறப் படுகின்றது. அந்தப் பெரும் பாக்கியத்தை அவர் நமக்கு நல்கின்-

றனர். "அதைப் பயன் படுத்திக்கொள்ளத் தயாராயிருப்பவர் யார்?" என்று அவர்கள் இன்று வினவுகின்றனர்.

ஆறும் மூலவகுப்பு—மனுவின் சேனையில் சேர விரும்பு வோருக்கு, முதலாவதாக வேண்டப்படும் அருகதை அப்பெரி-யாரிடம் வைக்கப்படும் பூரண நம்பிக்கையே. அவருடைய அறிவிலும் ஆற்றலிலும் முழு நம்பிக்கை யில்லாதவர் அவர் இடுங் கட்டளைகளை ஐயப்பாடின்றி ஏற்று அவற்றை என்றும் எப்பொழுதும் தலைமேற்கொண்டு நடக்கார். அடுத்ததாகத், தம் தலைவருக்குக் கீழ்ப்படிந்து நடக்கச் சித்தமாக வேண்டும். மூன்றாவ தாக வேண்டப்படுவது தளராத ஊக்கம். இந்த மூன்றிற்கும் இடையூறு செய்யக்கூடிய சுயநல இச்சைகள் இம்மியளவுகூட இல்லாதிருத்தலே நான்காவதாக வேண்டப்படும் அரியகுணம். தலைவரிடம் நம்பிக்கையும், கீழ்ப்படிதலும், தொட்டவேலையில் தளரா ஊக்கமும், அறவே சுயநல மின்மையும் உடைய மக்கள் மேற்சொன்ன முனிவர் இருவராலும் தேடி யெடுக்கப்படுவர். அந்த குருநாதர்களை அடைய விரும்புவோர்கள் இவற்றை அறிந்து ஆயத்தஞ் செய்வாராக.

காலிபோர்னியாவில் காணப்படும் அரசியல் முறை, கல்வி முறை, கைத்தொழில் முறைகளைப் பற்றிய குறிப்புகளும், அங்கு இடம் பெறுதற்கு வேண்டும் தகுதிகளும், வங்கப்பணி முனிவர் நெற்றிக்கண் ஆராய்ச்சியால் எழுதியுள்ள "மனிதன்—எங்கிருந்து எவ்வாறு, எங்கண்." (Man, Whence, How, & Whither) என்ற நூலில் "ஆறாவது மூலவகுப்பு" என்ற பகுதியில் காணப் படும்.

இதுவரை, உலகத்தின் ஸ்தூல உடம்பாகிய பூமியையும், அதன் ஆதாரங்களாகிய ஏழு கண்டங்களையும், அங்கு நடை பெறும் ஏழு மூலவகுப்புக்களையும், ஒவ்வொரு வகுப்பின் ஏழு கிளைவகுப்புக்களையும் பற்றிச் சுருக்கமாகக் கூறப்பட்டன. இனி உலகத்தின் சூட்சும உடம்புகளைக் கவனிப்போம். ஏனெனில் உலகமும் மனிதனைப்போலவே ஏழுடம்புகளை யுடையதா யிருக்கின்றது. அவற்றை அறிகுறியாக விளக்குவனவே ஆலயப் பிராகாரங்களென்ற ஆவரணங்களாம்.

---

பாடம் 24.

## உலகம்—சப்த உலகங்கள்.

ஆலயப் படத்தில் நடுவண் உள்ளது பூலோகமென்பது இதுவரை விளக்கப்பட்டது. அதனைச் சுற்றியுள்ள ஆவரணம் அல்லது பிராகாரம் புவர்லோகமாகும். அதனை அடுத்துள்ள வெளிப்பிராகாரம் சுவர்—மகர்லோகங்களைக் குறிப்பது. அதற்கப்பாலுள்ள தேர் வீதியும் சுற்றுப் புறங்களும், மிகுந்துள்ள நான்குலகங்களைத் தொகுதியாகக் காட்டுவனவாம். மனிதனுக்கு உடம்புகள் ஏழுள்ளன போன்று பூமிதேவிக்கும் ஏழு உடம்புகள் உள்ளன. அவை சப்த உலகங்களென்னப்படும். அவை முறையே,

1. பூலோகம்,
2. புவர்லோகம்,
3 சுவர்—மகர்லோகங்கள்,
4. ஜனோலோகம்,
5. தபஸ்—சத்யலோகங்கள்,
6. வைகுண்டம்,
7. கைலாயம்,

என்ற பெயர்களால் மேலே கூறப்பட்டுள்ளன. இனி, அவற்றுள் ஒவ்வொரு உலகமும் பூலோகத்தைப் போலவே கட்டிப்பொருள், நீர்ப்பொருள், வாயு, ஆகாயம், நுண்ணுகாயம், திரட்டணு, அணுப்பொருள் என்ற சப்த தாதுக்களையுடையன வென்றும், அந்த தாதுக்களில் ஒவ்வொன்றுமே இடைவிடாது தாண்டவ நடனமாடிக் கொண்டிருப்பதால் அந்த அலைகளின் காரணமாக சப்த உலகங்களிலும் அந்தந்த உலகிற்கான நிறங்கள், உருவங்கள், பரிமளங்கள், கானங்கள், உணர்ச்சிகள் முதலியவை அங்கு காணப்படுமென்றும் மேலே கூறப்பட்டுள்ளது. அத்துடன், பூலோகந் தவிர்த்த மற்றவை யாவும் சூட்சும உலகங்களென்றும், அவையும் ஒன்றைவிட ஒன்று கூடுதல் நுண்ணிதாயிருப்பதால், சபத உலகங்களும் வியாபக வியாப்பிய முறையில் அமைந்துள்ளனவாய், மேலுலகம் கீழுலகத்தை வியாபித்து அப்பாலும் பரந்து நிற்குமென்றும் அங்கு கூறப்பட்டுள்ளது.

புவர்லோக, சுவர்லோக, மகர்லோகங்களின் இயற்கை வாசிகள் தேவர்களும் தேவகணங்களும் பூதர்களும் பூதகணங்களுமாவர். பூமியில், நிலத்தில் வாழ்வன, நீர் வாழ்வன, ஆகாயத்தில் வாழ்வனவாகப் பல உயிரினங்களிருப்பதுபோலவே, சூட்சும உலக உயிரினங்களும் தேவ பூதகணங்களும், பிருதிவிகணங்கள், அப்புகணங்கள், தேயுகணங்கள், வாயுகணங்கள், ஆகாயகணங்களெனப் பலபலகோடி வகைகளாக இருக்கின்றனவாம். இவர்கள் யாவரும் சூக்ஷ்ம சரீரிகள்; அதனால் அந்த சூக்ஷ்ம உலகங்களிலே வசிக்க வசதியுள்ளவராவர். இவர்கள் அனைவரும் இயற்கைத் தேவர்களென்றும் தேவகணங்களென்றும் அழைக்கப்படுவர். இவர்களையன்றி, பூமியில் வாழும் மக்களும் விலங்குகளும், உறங்குகிற வேளைகளில் தம் சூக்ஷ்ம உடம்புகளிலே அங்கே காணப்படுவர். மற்று, அவர்கள் இறந்தபின், திரும்பப் பிறக்கும வரையும் அங்கேயே ஸ்திரமாக வசிப்பர். அப்போது அவர்கள், கரும தேவர்கள் என்ற காரணப் பெயரால் அழைக்கப்படுவர்; அதாவது உலகிற் செய்த நல்வினைப் பயனால் அங்கு வந்து தங்கி அப்பலன் தீர்ந்ததும் உலகில் பிறப்பவர்கள். இயற்கைத் தேவர்கள் ஸ்தூல உலகில் பிறவார். அவர்களுடைய விகாசமுறையை இந்நூல் இரண்டாம் பாகத்திற் காண்க.

இனி, மனிதன் ஸ்தூல உடம்பை விட்டு நீங்கும்போது அவன் இறந்தானென்று கூறப்படுவான். அப்போது அவன் சூக்ஷ்ம உடம்புகளில் புவர்லோகத்தில் சில காலம் வாழ்வான். உலகில் சுயநலமே உருவாக இருந்திருப்பானானால், அவன் அங்கு ஐம்பது அறுபது வருஷங்கள்வரை தங்கியிருப்பான்; தன்னலமே சிறிதுமில்லாத மகானாயிருந்தால், இரண்டு மூன்று தினங்கள் மாத்திரமே அங்கு தங்க நேரிடும். இந்த சுயநலத்தடிப்பிற்கேற்ப, இறந்த மனிதர் இரண்டு மூன்று நாள் முதல் ஐம்பதறுபது ஆண்டுகள்வரை புவர்லோகததில் தங்கி யிருந்தபின், அவர்களுடைய இச்சையுடம்புகள் கழிந்துபோகும். அப்போது மற்றுள்ள சூக்ஷ்ம உடம்புகளுடன் அவர்கள் சுவர்க்கலோகஞ் செல்வர். அவர்கள் உலகிலிருக்கும்போது செய்த அன்பு வினைகள அங்கு பலன் தரும். அவ்வினைகளின் கூடுதல் குறைவுகளுக் கேற்ப அவர்கள் இருநூறு முன்னூறு ஆண்டுகள் முதல் ஏறக்குறைய

இரண்டாயிரம் ஆண்டுகள்வரை அங்கு தங்கிய பின்னர், அவர்களுடைய உருவமன வுடம்புகளும் கழிந்துபடும். பின், காரண உடம்பாகிய அருவமன வுடம்பில் அவர் மகர்லோகஞ் செல்வர். இன்றைய ஆன்மாக்களில் பெரும்பாலார் தமது வளர்ச்சிக் குறைவால் அங்கு பிரக்ஞை யின்றியே ஓய்வெடுத்துக் கிடப்பர். முத்தான்மாக்களும் அந்த உயர்நிலையை அடுத்துவரும் பக்குவான்மாக்களுமே மகர்லோகத்தில் உணர்ச்சியோடு வாழவும், அதற்கு மேலுலகங்களுக்குச் செல்லவும் வல்லவராவர். மற்றுள்ள மனிதர் மிகச்சில ஆண்டுகள் மகர்லோகத்திலேயே உறங்கிக் கிடந்துவிட்டுப் பின் பூலோகத்தில் வந்து பிறப்பர். இந்த இறந்த பின்னுள்ள நிலைகள் ஆலயப் பிரதக்ஷிண விதிகளில் அறிகுறியாக அமைக்கப்பட்டுள்ளன. மறுபிறப்பைப் பற்றிய விளக்கக் குறிப்புகள் "மறுபிறப்பு வரலாறுகள்" என்ற நூலிற் பரக்கக் காணப்படும்.

---

பாடம் 25.

## சூரிய மண்டலம்—பிரம்மாம்சம்.

"பரம்பொருளொன்றே எச்சிற்படாதது," என்று அடிக்கடி கூறுவர் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர். நித்தியமானவையெனக் கூறப்படும் வேதங்களும் வாயினாற்கூறப்பட்டவையே; மற்று, மக்கள் அறிவுக்கெட்டுவனவெல்லாம் அங்ஙனம் கூறப்பட்டவையேயாகும். அதனால் அவையாவும் எச்சிற்பட்டவையெனப்படும். ஆனால் பரம்பொருளைப்பற்றி, "அது இருக்கின்றது" என்பதையன்றி வேறுயாதும் எவரும் சொல்லவல்லவரல்லர். "கண்டவர் விண்டாரிலர், விண்டவர் கண்டாரிலர்" என்ற முதுமொழி அதனாலேயே உண்டாயிற்று.

எங்கும் நிறைந்து எல்லாமாய் நிற்கும் அப்பரம்பொருளில் எண்ணற்ற அண்டங்கள் உள்ளன; ஒவ்வொரு அண்டத்திலும் எண்ணற்ற சூரிய மண்டலங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு சூரிய மண்டலமும் ஒரு மகா புருஷனின் உடம்பாகும். அவனையே மக்கள் "உலக நாயகன்" (Logos) என்றும், "ஞாயிறிடங் கொண்ட நாதன்" (Solar Deity) என்றும், வேறு பல பெயர்-

களாலும் அழைப்பர். மக்கள் இறைவனை நினைக்கும்போது, எத்தகைய சத், சித், ஆனந்தத்தை அவனிடம் சுமத்தக்கூடுமோ, எவ்வளவு வரம்பிலா அன்பு அறிவு ஆற்றல்களை அவனிடம் உள்ளனவாக அவர்கள் கருதக்கூடுமோ, அவ்வளவும் அதற்குப் பலகோடிப் பங்கு அதிகமும் அந்தச் சூரியமண்டல புருஷனிடத்தில் அமைந்துள்ளன. அவன் சூரியமண்டலம் முழுவதையும் வியாபித்து நிற்கின்றான்; அவனல்லாமலும் அவனையல்லாமலும் அங்கு ஒன்றுமே இல்லையென்று அநுபூதிமான்கள் கூறுகின்றனர். அவன் சூரியமண்டலம் முழுவதிலும் நிறைந்து நின்று அதற்கப்பாலும் அளவுகடந்து பரந்து நிற்பதாகவும், அந்நிலை நம் அறிவுக்கெட்டாததொன்றென்றும் அவர்கள் கூறுகின்றனர். சூரியமண்டலத்தை அதிட்டித்து நிற்கும் அவனுடைய கூறு ஒன்றில், அவன் படைப்புகளில் மிகத்திண்ணிய பாகங்களில் ஒரு சிலவற்றையே, மக்கள் தம் பக்குவத்திற்கேற்பக் கூடுதலாகவோ குறைவாகவோ இன்று காண்கின்றனர். அவனை நாம் ஊனக்கண்ணாற் காண முடியாவிட்டாலும் அவனுடைய சக்தி தொழிற்படுவதை நாம் எவரும் காணலாகும். நெற்றிக்கண் பார்வையுடையான் எவனும், இறைவனில்லையென்று சொல்ல முன்வரமாட்டான்: அவ்வளவு சான்றுகள், எடுத்துக்காட்டுகள் அவன் கண்முன்னே குவிந்து கிடக்கக் காண்பான்.

"ஞாயிறிடங்கொண்ட நாதனைச்" சைவ சமயத்தில் சதாசிவ மூர்த்தி யென்றழைப்பர். அது இறைவனாகிய பரசிவத்தின் அருவுருவத் திருமேனியாகும். அவ்விறைவன் ஏகனேயாயினும், மட்டுப்பட்ட மானிட அறிவிற்கு, அவன் தொழிலாற்றும் முறையில் முப்மூர்த்திகளாகக் காணப்படுவன். அதனாலேயே உலக மதங்களிற் பலவும் அவனை மும்மூர்த்திகளாக வழிபடுகின்றன. அவன் ஒன்றும் மூன்றுமாக நிற்கும் முறைமையை, "ஒருவனாய் உலகேத்த நின்றநாளோ, ஓருருவே மூவுருவமான நாளோ," என்று அப்பர் சுவாமிகள் குறிப்பிட்டனர். அம்மூன்று மூர்த்தங்களும் சூரியமண்டல விகாசமுறையிலும், அங்குள்ள மக்கள் தேவர் மற்ற உயிரினங்கள் யாவற்றின் வளர்ச்சி முறையிலும் சம்பந்தபபட்டுள்ளன. அண்டத்தின் விகாசமுறை, அல்லது பரிணாம முறை யென்னப்படும் இந்த வளர்ச்சி·முறையே (Evolution) அவனுடைய சங்கல்பம், தீர்மானம் (Will). அதற்கு அவன் வகுத்திருக்கும் வழியே அவனுடைய பாடத்திட்டம் **(Plan).**

ஆதியில் என்ன இருந்தது, ஆதியென்பதொன் றுண்டா, என்பன நம் அறிவிற்கெட்டாக் கேள்விகள். அதனால் அவற்றைப் பற்றிய அபிப்பிராயங்கள் வெறும் யூகமே யாகும். ஆகவே அவைபற்றிய அபிப்பிராயங்களும் பலவா யிருந்துவருகின்றன. ஆனால் அனுபூதிமான்கள் தம் அறிவிற்கு எட்டும்வரை பின்னோக்கி நோக்கும்போது, அங்கும் உயிர்—உடம்பு, புருஷன்—பிரகிருதி, பரமான்மா—மகாமாயை என இரு கோடிகள் இருந்து வருவதைக் காண்பதாகவே அவர்கள் கூறுகின்றனர். அதற்கப்பாற் செல்ல அவருக்கும் ஒண்ணாததெனத் தோன்றுகின்றது. அந்தப் பரமான்மாவுடன் பிரிப்பின்றி அடங்கிநிற்கும் சக்தியைப் பராசக்தியென்றும், அப்பராசக்தி தொழிற்படும் அவசரத்தில் அதனை ஆதிசக்தியென்றும், அவருட் சிலர் அழைக்கின்றனர். மகாமாயை அல்லது மூலப் பிரகிருதியினுள் இந்த ஆதிசக்தி மூலமாக இறைவன் விடும் முதல்மூச்சு நாதம் என்னப்படும். இந்த மூச்சு, கோடு போன்று வெளிப்போந்து மூலப் பிரகிருதியைக் கலக்கும்; அது காரணமாக மூலப்பிரகிருதியில் கடுகினும் பல கோடி மடங்கு நுணுகியதான உருண்டைக் குமிழிகள் கொப்பளங்கள் போன்று நிறைந்து பிறக்கும். இக்குமிழிகள் விந்து தத்துவ மென்னப்படும். இந்த நாதவிந்துக்களே எல்லாத் தோற்றங்களுக்கும் அடிப்படையாய். இந்த நாதம் விந்து சேர்ந்ததே "உ" என்ற பிள்ளையார் சுழி, பிரணவப் பொருள், குமிழியும் கோடும். இந்த விந்துவே பரமாணு, அதாவது மேலிருந்து கீழிறங்கி வரும்போது முதல் உலகத்தின் அணுக்கள், சப்த உலகங்களின் தோற்றத்திற்கும் ஆதி காரணமாகவுள்ள அணுத்திரள்.

இனி, சூரிய மண்டலாதிபதி ஒருவர் சூரியமண்டல மொன்றைத் தோற்றுவிக்கத் திருவுளங்கொள்ளும்போது, விந்துவாக எங்கும் பரந்திருக்கும் இந்த அணுத்திரளில், தம் வேலைக்கு வேண்டிய விஸ்தீரணத்தை முதலில் வரையறுத்துக் கொள்வர். அது பின்னர் ஆகப்போகும் சூரியமண்டலத்தைவிடப் பல மடங்கு விரிந்த சுற்றளவையுடைய ஒரு மாபெருங் கோளமாகவிருக்கும். இந்தக் கோளத்தின் நடுவே அவர், சூக்குமமான ஒரு மேருதண்டத்தை நட்டு ஒரு சுழற்சியைக் கொடுப்பர். அது

அவ்விஸ்தீரணத்துள்ள விந்துக்களைத் திரட்டி ஒரு மாபெரும் பந்துபோலத் தன்னைத்தானே சுழலச் செய்யும். இம்மாபெரும் பந்தினுள்ளே அவர் தம் படைப்புத் தொழிலைத் தொடங்குவர்.

முதலாவதாக அவர் தம்முடைய பிரம்மாம்சத்திலிருந்து ஒரு அலையை அப்பந்துக்குள்ளே அனுப்புவர். அது பந்து முழுவதும் பரந்து, அங்குள்ள விந்துக்கள் அல்லது பரமாணுக்களில் ஒரு பாகத்தை (7 x 7) நாற்பத்தொன்பது விந்துக்கள் கொண்ட உருண்டைகளாக இறுகப் பிணைத்து நிற்கும். இவையே இரண்டாவது உலகத்தின் அணுக்களாம். இந்த உருண்டைகளைத் திரும்பவும் விந்துக்களாக்குதல், அதாவது 49 துண்டுகளாக உடைத்தல் எளிய காரியமல்ல. மிகக்கடும் முயற்சியால் ஒரு சிலவற்றை உடைக்கலாகும்போது, அங்கு அடக்கவொண்ணாத சக்தியொன்று வெளிப்படுமாம். ஆயினும் உடனே அந்த பிரம்ம அலையின் வேலையால் அவ்வுருண்டை திரும்பவும் ஒன்றாகி விடுமாம். சூரியமண்டலத்தின் பிரளய காலத்திலேயே இந்த உருண்டைகள் யாவும் பொடிபட்டுப் பழைய விந்துக்களாக மாறுமாம். இந்த முதல் அலை வெளிப்பட்டு மிக மிக நெடுங் காலத்திற்குப்பின், பிரம்யாம்சத்திலிருந்து இரண்டாவது அலை வெளிப்பட்டு பரமாணுக்களின் ஒரு பாகத்தை $49 \times 49 = 49^2 = 2401$ விந்துக்களின் தொகுதியாக, அதாவது உருண்டை முதலிய வடிவங்களாக மாற்றுகின்றது. இவை மூன்றாவது உலகத்தின் அணுக்களாகும். இவையும் மேற் சொன்னவை போலவே எளிதில் பிரிக்கலாகாப் பிணைப்பையுடையன. இதற்குப் பன் னெடுங் காலத்திற்குப் பின், மூன்றாவது பிரம்ம அலை வெளி வந்து பரமாணுக்களில் ஒரு பாகத்தை $49^3 = 49 \times 49 \times 49 = 117649$ விந்துக்கள் கொண்ட உருண்டைகளாகப் படைக்கும். இவை நான்காவது உலகின் அணுக்களாகும். இவ்விதமே இடையிட்டு இடையிட்டு ஆறு அலைகள் தோன்றி $49^4$, $49^5$, $49^6$ கொண்ட விந்துருண்டைகளை உண்டு பண்ணும். $49^6$ அதாவது $49 \times 49 \times 49 \times 49 \times 49 \times 49$ விந்துக்களைக் கொண்ட உருண்டைகளே சப்த உலகங்களில் ஏழாவதும் நமது ஐம்புலன்களுக்கு அனுபவமாவது மாகிய இந்த பூலோகத்தின் அணுக்களாம். இவை நெற்றிக் கண்ணுக்குப் புலனாவதைத் தவிர விஞ்ஞான சாஸ்திரிகளின்

கருவிகளுக்குப் புலனாவதில்லை. ரஸாயனிகள் இன்று அணு என்று அழைப்பது $49^6$ விந்துக்களில் பல ஒன்று திரண்ட உருண்டைகளையே. அங்ஙனம் திரட்டுவது பிரம்ம அலை ஏழாவதால் நடைபெறுகின்றது. அந்த அலையானது மேற்சொன்ன ஏழு உலகங்களின் அணுக்களைப் பலவகைகளாக ஒன்று சேர்த்துத் திரட்டி, ஒவ்வொரு உலகத்திலும் கட்டிப் பொருள், நீர்ப் பொருள், வாயுப்பொருள், ஆகாயம், நுண்ணாகாயம், திரட்டணு, அணு என்ற ஏழுவகை (சப்த) பூதங்களை அந்தந்த உலகிற்கு ஏற்றதாக அமைக்கின்றது.

ஆகவே இதுவரை கூறியவற்றிலிருந்து, விந்து என்ற பரமாணு ஒன்றே பலவிதமாகத் தொகுக்கப்பட்டும் திரட்டப்பட்டும் விந்துவின் நிலையிலிருந்து பூலோகத்திலுள்ள கட்டி அல்லது பிருதிவி தத்துவம்வரை, $(7 \times 7) = 49$ நிலைகளில் நிற்கின்றதென்பது விளங்கும். இவற்றுள் மேல் நிலையைவிட அடுத்த கீழ் நிலை தடித்ததாக இருக்குமாகையால், நீருக்குள் வண்டல் படிவது போலத் தடித்த நிலை உள்ளிலும் நுண்ணிய நிலை அதனுள் வியாபித்து அதற்கப்பாலும் சிறிது வெளியே பரந்திருக்கும். இது வண்டலுக்குள்ளும் அதற்குமேலும் நீர் நிற்பது போலவும், வண்டல், நீர் இரண்டினுள்ளும் வாயு வியாபித்துநின்று அவற்றிற்கப்பாலும் அவ்வாயு பரந்திருப்பது போலுமாம். ஒன்றினுள் ஒன்றாக 49 வட்டங்கள் வரைந்து கொள்வோமானால், அவற்றுள் எவ்வேழு வட்டங்கள் ஒவ்வொரு உலகத்தைக் காட்டும். அங்கு, நடுவிலுள்ள வட்டத்தை அதற்கு மேலுள்ள 48ம் வியாபித்து அப்பாலும் பரந்து நிற்கும். அவ்வாறே, மேலுள்ள ஒவ்வொரு வட்டமும் அதன் உள்ளடங்கியுள்ள வட்டங்களில் நிறைந்து வியாபித்து, அவற்றைவிட நுண்ணிதா யிருப்பதால், அவற்றிற்கு வெளியிலும் சற்று தூரம் பரந்து நிற்கும். இந்த 49 வட்டங்களும் 49 பந்துகளாகும் சப்த உலகங்களாம். அவை மேலேகூறிய வியாபக வியாப்பிய முறையில் நிற்பதால், உள்ளிருக்கும் பந்தொன்றைப் பறித்தெடுத்து விட்டால், தேங்காய்க் குடுக்கைபோல அவ்விடம் பொள்ளலா யிருக்காமல் மேற்பந்துகளின் தாதுக்கள் அங்கே நெருங்கி நிறைந்திருக்கும். இந்த சப்த உலகங்களும் முறையே,

| பெயர். | அவ்வுலக விந்துக்கள். | | அணுவில் பரமாணுக்கள். |
|---|---|---|---|
| 1. கைலாயம். | 1 | = | 1 |
| 2. வைகுண்டம். | 49 | = | 49 |
| 3. தபஸ்—சத்தியலோகங்கள். | $49^2$ | = | 2401 |
| 4. ஜனோலோகம். | $49^3$ | = | $2401 \times 49$ |
| 5. சுவர்—மகர்லோகங்கள். | $49^4$ | = | $2401 \times 2401$ |
| 6. புவர்லோகம். | $49^5$ | = | $2401 \times 2401 \times 49$ |
| 7. பூலோகம். | $49^6$ | = | $2401 \times 2401 \times 2401$ |

என்று இந்து மதத்தில் அழைக்கப்படும். மற்ற மதங்களில் இவ்வுலகங்களுக்கு வெவ்வேறான பெயர்கள் காணப்படும். இந்த ஒவ்வொரு உலகத்தின் அணுக்களும், பின்னும் தம்முள் கொண்டு கூட்டப்படுவதால், அந்தந்த உலகிற்குரிய சப்த பூதங்கள் ஏற்படு-கின்றன.

இந்த மாபெரும் பந்து பல கற்பகாலம் ஓயாது சுழன்று சிறிது சிறிதாக இறுகிக் கட்டிப்பட்டுப் பின் குயவன் சக்கரம் போன்று தட்டையாய்க் கனமாய் வட்ட வடிவெடுக்கும். இம்மாதிரியான திருப்பாற்கடல் திகிரிகள் பலபலகோடி இன்று தொலைநோக்கிகள் (Telescope) மூலம் காணப்படுகின்றன. அந்தத் திகிரியில் அம் மண்டலத்திறைவன் அதன் ஆதாரங்கள் ஏழின் ஸ்தானங்களை நிச்சயித்து, அவற்றில் சிறு மேருதண்டம் ஒவ்வொன்றை நட்டுக் கடைந்துவிடவே, குயவன் சக்கரத்தி-லுள்ள 49 விதமான தத்துவங்கள் யாவும் அந்த ஏழு இடங்களி-லும் திரண்டு விடுகின்றன. சக்கரத்தின் மையத்தில் சூரியனுடைய வண்ணமும் ஸ்தானமும், அதிலிருந்து மற்ற கிரகங்களின் தூரங்களும் வண்ணங்களும் ஸ்தானங்களும் இறைவனால் நிச்சயிக்கப் படுகின்றன. அவ்விதம் திரண்ட ஆதாரங்களாகிய கோளங்களே இன்று நாம் ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி முதலிய பெயர்களால் அழைக்கும் கிரகங்களாம்.

இவை ஒவ்வொன்றிலும் சப்த உலக தாதுக்களும் திரண்-டிருக்கும். அதனால் ஒவ்வொரு கிரகத்திற்கும் வெவ்வேறான சப்த

உலகங்கள் இருக்கின்றன. அக்கிரகங்கள் சூரியனைச்சுற்றி வட்ட-மிடும்போது அதனதன் சப்த உலகங்களும் கூடவே செல்லும். இவற்றுள், ஒரு கிரகத்தின் பூலோக புவர்லோக சுவர்க்கலோகங்-கள் மற்றொரு கிரகத்தின் திரிலோகங்களைத் தொடும்படியான பரப்பை யுடையனவல்ல; ஆனால் அவற்றிற்கு மேலுள்ள மற்ற உலகங்கள் மிகப் பரந்து விரிந்து நிற்றலால், அவை ஒன்றை யொன்று தொட்டு நிற்கும். அதனால் மகர்லோகத்தில் சஞ்சரிக்க வல்லவர் பூமியிலிருந்து செவ்வாய் புதன் சுக்கிரன் முதலியவற்-றிற்கு எளிதில் செல்லலாகும். ஜனோ லோகத்திலும் அதற்கு மேலுள்ள உலகங்களிலும் சஞ்சரிக்க வல்லவர் சூரிய மண்டலம் முழுவதிலுமே சுற்றித்திரிய வல்லவரா யிருப்பர். நாளடைவில் மனிதன் ஒவ்வொருவனுக்குமே ஏற்படும் சக்திகளில் இதுவும் ஒன்று. நமது மனோமயகோசம், விஞ்ஞானமய கோசங்களின் வளர்ச்சிக் குறைவாலேயே இன்று நமக்கு இது இயலாதிருக்-கின்றது. சிவராஜயோகியர் யோகப் பயிற்சியால் அவ்வுடம்புகளை விரைவில் வளர்த்து விடுகின்றனர். அதற்குரிய வலிமையும் ஆற்றலும் இல்லாத சாதாரணமக்களாகிய நமக்கும், விகாசமுறை (Evolution) முன்னேறி வரும்போது இந்த வளர்ச்சி அதிக முயற்சியின்றித் தானாகவே வந்து சேரும். அன்றே இவ்வுண்மை-களைப் பற்றிய ஐயப்பாடுகள் அனைத்தும் அவரவருக்கு நீங்கும்; அன்றே இவ்வுண்மைகள் அவரவருக்கு அனுபவத்தில் காணப்-படும்.

பிரம்மாம்சத்தின் ஏழாவது அலை இன்றும் புதிது புதிதான உலோகங்களை உண்டுபண்ணும் வேலையில் ஈடுபட்டே நிற்கின்-றது. நமது பூமியின் உள்ளே நடுவில், பல்லாயிரக் கணக்கான டிகிரி சூடுகொண்ட அனற்குழம்பொன்று கொந்தளித்துக் கொதித்துக் கொண்டிருக்கின்றதாம். அதுவே இந்த அலையின் இன்றைய உலைக்களமாம். அங்கு யுரேனியம், ஹீலியம் போன்ற புதுப்புது உலோகங்கள் இதுவரை காணப்படாத வல்லமைகளை யுடையனவாய் உருவாக்கப் படுகின்றனவாம். அவை தயாரான வுடனே பூமியின் மேற்பரப்பிற்குத் தள்ளப்படுமாம். அம்மாதிரி-வேலை சூரியனிடத்தும் மற்றக் கிரகங்கள் நடுவிலும் நடந்து கொண்டே யிருக்கின்றனவாம். மேற்சொன்னவையாவும் நடை-

பெறுவதற்கு, அதாவது சூரியமண்டலம் இன்றைய நிலை எய்து-வதற்கு எத்தனையோ கோடானு கோடி யுகங்கள் ஆயிற்றென்று அந்த ஞானிகள் கூறுகின்றனர்.

இனி, இந்த சப்த உலகங்களிலுமுள்ள அணுக்கள், அவற்றின் திரள்களாகிய சப்த பூதங்கள், தாதுக்கள், தத்துவங்கள் இவற்-றின் ஒவ்வொரு துணுக்கிலும், இந்தப் பிரம்ம சக்தி உள் நின்று இடைவிடாது தாண்டவமாடிக் கொண்டிருத்தலால், எல்லா உலகங்களிலும் அச்சலனங்கள் காரணமாக அவ்வவற்றிற்-குரிய நிறங்கள், ஒலிகள், மணங்கள் முதலிய எவ்வேறு பலன்கள் இவ்வுலகிற் போலவே அங்கும் காணப்படுவனவாம். அந்தந்த உலகத்திற்குரிய மனித உடம்புகள் பக்குவப்படும்போது அவை யாவும் அம்மனிதருக்கு நன்கு புலப்படும் என்னப்படுகின்றது.

---

பாடம் 26.

## சூரிய மண்டலம்—விஷ்ணு அம்சம்.

இறைவனுடைய இதுவரை கூறப்பட்ட பிரம்மாம்ச அலைகள் சூரிய மண்டலம் முழுவதிலும் ஏககாலத்தில் ஒரே மாதிரியான வேலையைச் செய்யும். ஆனால் சூரிய மண்டல ஆதாரங்களாகும் கிரக கோளங்கள், சூரியனிடத்திருந்து வெவ்வேறு தூரத்திலும் வெவ்வேறு வண்ணத்திலும் அமைந்துள்ளபடியால் அவை குளிர்ந்து இறுகிக் கட்டிப்பட்டு வாழ்க்கைக்கு வேண்டிய நிலையை ஏககாலத்தில் எய்தவில்லை. அதனால் விஷ்ணு அம்ச அலைகள் ஒவ்வொரு கிரகத்திலும் அதன் பக்குவத்தைப் பொறுத்துத் தனித்தனியாகவே வேலை தொடங்குகின்றன. ஆகவே இனிக் கூறப்போவன பூலோகத்தைமட்டும் குறிப்பனவாகும். அம்மாதிரி நிகழ்ச்சிகள் மற்றக் கிரகங்களிலும் முன்பின்னாக நடைபெறுவன வென்று கொள்ளுதல் வேண்டும்.

இறைவனுடைய விஷ்ணு அம்சத்தின் சிறப்புக்குணம் அதன் வசீகர சக்தி. "விஷ்" என்பது வியாபகம் என்று பொருள்-படும். மகாமாயை, அல்லது மூலப்பிரகிருதியில் பிரம்மாம்ச-மானது வேற்றுமையை உண்டுபண்ணி ஒன்றையொன்று

ஒட்டாமல் பிரித்து வைத்திருக்கும் தத்துவங்களை வியாபித்து நின்று, அவற்றுள் ஒன்றுக்கொன்று பற்றுதலை உண்டுபண்ணுவதே விஷ்ணு சக்தியின் தொழில். உலகில் காணப்படும் காதல், அன்பு, நட்பு முதலிய ஒற்றுமைக் குணங்கள் அத்தொழிலின் விளைவுகளாம். பிரம்மாம்சத்தின் படைப்பாகிய அணுக்கள் ஒன்றையொன்று அண்டாமலுந் தீண்டாமலுந் தலைவிரி கோலமாகப் பேயாட்டம் ஆடுவதைப் பற்றித் தற்கால விஞ்ஞானிகளே அதிசயிக்கின்றனர். இந்த அற்புதங்களை அவர்கள் நூல்களிற் பரக்கக் காணலாம்.

இனி, விஷ்ணு அம்சத்திலிருந்து முதல் அலையானது பூமியை நோக்கி வரும்போது, மகர்லோகத்திற்கு மேற்பட்ட உலகங்களில் அது செய்யும் வேலை மனித அறிவுக் கப்பாற்பட்டதென்று சொல்லப்படுகின்றது. அதனால் அது மகர்லோகத்திற் கிறங்கிய பின்னரே அதன் வேலை ஞானிகளால் ஒரு சிறிது விளக்கத்தக்கதாயுள்ளது. அங்ஙனம் அந்த அலை மகர்லோகத்தை வியாபித்து, அங்கு தங்கிநின்று தொழில் புரியும் அவசரத்தில் அது முதலாந் தாதுவர்க்கம் (First Elemental Kingdom) என்று அழைக்கப்படுகின்றது இத் தாதுவர்க்கத்தின் வேலையால் ஏற்படும் ஒரு பலன், மகர்லோகத்துள்ள அணுக்களும் சப்த தாதுக்களும் ஒன்றோடொன்று இணைந்து நின்று மனிதனுக்கு மகர்லோகத்திற் குரிய அருவமன உடம்பை நல்குதலாம். மகர்லோகம் அருவன உலகம் என்பதை ஞாபகத்தில் வைக்கவேண்டும். இந்த முதலாந் தாதுவர்க்கம் தொழிற் படாதபோது மனிதனுக்கு அருவமன உடம்பு உண்டாவதில்லை. அவ்வுடம்பில்லாதபோது அவனுக்கு மகர்லோகத்தில் வாழ்க்கையில்லை. அருவமன உடம்பு பெரிய முட்டைபோன்று பிண்டாகாரமாக இருக்குமென்றும் அது மனிதனுடைய கருவிகளில் ஒன்றென்றும் மேலே விளக்கப்பட்டுள்ளது. இந்தத் தாதுவர்க்கத்தின் உயிர் அவ்வுடம்பில் சிறிது தளர்ச்சி யடையும்போது, அவ்வுடம்பைக் கலைத்து அதன் பந்தத்திலிருந்து விடுபட்டுத் தன் இயற்கை நிலையை அடைவதற்கு ஆதிமுதலே இடைவிடாது பாடுபட்டுக் கொண்டிருக்கும் பிரம்ம அலையானது, அதன் அணுக்களை விஷ்ணு அலையின் வசீகரக் கட்டினின்றும் விடுவித்துப் பழையபடி தனிப்பொருள்களாக்கி-

விடும். இந்தப் போட்டி இயற்கையில் இடைவிடாது நடந்து கொண்டிருப்பதொன்று. இந்த உண்மையே பிரம்ம விஷ்ணுக்களின் ஓயாத போர்க்களமாக நம் புராணக் கதைகளில் சித்திரிக்கப்பட்டிருப்பது. இது இறைவனுடைய இயற்கை நியதிகளைக் கதை மூலமாக விளக்கும் "கிண்டர் கார்டன்" முறையாகும்.

முதலாந் தாதுவர்க்கத்தின் மற்றொரு வேலை அருவ எண்ணெங்களை உருவப்படுத்தலாம். மனிதன், உண்மை (Truth), நன்மை (Goodness), அழகு (Beauty), அன்பு (Love), பக்தி (Devotion), முதலிய அருவ நினைவுகளை உணரும்போது அம்மனிதனுடைய அருவமன உடம்பிலிருந்தும் அவனைச் சுற்றியுள்ள மகர் லோகத்திலும் விதம் விதமான ஜோதி மயமான நிறங்களில், கோடிசூரியப்பிரகாசத்துடன், அற்புதமான கோல வடிவங்களும் அலைகளும் உண்டாகி, நாற்புறமும் பரவி உலகுக்கு நன்மையையும் இன்பத்தையும் சாந்தியையும் அளிக்கும். இந்த முதலாந் தாது வர்க்கம் ஒரு மன்வந்தர காலம்வரை மகர்லோகத்திலேயே தங்கியிருந்து, பின் சுவர்க்கலோகத்திற்கு இறங்கி அவ்வுலகை வியாபித்து நிற்கும். அப்போது அதன் தோற்றம் இரண்டாந் தாது வர்க்கம் (Second Elemental Kingdom) என்னப்படும்.

சுவர்க்கலோகம் உருவமன உலகமென்று மேலே கூறப்பட்டிருக்கின்றது. நாம் வீடு, மரம், மலை என்று நினைத்தவுடனே நமது கண்முன் நெற்றிக்கு நேரே நாம் நினைத்த உருவங்கள் தற்சொரூபமாக சூட்சும நிலையில் தோன்றி, சற்றுநேரம் அப்படியே நிலைத்து நிற்கும். சொர்க்கலோகத் தத்துவங்களை ஒன்று கூட்டி அவ்விதம் உருவங்களை ஆக்குவதே இரண்டாந் தாது வர்க்கத்தின் ஒருவேலை மனிதனுக்கு உருவமன உடம்பை உண்டு பண்ணி அவனுடைய இரு பிறவிகளுக் கிடைக்காலம் முழுவதும் அதனை நிலைக்க வைப்பதுவும் இவ்வர்க்கத்தின் ஒருவேலையாகும். இங்கும் பிரம்ம விஷ்ணு அலைகளுக்கிடையே மேற் சொன்ன போர் இடைவிடாது நடந்து கொண்டே யிருக்கும். நாம் வீடொன்றை நினைத்தவுடனே விஷ்ணு அலை அவ்வீட்டுருவத்தை சுவர்க்கலோகப் பொருள்களால் நம் மனக்கண்முன் உண்டு பண்ணும். அது நெற்றிக்கண் பார்வையுடையாருக்கு அனுபவமாகக் காணப்படும். வீட்டைக் கட்டிப் பிடிக்க விஷ்ணு அலையும்

பரிணாம முறை.



சிவன்
விஷ்ணு
பிரம்மா
அம்சங்கள்
7 கைலாயம்
6 வைகுண்டம்
5 சத்யலோகம்
தபோலோகம்
4 ஜனேலோகம்
3 மகர்லோகம்
ஸுவர்லோகம்
2 புவர்லோகம்
1 பூலோகம்
உயிர்
குண்டலினி
சக்தி
ஆன்மா
பகுத்தறிவு
இச்சை
செயல்
1ம் தூதுவர்க்கம்
2
3
மனிதவர்க்கம்
மிருகவர்க்கம்
தாவரவர்க்கம்

அதன் தாதுக்களை நாலா மூலைகளிலுமிருந்து கயிறு கட்டி இழுப்பது போல பிரம்ம அலையும் வேலை செய்ய, விஷ்ணு அலை தளரும்போது பிரம்ம அலையின் சக்தியால் அந்த வீட்டுருவம் உலைந்து போகும். அப்போது அந்த வீட்டை மனிதன் திருப்பவும் நினைப்பானானால் வீட்டுருவம் உடனே பலம் பெற்றுப் பின்னும் விளங்கும். அங்ஙனம் அந்த உருவத்தை வேண்டிய நேரத்திற்கு நிறுத்த வல்லவன் சிவாம்சமாகிய ஆன்மாவாம். அதனையே பிரம்ம விஷ்ணுக்களிடையே ஜோதி யொன்று தோன்றிச் சண்டையை ஒய்த்ததாகச் சொல்லும் திருக்கார்த்திகை தீபமென்று அறியவேண்டும். இந்தச் சண்டை நமது உடம்புகள் உள்ளவரை அவை ஒவ்வொன்றிலும் இடைவிடாது நடந்து கொண்டே யிருப்பதால், சிவசக்தியாகிய ஆன்ம சக்தி ஒருவனிடம் வலு அற்றபோது, இந்த உடம்புகள் பிரிந்துபோய் அவன் இறந்து விடுகின்றான். இதுவன்றிக் கார்த்திகை தீபத்திற்கு வேறு பல உட்பொருள்களும் உள்ளன

இந்த இரண்டாந் தாதுவர்க்கமும் ஒரு மன்வந்தரகாலம் சுவர்க்க லோகத்தை வியாபித்திருந்தபின், கீழ்நோக்கி புவர்லோகத்திற் கிறங்கி, அப்போது மூன்றாந் தாதுவர்க்கமென்ற பெயரைப் பெறுகின்றது. அது மனிதனுக்கு இச்சையுடம்புகளை உண்டு பண்ணவும் புவர்லோகத்தில் இச்சை அலைகளையும் உருவங்களையும் தொழிற்படுத்தவும் செய்யும். அவ்வாறு ஒரு மன்வந்தர காலம் தங்கியிருந்தபின்னர், அது பூலோகத்திற் கிறங்கி அங்கு உலோக வர்க்கம் என்று நாம் அழைக்கும் உயிரலையாக ஒரு மன்வந்தரகாலம் இருக்கும்.

இதற்கிடையில், மேற் சொன்ன முதல்த் தாதுவர்க்க அலை மகர்லோகத்திலிருந்து சுவர்க்கலோகத்திற் கிறங்கும்போது, அதே சமயத்தில் விஷ்ணு அம்சத்தின் 2வது அலையொன்று மகர லோகத்தில் புதிதாக வந்திறங்கும். அங்கு அது புதிய முதல்த்தாது வர்க்கமாக விளங்கும்; அப்போது முந்திய முதல் அலை இரண்டாந் தாதுவர்க்கமாகத் தொழிற்படும். பின் இது புவர் லோகத்திற் கிறங்கி மூன்றாந் தாதுவர்க்க மாகும்போது, மகர் லோகத்துள்ள இரண்டாவது அலை சுவர்லோகத்திற் கிறங்கி இரண்

டாந் தாதுவர்க்கமாகும்; அப்போது புதிய விஷ்ணு அலையொன்று, 3வது அலை மகர்லோகத்தில் தோன்றி முதலாந் தாதுவர்க்கமாக வேலை செய்யும். இனி முதல் முதல் சொல்லப்பட்ட விஷ்ணு அலை பூமியில் வந்து உலோக வர்க்கமாகும்போது, விஷ்ணு அம்ச 4வது புதிய அலை முதல்த் தாதுவர்க்கமாகத் தோன்றும்; மற்ற அலைகள் படிப்படியாகக் கீழிறங்கும். இவ்வாறு இடையீடின்றி மூன்று தாதுவர்க்கங்களும் புவர் சுவர் மகர்லோகங்களில் சிருஷ்டி காலம் முதல் சம்மார காலம் வரை என்றும் வேலை செய்து கொண்டே யிருப்பனவாம். (படம் பக்கம் 248 பார்க்க.)

**உலோக வர்க்கம்** விஷ்ணு அம்ச முதல் அலையானது முதல்த் தாது வர்க்கத்திலிருந்து உலோக வர்க்கமாகப் பரிணமிக்கும் வரை மேலே கூறப்பட்டது. அந்த உலோக வர்க்கமானது நமது ஊனக்கண்ணுக்குப் புலப்படுவ தொன்றாகையால், அந்த உயிர் அலையின் வேலையை ஒரு சிறிது அறிந்து கொள்ளுதல் கூடியதாகின்றது. அது முதல் முதல் பூமிக்கு இறங்கியபோது நீரகவாயு (Hydrogen) போன்ற மிகக் குறைந்த அணுக்களாலாக்கப்பட்ட மூலப்பொருள்களில் (Elements) வேலை தொடங்கும். பின்னர், படிப்படியாகக் கூடுதல் அணுக்களைக்கொண்ட உலோகங்களாக மேலேறும். அப்போது கார்பன், நைற்ரஜன், ஆக்ஸிஜன் போன்ற மூலப்பொருள்களைத் திரட்டி உடம்பாகக் கொண்டு பயின்று, பின் அலுமினியம், கெந்தகம், இரும்பு, செம்பு, நாகம் எனப்பல மூலப்பொருள்கள் மூலம் மேலுயர்ந்து ரேடியம், தோரியம், உரேனியம் என்ற இன்றைய உச்ச நிலை உலோகங்களிலும் அவற்றின் பல கலப்புக்களிலும் தங்கிப் பயிற்சி பெறும். கடைசியாக, புவர்லோக சுவர்லோகங்களுக்கு உரித்தான சூட்சும சக்திகளைக் கையாளுவதில் உலோக வர்க்கத்திலேயே மிக உயர்ந்தனவாக விளங்கும் வைரம் முதலிய நவரத்தினங்களில் நெடுங்காலம் தங்கி நின்று பரிணமிக்கும். உலோக வர்க்கம் குளிர் வெப்பம் முதலியவற்றாலும் அடி மிதி முதலியவற்றாலும் பட்டுப்படிப்பது. இந்தப் படிப்பால் அவ்வுயிர் பல்வேறு வகைப்பட்ட அலைகளுக்கும் சலனங்களுக்கும் பிரதி பலிக்கவும் (Respond), அவற்றில் ஈடுபடவும், அதன் பலனைப் பின்னர் அவ்வலைகளைத் தாமே ஆக்கவும் வல்லதாகின்றது. அவ்-

வாறு ஒரு மன்வந்தரகாலம் பரிணமித்த பின்னர் அது தாவர வர்க்கத்திற்கு ஏறி வருகின்றது. அப்போது புதிய விஷ்ணு அலையொன்று 5-வது அலையாகவும் முதல்த் தாதுவர்க்க மாகவும் நமது மகர் லோகத்தில் வந்து இறங்கும். இடையிலுள்ள மற்ற அலைகள் ஒவ்வொருபடி கீழிறங்கும்.

இங்கு, உலோக வர்க்கத்தில் பிரம்ம அலையும் விஷ்ணு அலையும் செய்யும் வேலைகளின் வேறுபாட்டை நன்கறிந்து கொள்ளல் வேண்டும். இன்றைய விஞ்ஞான சாஸ்திரிகள் உலோக வர்க்கத்தில் 83 மூலப் பொருள்களிருப்பதாகக் கணக்கிடுகின்றனர். அவற்றுள் ஒவ்வொன்றும் இத்தனை இத்தனை அணுக்களால் (Atoms) ஆக்கப்பட்டிருக்கின்றன வென்றும், அந்தத் தனித்தனி அணுக்கூட்டுகள் க்ஷேத்திர கணிதத்தை யொட்டிய, பலபல அழகிய சித்திர உருவங்களாக அமைந்திருக்கின்றன வென்றும் அவர்கள் கூறுகின்றனர். இரும்பின் தனித்துகள் ஒன்றில் 1008 அணுக்களும், மாங்கனீஸில் 992 அணுக்களும், குரோமியத்தில் 936 அணுக்களும், அவ்வாறே மற்ற உலோகங்களுக்கும் ரஸாயன நூல்களில் கணக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றது. இவற்றுள் 1008 அணுக்களைக்கொண்ட இரும்புத் தனித்துகளொன்றை மிகக் கடுமையான மின்சார சக்தியால் தகர்த்தால், அது தன் 1008 அணுக்களில் சிலவற்றை இழந்து 992 அணுக்களைக்கொண்ட மாங்கனீஸாகவோ, 936 அணுக்களைக் கொண்ட குரோமியமாகவோ மாறிவிடுமேயன்றி, இரும்புத்துகளாக இருப்பதில்லை. அப்பொழுதே அது தனித்துகள் என்று கூறப்படுவது; அல்லாது திரும்பவும் இரும்பாகவே இருக்குமானால் அது இரும்புத்துண்டாம், துகளல்ல. இந்த இரண்டு நிலைகளில், அணுக்களைக்கொண்டு தனித்துகளை உண்டு பண்ணுவது பிரம்ம அலையின் வேலை; துகள்களைக் கூட்டித் திரட்டித் துண்டுகளாக ஆக்குவது விஷ்ணு அலையின் கவர்ச்சி வேலை. இவ்வாறு அந்தந்த உலோகத்தில் பெரிதும் சிறிதுமான கட்டிகளைத்திரட்டி அமைப்பதோடு, இரும்புக்கும் கரிக்கும் இடையே காதலை உண்டு பண்ணி, அவற்றின் கலப்பால் (எஃகு) உருக்கையுண்டுபண்ணுவதும் விஷ்ணு அலையின் வேலையே. அக்கலப்பை ரஸாயன முறைப்படி பிரித்தால் திரும்பவும் பழையபடி அங்கு

இரும்பும் கரியும் உண்டாகும். ஆனால் 216 அணுக்களைக்-கொண்ட கரித்துகளொன்றைப் பொடி படுத்தினால் அது சில அணுக்களை இழந்து 200 அணுக்களைக்கொண்ட போரன் (Boron) என்ற உலோகமாகுமேயன்றி (Carbon) கரியாக இருப்பதில்லை. அம்மாதிரியே 1139 அணுக்கொண்ட செம்பையும் 576 அணுக்கொண்டகெந்தகத்தையும் தனித்தனி ஆக்கிவைப்பது பிரம்ம அலை. அவற்றை ஒன்றுக்கொன்று காதலிக்கச்செய்து மயில்துத்தம், துருசு, (Copper sulphate) என்ற கலப்பை உண்டு பண்ணுவது விஷ்ணு அலையின் வேலை. அம்மாதிரியே 18 அணுக்-களைக்கொண்ட நீரக வாயுவை 290 அணுக்களைக்கொண்ட பிராண வாயுவினால் மணம்புரியச்செய்து தண்ணீரைப் படைப்-பதுவும், சோடியத்தையும் குளோரீனையும் இரண்டறக் கலக்கச்-செய்து கறியுப்பை யுண்டுபண்ணுவதும், இவைபோன்றனவும் விஷ்ணு அலையின் வேலைகளாம். இந்த அற்புதக் கலப்பு மணங்-களையும், அவற்றுட் சில கலைவைகள் ஒன்றை யொன்று நெருங்கும் போது ஒன்றன் காதலி மற்றவற்றின் காதலனைப் பற்றிக்-கொள்ளும் அதிசயங்களையும், இன்றைய ரஸாயன நூல்களிற் பரக்கக் காணலாம். அவை, கற்போருக்கு மிகுந்த வியப்பை உண்டு பண்ணுவன.

**தாவர வர்க்கம்.** இந்த விஷ்ணு அலையின் வேலையாலேயே மலைகள், அருவிகள், கற்கள், மண்கள், பாறைகள், பூமிகள், சூரிய சந்திரர்கள் யாவும் உருக்கொண்டு நிலைத்திருப்-பன. அதனாலேயே விஷ்ணுவானவர் காத்தற் கடவுளென்றும் ஸ்திதி கர்த்தாவென்றும் அழைக்கப்படுவது. மேற்சொன்ன முறைகளில் ஒரு மனுவந்தரகாலம் பயின்றுவந்த உலோக வர்க்-கம், அடுத்த மனுவந்தரத்தில் தாவர வர்க்கமாகப் பரிணமித்துப் படித்துவரும். அபபோது 5வது விஷ்ணு அலை புதிய முதல்த் தாது வர்க்கமாகவும், மற்றவை அடுத்த படிகளிலும் வளர்ந்து நிற்கும். தாவர வர்க்கத்தில் வந்துசேர்ந்த விஷ்ணு அம்ச அலை, புல் பூண்டு செடி கொடிகளாகத் தொடங்கி உயிர் வாழ ஆரம்-பித்து, கடைசியில் கான் மரங்களாகிய தேக்கு, தோதகத்தி, சந்தனம், தேவதாரு, மா, பலா முதலிய பெரும் மரங்களாக மிக நெடுங்காலமாகிய ஒரு மனு வந்தரம் வாழ்ந்திருந்து, பின் விலங்-

கினமாகும் பிராணி வர்க்கத்திற்கு ஏறிவரும். அப்போது வேது விஷ்ணு அலை யொன்று முதலாந் தாதுவர்க்கமாகப் புதிதாக வந்து பிறக்கும்.

பிராணி வர்க்கம். விலங்கினமாக மாறிய விஷ்ணு அலை முதலில் நீர்வாழ் பிராணிகளாக வாழும். அது விஷ்ணுவின் மச்சாவதாரமாகப் புராணங்களில் கூறப்படுவது. பின், நீர்வாழ் பிராணிகள் நீரிலும் நிலத்திலும் வாழவல்லனவாகும் அதுவே விஷ்ணுவின் கூர்மாவதாரம். மச்சம் இன்றும் நீரில் மாத்திரமே வாழவல்லது; ஆமை நீரிலும் நிலத்திலும் வாழவல்லது. பின் விலங்கினங்களிற் சில நிலத்தில் மாத்திரமே வாழவல்லதாய், நடக்கவும் ஓடவும் பறக்கவும் வல்ல பிராணிகளாகக் கணக்கற்ற இனங்களாகப் பரிணமிக்கும் அப்போது விஷ்ணு அலை வராகாவதாரத்திலுள்ள தென்னப்படும். அந்த அலையின் முடிவான உச்சவாழ்க்கை நிலை, அறிவிலும் அன்பிலும் ஆற்றலிலும் மனிதனை நெருங்கி நிற்பதான யானை, குதிரை, நாய், பூனை, குரங்கு, ஒட்டகைபோன்ற விலங்கினங்களாம். நன்மை தீமை பகுத்தறிவொன்றையன்றி மற்றுப் பல குணதிசயங்களில் அவை மிக அற்புதமாக மனிதனை ஒத்துநிற்பது இன்று நாம் நன்கறிவது. இந்த உச்ச நிலையை அடைந்ததும் விஷ்ணு அலையின் வேலை மேற் செல்ல மாட்டாது தடைபட்டு நின்றுவிடும் அப்போது சிவாம்சமாக ஆன்மா வந்திறங்கி, விஷ்ணு அலையின் வேலையைத் தனக்குரிய தனு கரணங்களாகவும், பிரம்ம அலையின் வேலையைப் புவனங்களாகவும் போக பூமிகளாகவும் கொண்டு, தான் உதித்த இடமாகிய இறைவன் திருவடியை நோக்கி மனித உடம்போடு பயணம் புறப்படுகின்றது. இதைதொடக்க நிலையை,

"நீக்கி முன்னெனைத் தன்னொடு நிலாவகை குரம்பையிற் புகப்பெய்து", என்றும், ஆன்மாவின் முடிவு நிலையை, "நிரந்தரமாய் நின்ற ஆதி ஆண்டு தன் அடியரிற் கூட்டிய அதிசயங்கண்டாமே" என்றும் மணிவாசகப் பெருமான் திருவாசகத்தில் கூறியுள்ளனர்.

பாடம் 27.

## சூரியமண்டலம்—சிவாம்சம்.

பிரம்ம அலையானது சூரிய மண்டலம் முழுவதிலும் ஒருப்போல ஏகமாகப் பரவுமென்று மேலே கூறப்பட்டது. அதன் பின்னர்த் தோன்றும் விஷ்ணு அலையானது அவ்வாறு தொழிற்படாமல், ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன்,வெள்ளி சனி, ஆகிய கிரகங்களின் பக்குவா பக்குவத்தைப் பொறுத்து ஒவ்வொரு கிரகத்திற்கும் தனித்தனியாகவும், அதனால் முன்பின்னாகவுமே இறங்குமென்றுங் கூறப்பட்டது. இனி மூன்றாவதாக வெளிவரும் சிவாம்சமோ, அவ்வாறுமன்றி ஒவ்வொரு மிருகத்திற்கு மாத்திரமே தனித்தனியாக இறங்கிவரும். அது அந்தந்த மிருகத்தின் பக்குவத்தையும் வளர்ச்சி நிலையையும் பொறுத்து நடைபெறும் ஒரு அற்புதமாம்.

மானிட வர்க்கம். நாட்டு மிருகங்களே இதற்குரிய பக்குவத்தைப் பெறவல்லன ; காட்டு மிருகங்கள் அத்தகுதியைப் பெறுவதில்லை. நாட்டு மிருகங்களிலும், மனிதனோடு நெருங்கிய தொடர்புடையனவே இத்தகுதியை எளிதில் பெறும். மகான்களுடைய கூட்டுறவால் எப்படி மனிதன் ஜீவன் முத்தியை நோக்கி வேகமாய்ச் செல்வானோ, அவ்வாறே மனிதனோடு நெருங்கிய தொடர்புடைய மிருகங்கள் மனிதருடைய அன்பு வசப்பட்டுத் திரும்ப அவர்களிடம் அன்பும் நன்றியும் உணரத் தொடங்கும். அந்த அன்பு காரணமாக அவர்கள் இட்ட ஏவலை அறிந்து கொள்ளவும் அதனைச் செய்யவும் முயலும். அவ்வாறு அதன் அறிவும் அன்பும் ஒரு பக்குவ நிலைக்கு வரும்போது, அது சிவாம்சத்தை ஏற்கத் தயாராகின்றது. ஆகவே அது தனிப்பட்ட விலங்கின் வேலையாவதன்றி விலங்கினம் முழுவதும் சேர்ந்து படிக்கக் கூடிய பாடமன்று. மனிதனுக்கு உபயோகமாகும் மிருகங்களிலும், அன்போ அறிவோ துலங்குதற்குரிய பக்குவமில்லாத ஆடுமாடுகள், பன்றிகள், எருமைகள் போன்றவை இந்த உயரிய பக்குவத்தைப் பெறுவதில்லை. மகான்களை அண்டிய எல்லா மக்களும் முத்திநிலையை அடையாதது போன்றது அது. அதனால் யானை, குதிரை, நாய், பூனை, குரங்கு போன்றவையே

விலங்கினத்தின் உயர்தரக் கல்விக்கு உகந்தவையாக இன்று காணப்படுகின்றன.

இவ்விதம் சிவாம்சமாகத் தோன்றிய மனிதன், திரும்ப எக்-காரணத்தையிட்டும் மிருகமாகப் பிறப்பதில்லை. அவனிடம் மிருக-குணங்கள் தலையெடுத்து நிற்கும்வரை, அவற்றிற் கேற்றதான நர-மாமிச பக்ஷிணிகள், நிகிரோவர், காட்டு மிராண்டிகள் முதலிய மக்களிடையே பிறந்து அடியும் மிதியும் பட்டு வளருவான். அவ-னிடம் நற்குணங்களும் நற்செயல்களும் மேலோங்க மேலோங்க, அவன் மனித வர்க்கத்தில் நாகரிக மக்களிடம் வந்து பிறந்து முன்னேற்ற மடைவான். அவனுக்காக அமைக்கப் படுபவையே ஏழு கண்டங்களாக நடைபெறும் மானிடப் பண்ணைகளும் பள்ளிகளும். அவற்றுள் ஐந்தாவது கண்டமே இன்று நடை-பெறும் பிரதான வகுப்பு. கீழ்வகுப்புகளும் சில அங்கங்கே நடந்து வருகின்றனவாயினும், பெரும்பாலார் இன்று நான்கா-வது வகுப்பிலும், இன்றைய உன்னத ஆதிக்கத்தைக் கைப்பற்றி நிற்கும் வெள்ளைக்காரர் ஐந்தாவது வகுப்பிலும் இருந்து வருகின்-றனர். பூமியின் ஆறுவது ஏழாவது மூலவகுப்புகள் இனி வர-விருக்கின்றன. அன்றைய மக்களினம் அன்பிலும் அறிவிலும் ஆற்றலிலும் அளவு கடந்து ஒளிவீசி நிற்கும். அப்போது பூலோ-கத்திலேயே சொர்க்கலோகந் திகழுமாம்.

உலோக வர்க்கத்திற்கும் தாவர வர்க்கத்திற்கும் அன்னமய பிராணமய உடம்புகளும் இச்சைபுடம்பும் மாத்திரமே உள்ளன. அதனால் அவை புவர்லோகத்தை எட்டவல்லன. மிருக வர்க்கத்-திற்கு மேற் சொன்னவற்றுடன் உருவமன உடம்புகளும் உள்ளன; அதனால் அவை இறந்தபின்னர் சுவர்க்கலோகத்திற்கும் செல்லவல்லன. மனிதனுக்கே மேற்சொன்ன நான்கு உடம்பு-ளோடு அருவமன உடம்பும் விஞ்ஞானமய கோசமும் ஆனந்தமய கோசமும் உள்ளன. அதனால் அவனே பேரின்பத்தையும் ஜீவன் முத்தி நிலையையும் அடைய உரியவனாக இருக்கின்றான். மனிதன் வினை இயற்றும் முறையும், பலன் பெறும் முறையும், பட்டுப்-படிக்கும் வகையும், கேட்டுப் படிக்கும் வகையும், மறுபிறப்-பெடுக்கும் விதங்களும், "மறுபிறப்பு வரலாறுகள்" என்ற நூலில் பரக்கக் காணலாகும்.

ஆதியில், மன்வந்தரத் தொடக்கத்தில், மனிதவர்க்கந்-தோன்றிய காலத்தில், அவன் 25, 30 அடி உயரமுள்ளவனாக இருந்தான். அக்காலத்துக் குரங்குகளும் அளவில் மிகப் பெரியனவாகவே இருந்தன. அம் மனிதரில் மிகத் தாழ்ந்தவருக்கும் அக்குரங்குகளுக்கும் ஏற்பட்ட கலப்பின் விளைவே இன்றுள்ள கோரில்லா, உராங் உட்டாங், சிம்பான்ஸி முதலிய மனிதக் குரங்கினங்களென்று கூறப்படுகின்றது.

இதுவரை கூறியவற்றிலிருந்து நாம் ஒவ்வொருவரிடத்தும் மனிதன் என்ற ஆன்மாவும், உடம்பு என்ற விலங்கும், அதற்கு மூலப்பொருளாக சடப்பொருளாகும் உலோக வகைகளும் இருந்து வருகின்றன வென்பது விளங்கும். அவற்றுள், ஆன்மா சிவாம்சமும், உடம்பு விஷ்ணு அம்சமும், மூலப்பொருள்கள் பிரம்மாம்சமும் ஆகும். பிரம்மாம்சத்தை விஷ்ணு அலை கட்டிப்-பிடிப்பதால் அங்கு இன்ப துன்ப உணர்ச்சிகள் ஏற்படுகின்றன. விஷ்ணு அம்சத்தில் சிவாம்சம் இறங்குவதால் அங்கு பேரின்ப அவா பிறக்கின்றது. அந்த ஆன்மாவும், யான் எனதென்ற செருக்-கற்று இறைவனால் பூரணமாக இயக்கப் படும்போது அங்கு பேரின்ப நிலை எய்துகின்றது. பிரம்ம அலையை விஷ்ணு அலை கவர்ச்சியால் கட்டிப்பிடித்து இழுக்கின்றது. இதனையே விஷ்ணு-வின் தொப்புள் நாளத்தில் பிரம்மா இணைக்கப்பட்டிருப்பதாகப் புராணங்கள் கூறுவது தொப்புள் ஆதாரம் (மணிபூரகம்) காதல் இச்சையின் இருப்பிடம். விஷ்ணு அலையை சிவாம்சம் தன் ஆற்ற-லால் அடக்கியாளும். அதனால் சிவபெருமான் "மால் விடை-யோன்" என்றும், விஷ்ணுவை வாகனமாகக் கொண்டோன் என்-றும் புராணங்களில் கூறப்படுவன். "அரியலால் தேவியில்லை," என்று கூறப்படுவதும் இதனையே.

"கனமஞ் சினமால் விடையான் விரும்புங் கருகாவூர்" என்பது சம்பந்தர் க்ஷேத்திரக் கோவைப்பதிகம். "பாயுமால் விடை மேலொரு பாகனே" என்பது அப்பெருமானுடைய திருக்கச்சி யேகம்பப் பதிகம் இக்கருத்து திருமுறைகளில் வேறு பல விடங்களிலும் காணக்கிடப்பது. இந்த விஷ்ணு மாயை-யாகிய உடம்புகளை முற்றிலும் வெல்லமாட்டாதவன், அவற்றை

வாகனமாகக் கொள்ளமாட்டாதவன், சிவமாகிய பேரின்ப நிலையைப் பெறவல்லவனுகான், என்பதே இதன் உட்பொருள்.

இந்த இயற்கை உண்மைகளை அறியாத சாதாரண மக்கள் ஒரே இறைவனைத் துண்டு துண்டாக்கி, அவருள் ஒரு துணுக்கைத் தம்முடைய உரிமைப் பொருளாக்கி, அந்தத் தம் தம் கடவுளரைப் பிறர் இழிவு படுத்தியதாகக் கருதி ஓயாத சைவ வைஷ்ணவப்பூசல்களை இன்றும் புரிந்து வருகின்றனர். இருவரும் ஒருவரேயென்பதைப் புரிந்து கொள்ள மாட்டாத அம்மக்கள் நடத்தி வரும் இழிவான சொற் போர்களை, ஸ்ரீராமகிருஷ்ணர், "சிவனும் விஷ்ணுவும் சண்டையிட்டுப் பின் ஏமாதான மாயினர். ஆனாலும் அவருடைய அடியார் குழாங்களாகிய குரங்குகளும் பூத பைசாசங்களும் தொடுத்த சண்டையை விடுவதேயில்லை" என வேடிக்கையாகக் கூறியுள்ளனர். இக்காலத்திற்கு, பிரம்ம விஷ்ணு சிவாம்சங்கள் என்பதை விடுத்து இறைவனுடைய முதலாவது இரண்டாவது மூன்றாவது முகூர்த்தங்கள் எனக் கூறுவது பொருத்தமாக விருக்கலாம். அது இறைவனுடைய ஏகமாந்தன்மையை மறவாதிருக்க உதவலாம்.

இனி, இந்த சிவாம்சமாகிய ஆன்மாவையே இறைவன் தன் வாகனமாக ஏற்று அதனைத் தன் அருட் கருவியாக்கும்போது அது (ஆ) நந்தியாகின்றது. அனுபூதியால் அறியப்படவேண்டிய இந்த உண்மைகளை நம்போன்ற குழந்தை ஆன்மாக்களுக்கு எளிதில் விளக்க முடியாத காரணத்தால், அவற்றைப் புராணங்களில் உருவகமாகக் கதைகளாகவும், சமயக் கிண்டர்கார்டனுகிய நமது ஆலயங்களில் உருவகமாக விக்கிரகங்களாகவும் நம் நாட்டுப் பண்டைப் பெரியோர் அமைத்து வைததிருப்பதாக அறிஞர் கூறுகின்றனர். இப்பெருமை மற்ற மதங்களிலோ மற்ற நாட்டு ஆலயங்களிலோ இன்று காணப்படாத தொன்றும்.

## பூமண்டலத்தில்
## இறை அலைகள் இன்று நிற்கும் நிலைகள்.

### I. பிரம்ம அலை

முதல் அலை — வைகுண்டம்.
2வது ,, — சத்ய—தபோலோகங்கள்,

| | | | |
|---|---|---|---|
| 3வது | ,, | — | ஜனோலோகம். |
| 4வது | ,, | — | மகர்—சுவர்லோகங்கள். |
| 5வது | ,, | — | புவர்லோகம். |
| 6வது | ,, | — | பூலோகம். |
| 7வது | ,, | — | மூலப்பொருள்களைப்படைத்துக் கொண்டிருப்பது. |

## II. விஷ்ணு அலை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| முதல் அலை | — | பூலோகம் | — | பிராணிவர்க்கம். |
| 2வது | ,, | — | ,, | — | தாவரவர்க்கம் |
| 3வது | ,, | — | ,, | — | உலோகவர்க்கம். |
| 4வது | ,, | — | புவர்லோகம் | — | 3ந் தாதுவர்க்கம். |
| 5வது | ,, | — | சுவர்லோகம் | — | 2ந் தாதுவர்க்கம். |
| 6வது | ,, | — | மகர்லோகம் | — | 1ந் தாதுவர்க்கம். |

---

பாடம் 28.

## புராணங்கள்: பாற்கடல் கடைதல்.

பாற்கடல் என்பது பொதுப்பெயர். ஏனெனில், அண்டத்தி-லுள்ளது பிண்டத்திலுமுள்ளதாகையால் பாற்கடல் என்ற பெயர் அண்-டத்தில் மகாமாயையையும், அதற்குக் கீழ்ப்பட்ட பிண்டங்களில் சுத்தமாயை, சுத்தா சுத்தமாயை, அசுத்தமாயை, மனிதனுடைய மூலாதாரம் என சந்தர்ப்பத்திற்கேற்றவாறு பொருள்படக் கூடி-யது. அந்த அண்டபிண்டங்களில், அவ்வவற்றிற்குரிய மேரு தண்டத்தை அவற்றிலிட்டுக் கடையும்போது, பலதரப்பட்ட மாயைகளில் அவ்வவற்றிற்கேற்ற புவனங்களும், மனிதனுடைய மூலாதாரத்தில் குண்டலினியும் வெளிவரும்.

இனி நம் புராண வரலாற்றுக் குறிப்புகளை நோக்குவோம். எங்கும் பிரளயம். அது முடிவடையுங்காலம் வந்தபோது, புதிய சிருஷ்டியின் பொருட்டு பிரம்மபுத்திரர்களாகிய தேவர்களும் அசு-ரர்களும் திருப்பாற்கடலைக் கடையத் தொடங்கினர். ஆனால் விஷ்-ணுவோ நீரின் மேலாகப் பள்ளிகொண்டு துயில்கின்றனர். அதனால் பாற்கடல் நீர்த்திவலைகள் அரிசியும் மணலும் கலந்தமாதிரி

ஒன்றையொன்று ஒட்டாமல் நிற்கின்றனவேயன்றி, அவர்கள் எதிர்பார்த்த பலன் அங்கு ஒன்றும் உண்டாகவில்லை. ஆகவே அவர்கள் விஷ்ணுவிடம் சென்று, திருப்பாற்கடலை வியாபித்து அங்கு அவருடைய வசீகர சக்தியைப் பரப்பும்படி அவரை வேண்டுகின்றனர். அவர் கூர்மாவதாரமெடுத்துக் கடலின் அடி-வரைசென்று வியாபிக்கவே, அங்கு பலபல விஷ்ணு அம்சங்கள் வெளிவருகின்றன. உலோகங்களின் உச்சநிலையாகிய நவரத்தி-னங்கள், செடிகொடிகளின் உச்சநிலையாகிய பாரிஜாதம், விலங்கு-களின் உச்சநிலையாகிய பசு குதிரை யானை, விஷ்ணுவின் சக்தி-யாகிய லக்ஷ்மிதேவி, விஷ்ணுவின் குட்டி அவதாரமாகிய தன்-வந்திரி என, மனிதனைத்தவிர மற்றெல்லா இனங்களும் தோன்று-கின்றன. தோன்றியவை யாவும் விஷ்ணு அம்சங்களாகவேயுள்-ளன. பின், விஷ்ணு மோகினி உருவெடுக்க அங்கு சிவாம்சம் புகுந்த பின்னரே மனிதனுக்கு அமைக்கப்பட்ட பூரணஅச்சு (Archetype) ஆகும் அரிகரபுத்திரர் என்ற ஐயனார் பிறக்கின்ற-னர். பின்னர் மானிடவர்க்கம் தழைத்தோங்கி அரிகரபுத்திர நிலைக்குப் பரிணமிக்கின்றது. ஆழ்ந்த தத்துவ உண்மைகளைச் சிறுவரும் விரும்பிக் கேட்கும்படி இவ்விதம் எழுதிவைத்தனர் நம் பண்டைப்பெருமக்கள். இறைவனுடைய சங்கல்பத்தில், அந்தந்த கல்பத்திற்கு ஒவ்வொரு வர்க்கத்திற்கும் உச்சநிலை அல்-லது கடைந்தெடுத்த முடிவுநிலையாகத் திட்டமிடப்பட்டிருக்கும் பூரண உருக்களை, பிளேற்றோ (Plato) என்ற கிரேக்க ஞானியார் ஆர்க்கிற்றைப்(Archetype), பூரணஉருவக்கரு என்கின்றனர். அந்-தந்த நிலைகளை எய்தும்வரை அந்தந்த வர்க்கங்கள் பரிணமித்து வருமென்னப்படுகின்றது. அப்பூரண உருக்களே திருப்பாற்கட-லில் முதலாவதாகக் கடைந்தெடுக்கப்படுகின்றன. அவை நம் நூல்களில் அபரஜாதி வர்க்கங்கள் என்னப்படுகின்றன.

மற்றொரு கதை: சமுத்திரத்திற் பிறந்தவன் ஜலந்-தரன்; அதாவது திருப்பாற் கடலாகிய மாயையில் ஒருபாகம் படைப்பின்பொருட்டு வரையறுக்கப்படுகின்றது. ஜலந்தரன் மனைவி பிருந்தை; அது மாயையின் சக்தி. பிரம்மா, பிருந்தை, மாயை என்பன ஒரே மூலப்பொருளைக் கொண்டன. "மா" என்ற மூலம் ஒடுங்குதலையும் மறைதலையும், "பிர்", "யா" என்ற

மூலங்கள் தோன்றுதலையும் விரிதலையும் குறிப்பிடுவன. பிர்மா: தோற்றம் ஒடுக்கங்களைச் செய்பவர்; மாயா: மறைதல் விரிதலுடையது. இந்த பிருந்தையானவள் மகாரூபவதி; அது மனத்தை மயக்கும் மாயையின் இயற்கைக்குணம்; நாம் யாவரும் நன்கறிவது. அம்மாயா ரூபவதியைக்கண்டு மகாவிஷ்ணு மோகிக்கின்றனர்: அப்பெருமானுடைய கலப்பின்றித் தனுகரணங்களும் அவற்றாலாகும் போகங்களும், அவற்றைக் கருவிகளாகக்கொண்ட பரிணாமமுறையும் பிறவா ஆகையால். ஜலந்தரன் தன் சுயாதீனத்தைவிட்டு மற்றொருவருக்குக் கட்டுப்பட்டு நிற்கச் சம்மதியாமையால், விஷ்ணு ஒன்றுஞ் செய்யக்கூடவில்லை; ஆயினும் காதலை விடவும் இல்லை. இதுவே இடைவிடாது நடைபெறும் பிரம்மவிஷ்ணு வழக்கு. இதைக்கண்டு ஜலந்தரனைச் சிவபிரான் கொன்றுவிடவே, பதிவிரதையும் என்றும் கன்னிப்பெண்ணுமாகிய மாயாசக்தி பிருந்தை விஷ்ணுவின் கைபட்டமையால் திக்கிறையாகிச் சாம்பலாகின்றாள். விஷ்ணுவானவர் மோகத்தால் அச்சாம்பலிற்கிடந்து புரளவே, அங்கு துளசி உண்டாயிற்று. அதனால் துளசி விஷ்ணுவுக்கு உகந்த அணி ஆயிற்று. மாயையை வியாபித்தும் மாயையின் வேறாகியும் நிற்கும் நிலைமையை சாம்பலிற்கிடந்து புரண்டாரென்று உருவகப்படுத்தியிருப்பது மிக அழகான வர்ணனையாகும். சாம்பலும் துளசியும் உலோகவர்க்கத்தையும் தாவரவர்க்கத்தையும் குறிக்கும். கன்னிமரியாளிடம் (மரி, மாரி, மாயை ஒரு பொருட் சொற்கள்) விஷ்ணு அம்சமாகிய கிறிஸ்துநாதர் பிறந்ததும் இக்கருத்துடையதே. இந்தப் புராண வரலாறுகளை இன்றைய நவநாகரீக மக்கள் எங்ஙனம் பொருள் கொள்ளுகின்றனர்?

முதற்கோணல் முற்றுங்கோணல் என்பது அனுபவ உண்மை. எந்த நற்செய்தியும் செயலும் கோணல் மனத்தோடும் குறுகிய மனப்பான்மையோடும் ஆராயப்படும்போது அவை ஆபாசச் செய்தியும் செயலுமாகவே விளங்கும். இறைவன்மீது மனிதத் தன்மையை ஏற்றி அவனுடைய அருட்செயல்களை மருட்செயல்களாகக் கருதி மயங்குவோர் அரைகுறை அறிவுடைய சாதாரண மக்கள். மனிதனிடத்துள்ள இறைதன்மையை உணர்ந்து எல்லாம் இறைவனுடைய லீலையாகவும் திருவிளையாட்டாகவும் கண்டு

களிப்பவர் அசாதரண மக்களாகும் ஜீவன்முத்தராகிய பூரண அறிவுடையோர். புராணங்கள் தோன்றிய காலம்முதல் நேற்று வரை இந்துக்கள் தமது பக்திவளர்ச்சிக்கும் நல்லறிவிற்கும் ஒழுக்கத்திற்கும் சாதனமாக ஏற்றுவந்த அப்புராண வரலாறுகள், இன்றைய மக்களுக்கு ஆபாசக்களஞ்சியங்களாகக் காணப்படுவது அவர்களுடைய மனப்பான்மையேயாம். துரதிர்ஷ்டவசமாக, அவற்றை விஞ்ஞானமுறையில் விளக்கவல்ல பௌராணிகர்களும் இன்று காணப்படுகின்றிலர். இக்காலத்திய அறிவு நிலையில் அத்தகைய புராணக் கல்விமுறை பொருத்தமற்றது போலும்.

---

பாடம் 29.

## பூமண்டலத் தொடர்.

ஆன்மப்பள்ளியின் முடிவு, மானிடவர்க்கம் முழுவதுமே பேரின்பத்திலமுழ்ந்தி உலகிலுள்ள மக்கள் அனைவருடைய ஆனந்தமயகோசங்களும் பூரணமலர்ச்சியுற்று அவர்கள் யாவரும் ஜீவன்முத்தராய்த் திகழவேண்டுமென்பதே. ஜீவன்முத்திஇலக்கணத்தை ஒரு எள்ளளவேனும் அறிந்தோர்கள் இன்றைய கோடானுகோடி மக்களில் எத்தனைபேரை அந்த அரிய நிலைக்குத் தகுதியுடையோரெனக் கருதுவர்? அத்தகுதியுடையோர் தொகையை விரல்விட்டு எண்ணவேண்டுமே தவிர வேறுவிதமாக எண்ணத்தேவையிராது. ஆனால் உலகம் தோன்றியோ கோடானு கோடி வருஷங்கள் ஆய்விட்டன. ஆன்மப்பள்ளியின் ஐந்தாவது வகுப்பும் முடிவை நெருங்கி வருகின்றது இதுவரை நத்தைபோல் ஊர்ந்துவந்துள்ள மனிதஇனம் இன்னும் இரண்டு வகுப்புகளில் மாத்திரம் கற்றவுடன் நாமெல்லோரும் தேறிவிடுவோமென்பது நடைபெறாத காரியமாகும். அதனால் அதற்கு வேண்டுவதான நீண்டகாலப் பயிற்சிக்கு ஏற்றதாக இறைவன் நமது பூலோகத்தோடு வேறு ஆறு கோளங்களை இணைத்து, இந்த ஏழு கோளங்களிலும் ஒன்றன்பின்னொன்றாக எவ்வேழு வகுப்புகளை நடத்திவருவதாகக் கூறப்படுகின்றது. இந்த ஏழு கோளங்களின் இணைப்பு பூமண்டலத்தொடர் என்றழைக்கப்படுகின்றது. இவை சப்ததீவுகள், சப்தசாகரங்கள் எனக்கூகமாக நம் புராணங்களில்

கூறப்பட்டுள்ளன. இவற்றைப்பற்றிய விரிவான விளக்கங்கள், திவ்யஞானசபைப் பெரியார் சிலர் நெற்றிக்கண்ணால் ஆராய்ச்சி செய்து எழுதியுள்ள "மனிதன் எங்கிருந்து, எவ்வாறு, எங்கண்" (Man whence, how & whither) என்ற நூலில் கிடைக்கின்றன. அதன்படி ஏழு கோளங்களும் கீழே காட்டப்பட்டுள்ளன.

## பூமண்டலத்தொடர்.




பூமண்டலத் தொடரிலுள்ள இந்த ஏழு கோளங்களில், 3, 4, 5, ஸ்தூல கோளங்கள்; மற்றவை நான்கும் சூட்சும கோளங்கள். 1-ம், 7-ம் சுவர்க்கலோகப் பொருள்களால் ஆக்கப்பட்டிருக்கும்; 2-ம் 6-ம் புவர்லோகப்பொருள்களால் ஆக்கப்பட்டவை; 3, 4, 5 இன்று செவ்வாய், பூமி (திங்கள்), புதன் என்றழைக்கப்படும் கிரகங்கள். எல்லா உயிர்வர்க்கங்களும் முதற்கோளத்தில் பாடந்தொடங்கும். அதில் 7 மூலவகுப்புக்களும் ஒவ்வொன்றிலும் 7 கிளைவகுப்புகளும் முடிந்தவுடன், உயிர்களெல்லாம் இரண்டாவது கோளத்திற்கு இறங்கும். அங்கும் அம்மாதிரியே தங்கியிருந்து, அப்புறம் அவை 3-வது கோளமாகிய செவ்வாயில் வந்துசேரும்.

பெரும்பாலான ஆன்மாக்கள், தம் சூட்சும உடம்புகளின் வளர்ச்சிக்குறைவால் முதற்கோளத்தில் பிரக்ஞை அதிகமின்றியே வாழ்ந்துவரும்; சூட்சும சரீரிகளாகிய தேவகணங்களே அங்கு அதிகமும் முன்னேற்றம் பெறுவன. இரண்டாவது கோளத்தில் உயிர்கள் கொஞ்சம் கூடுதலான உணர்வோடு நடமாடும். ஆயினும் செவ்வாய் கிரகத்திற்கு வந்தபின்னரே, அவற்றிற்கு

அன்ன உடம்பு பிராண உடம்புகள் ஏற்பட்டுப் பூரண உணர்வும் செயலும் உண்டாகும். மற்றக்கோளங்களில் வாழ்க்கை பெரும் பாலர்க்கு நமது உறக்ககால வாழ்க்கை போலவும் இறந்த பின்-னுள்ள வாழ்க்கை போலவும் சொப்பனவாழ்வாகவே இருக்கும். ஆனால் சூட்சுமகோளங்கள் 1, 2, 6, 7-ல் உணவு, உறக்கம், உடை, வீடு, வாசல் ஒன்றும் அவசியமில்லையாதலால் அவற்றிற்காகப் பாடுபடவேண்டியதும் நோய் முதலியவற்றால் துன்பப்படவேண்-டியதும் அங்கு இல்லையாகும். "யாதனின் யாதனின் நீங்கி-யான், நோதல் அதனின் அதனின் இலன்," என்ற முதுமொழிப்-படி இந்த ஆவசியமின்மையே அனேகருக்கு ஒருவித சாந்தி கொடுக்கக்கூடியதாயிருக்கும்; ஆயினும் அந்த சாந்தி மரண சாந்தியேயாம்.

மூன்றாவது கோளமாகிய செவ்வாயில் ஏழு வழுப்புகளும் ஏழு கண்டங்களும் முடிவுபெறும்போது மக்கள் பூமிக்கு வருவர். அப்போது செவ்வாய் இளைப்பாறுமாம். பின், பூமியில், முன்னே விளக்கியுள்ளபடி 7 கண்டங்களும் 7 வகுப்புகளும் முற்றுப்-பெறும்போது நாம் எல்லோரும் புதன் என்னும் கிரகத்திற்குச் செல்வோமாம். அப்போது பூமிதேவி இளைப்பாறுவாள். புதனி-லும் ஏழு மூலவகுப்புகள் ஆனவுடனே முறையே கோளங்கள் 6-க்கும், 7-க்கும் உயிரினங்கள் யாவும் செல்லும். ஏழாவது கோளத்தில் வகுப்புகள் முடிவுறும்போது உயிர்வர்க்கங்கள் யாவும் பூமண்டலத்தொடரில் ஒரு வளையம் சுற்றித்தீர்ந்து அடுத்த வளையந்தொடங்கும். இவ்விதம் ஏழு வளையங்களாக உயிர்வர்க்கங்கள் பாடம் படிக்கும். ஏழாவது வளையம் முடிவுக்கு வரும்போது, இந்தப் பூமண்டலத்தொடரின் ஏழு கோளங்களும் பிரளயத்தால் முடிவுறும். நம் ஆலயங்களில் நடைபெறும் தெப்-பத்திருவிழாக்களை நம்மவர் யாவரும் அறிவர். அங்கு தெப்பம் ஏழு வளையங்கள் வருவது இந்த ஏழு வளையங்களைக் காட்டுவதே. கோளங்கள் யாவும் திருப்பாற்கடலாகிய மூலப்பிரகிருதியில் மிதப்-பனவாம். அவ்வாறே ஆலயத்தெப்பமும் குளத்துநீரில் மிதப்-பது. இந்த பூமண்டலத்தொடரில் நாம் மும்முறை சுற்றிவந்து இன்று நான்காவது வளையத்தின் நடுப்பாகம் வந்திருக்கின்றோம். அதனை அறிகுறியாகக்காட்டுவதே அனந்தசயனத்தில் ஆதிசேஷ-

னுடைய மூன்றரை வளைய மடிப்புக்கொண்ட உடம்பாகும். இன்று நாமிருக்கும் பூமியின் ஏழு வகுப்புகளில் நான்கு வகுப்புகள் சென்றுவிட்டன. இன்னும் மூன்று வகுப்புகள் இங்கு முடிந்தபின், உயிர்கள் புதனுக்கும் அங்கிருந்து மற்றக் கோளங்களுக்கும் சென்று நான்காவது வளையம் முற்றுப்பெறும். பின்னர் நாம் மேலும் மூன்று வளையங்கள் சுற்றவேண்டியவராகின்றோம். எப்போ தீருமோ அவை? ஆனால் வீடுபெற்றோர் யாவரும் வளையங்களைவிட்டு உடனே வெளியேறிவிடுவர் என்பதை ஞாபகத்தில் வைக்கவேண்டும்.

இப்போது நடைபெறும் நான்காவது வளையத்தில், மக்கள் பூமிக்கு வருமுன் செவ்வாயில் வாழ்ந்திருந்தபோது அங்கு தோண்டிய கால்வாய்கள் இன்றைய வானசாஸ்திரிகளுக்குப் பெரும்புதிராக இருந்துவருகின்றன. அவருட் சிலர் செவ்வாயில் மக்கள் வசிப்பதாக அபிப்பிராயப்படுகின்றனர்; மற்றவர் அதனை மறுக்கமுடியாமலும் நம்பமாட்டாமலும் ஐயுறுகின்றனர். ஆனால் தொலைப்பார்வைக் கண்ணாடியிலும் புகைப்படக் கண்ணாடியிலும் குறுக்கும் நெடுக்குமாகக் காணப்படும் கோடுகள் கால்வாய்களல்லவாம்; அவற்றின் இருகரைகளிலும் வளர்ந்திருக்கும் விசாலமான பசும்பயிர்ப் பரப்பென்று நெற்றிக்கண் ஆராய்ச்சியாளரால் அறிவிக்கப்படுகிறது.

ஆலயத்துள்ள ஏழு ஆதாரஸ்தானங்களும் அவற்றிலுள்ள விக்கிரகங்களும் முந்திய பாடங்களில் கூறப்பட்டவைகளை அறிவுறுத்துவதோடு, இந்த பூமண்டலத்தொடரின் ஏழு கோளங்களையும் அறிகுறியாகக் காட்டுவனவாம். இவற்றுள் ஒவ்வொரு கோளமும் அததற்குரிய சூட்சுமகோளங்களைக் கொண்டுள்ளது. செவ்வாய், பூமி, புதன் மூன்றும் தனித்தனியே சப்த உலகங்களையுடையன. 2-வது, 6-வது கோளங்கள் புவர்லோக பூமிகளாகையால் இவை ஆறுலோகங்களையே கொண்டுள்ளன. 1-வது, 7-வது கோளங்கள் சுவர்க்கலோக பூமிகளாகையால் ஐந்து லோகங்களைமாத்திரமே கொண்டனவாம். இந்த சூட்சுமலோகங்களும் ஆலயப்பிரகாரங்களால் அறிகுறியாக உணர்த்தப்படும். அப்போது ஆலயம் முழுவதையும் இந்த பூமண்டலத்தொண்டராகக்

கொண்டு பொருள்கொள்ளல் வேண்டும். இத்தொடரில் பூமி-யைத்தவிர்த்த மற்ற ஆறு கோளங்களிலும், அதிலும் முக்கிய-மாகச் செவ்வாயிலும் புதனிலும் மக்கள் வாழ்ந்துவந்த வகை-களைப்பற்றி, வங்கப்பணி முனிவர் ஆராய்ந்தெழுதியுள்ள திவ்ய ஞான நூல்களிற் காணலாகும்.

---

பாடம் 30.

## புராணங்களிற் கால அளவு.

புராணம் என்பது பழங்கதை என்பர் இன்று சிலர்; பழைய வரலாறு என்பர் வேறு சிலர். புராணம் என்ற சொல் "பழையது ஆயினும் புதியது," அதாவது பண்டுபோல இன்றும் நடந்து கொண்டிருக்கும் நிகழ்ச்சிகளை வர்ணிப்பது என்று பொருள் படும். இறைவனுடைய சங்கற்பம் அல்லது திட்டமாகிய விகாச முறைக்கு (Evolutionary Plan) ஏற்பட்ட இயற்கை நியதிகளையும் ஒழுங்குகளையும் எடுத்துக்காட்டும் நூல்களே புராண நூல்களாம். அந்த இயற்கை ஒழுங்குகள் பண்டும் இன்றும் ஒருப்போலவே நடந்து கொண்டிருப்பன வாகையால், அவற்றை விளக்கும் புராணங்களைப் "பழங்கதையும் புதுக்கதையும்" என்று கூறுதல் குற்றமாகாது. இனி, அப்புராண நூல்கள் காலத்தைப்பற்றிக் கூறுவனவற்றைக் கவனிப்போம்.

இரவும் பகலும்கொண்ட ஒருநாள் = 60 நாழிகை (24 மணிநேரம்)
ஒரு வருஷம் (365?) 360 நாள்கள்.
ஒரு கலியுகம் 432,000 வருஷங்கள்.
ஒரு மகாயுகம் (10 கலியுகங்கள்) $10 \times 432,000$ வருஷங்கள்.
ஒரு மன்வந்தரம் (71 மகாயுகங்கள்) $71 \times 10 \times 432,000$ வருஷங்கள்.

ஒரு கல்பம் { 14 மன்வந்தரங்களும் 6 சந்தி மகாயுகங்களும் = 1000 மகாயுகங்கள் } $1000 \times 10 \times 432,000$ ௸.

இந்த ஒரு கல்பம், அதாவது நமது கணக்கின்படி 432 கோடி வருஷங்கள் நமது பிரம்மாவிற்கு ஒரு பகலாம். அவ்வாறே ஒரு இரவும் சேர்க்க, அது அவருக்கு ஒரு நாளாம். நமது பிரம்மா

என்பது நம் சூரியமண்டலத்திற்கு அதிபதியா யிருப்பவர். மற்ற சூரியமண்டலங்களைப்பற்றி இப்போது நமக்கு அக்கரையில்லை. இங்ஙனம் 360 தரம் பிரம்மாவின் இரவு பகல்களாகிய (2 × 432), 864 கோடி வருஷங்கள் செல்லும்போது நமது பிரம்மாவிற்கு ஒரு வருஷமாம். அதாவது,

| | |
|---|---|
| 432 கோடி வருஷங்கள் | பிரம்மாவிற்கு ஒரு பகல். |
| (2 × 432) = 864 ,, | ,, ஒரு நாள். |
| 360 × 864 ,, | ,, ஒரு வருஷம். |
| 100 பிரம்மா வருஷங்கள் | விஷ்ணுவிற்கு ஒரு நாள். |
| 360 × 100 ,, | ,, ஒரு வருஷம். |
| 100 விஷ்ணு வருஷங்கள் | சிவபிரானுக்கு ஒரு நாள். |
| 360 × 100 ,, | ,, ஒரு வருஷம். |

அதற்கப்பால் இறைவனுக்கே வெளிச்சம். சிவபிரானுடைய ஒரு வருஷத்தை நமது வருஷக்கணக்கில் பெருக்கிக் கணக்கிட்டாலே நமக்கு மூளைக்கோளாறு வந்துவிடும். அதனால் அதற்கப்பாலுள்ளதை நாம் கருதவேண்டுவதில்லை. இவ்வாறு நெட்டோட்டத்தில் செல்லும் நம்நாட்டுக் காலக்கணக்கைக் கண்டு மேனாட்டார் நம்மை ஒரு காலத்தில் ஏளனஞ் செய்ததுண்டு; இந்த பூலோகம் ஆக்கப்பட்டு இன்று ஐயாயிரத்து நாற்பத்தொன்பது (5049) வருஷங்களே ஆயின என்று மிகத்துள்ளிபமாக அவர்கள் கூறிவந்த காலம் இருந்தது. அது அவர்கள் வேத புஸ்தகத்திலுள்ள படைப்புக்காலக் கணக்கென்றும் அவ் வேதவாக்குப் பொய்யாகாதென்றும் பிறமத வேதவாக்குகள் யாவும் சைத்தானுடைய ஏமாற்றுக் கற்பனைகளென்றும் அவர்கள் சமீபகாலம்வரை சொல்லிவந்தனர். ஆனால் அக்காலம் இப்போது அனேகமாக மலையேறி விட்டதென்னலாம். தற்கால பூத பௌதிக சாஸ்திரங் கற்றோர் எவரும் அங்ஙனம் கூறுவதில்லை. மற்று, உலகம் தோன்றிப் பலகோடி வருஷங்களாயின என்று அவர்களே தங்கள் விஞ்ஞான சாஸ்திர முறைப்படி நிரூபிக்கவும் தயாராயிருக்கின்றனர். முடிவில், காலமும் படைப்பும் அனாதி என்பது அவர்களுக்கும் நமக்கும் இன்று ஒப்பமுடிந்ததொன்றாம்.

---

பாடம் 31.

## புராணங்களில் விகாச முறை.

432 கோடி வருஷங்கள் ஒரு கல்பமென்றும் அது நமது பிரம்மாவிற்கு ஒரு பகலென்றும் மேலே கூறப்பட்டது. அந்தப் பகலில் 14 மன்வந்தரங்கள் நடைபெறுமாம். ஒவ்வொரு மன்வந்தரத்தில் ஒவ்வொரு மனு நம் பூமண்டலத் தொடரை நடத்தி வைப்பாராம். அவருள் ஏழுவர் மூல மனுக்களாம். அதாவது அவர் காலத்தில் உலகத்தொடரும் அதன் ஏழு கோளங்களும் அங்குள்ள உயிர் வர்க்கங்களும் தொழிற்படுமாம். மற்ற ஏழு மனுக்களும் பீஜ மனுக்களாம்; அக்காலத்தில் பிரளயம் ஏற்பட்டு மேற்சொன்னவை யாவும் பீஜமனுவின் உடம்பிற்குள் தஞ்செயலற்று ஒடுங்கிக் கிடக்குமாம். அப்போது உயிர்கள் யாவும் அவருடைய உடம்பிலுள்ள அணுக்கிருமிகள் (Cells) போன்று அவராலேயே பரிணமமுறையில் போஷிக்கப்படுமாம். ஜீவன் முத்தியடைந்தோர் மாத்திரம் பிரளயத்துள் லயப்படாமல் சூரிய மண்டலம் முழுவதிலும் சுவாதந்திரியத்தோடு சுற்றித் திரிவராம். நமது பிரம்மாவிற்கு ஐம்பது வயது முடிந்து இன்று ஐம்பத்தோராவது வயதில் முதல் நாள் நடக்கிறதாம். அதற்குப்பெயர் சுவேதவராக கல்பமென்றும் அந்தக் கல்பத்திற்கான 14 மனுக்களும் இன்னின்னரென்றும் அப் புராணங்களே கூறுகின்றன.

### மனுக்களின் பெயர்கள்.

| மூலமனுக்கள். | | பீஜமனுக்கள். | |
|---|---|---|---|
| 1. சுவாயம்புவ | மனு | 2. சுவாரோச்சிஷ | மனு |
| 3. உத்தம | ,, | 4. தாமஸ | ,, |
| 5. ரைவத | ,, | 6. சாக்ஷுஸ | ,, |
| 7. வைவஸ்வத | ,, | 8. ஸாவர்ணி | ,, |
| 9. தக்ஷஸாவர்ணி | ,, | 10. பிரம்மஸாவர்ணி | ,, |
| 11. தர்மஸாவர்ணி | ,, | 12. ருத்ரஸாவர்ணி | ,, |
| 13. ரௌச்சிய | ,, | 14. பௌட்டிய | ,, |

என அப்பெயர்கள் கூறப்பட்டுள்ளன. இவருள் இன்று அதிகாரஞ் செலுத்தி நிற்பவர் ஏழாவதாகும் வைவஸ்வதமனு

ஆவர். அதனால் பிரம்மாவினுடைய நாளில் இன்று நடுப்பகல் நடைபெறுகின்றதென்னலாம். வைவஸ்வத மனுவின் 71 மகா-யுகங்களில் இன்று நடந்து கொண்டிருப்பது 28வது மகாயுகத்தில் கலியுக வருஷம் 5054 என்னப்படுகின்றது.

இந்த மனுவந்தரங்கள் தோறும் பஞ்சபூதங்களின் (இந்-நூலின்படி சப்த பூதங்களின்) சலனங்கள் அல்லது தன்மாத்-திரைகள் சோபானுக் கிரமமாக ஒவ்வோர் சப்தசுரம் மேலுயரு-மாம். இந்தப் பலதிறப்பட்ட தன்மாத்திரைகளேயன்றி வேறு பூதங்களென்று ஒன்றுமில்லை யென்பது இன்றைய மேனாட்டு விஞ்ஞான சாஸ்திர மேதையரின் முடிபு. அதனால் நம்முன்னோர் மாயை, என்ற பொருளின் கருத்தை இன்று அவரும் ஆராய்ச்சி மூலமாக ஒப்புக்கொள்கின்றன ரென்னலாம். சிறு பிள்ளைகள் திருக்கார்த்திகையன்று கிறுகிறு வாணம் சுழற்றுவதைப் பலர் அறிவர். அது கரியும் உப்பும் கலந்து கட்டப்பட்ட ஒரு பந்தமே-யாம் ஆனால் அதில் நெருப்புப் பற்றவைத்து அதனைக் கிறுகிறு வென்று குழந்தைகள் சுற்றும்போது, அது ஒரு நெருப்புச் சக்கரமாகவே பார்ப்போருக்குத் தோன்றும். அம்மாதிரியே, மாயையில் ஏற்படும் சலனங்களின் வேறுபாடு காரணமாகவே ஒரே மாயையானது பல பல பூதங்களாக நமக்குத் தோன்றுவது என அறிஞர் கூறுகின்றனர். "தன்மாத்திரை," என்பது "அதனதன் சலன அளவு" என்று பொருள்படும். "தத்" = அதனதன், "மாத்திரை" = சலன அளவு. ஒரு சன்னக்கம்பியை இருமுனைகளிலும் இழுத்துக்கட்டி நடுவில் மெதுவாகச்சுண்டினால் அது மேலுங் கீழுமாக மிகமெல்ல அசைந்தாடும். அந்த அசை-வைக் கூட்டுதற்காக வேகம் வேகமாக அக்கம்பியைச் சுண்டிக்-கொண்டே போனால், கம்பியும் கூடுதல் கூடுதலாக அசைந்து கொண்டேபோய்க் கடைசியில் வேகம் மட்டுக்கு மிஞ்சும்போது நடுவிலோ முனையிலோ அது அறுந்து போகும். அவ்விதம் மிகத் தாழ்ந்த அசைவுமுதல் அறுந்து போகாத அற்றம் வரையுள்ள சலனத்தின் அளவே, அதாவது சலனத்தின் கீழ்மேல் மட்டே, அக்கம்பியின் தன்மாத்திரை யெனப்படுவது.

இத்தன்மாத்திரைகளின் ஏற்றத்தின் காரணத்தால், பஞ்ச (சப்த) பூதங்களாலாகும் மனித உடம்புகளும் மனுவந்தரங்கள்

தோறும் சோபானுக் கிரமமாக வேறுபட்டுயர்ந்து, மக்கள் உருவிலும் குணத்திலும் முன்னேறி வருவர். முன்னிருந்த மனுவின் காலத்தில் மக்கள் நம்மினும் உருவக்கட்டு, நரம்புக்கட்டு, குணம் இவற்றில் குறைந்தவரா யிருப்பர். இனிவரும் மனுவினது காலத்தில் மக்கள் நம்மினுஞ் சிறந்தோராவர். இவைகளும் இவை போன்ற பிறவும் நம் புராணங்களிற் காணப்படும் கதைகள் அல்லது வரலாறுகள்.

இனி, உலகத்தின் பூர்வ நிலைகளைத் தம் நெற்றிக்கண்பார்வையால் ஆராய்ந்த மேனாட்டாராகிய திவ்யஞான சங்கத்துப் பெரியார் சிலர், நம் புராணங்கள் கூறுபவை வெறுங் கட்டுக்கதைகளல்ல வென்றும், அவை புதைபொருள்களை யுடைய உண்மை வரலாறுகளே யென்றும் கூறுவதோடு, பதினான்கு மனுக்கள் வேலைசெய்யும் முறைகளையும் அவருடைய வேலையின் குறிக்கோள்களையும் சற்று விரிவாகவும் விளக்குகின்றனர். அது "விகாச முறை" (Evolution), என்றழைக்கப்பட்டுப் பொதுவாக அவருடைய எல்லா நூல்களிலும், சிறப்பாக "மனிதன், எங்கிருந்து, எவ்வாறு, எங்கண்," என்ற நூலிலும் எடுத்துரைக்கப் பட்டிருக்கின்றது.

விகாசமுறை, வளர்ச்சிமுறை, மலர்ச்சிமுறை என்று இன்று கூறப்படுவது பண்டு பரிணாமமுறை என்று அழைக்கப்பட்டுள்ளது. அது சாங்கிய மதத்தின் பிரதானக் கொள்கையாகும். விகாசமுறையானது உலகம், உயிரினங்கள், ஆன்மாக்கள், இவையாவும் படிப்படியாக முன்னேறும் நியதிகளை விளக்குவது. அதன்படி பூமிதேவியானவள் பிரம்மாவினுடைய ஒருநாளில் ஏழு பிறவிகளை எடுப்பாளாம். அதன் படம் கீழே காட்டப்பட்டுள்ளது. அங்கு ஒவ்வொரு தொடரும் ஒரு மூல மனுவின்காலம்; இடையிடையே பீஜமனுவின் பிரளயகால மெனத் தெரிந்து கொள்க. (படம் பக்கம் 270 பார்க்க.)

( படம் பக்கம் 270. )

**பூமண்டலத்தொடர் : 7 பிறப்புகள்.**

















பூமிதேவியின் முதற் பிறப்பில் ஏழு கோளங்களும் சூட்சும உலகங்களில் சூட்சும கோளங்களாகவே இருக்கும். அது முதல் மன்வந்தரம். அங்கு விஷ்ணு அலையிலிருந்து முதலாந்தாது வர்க்கம் வந்திறங்கும். மற்ற இரண்டாவது மூன்றாவது தாது வர்க்கங்களும், உலோக வர்க்கம், தாவர வர்க்கம், மிருக வர்க்கம், மனித வர்க்கம் என்ற ஆறு வர்க்கங்களும் பிரம்மாவின் முந்தின தினப்பிரளயத்தினின்றும் இறங்கி வரும். நம் உலகில் இன்று மனிதராயிருப்பவர் அங்கு அன்று உலோக வர்க்கமாக வந்தவராம். அவ்வாறு ஏழு வர்க்கங்களும் அங்கு தொழிற்பட்டு, யாவும் மேலே கூறியபடி ஏழு வளையங்கள் வரும். ஏழாம் வளையத்தின் மனித வர்க்கத்தில், பக்குவம் வாய்ந்தோர் ஜீவன்முத்தராய் விடுதலை பெறுவர். அங்ஙனம் விடுதலை யடையாதோரும் மற்ற ஆறு வர்க்கங்களும் பீஜ மனுவிற்குள் லயப்பட்டு நிற்பர். அவர்கள் வாழ்ந்து வந்த ஏழு கோளங்களும் அப்போது அழிந்து சிதறிப்போகும். அப்பிரளயம் ஒரு மன்வந்தர காலம் நிலைத்திருந்து இரண்டாவது மன்வந்தரமெனப் பெயர் பெறும்.

வெகு வெகு நீண்டகால அளவிற்குப்பின் அந்தப் பிரளயம் முடிவுக்கு வரும்போது, மூன்றாவது மன்வந்தரந் தொடங்கி பூமிதேவியின் இரண்டாவது பிறப்பு ஏற்படும். அங்கும் அதன் ஏழு ஆதார ஸ்தானங்களாகிய ஏழு கோளங்களும் சூட்சும கோளங்களாகவே இருக்கும். ஆயினும், அவை ஏழும் படத்தில் காட்டியுள்ளது போன்று ஸ்தூல உலகத்தை நோக்கி முன்னைவிட ஒருபடி கீழிறங்கி வருவதாயிருக்கும். பிரளயத்தில் ஒடுங்கிக் கிடக்கும் உயிர் வர்க்கங்கள் முன்னினும் ஒருபடி முன்னேறி இங்கு வந்து முதற் கோளத்திற் பிறக்கும்; அதாவது முதலாந்தாது வர்க்கம் இரண்டாந் தாதுவர்க்கமாகவும், இரண்டாவது மூன்றாவதாகவும், மூன்றாவது உலோக வர்க்கமாகவும், உலோக வர்க்கம் தாவரங்களாகவும், தாவரங்கள் விலங்கினமாகவும், விலங்குகளும் முத்தி பெறத்தவறிய மானிடரும் மனிதராகவும் வந்து தோன்றுவர். மறுபடியும் முன்போலப் புதிய விஷ்ணு அலை யொன்று முதலாந்தாது வர்க்கமாக வந்து பிறக்கும். உலகில் இன்று மனிதரா யிருப்பவர் அங்கு அன்று தாவர வர்க்கமாக வந்திறங்கியவரே. இவ்வாறே பூமிதேவியின் ஏழு பிறப்புகளுக்கும் கண்டு கொள்க. பூமி-

தேவியின் முதற் பிறப்பில் தோன்றிய முதலாந் தாதுவர்க்கம் அவளுடைய ஒவ்வொரு பிறப்பிலும் ஒரு வர்க்கம் முன்னேறி, ஏழாவது பிறப்பில் மனித வர்க்கமாகி ஏழு வளையங்கள் வரும்; அந்த ஏழு வளையங்களிற் சுற்றி வரும்போது அம்மனிதருட் பக்குவப்பட்டவர் முன்பின்னாக முத்தியும் பெறுவர்.

இவற்றுள், பூமிதேவியின் 1, 2, 6, 7வது பிறப்புக்களில், ஒவ்வொன்றின் ஆதார ஸ்தானங்களாகும் ஏழு கோளங்களும் சூட்சும கோளங்களாகவே இருக்கும். மூன்றாவது ஐந்தாவது பிறப்புக்களில், நடுவிலுள்ள ஒரு கோளம் மாத்திரம் ஸ்தூல உருண்டையாக இருக்கும். பூமிதேவியின் மூன்றாவது பிறப்பில், அதாவது இன்றைய மக்கள் அன்று மிருக வர்க்கமாகக் குடியிருந்த ஸ்தூலகோளமே இன்று நமக்குச் சந்திரனாயிருப்பது. அது அன்று பூமியைவிடப் பெரிதாயிருந்து, பிரளயகாலத்து உடைந்து சிதற, அந்த உதிரிப் பொருள்களாலேயே நமது பூமி பெரும்பாலும் ஆக்கப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகின்றது. சந்திரன் நாளுக்கு நாள் வண்ணத்தில் குறைந்துகொண்டே வருவதாக இன்றைய வான சாஸ்திரிகள் கணக்கிடுகின்றனர். நமது தெப்பம் இவ்வளையம் முடிந்து அடுத்த வளையம் வருவதற்குள் நமது சந்திரன் முழுவதும் பொடிந்து போமென்று யோகக் காட்சியுடையோர் கூறுகின்றனர். சந்திரன் பூமியிலிருந்து வெடித்துப் போனதாக மேனாட்டு வான சாஸ்திரிகள் அபிப்பிராயப் படுகின்றனர். அது வெறும் யூகமேயன்றி நெற்றிக்கண் ஆராய்ச்சிக்குப் பொருந்துவதல்ல.

இனி, நான்காவது பிறப்பே ஒரு தொடரின் நடுப்பிறப்பாம். அதில் மூன்று ஸ்தூல கோளங்களும் நான்கு சூக்ஷ்ம கோளங்களும் இருக்கும். அந்த மூன்றும் நமது பூமண்டலத் தொடரில் இன்று செவ்வாய், பூமி, புதன் எனப்படுவன. ஒவ்வொரு தொடரிலும் முதலாந் தாதுவர்க்கம் முதல் மனிதவர்க்கம் முடிய ஏழு உயிர் வர்க்கங்கள் படிப்படியாக ஒன்றற்கொன்று உயர்ந்தனவாய் வளர்ந்து கொண்டிருக்கும். அவையாவும் இன்றும் நம்மைச் சுற்றிலும் அவ்வாறே வளர்ந்து கொண்டிருக்கின்றன; அந்த வளர்ச்சியில் அவை ஒன்றுக்கொன்று ஆதாரமாகவும் இருந்து

வருகின்றன. இன்றைய இறைவன்—திட்டத்தில், அவற்றுள் எதுவும் ஒன்றையன்றி மற்றவை உயிர் வாழ்வதில்லை. மனிதன் தொழிற் படுவதற்கும், அதன் மூலம் அவனுடைய கலை, வித்தை, அராகம் முதிர்ச்சி யடைவதற்கும், அப்பக்குவ முதிர்ச்சியின் மூலம் அவன் ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களி னின்றும் விடுபட்டுப் பேரின்பத்தைப் பெறுதற்கும், இன்றி-யமையாதனவாகிய தனுகரண புவன போகங்கள் யாவுமே மற்ற ஆறு உயிர் வர்க்கங்களாலேயே ஆகும்படி இறைவனுடைய இன்றையத் திட்டம் வகுக்கப்பட்டுள்ளது. அவ்வாறே மனித-னன்றிய மற்ற உயிர் வர்க்கங்களின் நிலைமையுமாம்.

சூக்ஷ்ம கோளங்களில் உயிரினங்கள் வாழும்போது அவற்-றின் உடம்புகள் யாவும் சூக்ஷ்ம உடம்புகளாகவே இருக்கும். அதனால் அவருக்குப் பசி, தாகம், பிணி, உறக்கம், சூடு, குளிர் முதலியனவும், அவற்றைப் போக்குதற்கு வேண்டிய அரும்பாடு-களும் அங்கு இல்லாதனவாகும். மனிதனுக்குத் தார்க்கம்பு போன்ற இத் தூண்டுகோல்களில்லாமையால், அங்கு மனித முயற்சியும் முன்னேற்றமும் மந்தமாகவே நடைபெறும். எதிர்ப்-புள்ள இடத்திலேயே ஆன்ம ஊக்கமும் ஆற்றலும் வீறிட்டெழு-வது இயற்கையாக இருந்து வருகின்றது. அதனால் மனித வளர்ச்சி வேகமாக நடைபெறுவது ஸ்தூல உலகத்திலேயாம்; அதுவும் முறுகி வேலை செய்வது கலிகாலத்திலேயே என்று சொல்லப்படுகின்றது. இன்றைய அனுபவமும் அதுவேயாம். மனிதர் இறந்து புவர், சுவர்லோகங்களில் வாழும்போது, அவை அனேகமாய்ப் போக பூமிகளாக இருந்து வருகின்றனவே தவிர முயற்சிக்கும் முன்னேற்றத்திற்கும் பெரும்பாலாருக்கு அங்கு இன்று பக்குவமில்லை யென்பது அனுபூதிமான்கள் வாக்கு.

பூமண்டலத் தொடர் பிறப்பெடுக்க எடுக்க, அதன் சப்த உலகங்கள் ஒவ்வொன்றிலுமுள்ள சப்த பூதங்களும், அதாவது மொத்தத்தில் $(7 \times 7) = 49$ பூதங்களும், தன் மாத்திரைகளில் உயர்ந்துயர்ந்து வருமென்றும் அதனால் மனித உடம்புகளும் குணங்களும் மேன்மை பெற்றுக்கொண்டே வருமென்றும் மேலே உரைக்கப்பட்டது. அதனால் 7வது தொடரில் மனிதன் முத்தி-

யடைவது இன்று அடைவதைவிட எளிதாயிருக்கும். அவ்விதம் புறவுலகின் வளர்ச்சியை யொட்டித் தானும் மிக மிகச் சாவதானமாக முன்னேறுவதே விகாசமுறையின் ஒரு பகுதி. மனிதன் முழுச் சோம்பேறியாய், இரவும் பகலும் ஒரு உழைப்புமின்றி உறங்கிக் கிடந்தாலுங்கூட, ஆறு வெள்ளம் அகப்பட்டதை யெல்லாம் அடித்துக்கொண்டு போவதுபோல, விகாசமுறை அவனை உந்திக்கொண்டே சென்று அவனை யறியாமலே முத்தியிற் புகுத்திவிடும். இது இறைவனுடைய கட்டாயக் கல்விமுறை. ஆதலால், (சில மதத்தவர் அறியாமற் கூறுகிறபடி), எந்த மனிதனும் தன் அந்திய நிலைமையைப்பற்றி ஒருவிதத்திலும் ஐயமோ அச்சமோ படவேண்டியதில்லை.

ஆனால் மக்களிற் சிலர், ஒரு பருவநிலைக்கு வந்தபோது பிறவித் துன்பத்திற் காற்றுது, தமது கல்வியைச் சுருக்க முறையில் வேகமாக முடித்துவிட விரும்புவோரும் இருக்கின்றனர். சிலர் நீருக்குள் அமிழ்ந்தவன் மூச்சுவிடத் திணறுவது போலத் துடிக்கவுஞ் செய்கின்றனர். அவர்களுக்கு அமைக்கப் பட்டுள்ளது அகவளர்ச்சி முறை. அதாவது, ஒருவன் சங்கீத வித்வானாக விரும்பினால், அவனாகப் பிரியப்பட்ட வேளைகளில் ரேடியோ, திரைப்படம், பாட்டுக்கச்சேரி முதலியவற்றை அடிக்கடி கேட்டுக் கேட்டுச் சிறிது சிறிதாகக் கற்று, கடவுள் அவனுக்குப் போதிய ஆயுளை மாத்திரம் கொடுப்பாரானால், என்றைக்காவது ஒரு நாள் அவன் வித்வானாகலாம. இது புற அனுபவ வளர்ச்சி. மற்றது, அவனே தானாக ஆசிரியரை யடைந்து, அவர் ஓதும் முறைகளைக் கைக்கொண்டு, இரவு பகலாகக் கடும் முயற்சி செயது இசைவல்லமையைச் சுருங்கிய காலஅளவிற்குள் பெற்றுக்கொள்வது. இது அகமுறை வளர்ச்சி. இந்த இரண்டு முறைகளில், முன்னது மலையைச் சுற்றிச்சுற்றியேறி உச்சியிலுள்ள ஆலயத்தை அடைவது போன்றது; பின்னது செங்குத்தாக ஏறி ஆலயத்தைச் சென்று சேர்வதை யொக்கும். ஆயினும், இந்த இரு முறைகளில் ஆதிமுதல் அந்தம்வரை ஒன்றை மாத்திரமே பின்பற்றுகின்ற ஆன்மாக்கள் எவருமே இரார். எல்லா ஆன்மாக்களுமே சிறிது ஊக்கமோ துன்பமோ ஏற்படும்போது சுருக்க முறையிலும், சிறிது தளர்ச்சியோ இன்பமோ

ஏற்படும்போது சுற்று முறையிலும் நடந்து படிப்பது இயற்கை அநுபவமாக இருந்து வருகின்றது.

இதுவரை இங்கு சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது மனிதனைப் பற்றிய விகாசமுறையே. இதனையன்றி வேறு முறைகளும் இந்த உலகிலேயே நடந்து வருகின்றனவாம். அவற்றுள் ஒன்று தேவா. சுர விகாசமுறை. அது பூமியை யொட்டிய புவர் சுவர் லோகங்களில் நடைபெறுவது. இனி இந்தப் பூமிக்குள்ளேயே வேறொரு பயங்கரமான உயிர்வர்க்கம் வளர்ந்து வருவதாகவும் சொல்லப்படுகிறது. நாம் தரையில் எவ்வளவு எளிதாய் நடமாடுகிறோமோ, அதேமாதிரியாக அவர்கள் பூமிக்குள் சஞ்சரிக்கிறார்களாம். நமக்கும் தேவகணங்களுக்கும் சிறிது தொடர்பாவது உண்டு. இவர்க்கும் நமக்கும் யாதொரு தொடர்பும் கிடையாதாம். தொடர்புண்டாகுமானால் அது அம் மானிடரின் கேடு காலத்திற்கேயாம். ஆண்டவன் லீலைகளுக்கும் திருவிளையாடல்களுக்கும் அளவே யில்லாதிருப்பினும், மிகச் சுருங்கிய சமயக் கிண்டர்கார்டன் ஆலயங்களுக்குள்ளும் அவையாவும் புதை பொருளாக அமைக்கப்பட்டிருக்கின்றனவென்றும், அவற்றைப் பூரண ஞானிகள் விளக்க வல்லவரென்றும் கூறப்படுகின்றது.

இதுவரை கூறிய பூமண்டலத் தொடரைப்போன்று இன்னும் ஆறு தொடர்கள் சூரியனைச் சுற்றிவருகின்றனவாம். ஆலயங்கள் சூரியமண்டலத்தைக் குறிக்கும்போது ஆலயத்துள்ள ஏழு ஆதார ஸ்தானங்களும் அங்குள்ள மூர்த்திகளும் இந்த ஏழு தொடர்களையும் குறிப்பனவாம். அவையாவும் மேற்கூறிய முறைகளையே பின்பற்றி நடைபெறுவதால் அவற்றைத் திரும்பவும் விளக்குவது தேவையற்றது. அங்கும் இந்த ஏழு பிறப்புக்களும், ஒவ்வொன்றிலும் எவ்வேழு கோளங்களும் எவ்வேழு விகாச முறைகளும், அவற்றின் மூன்றாவது ஐந்தாவது பிறப்புக்களில் ஒவ்வொரு ஸ்தூல கோளமும், நடுப் பிறப்பாகிய நான்காவது பிறப்பில் மூன்று ஸ்தூல கோளங்களும், இடையிடையே பிரளயங்களும், எல்லாம் பூமண்டலத் தொடரைப் போன்றே நடைபெறுகின்றனவாம். விரிவை விரும்புவோர் மேலே சொல்லப்பட்ட "மனிதன் எங்கிருந்து..." என்ற ஆங்கில நூலில் கண்டு கொள்க.

---

பாடம் 32.

## சூரிய மண்டலம்.

சூரியமண்டலத்தின் ஏழு ஆதாரஸ்தானத் தொடர்கள் அல்லது விகாச முறைகளுக்கு இன்று கொடுக்கப்பட்டிருக்கும் பெயர்களாவன :—

| மண்டலத்தொடர். | பிறப்பு. | தொடரில் ஸ்தூல கிரகங்கள். |
|---|---|---|
| 1. வல்கன் | 3வது | ஒன்று |
| 2. சுக்கிரன் | 5வது | ஒன்று |
| 3. பூமி (திங்கள்) செவ்வாய் புதன் | 4வது | மூன்று |
| 4. வியாழன் | 3வது | ஒன்று |
| 5. சனி | 3வது | ஒன்று |
| 6. உரானஸ் | 3வது | ஒன்று |
| 7. நெப்ற்றியூன் வேறு இரண்டு கிரகங்களும் | 4வது | மூன்று |

நெப்ற்றியூனைச் சேர்ந்த மற்ற இரண்டு கிரகங்களும் இதுவரை தூரதிருஷ்டிக் கண்ணாடிக்கு அகப்படவில்லை. ஆயினும் நெப்ற்றியூனுடைய சுற்றுப் பிரயாணத்திற் காணப்படும் சில வேறுபாடுகளிலிருந்து அவற்றின் இருப்பு வான சாஸ்திரிகளால் ஒப்புக்கொள்ளப் படுகின்றது. வல்கன் சூரியனை மிக நெருங்கி யிருக்கின்றபடியால் அது எளிதில் காணப்படுவதற்கில்லை. சிறிது காலத்திற்கு முன்பு அப்பேர்ப்பட்ட சிறிய கிரகமொன்றை வான சாஸ்திரிகள் கண்டுபிடித்து அதற்கு ப்ளுட்டோ (Pluto) என்ற பேர் கொடுத்தனர். அது திரும்பவும் காணப்படுதற்கில்லை.

மேற் சொன்ன ஏழு தொடர்களையன்றி வேறு மூன்று சூக்ஷ்மத் தொடர்கள், மனித வர்க்கத்தைவிட மிக மிக உயர்ந்த உயிர் வர்க்கங்களுக்கு விகாச முறைகளாக சூரிய மண்டலத்திலேயே நடைபெறுவதாகவும் கூறப்படுகின்றது. இந்தப் பத்து

மண்டலத்தொடர்கள் ஒவ்வொன்றிலும் எவ்வேழு உயிர் வர்க்கங்கள் வாழ்ந்து வளர்ந்து வருகின்றன. அங்குள்ள உடம்பு வகைகள் கிரகங்களின் தட்ப வெப்பத்தைப் பொறுத்து வேறுபட்டிருக்கும். இவற்றுள் சுக்கிரன் 5வது பிறப்பிலிருப்பதால் அங்குள்ள மக்களே சூரிய மண்டலத்தில் இன்று அன்பு அறிவு ஆற்றலில் முதன்மையாக நிற்பவர். அவர்களில் அநேகர் விஞ்ஞானமய ஆனந்தமய கோசங்களில் விவகரிக்க வல்லவராதலால் அவர்கள் ஒரு விகாச முறையிலிருந்து மற்றொரு விகாசமுறைக்கு வேண்டும் போதெல்லாம் செல்ல வல்லவராவர்.

ஒவ்வொரு விகாச முறையையும் அதிட்டித்து நிற்பவர் பிரஜாபதி எனப்படுவர். அவர் இறைவனோடு ஒன்றாகியும் வேறாகியும் நிற்பவர். இது முத்தான்மாக்கள் அறியக்கூடிய ஒரு நிலை. நாம் இறைவனைப்பற்றிக் கருதுவனவும் அதற்குக் கோடிப்பங்கு அதிகமானவையும் சூரியமண்டலத் திறைவனிடத்து அமைந்துள்ளனவாம். அதனால் நாம் சூரியமண்டலத்திறைவனையே சிவன் என்று வணங்குவதும், நாராயணன் என்று போற்றுவதும், பிரம்மா என்று பேசுவதும். அந்த சூரிய மண்டலாதிபதியைப் பற்றியே நாம் ஒரு கடுகளவுகூட அறியமுடியாதிருக்கும்போது, அதற்கப்பாலுள்ள அண்டத்தையும் அண்டத்தலைவனையும்பற்றி எண்ணுவதெல்லாம் வெறும் ஆகாயக் கோட்டையே தவிர வேறில்லை. இறைவனோடு ஒன்றாகியும் வேறாகியும் நின்று பத்துப் பிரஜாபதிகளும் விகாசமுறைகளை நடத்திவைப்பர். அவர் ஒவ்வொருவரின் கீழ் ஏழு மூலமனுக்கள், ஏழு பீஜமனுக்கள், சப்தரிஷிகள், வேறு பல அதிகார புருஷர்கள், தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், முத்தர்கள் எனப் பலர்கூடி ஓயாது உழைத்து மனித வர்க்கத்தையும் மற்ற வர்க்கங்களையும் பால் நினைந்தூட்டும் தாயினுஞ்சாலப் பரிந்துபேணி வளர்த்து வருகின்றனர். இது விகாச முறையின் ஒரு பகுதி.

ஆலயப்படம் 1. 1. 2. 2. எண்ணிட்ட பாகம் சூரியமண்டலத்தையும் அதன் ஏழு ஆதாரத் தொடர்களையும் குறிப்பதாகும். அதன் பிராகாரங்கள் சூரிய மண்டலத்தின் சப்த உலகங்களாம். தொடர்களின் கோளங்கள் ஒவ்வொன்றிற்கும் புவர், சுவர், மகர்-

லோகங்கள் தனித்தனியாக விருக்கும். ஜனோலோகம் முதல் மேற்பட்ட உலகங்கள் யாவும் மிகப் பரந்திருப்பதால், அவை ஒவ்வொரு கோளத்திற்கும் தனித்தனியாக இருப்பினும் ஒன்றை யொன்று தொட்டு, சூரியமண்டலம் முழுவதும் ஏகமாய் இருக்கும்; ஆயினும் சூரியனைச்சுற்றி வட்டமிடும்போது அந்தந்த மேரு தண்டத்தின் கவர்ச்சி காரணமாக அதனதன் தனிப்பரப்பு அதனதனுடனேயே சுழன்றுவரும்.

பிரம்மாவின் தினப்பிரளயத்தின்போது அசுத்தமாயா உலகங்களாகிய பூ, புவர், சுவர்லோகங்கள் சூரியமண்டல முழுவதிலும் அழிந்துவிடுமாம். இம்மூன்று லோகங்களும் திரிலோகங்கள் என்னப்படும்; இந்த தினப்பிரளயம் நமக்கு நைமித்திகம் என்றழைக்கப்படும். இனி பிரம்மாவுக்கு 100 வயசு ஆகும்போது சத்யலோகம்வரை அழிந்து விடுமாம். அப்பிரளயம் பிராகிருதம் என்னப்படும்.

---

பாடம் 33.

## சூரிய மண்டலம்—நைமித்திகப் பிரளயம்.

இது நம் ஆலயங்களில் தைப்பூசத் திருவிழாவாகக் கொண்டாடப்படுகிறது. அது பற்றிய புராணக்கதை வருமாறு:—

மாயை என்ற அசுர மங்கைக்கு ஆணவம், கன்மம், மாயா மலங்களின் உருவமாகவும், சத்வ, ரஜோ, தமோ குணங்களின் சாரமாகவும், பத்மாசுரன், சிங்கமுகாசுரன், யானைமுகாசுரன் என்ற மூவர் பிறந்து, அருந்தவம் புரிந்து, மிகுந்த பராக்கிரம சாலிகளாய் திரிலோகங்களையும் அடக்கியாண்டு, தமது முடிவு காலம் வரவே முருகப்பெருமானால் ஐப்பசி மாசத்து ஷஷ்டியன்று சங்காரஞ்செய்யப்பட்டனர். அவருள், மாயையின் மாயாமலமும் தமோகுணமுமாகிய யானைமுகாசுரன் என்ற தாரகாசுரனுக்கு, மேற்கூறிய மும்மலங்கள்—முக்குணங்களின் அவதாரமாய் மூன்று புதல்வர்கள் இருந்தனர். அப்புதல்வர்களான தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன்மாலி என்ற மூவரும், திரிலோகங்களையும்

வெல்ல விரும்பினவர்களாய் மேருமலையை யடைந்து இந்திரியங்-களை அடக்கிக் கடுந்தவம் புரிந்தனர். அப்போது பிரமதேவர் பிரசன்னமாகி அவர்களை நோக்கி, "நீங்கள் யாது கருதித் தவஞ்-செய்கின்றீர்கள்?" என்று வினவினர். அவ்வசுரர் மூவரும் அவரைப்பணிந்து, "ஐயனே, எங்களுக்கு இறவாவரத்தை அளிக்க வேண்டும்," என்று பிரார்த்தித்தனர். அதற்குப் பிரமதேவர், "அது இயற்கையில் இல்லாததொன்று. பிறப்பு உண்டேல் இறப்-புமுண்டு. அதனால் அதனையன்றி வேறு வரம் யாதாமொன்றைக் கேளுங்கள்," என்றனர். அசுரர்கள் ஆலோசித்து, "அண்ணலே, அடியேங்களுக்குப் பகைவர்களால் வெல்லவொண்ணாதனவும், தேவர், மனிதர் முதலியோரால் அழிக்க முடியாதனவும், எண்ணிய இடத்திற்கு எளிதிற்செல்லும் வலிமையுடையனவு-மான பொன், வெள்ளி, இரும்புகளாலாகிய மூன்று பட்டணங்கள் வேண்டும். அம்முப்புரங்களும், பூமி அந்தரம் சுவர்க்கமென்னுந் திரிலோகங்களிலும் சஞ்சரித்து ஆயிர வருடத்திற்கு ஒரு முறை ஒன்று சேர்வதும், மீண்டும் விரும்பிய இடத்திற்குச் செல்வதுமா-யிருத்தல் வேண்டும். அவ்வாறு அம்மூன்றும் ஒன்றுகூடியிருக்-குஞ்சமயத்தில் அம்மூன்றையும் ஒரே அம்பினால் அழிக்கவல்ல சுத்தவீரன் ஒருவனிருந்தால், அவனால் மழைகாலத்தில் சந்திரன் புஷ்ய நட்சத்திரத்துடன் கூடியிருக்கும் முகூர்த்தத்தில் (தைப்-பூசத்தன்று) அம்முப்புரங்களும் அழிவையடையவும், அதனால் நாங்கள் மூவரும் இறக்கவும், வேறொருவராலும் இறவாதிருக்கவும் வரந்தரவேண்டும்." என்று பிரார்த்தித்தனர். பிரம்மதேவர், "அவ்வண்ணமேயாகுக", என்று வரங்கொடுத்து மறைந்தனர். பிறகு மயனென்னும் அசுரத்தச்சன் காஞ்சனபுரி, இரஜிதபுரி, ஆயசபுரி என மூன்று பட்டணங்களை நிருமித்து, அவற்றுள் காஞ்சனபுரியைச் சுவர்க்கத்திலும், இரஜிதபுரியை மத்தியத்திலும், ஆயசபுரியைப் பூமியிலும் சஞ்சரிக்கத்தக்கதாகச் சூத்திரம் வைத்து, அவற்றை முறையே தாரகாக்ஷன் முதலிய மூவருக்கும் கொடுத்தான்.

தாரகாக்ஷன் முதலாயினோர் தாங்கள் பெற்ற அருந்தவச் செல்வத்தினால் இறுமாப்படைந்து தெய்வத்தை மறந்து நன்-னெறியினின்றும் வழுவினவர்களாகி, அளவிறந்த அவுணச்சேனை-

யுடன் வைகுண்டம் முதலிய தேவநகரங்களையும் பூலோகத்துள்ள பல பட்டணங்களையும் சிதைத்து, திரிலோகங்களிலுமுள்ள உயிர்களையெல்லாம் துன்புறுத்திவந்தார்கள். அதனைப் பொறுக்காத தேவர்கள் சிவபெருமானிடஞ்சென்று, "இறைவனே, திரிபுர வாசிகள் இறக்குந்தன்மையுள்ள எவராலும் எப்பிராணியாலும் இறவாதிருக்க வரம்பெற்றிருத்தலின், அவர்களை அழிக்கும் ஆற்றல் தேவரீருக்கன்றி வேறெவர்க்கும் இல்லையாதலால், தேவரீரே அவர்களை அழித்து அடியேங்களைக் காத்தருளவேண்டும்." என்று பிரார்த்தித்தனர். பரம கருணாநிதியாகிய சிவபெருமான் அவர்களது வேண்டுகோளை அங்கீகரிக்கவே, அவருடைய ஆக்கினையின்படி விசுவகர்மா என்னும் தேவ தச்சன் பதினான்கு உலகங்களையும் ஒரு திவ்ய ரதமாய் நிருமித்தான். சூரிய சந்திரர்கள் அந்த ரதத்தின் சக்கரங்களாயினர். பிரமதேவர் சாரதியானார். வேதங்கள் நான்கும் நான்கு குதிரைகளாயின. பிரணவ மந்திரம் குதிரை செலுத்துங்கோலாயிற்று அதில் சிவபெருமான் ஏறவும், மேருமலை வில்லாகவும் வாசுகி என்னும் பாம்பு அதற்கு நாணாகவும் அவருடைய இடக்கரத்தில் அமர்ந்தன. விஷ்ணுவானவர் அக்கினிதேவரைக் கூராகவும் வாயுதேவரை ஈர்க்காகவுங் கொண்ட அம்பாக அவருடைய வலக்கரத்தில் அமர்ந்தார். தேரானது திரிபுரத்தைச் சமீபித்தலும் சிவபிரான் வில்லை வளைத்தனர். அப்பொழுது திரிபுரங்கள் மூன்றும் ஒன்று சேர்ந்த சரற்காலத்துச் சந்திர புஷ்ய நட்சத்திரமாயிருந்தது. சிவபெருமான் தமது கையிலிருந்த ஓரம்பைப் பிரயோகிக்கச் சித்தமானபொழுது, போர்க்கருவிகளாக அமைந்திருந்த ஒவ்வொருவரும் தம்மாலேயே திரிபுரதகனம் நிகழ்வதாக இறுமாப்படைந்தனர். அதனையுணர்ந்த சிவபெருமான் பாணத்தைப் பிரயோகியாது புன்னகை செய்தார். அப்போது அவர் வாயினின்றும் வெளிவந்த அக்கினியினால் முப்புரங்களும் எரிந்து சாம்பராயின.

இதுவே புராணக்கதை. ஆலயங்களில் பிரமோற்சவகாலத்தில் நடைபெறும் இரதோற்சவம் (தேரோட்டம்) இந்த ஐதிகத்தினையே குறிக்கும். இப்புராணக்கதைக்கு ஒரு திறவுகோல் "ஆயிர வருடத்திற் கொருமுறை மூன்று புரங்களும் (கோட்டைகளும்) ஒன்று சேரும்." என்ற கருத்தில் உள்ளது. அதனைப் பின்னர் நோக்குவோம்.

இந்த முப்புரங்களுக்குப் பல புதைபொருள்கள் உள்ளன. அவற்றுள் ஒன்று அவை திரிலோகங்களை அறிகுறியாகக் குறிப்பிடுவது. அப்போது இரும்புக் கோட்டை யென்பது சூரியமண்டலத்துள்ள பூலோகங்களாகிய ஸ்தூல உலகத் தொகுதியாகும்; வெள்ளிக்கோட்டை அங்குள்ள புவர்லோகத்தொகுதியும், பொன்கோட்டை சுவர்க்கலோகத் தொகுதியும் ஆம். இம் மூன்று கோட்டைகளும் எண்ணிய எண்ணியாங்கு சூரியமண்டலம் முழுவதும் சுற்றித்திரியும் என்றதனால், அவை சூரியமண்டலத்துள்ள ஏழு தொடர்களின் திரிலோகங்களையும் தொகுதியாகக் குறிப்பிடுமெனக் கொள்ளல் வேண்டும். இக்கருத்து வேறு பல இடங்களிலும் காணப்படுகின்றது. இறைவன் ஐந்தொழிலாம் ஆனந்தத்தாண்டவம் புரியும்போது பூலோக அரங்கத்தின் ஸ்தூலபாகம் (நிலம், நீர், தீ, காற்று) சித்திர சபையென்றும் சூட்சும பாகம் (ஆகாயம்) தாம்பிரசபை யென்றும் கூறப்பட்டுள்ளன. அவை முறையே தெற்கே திருக்குற்றாலத்திலும் திருநெல்வேலிச் செப்பறையிலும் உள்ளன. அவன் புவர்லோக அரங்கத்தில் ஆடும்போது அது மதுரையில் ரஜிதசபை, வெள்ளியம்பலமாக இருக்கின்றது. அவன் சுவர்க்கலோக அரங்கில் ஆடுவது கனகசபை, பொன்னம்பலம் என்ற சிதம்பரத்தேயுள்ளது. வானவர் நாட்டுக்குப் பொன்னுடு என்றும் இந்திரனுக்குப் பொன்னிநாடன் என்றும் பெயர்கள் உள்ளன. புவர்லோகத்திற்கு கிரேக்க நாட்டுப் பண்டைய ஞானியர் தம் நெற்றிக்கண் பார்வைக்குத் துலங்கியபடி நட்சத்திர (வெள்ளி) ஒளி உலகம் (Astral World) என்று பெயரிட்டுள்ளனர். ஆதலால் பூலோகம் இரும்பு நகரம், புவர்லோகம் வெள்ளி நகரம், சுவர்லோகம் பொன்னகரம் என்ற கருத்துக்கள் புதிய கற்பனைகளல்லவென்பது விளங்கும்.

இனி, "ஆயிரம் ஆண்டுகளுக் கொருமுறை அவை ஒன்று சேரும்," என்ற கணக்கை ஆராய்வோம். நம் நாட்டுச் சோதிடத்திற்கு (Astrology) அடிப்படையாக உள்ளது வான சாஸ்திரத்தின் (Astronomy) கணிதமுறை. வானசாஸ்திரத்தின் கணக்குத் துள்ளிபமாயில்லாதபோது சொல்லப்படும் ஜோஸ்யம் தவறிவிடும், தவறிவிடுகின்றது. "ப்ருகத் ஜாதகம்" என்ற நூலில் சூரிய மண்டலத்துள்ள கிரகங்களெல்லாம் ஒன்றுசேரும்

நாள், அதாவது ஒரே கோட்டில் நிற்கும் நாள் ஒரு கல்பம் என்றும், அது பிரம்மாவிற்கு ஒரு நாளாகுமென்றும் கூறப்பட்டுள்ளது. அந்நாள் 432 கோடி வருஷங்கள் என்று புராணங்கள் கூறுவதை முன்னமே கண்டோம். இனி ஜோதிட கணிதத்தின்படி கிரகங்கள் சூரியனைச்சுற்றிவரும் நாட்கள் கீழே தரப்படுகின்றன :-

| | | | |
|---|---|---|---|
| புதன் | — | 83.9693 | நாட்கள் |
| சுக்கிரன் | — | 224.7008 | ,, |
| பூமி | — | 365.2564 | ,, |
| செவ்வாய் | — | 686.9795 | ,, |
| வியாழன் | — | 4332.5848 | ,, |
| சனி | — | 10759.2200 | ,, |
| சந்திரன் | — | 27.3333 | ,, |

இவை யாவற்றிற்கும் கீழ்ப் பொது எண் (L. C. M.) 4,320,000,000 வருஷங்களென்று கணக்கிட்டறிந்து கொள்ளலாம். அதாவது 432 கோடி வருஷங்களுக்கொருமுறை அவை யாவும் அவற்றின் திரிலோகங்களும் ஒரே கோட்டில் நிற்குமென்று அது உணர்த்துகின்றது. அது ஒரு பிரளய காலமென்றும் அறிவிக்கப்படுகின்றது. இவ்வுண்மை புராணக் கதையாகக் கற்பனை செய்யப்பட்டுள்ளது; ஆலயங்களில் அறிகுறியாய்த் தைப்பூசத் திருநாளன்று தேரோட்டமாகக் கொண்டாடப்படுவது. இதனையன்றித் திரிபுரங்களுக்கு வேறு பல ஆழ்ந்த பொருள்களும் உள்ளன. ஆலயத்திருவிழாக்கள் யாவுமே இவ்விதப் புதைபொருள்களைக் கொண்டனவாம். இத்திருவிழாக்களின்போது அவற்றின் உட்கருத்துக்களைச் சிறுவர்களுக்கும் கல்வியறிவில்லாதவர்களுக்கும் சமயக் கிண்டர்கார்டனுகை விளக்க வேண்டுவது கற்றறிந்தார் கடமையாகும். இவ்வித சமய போதனைகளில்லாமையால் பலருக்கும் நம் சமயத்தில் இன்று நம்பிக்கை நீங்கி வருகின்றது. இவ்விழாக்கள் இப்போது வெறுந் தமாஷாக மாத்திரமே நடைபெறுவது மிகவும் வருந்தத் தக்கது. புராணக் கதைகளெல்லாம் எவ்வேழு உட்பொருள்களைக் கொண்டனவென்றும், அவை ஸ்தூலபரமாகத் தொடங்கி ஞானபரம்வரை அவரவர் அறிவின்

பக்குவாபக்குவத்திற்கேற்பப் படிப்படியாக விளக்கி வெளிடப்படுமென்றும், அப்பொருள்கள் யாவும் பண்டும் இன்றும் என்றும் நடைபெறுவனவாகிய இயற்கை நியதிகளே யென்றும் அனுபூதிப்பெரியார் கூறுகின்றனர். அத்தகைய பௌராணிகர் இன்று எங்கு சென்று மறைந்தனர்?

---

பாடம் 34.

## ஆலய விக்கிரகங்கள்.

ஒரு பள்ளிக்கூடத்திலுள்ள பிள்ளைகள் யாவரும் ஒரே வகுப்பில் படிப்பவரல்லர். அவர்கள் வயதிலும் அறிவிலும் பல தரமா யிருப்பதுபோலவே அவர்கள் படிக்கும் வகுப்புகளும் பலவாயிருக்கும்; அதனால் அவருக்கேற்பட்டுள்ள பாடத்திட்டங்களும் போதனு முறைகளும் பலதரப்பட்டவையாகவே இருக்கும். அவருள் ஆரம்ப வகுப்பினருக்கு ஏற்பட்டுள்ள போதனு முறையானது கிண்டர்கார்டன் முறையென்று இன்று அழைக்கப்படுகின்றது.

இதுபோன்றே இறைவன் விதித்திருக்கும் ஆன்மப் பள்ளியாகிய உலகப்பள்ளியும் நடைபெறுகின்றதென்னலாம். அங்கும் மக்கள் அறிவிலும் ஆன்ம வளர்ச்சியிலும் பலபல தரமாக இருக்கின்றனர். ஆயினும் அவரைப் பொதுவாக முதல், இடை, கடைசி வகுப்பென மூன்று பிரிவாகப் பிரிக்கலாகும். அவருள் கடைசி வகுப்புக்கு ஆன்றோர் அமைத்துள்ளதே சமயக் கிண்டர்கார்டன் என்று இந்நூலிற் கூறப்பட்டுள்ள நமது ஆலயங்கள்.

"கடவுள்," என்ற சொல் "கடந்து நிற்பதாக உள்ளது," அதாவது, "எல்லாத் தத்துவங்களையும் கடந்து நிற்றலையுடையது," எனப்பொருள்படும். தத்துவங்கள் ஸ்தூலமாயினும் சூக்ஷ்மமாயினுஞ் சரியே, அவையாவற்றிற்கும் அப்பாற்பட்டதே கடவுள் என்பதே நம்முன்னோர் கொள்கை. அதனால் தத்துவங்களாலாகிய நம் மனம் மொழி மெய்களைக்கொண்டு அவர் அறியப்படுபவரல்லர் என்பது பெறப்படும். அத்தகைய பரம்பொருளுக்குக் கடவுள் என்ற பெயரை இட்ட அப்பெரி-

யோரே, "கடவுள் அறியப்படாதவர், ஆயினும் முறுகி விரும்பு-வோரால் அடையப்படுபவருமாவர்," என்றுங் கூறியுள்ளனர். அந்தத் தீவிர பக்தியுடைய மக்களுக்கேற்பட்ட போதனை முறையை,

"உரையற்ற தொன்றை உரைசெய்யும் ஊமர்காள்!
கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ!
திரையற்ற நீர்போல் சிந்தை தெளிவார்க்குப்
புரையற் றிருந்தான் புரிசடை யோனே."

என்று திருமூலர் அருளியிருக்கின்றனர். உரையுணர் விறந்ததோர் பெரும்பொருளே கடவுளாதலால், அப்பொருளை உரையும் உணர்வும் அற்ற நிலையினரே அடையவல்லவர். காத-லருக்கிடையே நிகழும் சிற்றின்ப உணர்ச்சி உரையுணர்வு கடந்து நிற்பது போலவே, கடவுளையடையும்போதுண்டாம் பேரின்ப-வுணர்ச்சியும் உரையுணர்வு கடந்து நிற்கும். உரையுணர்வற்ற அந்தப் பேரின்ப நிலையே, மனமும் வாக்கும் இறந்த நிலையெனவும், பரமஞான நிலையெனவும், மோன நிலையெனவும் பலவாறாகக் கூறப்படுவது. "மோனமென்பது ஞானவரம்பு," என்ற இடத்தும்,

"எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கும் மோனத்தே........."

என்ற இடத்தும் உள்ள மோனம் என்ற சொல், அந்தத் திரை-யற்ற நீர்போன்ற சிந்தையைக் குறிப்பதாம். தத்துவ சோதனை-யால் மெய்ப்பொருள் இது, பொய்ப்பொருள் இதுவெனக்கண்-டுணர்ந்த பெரியோர்கள், ஆன்மபாவனை யற்று என்றும் மெய்ப்-பொருளுடன் இரண்டற விளங்கும் உயரிய நிலையுடையவரா-யிருப்பர். இவரே முதல் வகுப்பு மக்களாவர்.

இனி, "அன்றும் திருவுருவம் காணாதே ஆட்பட்டேன்,
இன்றும் திருவுருவம் காண்கிலேன்,—என்றுந்தான்
எவ்வுருவோ நும்பிரான் என்போர்கட் கென்னுரைக்கேன்,
எவ்வுருவோ நின்னுருவ மேது?"

என்று மனமிரங்கும் காரைக்காலம்மையாரோடு இரங்கி-யழுவோர், இடைவகுப்பு மக்களாவாரென்னலாம். இவருடைய

ஐயப்பாட்டை நீக்குவதே அப்பர்சுவாமிகள் அருட் போதனையில் ஒரு பாட்டு. சரியை மார்க்கமாகும் தாசமார்க்கத்தின் எல்லையைக்காட்ட அவதரித்த திருநாவுக்கரசு சுவாமிகள் அம்மக்களுக்குரிய பாட முறையை வகுத்துள்ள பாசுரமாவது,

"மைப்படிந்த கண்ணாளுந் தானுங்கச்சி மயானத்தான்,
வார்சடையான், என்னினல்லான்,
ஒப்புடைய னல்லன், ஒருவனல்லன், ஒரூரனல்லன்,
ஒருவமனில்லி,
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்
அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்,
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே."

என்பதாம். இந்நெறியில் இன்றியமையாதனவான மனத் தாழ்மையும் தன்னலமற்ற இறையன்பும் இறைவன் ஈகுவதெல்லாம் தமது நன்மைக்கே யென்ற பூரண நம்பிக்கையும் இல்லாதவர் கடைசி வகுப்பு மக்களாவர். அவர்கள் இறைவனுடைய முற்றறிவில் ஐயுற்றுத் தமக்கு வேண்டுவனவற்றை, அதுவும் பொதுவாக உலக இன்பங்களை, அவரைத் தூண்டிக் கேட்டு நிற்பர். அவற்றிற்காக ஆராதனை அபிஷேகம் முதலிய கட்டணங்களுஞ் செலுத்துவர். அவர்களுக்கேற்ற போதனா முறையே ஆலயங்களும் அங்குள்ள விக்கிரகங்களுமாம்.

காணப்படும் பொருள்களிலிருந்து காணப்படாதவற்றையும், தெரிந்த பொருளிலிருந்து தெரியாதவற்றையும் வருவித்துக் கற்பிப்பதே இன்றைய கிண்டர்கார்டன் போதனா முறையின் அடிப்படைக்கொள்கை. இம்முறை நம் நாட்டில் பண்டே "தூலாருந்ததி நியாயம்" என்ற பெயரால் நடைபெற்று வந்ததொன்று.

'தாலத்தின் மரங்கள் காட்டித் தனிப்பிறை காட்டுவார்போல்,
ஆலத்தின் உடுக்கள் காட்டி அருந்ததி காட்டுவார்போல்,
தூலத்தை முன்பு காட்டிச் சூக்கும சொரூபமான
மூலத்தை முன்பு காட்ட முனிவரர் தொடங்கினாரே."

என்ற பாட்டு, தற்காலக் கிண்டர் கார்டன் முறைக்குப் பன்னெடுங் காலத்திற்கு முன்னரே நம்மிடையே யுள்ளதாகும். அதாவது, எப்படி வானத்திலுள்ள மிக மெலிந்த பிறைச்சந்திர-ஃனயும் மிக நுண்ணிய அருந்ததி நக்ஷத்திரத்தையும் காட்டுதற்கு, முறையே அவற்றிற்கு அணிமையிலுள்ள மரக்கிளேயையும் பெரிய நக்ஷத்திரத்தையும் காட்டி அறிவிப்பாரோ, அவ்வாறே சூக்குமப் பொருளே விளக்குவதற்குத் தூலத்திலிருந்து ஆசிரியர் தொடங்-கினர், என்பது அப்பாட்டுக் கூறுவதாகும். ஆகவே நம் ஆலயங் களேச் சமயக் கிண்டர்கார்டன் முறையென்றது, அவற்றின் பழைய கருத்தைத் தற்காலப் பெயர் கொண்டு இந்நூலில் அழைத்ததைத் தவிரப் புதிய கற்பனே யொன்றுமில்லே யென்பது அறியத்தக்கது.

இனி, விக்கிரகம் என்பது "வி:" விசேஷ, "கிரகம்:" இடம், அதாவது கடவுள் விசேஷமாக விளங்கும் இடம் என்று பொருள்-படும். அண்டம் முழுவதிலும் இறைவன் பொதுவாகவும், ஆலய விக்கிரகங்களில் அவன் சிறப்பாகவும் விளங்குவன் என்று சமய நூல்கள் கூறுகின்றன. அதனுல் அங்குள்ள சிலேகள், சிறுவர் சிறுமியர் கற்பித்து விளேயாடும் வெறும் பாவைகள் போலல்-லாமல், இறைவனுடைய குணுதிசயங்களே விளக்கும் வண்ணம் உரிய சின்னங்களோடு பெரியோரால் வகுக்கப்பட்டுள்ளவை யென்று அறிதல்வேண்டும். அந்த உருவங்கள் பல பல தோற்-றங்களே யுடையனவாயினும், அவை அனேவற்றிற்கும் அடிப்படை ஏகமான இறைவன் ஒருவனேயாம். "குற்றுலத்திலே இடி-யிடித்தால் கோயம்புத்தூர் விளக்கணேயும்," என்ற நகைச்சுவை மிகுந்த திரைப்படப் பாட்டொன்று தமிழ் நாட்டில் இன்று அநேகர் கேட்டிருப்பர். அது மிகவும் உண்மையென்றும் அதற்குக் காரணம் இன்னதென்பதையும் இன்று சிறுவரும் அறிவர். குற்றுலத்திலிருந்து கோயம்புத்தூர் வரையுள்ள விளக்குகள் யாவும் ஒரே மின்சாரத்தால் இயக்கப்படுகின்றன வென்பதும், அம்மின்சாரமும் தாம்பிரவர்ணி நதிக்கரையில் அகத்தியர் வாழும் பொதியமலேயிலுள்ள மின்சார நிலேயம் ஒன்றி லிருந்தே வெளியாகின்றதென்பதும் அச்சிறுவர்களே விளக்குவர். ஆனுல் இவ்வளவு பரந்த பிரதேசத்திலுள்ள விளக்குகளோ, யாவும்

ஒரே மாதிரியாயிராமல் உருவத்திலும் நிறத்திலும் ஒளியிலும் சக்தியிலும் அவை எண்ணற்ற வேறுபாடுகளுடையனவாக உள்ளன. ஆயினும் அவை ஒவ்வொன்றினுள்ளும் தனித்தனி மின்சாரம் இருப்பதாக நாம் கருதுவதில்லை. அவ்வாறே நான்கு பட்டங்கொண்ட ராந்தல் ஒன்றில் ஒவ்வொரு பக்கத்தில் ஒவ்வொரு மூர்த்தியின் படத்தை ஒட்டி, உள்ளே விளக்கை யேற்றினால் தனித்தனிப் படங்கள் அங்கே காணப்படுமாயினும் அவற்றிற்கு ஒளிகொடுப்பது ஒரே விளக்காயிருப்பது போலவே ஆலயத்துள்ள பல்வேறு விக்கிரகங்களைக் கண்டு அதனால் தெய்வங்கள் பலபல வெனக் கொள்ளாது, அவையாவும், அவற்றுள் ஒவ்வொன்றும், ஏகனான ஒரே இறைவனுடைய பல பல அம்சங்களைக் காட்டும் உருவங்களே யெனக்கொள்ளல் வேண்டும். இவ்விக்கிரகங்களின் சின்னங்கள் சில பொதுவாகவிருக்கும். இறைவனுடைய சர்வ வல்லமையைக் காட்டும் பொருட்டு இரண்டுக்கு மேற்பட்ட திருக்கரங்களை உடையனவாகவும், அவனுடைய படைத்தல், காத்தல், அழித்தல் மறைத்தல், அருளல் என்ற ஐந்தொழில்களைக் காட்டும்பொருட்டு அபயவரதங்களையும் பல்வேறு ஆயுதங்களையும் உடையனவாகவும் அப்பொதுச் சின்னங்கள் அமைந்திருக்கும். இது ஒரு பகுதி.

இரண்டாவதாக, சில உருவங்கள் சிறப்புச் சின்னங்களையுடையனவாக இருக்கும். முக்திநெறிகள் யாவும் அனைவருக்கும் உரியன வாயினும், பக்தி நெறியும், ஞானநெறியும் அகநோக்கிகளுக்கு (Introverts) உகந்தவையாம். அதனால் அகநோக்கிகளின் தலைவராகும் யானைத்தலைப் பிள்ளையாரும், பொதுவாக எல்லா நெறிகளுக்கும், சிறப்பாக ஞானநெறிக்கும் பக்தி நெறிக்கும் அதிகாரியாவர். அதனால் ஞான முடிவாகிய நாதப்ரம்மத்தின் பிரணவ வடிவமே அவருக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றது. அவருக்கு ஓம்கார உருவன் என்றும் பிரணவ மூர்த்தியென்றும் பெயர்களும் உள்ளன. "ஓம்" என்ற எழுத்துகளில் ஓகாரத்தின் கொம்பிலுள்ள இரண்டு சுழிகளும் யானை முகத்தின் இரு காதுகளிலும், அதன் இடையிலுள்ள பாட்டுக்கோடு இடதுபுறம் நீட்டிய துதிக்கையிலும், ஓகாரத்தின் தொங்கு சுழி நாபியிலும் அமைந்திருப்பது எளிதில் அறியலாகும். "ம்" என்ற மெய்யை உணர்த்தும் சின்னம் — 0 — இடக்கையில் கொண்-

டிருக்கும் மாதுளங்கனியால் குறிக்கப்படும். இயற்கை யானைக்குத் தொந்திவயிறு இருப்பதில்லை. ஆனால் சகல அண்டங்களும் சராசரங்களும் பிரணவத்துள் அடங்குதலால், யானைப் பிள்ளையாருக்குத் தாழி வயிறு அமைந்திருப்பது இயல்பாகின்றது. அண்டங்கள் கோழிமுட்டை உருவுடையன; முட்டைக்கும் அண்டமென்பதே பெயர்; மாதுளை அரிசி ஒவ்வொன்றும் சிறு முட்டை வடிவான தனித்தனி அண்டமாகவும், ஆயிரக்கணக்கான அவ்வரிசி—அண்டங்களைக்கொண்ட மாதுளங்கனி ஒவ்வொன்றும் அகிலாண்டமாகவும் உருவகப்படுத்தப் பட்டிருப்பதும் அறியத்தக்கது.

அம்மாதிரியே புறநோக்கிகளின் (Extroverts) தலைவராகும் முருகப்பெருமான் ஆறு தலைகளை யுடையவனுவன். புறநோக்கிகளுக்கு விரைவில் முக்தியளிக்கவல்லவை யோகநெறியும் கர்ம நெறியுமாம். அதனால் அவற்றிற்குச் சிறப்பதிகாரியாகவும் மற்ற நெறிகளுக்குப் பொது அதிகாரியாகவும் முருகன் உருவகப்படுத்தப்பட்டிருக்கின்றனன். முருகன் யோகநெறித் தலைவன் என்பது அவனுடைய காவடியால் விளங்கும்.

பார்வதி பரமேசுவரர் திருமணத்தின்போது பூமியின் வடதிசை தாழ்ந்து தென்திசை உயரவும், வடக்கே இமயத்திருந்த அகத்திய முனிவரைத் தெற்கே பொதியஞ் செல்லும்படி சிவபெருமான் ஆக்ஞாபித்தனர். அப்போது அகத்தியர் சிவபெருமான் திருமணத்தைத் தெற்கே தரிசிக்க வேண்டுமென்றும், இமயமலையின் ஞாபகச் சின்னமாக ஏதாவது அருளவேண்டுமென்றும் இறைவனை வேண்டினர். இறைவன் அடுத்திருந்த சிவகிரி, சக்திகிரி என்ற இரு குன்றுகளைக் காட்டி அவற்றைக்கொண்டு செல்லும்படி கூறினர். அகத்தியர் தமது மாணுக்கனுகிய இடும்பனை அவற்றை யெடுத்து வரும்படி கட்டளையிட, அரக்கர் குல குருவாயிருந்த அவன் ஏழு கணுக்கள் கொண்ட கல்மூங்கிலொன்றைக் காட்டிலிருந்து வெட்டி, அதன் நுனிகளில் இரு குன்றங்களையும் கட்டித் தூக்கிக்கொண்டுவந்து பழனியில் இறக்கி இளைப்பாறும்போது அங்கு சிவகிரியின்மீது பாலமுருகனும் பழனியாண்டவன் தெரிசனம் பெற்றுப் பேரின்ப நிலையை எய்தினன். இதுவே இன்று முருகனடியார் சுமந்து சென்று




தாண்டவமூர்த்தி



இடக்கால் தூக்கிய அணு
ஆண் அணு



ஆ ருத்ர தாண்டவ நக்ஷத்திரம்
(ஓரையன்)



வலககால் தூக்கிய அணு
பெண் அணு

செலுத்தும் காவடி பற்றிய ஐதீகம். பழனி, யோகப் பழம் பழுத்த இடம்.

இக்கதையில் வரும் அகத்தியர் சித்த புருஷருள் தலைசிறந்த பெரியார் என்பது கர்ண பரம்பரை. அரக்கன் என்பவன் சுயநலங்கருதி உழைக்கும் பிரவர்த்தி மார்க்கத்தான். அரக்கர் குலகுரு எனப்படுபவன் அம்மார்க்கத்தில் தலைமையுற்று, "யோகமென்பது வேலைத்திறமை" என்ற கீதா வாக்கியத்தின்படி, யோக நெறிப் பயிற்சிக்குப் பக்குவம்பெற்று மனம், மொழி, மெய்களை யுடையவன். அவன் ஆன்மப்பேற்றை விரும்பி நிவர்த்தி மார்க்கத்திலிறங்கி சிவராஜயோகியும் வித்தகச் சித்தருமாகிய அகத்தியரை அடைகின்றான். அவர் அவனுடைய முதுகின் அடியில் மூலாதாரத்துள்ள சக்தி கிரியையும் குண்டலினியையும், தலையுச்சியில் சகஸ்ராரத்திலுள்ள சிவகிரியையும் பரசிவத்தையும், பிரமதண்டமென்று கூறப்படும் ஏழு முடிப்புள்ள முதுகுத்தண்டாலும் நடுவே ஓடும் சுழுமுனை நாடியாலும் இணைத்து, எழிலே உருக்கொண்ட இளங்குமரனை உச்சிமேற் காட்சி கொடுத்து இடும்பனை உய்தி பெறச் செய்கின்றார். அத்தனை வளங்கொண்ட அருங்காவடி இன்று வெறும் அன்னக் காவடிகளாய் மலிந்து கிடக்கின்றது. என்னே மாயையின் வல்லமை!

காவடி, சரண் புகுந்தோரைக் காக்கும் சேவடி; காட்டு மூங்கிலுமாம். இன்றும் ஊன்றுகோல் "வடி" யென்றே மலையாளத்தில் வழங்கப்படுகிறது; அது பண்டு கணுவுள்ள மலைப்பிரம்பாக இருந்திருத்தல் கூடும்.

சிவராஜயோகத் தலைவனாகிய முருகக் கடவுளின் ஆறுமுகங்கள், மனிதனுடைய ஆறுதாரங்களிலும் வரிசைக் கிரமமாகத் தனித்தனியே வைத்து தியானிக்கப்படும் அவனுடைய ஆறு வடிவங்களும் சக்திகளுமாம். அவனுடைய ஆறெழுத்து மந்திரமும் அம்முகங்களையும் சக்திகளையும் குறிப்பதுவே. தெய்வப்புலமை மகாவித்வான் மீனாக்ஷிசுந்தரம்பிள்ளை இயற்றியுள்ள திருவிடைக்கழி முருகன் பிள்ளைத் தமிழில்,

> "ஆட்டுஞ்சமயம் ஆறினுக்கும், ஆதாரங்கள் ஆறினுக்கும்,
> அத்துவா ஓராறினுக்கும், அமையும் தானே முதலென்று

திட்டும்படி யாவருந்தெளியத் தெளித்தாங்கு ஆறுமுகந்திகழச்
செல்வமலியும் இடைக்கழிவாழ் சேயைப்பரிந்து காக்கவே"

என்ற பாட்டு இக்கருத்தை உணர்த்தும்.

விநாயகர், முருகப்பிரான் இருவருடைய இயற்கைகளை விளக்கும் கதையொன்று தமிழ் நாட்டில் வழங்கி வருகிறது. இறைவனும் இறைவியும் கைலையில் இருக்கின்றனர். இறைவன் கையில் ஒரு மாங்கனி இருக்கின்றது. அது பேரின்பப்பழம். அவர் தம் மக்கள் இருவரையும் அழைத்து, "அண்டங்கள் யாவற்றையும் யார் முன்னதாகச் சுற்றி வருகின்றாரோ அவருக்கு இக்கனி உரியது," என்று உரைக்கின்றனர். அது செவியிற்படு-முன்னரே புறநோக்குடைய முருகப் பெருமான் ஒரே பாய்ச்ச-லாக மயில்மீது தாவி, முன்பின் யோசியாமலே வாயுவேகம் மனோவேகமாக ஆகாயத்தில் கிளம்பி விடுகின்றார். தொப்பை (பொத்தை)ப் பிள்ளையார் சிறிது புன்னகை பூத்து, தம்பி தலை மறையும்வரை காத்திருந்துவிட்டு, தன் தோளிற்கிடந்த உத்தரி-யத்தை யெடுத்து இடுப்பில் இறுகக் கட்டிக்கொண்டு, இறை-வனையும் இறைவியையும் ஒருமுறை வலம் வந்து முன்னே விழுந்து வணங்கி, பழத்தைத் தாருமென்று கையை நீட்டினார். "அப்பா நீ இருந்த இடத்தைவிட்டு நகரவேயில்லையே, எந்த அண்டத்தைச் சுற்றிவந்தாய்," என்று இறைவன் குறுஞ்சிரிப்-போடு வினவினார். "அம்மையப்பரே, இன்றுள்ள அண்டங்கள் மாத்திரமேயன்றி, பண்டு இருந்து அழிந்துபோன அண்டங்களும், இனி வரவிருக்கும் அண்டங்களும் அன்னையார் அடிவயிற்றில் ஒரு மூலையில் அடங்கிக் கிடப்பன. அன்னை பராசக்தியோ உம்மிடம் அடங்கியுள்ளவள். நான் உங்களிருவரையும் வலம் வந்ததனால், இறந்தகால நிகழ்கால எதிர்கால அண்டங்கள் அனைவற்றையும், அவற்றிற் கப்பாலுள்ளவற்றையும் சுற்றியவனா-வேன்," என்று பதிலளித்தனர். இறைவன் மகனுடைய ஞானத்-தைக்கண்டு மெச்சி, அவனுக்குக் கனியை ஈந்துவிட்டனர். உடம்பெங்கும் வியர்த்து விறு விறுக்க அண்டம் முழுவதையும் ஓடோடிச் சுற்றிவிட்டு வெகுநேரஞ்சென்று திரும்பிவந்த இளங்-குமரன், அண்ணன் கனியைத் தின்றுகொண்டிருப்பதைக்கண்டு மனமுடைந்து போயினன். இறைவன் அவனை அருகணைத்து,

"நீ கண்டு ஒழித்தனவற்றையெல்லாம் உன் அண்ணன் கண்டவனேயல்லன். அதனால் நீயும் பேரின்பக்கனிக்கு உரியவனே." என்று கூறி வேறொரு கனியை அவனுக்குங் கொடுத்தனர், என்பது கதை. இது புராண வரலாறோ அத்தை பாட்டி கதை தானோ அறிவதற்கில்லை; ஆயினும் அது மக்களினத்துள்ள இருவகை நோக்குகளைப் பற்றிய ஆழ்ந்த உண்மையைக் கொண்டதென்பதற்கு ஐயப்பாடில்லை. இத்தகைய உயரிய கருத்துக்கள் கொண்ட பல எளிய கதைகள் இன்று மறைந்தொழிந்துவிட்டது நமது துர்ப்பாக்கியமேயாம்.

நமது ஆலயங்களில் நித்தியம், நைமித்திகம் என்ற இருவகை வழிபாடுகள் நடைபெறுகின்றன. அவற்றுள் நித்தியம், பக்தி ஞான வகையைச் சேர்ந்ததாகும்; குண்டலினியைக் கிளப்பிக் கொடியேற்றி நடைபெறும் நைமித்திகங்களாகிய திருவிழாக்கள் யாவும், கர்ம யோக நெறிகளாம். சாதாரண காலங்களில் அடியார்கள் ஆலயஞ்சென்று இறைவனை வழிபட வேண்டியிருக்க, கர்மநெறி காட்டும் உற்சவ மூர்த்தியானவர் திருவிழாக் காலங்களில் காலைமாலை தவறாமல் தெருத்தெருவாய் அலைந்து நம் வீடு தேடி வந்து கதவைத்தட்டி அருள் புரிவது கவனிக்கத்தக்கது. நாம் அடியாராயினும் அல்லாராயினும், கற்றாராயினும் மற்றாராயினும், பக்தராயினும் பாவிகளாயினும் பொருட்படுத்தாமல், அனைவர் வீட்டு வாயிலிலும் வந்து நின்று மேளத்தை ஒலித்து தரிசனங் கொடுக்கக் காத்து நிற்பது கர்மநெறியின் மிக முக்கியமான அம்சமாம். அவ்வாறு விருப்பு வெறுப்பின்றி உயிரினங்கள் யாவற்றிற்குமே அன்புத்தொண்டு செய்து நிற்பதே கர்மநெறியின் உயிர் நாடி.

இதுவரை விக்கிரக அமைப்பில் ஏற்பட்டுள்ள இரண்டு முறைகள் கூறப்பட்டன. இனி மூன்றாவது வகை விக்கிரகங்கள் இயற்கைத் தோற்றங்களை அடிப்படையாகக் கொண்டனவாம். சிவாலயங்களில் அவை சிவலிங்கமும் நடராஜ உருவமும் ஆகும்.

---

பாடம் 35.

## ஆலய விக்கிரகங்கள் (தொடர்ச்சி).

இது எழுதப்படுவது (16—12—1948) சர்வதாரி௵ மார்கழிமாதத் திருவாதிரைத் திங்களாகிய வியாழக்கிழமை யாகும். இப்போது பத்துநாளாக, இவ்வூரை அடுத்துள்ளதும் பஞ்சஸ்தலங்களுள் ஒன்றாகியதுமான திருக்குற்றாலத்தில் திருவாதிரைத் திருவிழா நடந்து கொண்டிருக்கிறது. இன்று இரவு முழுவதும் நடராஜப் பெருமானுக்கு விசேஷ அபிஷேகங்களும் ஆராதனைகளும் நடைபெறுவதோடு நாளைப்பொழுது புலருமுன் அங்குள்ள சித்திர சபையில் ஆருத்ரா தெரிசனமும் நடைபெறும். ஆனந்தத் தாண்டவருடைய கம்பீரத்தோற்றமும் அவருடைய அபய கரத்தின் அருட்பொழிவும் அவர் நடனத்தின் காரணமாக எழும் நாதத்தின் பலனாகிய ஐம்பத்தொரு அக்ஷரங்களையும் மூன்று கார்வைக் காலத்தில் முழங்கும் மேள ஒலியும் அதற்கேற்ப ஆடும் கண்டாமணி ஓசையும் இவற்றை ஒத்து நடைபெறும் தாண்டவ தீபாராதனையும் அடியார்களுடைய அரகரவென்ற கோஷமும் கல் நெஞ்சையுங்கரைத்து ஆனந்த பரவசப் படுத்துந் தன்மையன.

பண்டைய பட்டிக்காட்டு முறையென்று பழிக்கப்படும் அண்ணாவி பள்ளிக்கூடங்களிலும் திண்ணைப் பள்ளிக்கூடங்களிலும் படித்துவந்த நம் முன்னோர் யாவரும் பஞ்சாங்கத்துள்ள 27 நக்ஷத்திரங்களைச் சுட்டிக்காட்டவும் அவற்றின் இருப்பைக்கொண்டு காலங்கணிக்கவும் கற்றிருந்தனர். இன்று நடைபெறும் நவநாகரிக முறையில் அந்த நக்ஷத்திரங்களின் பேரைக்கூடப் பிள்ளைகள் ஒப்புவிக்க முடிவதில்லை; பெரியோரிற் பலரும் அவற்றை வரிசையாகச் சொல்ல முடியாதவரா யிருக்கின்றனர். அந்த விண்மீன்களை விளக்கும் அண்ணாவி பாட்டில் "ஆதிரை ஒரு மீன் செந்தீப்போல," என்பது திருவாதிரைக்குரிய வரி. அங்கு "ஒரு" என்பது திருவாதிரையானது அசுபதி, பரணி, கார்த்திகை, ரோகிணி போன்று கூட்ட நக்ஷத்திரங்களாயின்றி ஒரு தனியான விண்மீனென்றும், சிறந்த அல்லது மிகப்பெரிய விண்மீனென்றும் பொருள்படும். திருவாதிரை நமது சூரியனைப்

போல ஒரு லக்ஷம் சூரியர்களை விழுங்கி உள்ளடக்க வல்லதென்பது இன்றைய வான சாஸ்திரிகளின் ஆராய்ச்சி முடிவு.

ஆலயத் திருவிழாக்களில் அனேகம் பௌர்ணிமை தினத்திலேயே முடிவு பெறுவன ; அதனையொத்து இந்த ஆருத்ரா தெரிசனத்தன்று பூரண சந்திரன் திருவாதிரை ஓரையில் இருக்கும். அதனால் அன்றிரவு திறந்த வெளியில் நின்றுகொண்டு வானத்தை ஏறிட்டுப் பார்ப்போமானால் அந்தச் செந்தீ நக்ஷத்திரம் வெண்ணிலாவை யடுத்துக் காணப்படும் ; அதற்கு நேர் மேற்கில் ஒரு வெள்ளிய விண்மீன் இருக்கும்; இரண்டுக்கும் இடையே சற்று வடக்காக மிருகசீரளம் துலங்கும். இந்த மிருக சீரளம் பூரண நிலவின்போது வெறுங் கண்ணிற்குப் புலப்படுவதில்லை. சிறு பைனாக்குலர் மூலம் அதனைத் தெளிவாய்க் காணலாகும். ஆனால் மற்ற இருட்டுக் காலங்களில் அது வெறுங்கண்ணிற்கு நன்கு விளங்கும். "சீரளம் மூன்றும் தேங்காய்க் கண்போல்" என்பது அதற்குரிய அண்ணுவிப்பாட்டு. இப்போது செந்தீயை ஆனந்தக் கூத்தனுடைய ஒரு திருக்கரத்துள்ள செந்தீயாகவும், மற்ற வெள்ளை மீனை மற்றத்திருக்கரத்துள்ள (டமருகம்) உடுக்காகவும் கருதுவோமானால், இரண்டிற்கும் நடுவே முகம்போலுயர்ந்துள்ள மிருக சீரளம் முக்கண்ணனாகிய சிவபெருமானுடைய முகத்தைக் குறிப்பிடும். இனிச் சற்றுகீழே நோக்குவோமானால், அங்கு வீசிய காலும் ஊன்றிய திருவடியும், அதன் அடியில் முயலகனும் படம் பிடித்ததுபோல விளங்கும். முயலகனுடைய முகம் மிக்க ஒளி வீசும் ரைகல் (Rigel) என்ற நக்ஷத்திரமாகும். திருவாதிரை பீற்றல் க்யூஸ் (Betelgeuse) என்றழைக்கப்படுகின்றது. இந்த நக்ஷத்திரத் தொகுதி முழுவதும் மேனாட்டாரால் ஒரையன் (Orion) என்ற கிரேக்க புராண சம்பந்தமான வேடன் என்றும், நம்மவரால் ஆ—ருத்ரதாண்டவ நக்ஷத்திரமென்றும் அழைக்கப்படும். காலடிக்கீழுள்ள முயலகன் உருவம் மேனாட்டாராலும் முயல் (The Hare) என்றே அழைக்கப்படுகின்றது. "பார்க்குமிடமெங்கும் பரமன் காணம்மானே" என்ற இன்னாட்டவர் மனப்பான்மைக்கும், "அண்டமுழுவதும் மனிதனுக்குக் கொல்லவும் தின்னவுமே படைக்கப் பட்டுள்ளன," என்ற மேனாட்டார் மனப்பான்மைக்கும், இந்த நக்ஷத்திரத் தொகுதிக்கு இரு நாட்-

டாரும் கொடுத்துள்ள பெயரே ஒரு நல்ல சான்றாகும். படத்தி-லிருந்து (படம் பக்கம் 288) ஔரையனுக்கும் நடராஜ உருவத்திற்கு முள்ள பொருத்தம் எளிதில் விளங்கும். உற்று நோக்குவோருக்கு நடராஜர் பிரபைமுதல் பதஞ்சலி, வியாக்கிரபாதர்வரை விருப்ப-மானபடியெல்லாம் வானத்திலாக்கிக் கொள்ளலாகும். வானத்தை நோக்குவோர் வடக்குநோக்கி நின்று நடராஜரைப்போல அபிநயம் பிடிப்பாராயின் ஆருத்ரதாண்டவன் இடது கால் தூக்கி ஆடுவது விளங்கும்; தெற்கு நோக்கி நிற்பின் தாண்டவமூர்த்தி வலது காலைத் தூக்கிநின்று தென்மதுரைச் சொக்கராலயத்தில் கால் மாறியாடும் வித்தையைக் காணலாகும்.

இனி, இறைவனே அண்டத்திற் கண்டமாயும் அணுவிணுக்-கணுவாயும் நிற்பவன். அந்த அணுக்களும் ஓயாத தாண்ட-வத்தில் ஈடுபட்டு நிற்கின்றனவென்பது இன்று மேனாட்டு விஞ்ஞானிகளும் ஒப்புக்கொள்ளும் உண்மை. ஆயினும் அவர்கள் அணுவின் உருவத்தை இதுவரை கண்டவரல்லர். ஆனால் அணுக்கள் என்ற பொருள்கள் சப்த உலகங்களுக்கும் தனித்தனி-யுள்ளன என்பதை இதுவரை கூறியவற்றைக் கற்றவர் அறிவார்-கள். பரமாணு என்பது விந்துவாகும். அவ்விந்துவின் பலவகைப்-பட்ட தொகுதிகள் சப்த உலகங்களுக்கும் தனித்தனி அமைந்த அணுக்களாம். மேல் நாட்டார் சப்த உலகங்களை ஒப்புக் கொள்ளாத முறையில் அவர்கள் கருதுவது இப்பூலோக அணுவேயாம். அது $49^6$ அதாவது (1400 கோடி) விந்துக்-களால் கட்டப்பட்டுள்ள ஒரு கூடு என்று மேலேகூறப்பட்டுள்ளது. அதன் வடிவத்தை யோகசித்தர்களாகும் அன்னை வசந்தம்மை-யாரும் வங்கப்பணி முனிவரும் (Mrs. Annie Besant and Bishop Leadbeater) நெற்றிக்கண் கொண்டு பார்த்தெழுதியுள்ள "ரஸாயன மறைநூல்" (Occult Chemistry) என்ற புஸ்தகத்தில் படமாக வரைந்து தந்துள்ளனர். (படம் பக்கம் 288) அந்த அணுப்படத்தின் நடுவில் ஒரு காலணுவை வைப்போமானால், அதற்கும் நடராஜ உருவத்திற்கும் உள்ள மிகப்பெரும் ஒற்றுமை எளிதில் புலப்படும். படத்தில் காட்டப்பட்டுள்ள அணுக்களில் நெருங்கிக் காணப்படும் புள்ளிகள் யாவும் தனிப்பட்ட விந்துக்க-ளாகும்; கனத்த கோடுகள் மூன்றும் அந்த விந்துக்களை அணு

உருவத்தில் கட்டிப் பிடித்து ஆட்டி இயக்கிக் கொண்டிருக்கும் பிரம்ம விஷ்ணு சிவாம்ச சக்திகள் ஓடும் பாதைகள். அவை வலப்புறமிருந்து கீழ்நோக்கி ஓடும்போது பெண்ணணுவும், இடப்புறமிருந்து அங்ஙனம் ஓடும்போது ஆணணுவும் அமை-கின்றன. அவற்றின் சேர்க்கையாலேயே இந்த ஸ்தூல உலகப்-பொருள்கள் யாவும் உருவெடுக்கின்றன. அணுக்களில் ஓடும் அம்மூன்று சக்திகளும், இடை, பிங்கலை, சுழுமுனை நாடிகளில் ஓடும் குண்டலியின் பிரிவுகள் போன்று சிவப்பு, பொன்மை, நீல நிறங்களைக் கொண்டனவாயிருக்கும். இந்த அணுவுருவம் சிறி-தளவு யோகப் பயிற்சியாலேயே எளிதில் காணக்கூடியதொன்று. மேல்நாட்டு பௌதிக சாஸ்திரிகளில் ஒழுக்கத்தாலும் சத்துவ ஆகாரத்தாலும் மனக்கூர்மையாலும் வேகமாய் முன்னேறிவரும் ஒரு சிலர், இன்னும் சிறிது காலத்தில் இந்த பூலோக அணுக்-களைக் காண வல்லவராவரென்று அறிஞராற் கூறப்படுகின்றது. அன்றே நம் முன்னோருடைய விஞ்ஞான அறிவின் ஏற்றம் மேனாட்டாருக்கும், அவர் மூலம் நம்மவருக்கும் வெளிப்படும்.

நடராஜ பிம்பத்திற்கு மேலே சொல்லப்பட்டுள்ள காரணம் வேறு எங்கும் கூறப்பட்டிருப்பதாகத் தோன்றவில்லை யாதலால், இங்கு கூறப்பட்டவை வலிந்து, அதாவது இழுத்துப் பறித்துப்-பொருள் கொண்டுள்ளதாகத் தோன்றுவது இயல்பு. ஆனால் நடிகை மாதொருத்தி இரவும் பகலும், நாள்தோறும் வாரந்-தோறும், மாதம் முழுவதும் ஆண்டு முழுவதும், ஆண்டாண்டு-களாவும், ஒரே அபிநயம் பிடித்து ஆடிக்கொண்டிருப்பாளானால், அவள் அழகில் மோகினியா யிருப்பினும், கலையில் சரஸ்வதியா-யிருப்பினும், பார்ப்போருக்கு அவள் ஆட்டத்தில் அலுப்புத்-தட்டிவிடுவது திண்ணம். அங்ஙனமிருக்க, நடனத்திற்கே ராஜனாயுள்ளவர், அநநடனத்திற்கு ஆதிகாரணராயுமுள்ளவர், இந்தியாவிலுள்ள ஆயிரக்கணக்கான சிவாலயங்களில் ஆயிரக்-கணக்கான அபிநயங்களில் ஆடுவதை விட்டு, அன்றும் இன்றும் என்றும், ஆலய மூர்த்தியாக வணங்கப்படும் எங்கும், ஒரேவித ஆட்டமே ஆடிக்கொண்டிருப்பாரானால் அதற்கு ஆழ்ந்த காரண மொன்று இருக்கவேண்டு மென்பது உறுதி. அந்த ஆட்டம் இந்த பிரம்ம கல்பத்திற் கேற்பட்ட அணுவினுடைய ஏகமான அபிநய-

மென்று கொள்ளுதல், நம் முன்னோர் அறிவையும் ஆற்றலையும் யோகக் காக்ஷியையும் வியந்து போற்றுதற்கு ஏதுவாகும்.

அடுத்ததாக, சூரியனைச் சுற்றியுள்ள ராசிச்சக்கரத்தில், பன்னிரண்டு ராசிகளுள், "அசுபதி—பரணி—கார்த்திகை கால்," மேஷம், அதாவது ஆட்டுருவத்தையுடைய ராசி, என்னப்படுகின்றது. அந்த ஆட்டுக் கடாவே கார்த்திகைப் பெண்கள் வளர்த்த கார்த்திகேயன் முருகனுடைய வாகனமாகக் கற்பிக்கப்பட்டுள்ளது. "கார்த்திகை முக்கால்—ரோகிணி—மிருகசீரளம் அரை," ரிஷபராசி. அதுவே மிருகசீரளம் போன்ற முக்கண்களையுடைய முக்கண்ணன் சிவபெருமானுக்குக் கற்பிக்கப்பட்டுள்ள வெள்ளேறு. இவ்வாறு அண்டத்துள்ள இறைவன் படைப்பிற்கும், ஆன்றோர் வகுத்துள்ள இறை உருவங்களுக்கும் உள்ள பல பல ஒற்றுமைகளையும் காரணங்களையும், யோகியரும் வித்தகச் சித்தருமே பூரணமாக விளக்கவல்லவர்.

இனி, சிவாலயத்துட் காணப்படும் மற்றொரு இயற்கைத் தோற்ற உருவம் சிவலிங்கமாம். வங்கப்பணி முனிவர் எழுதியுள்ள "சக்கரங்கள்" என்ற நூலில் (The Chakras by The Rt. Rev. C. W. L.) "சக்திகளின் திருமணம்" என்ற தலைப்பின்கீழ் அவர் கூறுவதின் சுருக்கமாவது :—

"பெண் தன்மையுடைய குண்டலினி சக்தியானது, பூமியின் உள் நடுமையத்திலிருந்து மனிதனுடைய முதுகுத் தண்டினடியிலுள்ள மூலாதாரத்துள் புகும்; அங்கிருந்து முதுகுத்தண்டு வழியாக மேல் நோக்கி ஏறும். மனித உடம்பிலுள்ள ஆதாரத் தாமரைகள் ஆறும், அவனுடைய பிராணமய கோசத்தின் மேற்புறத்தில் அமைந்திருப்பனவாயினும் அவற்றின் தண்டுகளாகிய நாளங்கள் முதுகுத்தண்டில் இணைக்கப்பட்டிருக்கும். குண்டலினியானவள் இந்த இணைப்பு முடிச்சு அல்லது கிரந்திகளுக்கு வந்தவுடன், அச்சக்தியின் ஒவ்வொரு சிறு பகுதி அந்தந்த நாளங்களின் வழியே ஓடி ஆதாரத் தாமரைகளில் வந்து சேரும். அங்கு ஆண் தன்மையுள்ள ஜீவசக்தியானது (Primary force) புறத்திருந்து தாமரையின் உள்ளே வந்து இறங்கும். அப்போது இரு சக்திகளும் ஒன்றையொன்று எதிர்த்துத் தாக்கி இரண்டும்

பக்கம் 296

குண்டலினி அணுக்கூடு

ஜீவசக்தி அணுக்கூடு



(1)



(2)



(3)



1+2 = (4)



1+3 = (5)



கலப்புருவங்கள்

(பக்கப் பார்வை).

சிவலிங்க வடிவம்.

ஒன்றாகக் கலந்து விடுகின்றன. இந்த இரு சக்திகளின் சேர்க்கையினாலேயே உடம்புகள் அனைத்தும் உயிர் வாழ்கின்றன.

இனி, சக்திகள் ஒன்றும் கண்ணுக்குப் புலப்படுவதில்லை; அவை தொழிற்படுவதைக்கொண்டே அவற்றின் இருப்பை உணரமுடியும். குண்டலினி சக்தியானது தொழிற்படும்போது பூலோக அணுக்கள் (நடராஜ உருவங்கள்) ஏழை ஒன்று கூட்டி, அவற்றை வட்டமாக அமைத்து, அதனைத் திரிகை மூடிபோல மந்தமாகச் சுழற்றிக்கொண்டேயிருக்கும். அந்த அணுக்கூட்டைக் குண்டலினியின் உடம்பென்னலாம். (படம் 1 பக்கம் 296) அம்மாதிரியே ஜீவசக்தியும் மூன்று அல்லது ஐந்து அணுக்களை ஒன்று கூட்டி மேற்சொன்ன திரிகைபோலவே அதுவும் மந்தமாகச் சுழன்று கொண்டிருக்கும். ஆனால் இங்கு, திரிகையின் நடுவிலுள்ள ஆண் அணுவானது (இடதுகால் தூக்கிய நடராஜ வடிவம்) பஞ்சு வெட்டுவது போன்று இடைவிடாது மேலும் கீழுமாக ஆடிக்கொண்டிருக்கும். அது வட்டத்திற்கு மேலே செல்லும் உயரம் வட்டத்திற்குக் கீழேயும் இறங்கும். அவ்விதம் ஏறியிறங்குவது வெவ்வேறு அசைவுகளாக நெற்றிக் கண்ணுக்கு நன்குபுலப்படும். இந்த அணுக்கூட்டை ஜீவசக்தியின் உடம்பென்னலாம். (படம் 2–3 பக்கம் 296). இந்த இரண்டு திரிகை மூடிகளும் எதிர்த்துவந்து பொருந்தும்போது, அவைஇரண்டும் இரண்டறக்கலந்து சிவலிங்க வடிவம் ஏற்படுகின்றது. தனித்தனியேயிருக்கும்போது மந்தமாய்ச் சுற்றிக்கொண்டிருந்த இந்த இரு சக்கரங்களும் இப்போது ஏகமாகி, (படம் 4-5 பக்கம் 296) அந்த ஏகவட்டம் மிக மிக வேகமாய்ச் சுழலுகின்றது. அந்தச் சுழற்சி வேகத்தால் அங்குள்ள அணுக்கள் முன்போல நெற்றிக் கண்ணுக்குத் தனித்தனியாகப் புலப்படாமலும் சக்கரம்சுற்றுவது கூடத் தோன்றாமலும் எல்லாம் ஜோதிமயமான ஒரே வட்டமாக நிலைத்திருப்பதாகக் காணப்படுகின்றது. நடுவிலுள்ள ஆண் அணுவும் மிகமிக வீரியம்பெற்று மேலுங்கீழும் ஏறி இறங்குவது கண்ணுக்குக் காணப்படாத வேகத்தில் ஆடுவதனால், அது கோடி சூரியப் பிரகாசமான ஒளிப்பிழம்பாக நிற்பதாகவே தோன்றுகின்றது. அப்போது அங்கு வெவ்வேறு சலனங்கள் எதுவும் புலப்படாமல் ஜோதிர்லிங்கம் ஒன்று மாத்திரம் ஸ்திர உருவாக

அமைந்திருக்கின்றது. அச்சேர்க்கை உருவம் பார்வைக்கு ஒரு அற்புதக் காக்ஷியாக விருக்கும்.”

இந்த அற்புதக் காக்ஷியை விளக்கிவிட்டு வங்கப்பணிமுனிவர் எழுதியுள்ளதாவது. “இந்தக் கலப்பு உருவத்தின் மேல் பாக-மானது சிவாலயங்களின் முன்னே காணப்படும் லிங்க உருவத்-தோடு அதிசயிக்கத்தக்க ஒற்றுமையுடையதாகக் காணப்படு-கின்றது. அந்த லிங்கம் மேலே நீண்டிருக்கும் உயரம் அடியிலும் ஆழ்ந்திருப்பதாக அச்சமயத்தவர் கருதுகின்றனரென்று கூறப்-படுகின்றது. பண்டைய இந்துக்கள் இந்த வீரியம் மிக்க அணுக்-கலப்பைக்கண்டு, சகல உயிரினங்களின் உயிர் வாழ்க்கைக்கும் அக்கலப்பணுக்களின் இன்றியமையாமையையும் உணர்ந்து, தங்கள் குப்த அறிவிற்கு அறிகுறியாக அவற்றைக் கல்லில் செதுக்கி வைத்துள்ளனரோ என நான் அதிசயிக்கின்றேன்,” (The Chakras பக்கம் 21) என்பதே.

சமயங்களுக்குள் வேற்றுமை யொன்றும் பாராட்டாதவரா-யினும் வங்கப்பணிமுனிவர் வெள்ளையரானமையால் சிவாலயங்-களின் உள்ளே சென்றிருப்பதில்லை, செல்ல விடப்படவில்லை. இன்-றைய ஆலயப் பிரவேசச் சட்டம் அவர் காலத்து இல்லாதிருந்தது. அவரை அண்டியிருந்த இந்துக்களும் சிவலிங்க உருவம் ஆவுடை, லிங்கம் என இரு துண்டுகளாகச் செய்யப்பட்டு ஒன்றாகப் பிரதிஷ்டை செய்யப்படுவதை விளக்கியதாகத் தெரியவில்லை. மேனாட்டுக் கல்வியில் திளைத்திருந்த அந்த இந்துக்கள், தாமே அறிந்திருந்தனரோ என்பது ஐயப்படவேண்டியதே. மதுரை, தென்காசி, திருக்குறுங்குடி முதலிய ஆலயங்களிலுள்ள அற்புத-மான நுணுக்கப்பணித் தூண்சிலைகளைப் பத்துப் பதினைந்தடி உயரங்களில், பத்திருபதடிச் சுற்றளவில் ஒரே கல்லில் அமைக்க-வல்ல ஆற்றலுள்ள நம் நாட்டுச் சிற்பிகள், இந்தச் சிறு சிவலிங்க உருவத்தை ஆட்டுரலும் குழவியுமாக இரண்டாகச் செதுக்கித்-திரும்பவும் மருந்து சாத்தி ஒன்றாக்க வேண்டிய ஆவசியம் அற்றவராவர். நம்மில் யோக சக்திகளில் நம்பிக்கை யுள்ளவ-ருக்கு, வங்கப்பணி முனிவர் தம் யோகாராய்ச்சியால் விளக்கி-யுள்ள இதன் ஆழ்ந்த உண்மை, சிவலிங்க உருவத்தைப்பற்றிச் சில

அஞ்ஞானிகள் பிதற்றும் ஆபாசக் கருத்துகளையும் ஐயப்பாடு-களையும் போக்கி, இறைவனுடைய அற்புதப் படைப்புகளில் அவரை லயிக்கச்செய்யும்.

இத்தகைய உயர்ந்த தத்துவமாகும் ஜோதிர் லிங்கத்தை, தம்மைப் பெரிய மேதாவிகளென மதித்துக்கொள்ளும் இன்றைய ஞான சூனிய மக்கள் ஆண்பெண் புணர்ச்சிக் கலப்புப் படமெனக் கூறி நகையாடுகின்றனர். ஆடுமாடுகளினிடையும் அன்றாடம் நடைபெறும், யாவருங் காணத்தக்க, இந்தச் சிற்றின்பக் கிரியையை, ஆலயத்துள் பல்லாயிரக் கணக்காகச் செலவிட்டுச் சிலையாக வகுத்துக் காட்டவேண்டிய அவசியமோ, அதனை இறைவனுடைய அறிகுறியாகக் கொண்டாடவேண்டிய அவசி-யமோ, அதற்குப் பெருஞ்செலவிட்டுப் பிராணப் பிரதிஷ்டை செய்யவேண்டிய அவசியமோ, சிறிதும் இல்லையென்பதை நம்மவரே உணருகின்றிலர். அது மிகவும் வருந்தத்தக்கதா யிருப்பதோடு, அன்னிய மதத்தவர் நம்மை இழிவாகக் கருதவும் இடங்கொடுக்கின்றது.

சிறிது தயக்கத்துடனேயே வேறொரு குறிப்பும் இங்கு வெளியிடப்படுகின்றது. வடமொழி வேதங்களில், பண்டு சிவலிங்கத்தை சிசுன தேவரென்றும் அவரை வழிபடும் இனத்-தாரை இழிவாகவும் கூறியிருப்பதாகச் சொல்லப்படுகின்றது. அத்துடன் தாண்டவ மூர்த்தியின் விக்கிரகமும் தென்னிந்திய ஆலயங்களிலேயே இடம்பெறுவதாகவும் சொல்லப்படுகின்றது. ஆதிரையும் தமிழ் நாட்டுப் பண்டைச் சங்க நூல்களிலேயே பெரிதும் பாராட்டப்படுவதாகவும் கூறப்படுகின்றது. இவை-யாவும் உண்மையாயின், நடராஜ உருவமும் சிவலிங்க வடிவமும் திராவிட மெய்ஞ்ஞானிகள் வகுத்து வைத்தனவா? பின்னால் ஆரியரால் கைக்கொள்ளப் பட்டனவா? இன்றும் சிவலிங்கத்தை சிசுனதேவராகக் குறிப்பிடுவது ஆரியருள் ஒருவராகிய வெள்ளை-யரும் அவரைப் பின்பற்றும் கிறிஸ்தவ மக்களுமே. அவருடைய புறநாகரிகங் கண்டு மயங்கும் நம்மவரிற் பலரும் இப்போது அவருக்குப் பின்பாட்டுப் பாடுகின்றனர். அணு வடிவத்தையும், சிவலிங்க வடிவத்தையும், அவற்றின் இயற்கை உண்மைகளையும்,

இன்று நெற்றிக்கண்ணுல் விளக்கியுள்ளவரும் அந்த வெள்ளை ஆரியருள் ஒருவரேயாவர். அவர் கிறிஸ்தவ மதத்து (Bishop) அத்யக்ஷகராயு மிருந்தவரெனத் தாழ்மையாய்த் தெரியப்படுத்தப் படுகின்றது.

மேனுட்டில் இன்றைய விஞ்ஞானிகளுக்கு மகுடம்போல விளங்குபவர் ஆல்பர்ட் ஐன்ஸ்றீன் (Prof. Albert Einstein) என்ற மேதையர். அவர் "The Unity of Life"—"உயிர் ஒற்றுமை" என்ற உரை யொன்றில்:—

"இன்று, இடம், காலம், பிரகிருதி, சக்தி, ஒளி, மின்சாரம், சடத்தன்மை, ஆகர்ஷணம் முதலிய யாவும் ஒரே தன்மை கொண்ட இயற்கைத் தொழிற்பாட்டின் வேறுபட்ட தோற்றங்களாகவே அறியப்படுகின்றன. விஞ்ஞான சாஸ்திரங்கள் யாவுமே பிரகிருதி சாஸ்திரத்தில் (Physics) அடங்கி விடுகின்றன. பிரகிருதி சாஸ்திரமோ ஒரே நியதிக்குள் ஒடுங்குவதாகப் புலப்படுகின்றது. அந்நியதியை சாதாரணப் பேச்சு வழக்கில் "ஏதோ ஒன்று அசைகின்றது" (Something moves) என்று கூறிவிடலாம். மனிதனுடைய நெடு நாளைய ஆராய்ச்சியின் பலன் முழுவதும் இத்தகைய நாடோடி வழக்கில் அடங்கி விடுமானுல், குற்றம் என்னுடையதன்று. ஆதிமூலத்தை நோக்கி ஆராய்ந்து கொண்டே செல்வோமானுல், நம்பத்தகாத எளிமைகொண்ட இம்மாதிரிக் கருத்தொன்றே பெறப்படுகின்றது" என்கின்றனர்.

இந்த எளிய முதிய உண்மையை "ஏதோ அசைகின்றது," என்னுமல், "ஒருவன் ஆடுகின்றுன். யாவும் ஆகின்றன." என்று நம் பண்டையோர் ஐரோப்பிய நாகரிகம் கருக்கொள்ளு முன்னமே விளக்கியது மாத்திரமல்லாமல், அவ்வுண்மையைச் சிறுவரும் அறியும் வண்ணம் நடராஜ உருவத்திலும் அமைத்து வைத்தனரென்ருல், அவருடைய நுண்ணறிவின் எல்லையை யாரே வரையறுக்கவல்லவர்!

பாடம் 36.

## அண்டம்.

“ மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லிகணை தெரிந்து மெய்காப்ப—முல்லை
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை அந்திப் பொழுது ”

அப் புன்மாலை மறையும்போது, வரண்ட பாலைவனத்தில் வெண்முள்ளி ஏகமாய்ப் பூத்துக்கிடப்பதுபோல வானம் முழுவதும் வெள்ளி மயமாய் விளங்குகின்றது. அவ் வெள்ளிகள் அனைத்தும் நெற்றிப் பொட்டளவே காணப்படுகின்றன; விமானத்தில் ஏறிப் பறந்தால் எட்டிப் பிடிக்கக்கூடிய உயரத்திருப்பதாகவே தோன்றுகின்றன. அவற்றின் உயரங்கள் என்ன, பருமன்கள் என்ன? இன்றைய வானசாஸ்திரிகளின் முழுக்கவனமும் இந்தப் புற ஆராய்ச்சியிலேயே இப்போது செலுத்தப்படுகின்றன. 8 அடி, 16 அடி குறுக்களவுள்ள தொலைப்பார்வைக் கண்ணாடிகள் (Telescope), வானவில் கண்ணாடிகள் (Stereoscope), புகைப்படக் கண்ணாடிகள் (Cameras) ஆகிய பல கருவிகளைக்கொண்டு ஆகாயத்தை இடைவிடாது அவர்கள் ஆராய்ந்த வண்ணமாகவே இருக்கின்றார்கள். அவ்விதம் உலகத்தின் பல பாகங்களிலும் பல மேதாவிகள் இருந்து இரவும் பகலுமாக உழைத்து வருகின்றனர். அவர்கள் அறைகுறையாகக் கண்டு பிடித்தவையே நம்மை பிரமிக்கச் செய்கின்றன. பொதுவாக இன்றைய பூத பௌதிக விஞ்ஞான ஆராய்ச்சியின் நுட்பங்களே நம்மை விலவிலக்கச் செய்கின்றன; ஆனால் வானசாஸ்திர உண்மைகள் மனதையே ஸ்தம்பிக்கச் செய்வனவாகும்.

அன்னவர் கூறுவதிலிருந்து, ஆகாயத்தில் காணப்படும் நக்ஷத்திரங்களெல்லாம் சூரியர்களாம்; அதனால் நமது சூரியனும் ஒரு நக்ஷத்திரமென்று ஆகின்றது. நமது சூரிய உருண்டையின் குறுக்களவு 860,000 மைல்களாம்; அதாவது அதன் அகலம் உயரம் ஒவ்வொன்றும் எட்டரை லக்ஷம் மைல்களுக்கு மேலாம். ஆயினும் அது ஒரு நக்ஷத்திரக் குஞ்சுதானும். அதனை அப்படியே

கவளீகரிக்கக்கூடிய பெரிய ஆந்தைகள் கோடிக் கணக்காக ஆகாயத்தில் இருக்கின்றனவாம். குஞ்சுகள் இவ்விதம் 8½ லக்ஷம் மைல் ஒல்லியா யிருக்குமானால் கொஞ்சம் தடியர்கள் என்ன பருமனில் இருப்பார்களென்று நினைக்கிறீர்கள்? மார்கழிப் பௌர்ணமியன்று ஆகாயத்தில் ஆருத்ராதரிசனம் நடைபெறுவது மேலே சொல்லப்பட்டது. அந்தத் தாண்டவ ருத்ரமூர்த்தி ஓரையன் என்று மேனாட்டாரால் அழைக்கப்படுபவர். அவருக்கு ஒரு கையிலிருப்பது திருவாதிரை என்ற சிவப்பு நக்ஷத்திரம். அதன் குறுக்களவெல்லாம் கொஞ்சந்தான், அதாவது 24 கோடி மைல்தானும். 300 சூரியரை வரிசையாக அடுக்கினால் ஒரு திருவாதிரையின் அகலமாம். சூரியன், சந்திரன், சுக்கிரன், புதன், பூமி, செவ்வாய் இவ்வளவும் இவை சுற்றிவரும் மண்டலங்களும் திருவாதிரைக்குள் ஒருங்கே அமுங்கிவிடுமாம். இப்போது மனம் தடுமாறுகின்றதா அல்லது திகைக்கின்றதா! இந்த 24 கோடி மைல் கனங்கொண்ட பந்து ஒரு நெற்றிப் பொட்டுப்போல் காணப்படுமென்றால், அது எவ்வளவு உயரதூரத்தில் ஆகாயத்தில் மிதக்கவேண்டும்? அந்த உயரமும் கனமும் நமக்கு மனதில் அடைபடுகின்றனவா என்று எண்ணிப்பாருங்கள். இந்த உயரத்தையும், கனத்தையும், கணக்கிடவல்லோருடைய அறிவு நுட்பந்தானென்ன?

ஆனால் திருவாதிரைக்கும் பெரிய வீரர் பலர் இருக்கின்றனர். கர்க்கடகத்தில் பெரிய வெள்ளி அன்ற்றாரீஸ் (Antares) என்பது. அது 450 சூரிய அகலமாம். நமது பூமியில் திருச்சிராப்பள்ளி வானொலி நிலையத்தில் ஒரு சுடக்கிட்டால் அது ஒரு நொடியில் ஏழு தரம் பூமியைச் சுற்றிவிடுமாம்; அதாவது ஒரு செக்கண்டு நேரத்தில் அச்சுடக்கு ஏழுதரம் பூமியை வளைந்து வருவதனால் வானொலி நிலையத்தில் அது ஏழுதரம் அடுத்தடுத்துக் காதில் அடிபடும். நமது கர்க்கடகத் திருச்சியில் ஒருவன் அவ்வாறு சுடக்கிடுவானானால் அதனை அவ்விடத்து வானொலியில் திரும்ப ஒருமுறை கேட்பதற்கே இரண்டு ஆண்டுகள் பிடிக்குமாம். வானொலி அலையோ நொடிக்கு 186,000 மைல் வேகத்தில் பறப்பது. அப்படியானால் அனற்றாரீஸ் சுற்றளவு என்ன? வேறு, எப்ஸைலன் (Epsilon) என்ற ஒரு பெரிய நக்ஷத்திரம் 240 கோடி மைல் பருமன் என்று

கணக்கிடுகிறார்கள். வானத்தில் வெறுங் கண்ணுக்குத் தெரியக்-கூடிய வெள்ளிகள் மிகச் சுருக்கமென்கிறார்கள். நள்ளிரவில் ஓரிடத்தில் நாற்புறமும் நம் கண்ணுக்கு புலப்படுவன 1000 நக்ஷத்-திரங்களுக்கு மேலில்லை. இரண்டு ஆங்கில வானசாஸ்திரிகள், தகப்பனும், மகனும், 24 ஆண்டுகளாக உலகின் பல பாகங்களிலுஞ் சென்று படம் வரைந்து கணக்கிட்டதில், வெறுங் கண்ணுக்குப் புலப்பட்டவை அறுபதினாயிரம் நக்ஷத்திரங்களாம். இன்று தொலைப்பார்வைக் கண்ணாடியிலும் புகைப்படக் கண்ணாடியிலும் புலப்படுபவை ஒரு கோடி இருகோடியல்ல, பல கோடிகளல்ல, கோடிக்கோடியாம். இன்னும் அவற்றின் அறுதி கண்ட-பாடில்லை.

இனி வேறொரு விசித்திரம்: வானில் குழுமியுள்ள இவ்வளவு பெருந் திருவிழாக் கூட்டத்தில், நம்மை நெருங்கி நிற்பவர் எவ்வளவு அடுத்து நிற்பதாக நினைக்கிறீர்கள்? ஆல்பா ஸென்டாரி (Alpha Centare) என்பவர் நமக்கு அண்டை வீட்டுக்காரராம். அவரும் ஒரு நக்ஷத்திரக் குஞ்சுதானாம். அவருக்கும் நம்முடைய சூரியனுக்கும் ஒரே முற்றமாம், ஒரு முகட்டுக் கூரையாம். இடை-யில் யாரும் இல்லையாம். அவ்வளவு அடுத்திருப்பவர் நம்மிட-மிருந்து நாலேமுக்கால் ஒளி வருஷதூரமாம். ஒளியானது ஒரு நொடிக்கு 186,326 மைல் செல்லுமாம். அதனால் ஒரு ஒளி வருஷம் (ஒளுவாண்) ஆவது 365 நாள் × 24 மணி × 60 நி × 60 செ × 186326 மைல்கள் = 5,880,000,000,000, ஏறக்குறைய 6 லக்ஷங் கோடி மைல் என்னலாம். ஆகவே நம் சூரியருக்கு அண்டை வீட்டுக்காரர் அந்த தூரத்திற்கு 4¾ பங்கு, அதாவது சுமார் 28 லக்ஷங்கோடி மைலுக்குள் குடியிருப்பவர். மணிக்கு இருபது மைல் மகாவேகத்தில் பறக்கும் தென்னிந்திய ரயிலில் ஏறிச் சென்றால் எத்தனை ஆண்டுகளில் நம் அண்டை வீட்டை, நமக்கு அடுத்த ஸ்டேஷனை அடையலாமென்று வெட்டி நேரமுள்ளவர்கள் கணக்குப் பெருக்கிப் பார்ப்பாராக. சந்திரன் திருவாதிரையி-லிருப்பதாகப் பஞ்சாங்கம் ஒரு வரியில் சொல்லிவிடுகிறது. அதைப்பார்த்து நாம் நினைப்பது என்னவென்றால், சந்திரனுக்குச் சற்றுப் பின்னால் திருவாதிரை இருப்பதாகத்தான்; அதாவது கூப்பிடு தூரத்தில், என்பது நமதெண்ணம். சந்திரனிருப்பது

நம்மிடமிருந்து 239,000 மைல் தூரத்தில். திருவாதிரை இருப்பது 350 ஒளிவாண்டில்; அதாவது 350 × 6 லக்ஷங் கோடிமைல் (350 × 6,000,000,000,000). சப்தரிஷி மண்டலத்தில் மாத்திரமே 80 ஒளிவாண்டிலிருந்து 15 கோடி ஒளிவாண்டு வரையுள்ள பல்லாயிரக் கணக்கான நக்ஷத்திரங்களும், வெறுங் கண்ணுக்குப் புலப்படாது தொலைக் கண்ணாடியில் மாத்திரமே காணப்படுவதான எண்ணற்ற திருப்பாற் கடல்களும் இருக்கின்றனவாம். ஆனால் நாம் நினைத்துக்கொள்வது ஒரே தகட்டில் ஏழு பொட்டுகள் போன்ற நக்ஷத்திரங்கள் கலப்பைக் குறிபோலப் பதிக்கப்பட்டிருக்கின்றன என்பதே; ஆயினும் அவை ஏழுமே ஒன்றுக்கொன்று பலபல கோடிக்கணக்கான மைல்களுக்கு முன்னும் பின்னுமாக இருப்பதாகவே தெரியவருகின்றது. அசுபதி, பரணி, கார்த்திகைகளெல்லாம் அறுபது எழுபதினாயிரமும் அதற்கு மேலுமுள்ள ஒளிவாண்டுக்களாம். நாம் இன்று பார்ப்பது அவை எழுபதினாயிரம் ஒளிவாண்டு ஆண்டுகளுக்கு முன்னிருந்த இடத்தைத்தானும்; அதாவது எழுபதினாயிரத்தை 6 லக்ஷம் ஆண்டுகளால் பெருக்கி அதற்கு முந்திய காலத்தில், என்று பொருள். அந்த இடம் இப்போது புல் முளைத்துப் போய்விட்டதாம். அவ் வெள்ளிகள் இன்று இருக்கும் இடம் ஆண்டவனுக்குத்தான் தெரியுமாம். இன்னும் எத்தனையோ கோடிக் கோடிக் கணக்கான ஆண்டுகளுக்குப் பின்னரே மக்கள் அவற்றைக் காணமுடியும் என்று வானசாஸ்திரிகள் கூறுகின்றனர். இவற்றிற்கும் அப்பாலுள்ள நக்ஷத்திரங்கள் எண்ணில்லாதன. அண்ட்ராமிடா (Andromeda) என்பவள் ஒன்பது லக்ஷம் ஒளிவாண்டுக்கப்பாலுள்ளவள் என்கின்றனர். நாற்பது ஐம்பது லக்ஷம் ஒளிவாண்டுக்கப்புறம் உள்ள நக்ஷத்திரங்களும் பல இருக்கின்றன. இவைபோன்ற அதிசயங்களை இன்றைய வானநூல்களிற் காண்க. இவ்வெள்ளிகளெல்லாம் இம்மாதிரி மனத்திற் கெட்டாத்தூரத்திலிருந்து நெற்றிப் பொட்டளவாகத் தோன்றுவது அதிசயமல்ல, நம் வெறுங்கண்ணுக்குத் தென்படுவதே அதிசயத்திலும் அதிசயமாகும்.

இப்போது மூன்றாவதொரு விசித்திரத்தைப் பார்ப்போம். நம் பிள்ளைகள் கைகளை விரித்துக்கொண்டு "அட்டலங்காய்

விட்டலங்காய்" சுற்றுவதைப் பார்த்திருப்பீர்கள், அதாவது பம்பரம்போல் தம்மையே சுற்றிக்கொண்டு தலை கிறுக்கிக் கீழே விழுவார்கள். அன்றி, திருக்கார்த்திகை, தீபாவளிக் கொண்டாட்டங்களில், அவர்கள் கிறுகிறு வாணம் சுற்றுவதையும் பார்த்திருப்பீர்கள், அதாவது பொறிபறக்கும் பந்தங்களை நீளக்கயிற்றில் கட்டி அவற்றைச் சக்கரம்போல் தலையைச் சுற்றிச் சுழற்றுவார்கள். அந்த இரண்டு லீலைகளையும் ஒரே நேரத்தில் நமது சூரியன் ஊணுறக்கமின்றி இரவும் பகலும் இடைவிடாது இயற்றிக்கொண் டிருக்கின்றதாம். அது களைத்துப் போய் ஒரு நொடிப்போது ஓய்வெடுத்தாலும் சூரிய மண்டலமும் அங்குள்ள கிரகங்களும் கோளங்களும் எல்லாம் ஓய்ந்துவிடுமாம். இது இன்றைய வான சாஸ்திரிகள் கூற்று.

சூரியப் பம்பரம் 26 நாளில் தன்னை ஒரு சுற்றுச் சுற்றுகிறது, அதாவது தன் 860,000 மைல் பருமனுள்ள உடம்பை ஒரு புரட்டுப் புரட்டி ஆன்மப் பிரதக்ஷிணம் செய்கிறது. அத்துடன் அது ஏககாலத்தில் பத்துக் கிறுகிறு வாணங்களையும் சுழற்றிக் கொண்டிருக்கிறது. அவற்றுள் நமது பூமி 8000 மைல் பருமனுடைய ஒரு பந்தம்; அதில் கட்டியிருக்கும் கயிறு சுமார் ஒன்பதரைக் கோடி மைல் நீளமாம். அதாவது நவநாகரிக அநுமார் ஒருவர், 240,000 மைல் தூரத்தை ஒரு தாவில் தாவுவாரானால், அப்போது சந்திரன்மீது போயிறங்குவார். அது கொஞ்சம் சிரமம்பிடித்த வேலையாகையால், அவர் ஒரு நாளைக்கு ஒரு தாவுதான் தாவக்கூடும். அம்மாதிரி அவர் 380 நாளைக்குத் தாவுவாரானால் சூரியன் வெளிப்புறத்தில் போய் மிதிப்பாராம். அவ்வளவு நீளக்கயிற்றைக் கட்டிப் பூமிப் பந்தத்தை ஒரு வட்டம் சுழற்ற சூரியனுக்கு ஒரு வருஷமாகின்றது. அவ்வளவு காலமும் பூமி ஒருநாளைக் கொருதரம் தன்னையும் ஆன்மப் பிரதக்ஷணம் செய்துகொண்டு சந்திரனையும் உடன் இழுத்துச் செல்கின்றது. வியாழப் பந்தம் சுமார் 87 ஆயிரம் (86,500) மைல் கனம்; அதன் கயிற்று நீளம் 48 கோடி மைல்; ஒரு வியாழ வட்டம் 12 வருஷம். பூமிக்கு ஒரு வால்தானிருக்கின்றது, வியாழனுக்கோ வால்கள் (சந்திரன்கள்) ஒன்பது; அதனால் அங்கு

இரவும் பகலும் வாடாவிளக்குத்தான். அந்த ஒன்பது தூக்கு விளக்குகளும் வியாழனோடு கூடவே செல்கின்றன. இவ்விதமே வெள்ளி, சனி முதலிய எல்லாப் பந்தங்களும் சூரியனைச் சுற்றி வருகின்றன. 35,000 மைல் கனமுள்ள நெப்ற்றியூன் பந்தத்தை 280 கோடி மைல் நீளமுள்ள கயிற்றில் கட்டி, 165 வருஷத்திற் கொரு சுற்று வீதம் வாணம் வீசி விளையாடுகிறானும் நமது நக்ஷத்திரக் குஞ்சாகிய சூரியபகவான். இவ்வளவு அபாரமான விளையாட்டோடு நிற்காமல், அப்பிள்ளையாண்டான், மணிக்கு ஐயாயிரம் மைல் வேகத்தில் தன்னைத் திரிகைபோலத் திரித்துக் கொண்டும், இத்தனை கொள்ளிப் பந்தங்களையும் கயிற்றில் சுருக்கு விழாமல் ஒரே கையால் சுழற்றிக் கொண்டும், மேலும் தலைவிரி கோலமாக மணிக்கு நாற்பத்தையாயிரம் (45,000) மைல் வேகத்தில் இந்தக் கிரகங்சள் யாவற்றையும் இழுத்துக்கொண்டு எங்கோ நோக்கி ஓடுகின்றானும். அவன் எங்கு ஓடுகின்றான், யாரொடு மோதப்போகின்றான், இவையே வான சாஸ்திரிகளின் இன்றையக் கேள்விகள். அவருடைய ஆராய்ச்சிக்குள் இன்னும் அவை அடைபட்டபாடில்லை.

அவர்கள் அபிப்பிராயப்படுவது என்னவென்றால், நமது சூரியன் அதன் பரிவாரங்களுடன் வேறொரு சூரியனை 25 கோடி வருஷத்திற்கொருதரம் சுற்றிவருகின்றதாம். அதுவும் அம்மாதிரி வேறு பல சூரியர்களும் அவ்வவற்றின் பரிவாரங்களுடன் வேறு எதனையோ சுற்றுகின்றனவாம். அவையும் முன் சொன்ன எல்லாவற்றையும் சேர்த்துக்கொண்டு வேறு எதனையோ சுற்று-கின்றனவாம். இவையெல்லாம் இன்னும் எதனையோ சுற்று-கின்றனவாம். ஆக, அகில அண்டம் முழுவதுமே இப்படி ஓயாத ஆட்டமும் பாட்டமும் அல்லோல கல்லோலமுமாயிருந்து வருகின்றதாம். பண்டைய ஞானிகள் அண்டம் ஆண்டவனுடைய தாண்டவ லீலை என்று எழுதியிருப்பதை மேல் நாட்டு மேதாவி-கள் ஏளனஞ் செய்தனர். இப்பொழுது அவர்கள் அதே பாட்டை வேறொரு பண்ணில் பாடுகின்றனர்; அண்டங்கள் பல பல வென்-றுங் கூறுகின்றனர்; அவை யாவும் ஏதோ ஒரு நக்ஷத்திரத் தொகுதியைச் சுற்றி வருவதாகவும் அபிப்பிராயப்படுகின்றனர். அந் நக்ஷத்திரக் கூட்டம் எது என்பது பற்றி அவருக்குள்

ஐயப்பாடு நீங்கி இன்னும் ஒற்றுமை ஏற்படவில்லை. முடிவில் அதி ஒரையன் என்ற ஆருத்ரா தாண்டவமூர்த்திதானென்று முடிவு கட்டுவரோ என்னவோ, யாரறிவர்!

சமய குரவர்கள் உலகில் அவதரித்திருந்தபோது பல அற்புதங்கள் நடந்ததாக அந்தந்த மதக்காரர் நம்புகின்றனர். இந்த நவ நாகரிக காலத்தில் அற்புதங்கள் நடைபெறுவதாக யாரும் எண்ணுவதில்லை, பழைய அற்புதங்களை நம்புவதுமில்லை. ஆனால் நாமிருக்கும் தரையானது மணிக்கு ஆயிரம் மைல் வேகத்தில் திரிகைபோலச் சுழன்றுகொண்டும், அதே சமயத்து மணிக்கு 67,000 மைல் வேகத்தில் சூரியனைச் சுற்றி உருண்டோடிக் கொண்டும், சூரிய மண்டல முழுவதுமே அதே சமயத்தில் 45,000 மைல் வேகத்தில் வானத்தில் பறந்துகொண்டுமிருக்கும்போது, நாமெல்லோரும் யாதொரு அசைவுமின்றி இருந்த இடத்தில் இருந்துகொண்டும் படுத்த இடத்திலுறங்கிக்கொண்டும் இருப்போமானால் இதை விட அற்புதமான நிகழ்ச்சி வேறென்ன வேண்டும்?

---

பாடம் 37.

## அண்டம் (தொடர்ச்சி).

"வானத்தின் மீது மயிலாடக் கண்டேன்," என்பது தமிழ் நாடெங்கணும் பாடப்படுவது. பங்குனி சித்திரை மாதங்களில், இராக்காலங்களில், முற்றத்தில் நின்று மேலே ஏறிட்டுப் பார்ப்போமானால், வானத்தின் மீது மயிலாடும் விந்தை வெளிப்பட்டுத் துலங்கும். நீல வானத்தில் தெற்கு வடக்காக வெண்மையான மிகப் பெரிய வானவில்லொன்று வானத்திற் பாதியை வியாபித்து, மயில் தோகை விரித்ததுபோன்று வளைந்து காணப்படும். அந்த வில்லுக்குள் பல்லாயிரக் கணக்கான வெள்ளிக் கண்கள் மயில்த்தோகைக் கண்கள்போல ஒளிவீசி மின்னும். ஆகாயத்தில் காணப்படும் நக்ஷத்திரங்களில் பெரும்பாலானவை, இந்த வில்லுக்குள்ளாகவே நெருக்கமாகத் திரண்டு மிதக்கும். அவ்வில்லுக்கு வெளியே இருபுறத்திலுமுள்ள நக்ஷத்திரங்கள், குறைவாகவும் சிதறுண்டும் கிடக்கும். அந்த வெள்ளை வான வில்லின் ஒரு

பாதியே நமது தலைக்கு மேலாகத் தெரிவது, மற்றப் பாதி காலுக்குக் கீழாக பூமியின் அடிப்புறத்தில் இருக்கும். இந்த மிக மிகப் பெரிய முழு வளையமும் அதிலுள்ள நக்ஷத்திரக் கூட்டமும் ஒரு திருப்பாற் கடல் என்னப்படுகிறது. (Milky Way).

இந்த ஒரு திருப்பாற்கடலுக்குள், பிரமாண்டமான முட்டை போன்ற பல அண்ட உருவங்கள் அமைந்திருக்கின்றனவாம். அவ் வண்டங்களை 98 ஆகவும் 108 ஆகவும் வேறு பல எண்ணிக்-கைகளாகவும் இன்றைய வான சாஸ்திரிகள் கணக்கிடுகின்றனர். இவற்றுள் அண்டத்திற்குப் பல்லாயிரம் வீதம் இத்திருப்பாற் கடல் நக்ஷத்திரங்கள் முழுவனவும் அடங்குகின்றனவாம். இந்த அண்டம் ஒவ்வொன்றும் ஒரு பிரமாண்டம் என்று சொல்லப்-படும். அதில் ஒரு அண்டத்தின் சிறு உறுப்பே நமது சூரிய மண்டலம். அந்த 108 (?) அண்டங்களைக் கொண்டதே நமது திருப்பாற்கடல். இத்திருப்பாற் கடலில் நம்முடைய சூரிய மண்டலம் ஒரு தூசுமாத்திரமே ஆகுமாம்.

இத்திருப்பாற் கடலின் அக்கரைக்கிக்கரை மூன்று லக்ஷம் (ஒளுவாளு) ஒளி வருஷத்திற்குக் குறைவில்லையென்று கணக்கிடு-கிறார்கள், அதாவது 5 சுன்னங்கொண்ட மூன்றை 12 சுன்னங்-கொண்ட ஆறால் (3,00,000 × 6,000,000,000,000) பெருக்கிப் பார்த்துக் கொள்க. அமெரிக்காவிலுள்ள வில்ஸன்மலை வான ஆராய்ச்சி மாளிகையில் (Mt. Wilson Observatory) 100 அங்-குலத் தொலைக் கண்ணுடி மூலம் வானத்தை நாற்புறமும் பத்துக் கோடி ஒளுவாளுத் தூரம் பார்க்க முடிகிறதாம். புகைப்படக் கண்ணுடி மூலம், அந்த எல்லைக்குள் 3 கோடிக்கு மேற்பட்ட திருப்பாற் கடல்கள் காணப்படுகின்றன என்கின்றனர். இம்-மாதிரியே எண்ணில்லாத திருப்பாற்கடல்கள் வானத்தில் மிதக்-கின்றனவாம். இவற்றுள், நம்முடைய திருப்பாற் கடலின் கரை-யைக் காண்பதற்கே வானசாஸதிரிகள் இன்னும் திணறுகிறார்கள். அதற்கப்பாலுள்ள மற்றவற்றைப் பற்றி என்ன சொல்லக்கூடும்? இந்தக் கரை காணப்படாத திருப்பாற் கடல்களுக்குள் எண்-ணற்ற கோடிக்கணக்காகவுள்ள ஒவ்வொரு தனிப்பட்ட நெபுலா (Nebula) வையும் ஒவ்வொரு திருப்பாற் கடலென்பதும் பொருந்-

தாம். அவை யாவும் பலகோடி மைல்கள் குறுக்களவைக் கொண்ட சிறு சிறு கடல்களாம். அவற்றின் விஸ்தீரணங்கள் இன்றுள்ள நுணுக்கமான கருவிகளால் பெரும்பாலும் வரையறுக்கப்படத்-தக்கவை.

கார்த்திகை நக்ஷத்திரம் உள்ளங்கை அளவாக நமக்குக் காணப்படுகின்றது. அதில் வெறுங் கண்ணுக்கு ஆறு நக்ஷத்-திரங்கள் விளங்குகின்றன. அவற்றையே குமரக் கடவுளை வளர்த்த கார்த்திகைப் பெண்கள் என்கின்றோம். ஆனால் அவற்றை வான சாஸ்திரிகள் என்ன கூறுகின்றார்கள்? தொலைப் பார்வைக் கண்-ணுடியால் பார்க்கும்போது அந்த உள்ளங்கை யகலத்திற்குள் அறுநூறுக்கு மேற்பட்ட பெரிய பெரிய நக்ஷத்திரங்கள் காணப்-படுகின்றனவாம். புகைக் கண்ணுடியால் அதனைப் பார்க்கும்போது அங்கு அறுபதினுயிரத்திற்கு மேற்பட்ட நக்ஷத்திரங்களும் அகண்டமானதோர் திருப்பாற்கடலும் அங்கு தென்படுகின்றன-வாம். பல கோடி மைல் தூரங்களை இடையிடையே கொண்ட பல்லாயிரக்கணக்கான நக்ஷத்திரங்கள் நமக்கு ஒரு உள்ளங்கை யளவாகக் காணப்படுமானுல், அவை எவ்வளவு ஒனுவானுவிற்-கப்பாலிருக்க வேண்டுமோ இறைவனுக்கே வெளிச்சம்.

ஒரையன் என்ற தாண்டவருடைய ஊன்றுகால் நடுவில் ஒரு திருப்பாற்கடல் கண்ணுடிகளில் காணப்படுகின்றதாம். அது இதுவரை சோதிக்கப்பட்ட பாற்கடல்களிலெல்லாம் மிக மிகப் பெரியதாம்; ஆயினும் அது நமது ஊனக்கண்ணுக்குப் புலப்படு-வதேயில்லை, அவ்வளவு தொலையிலிருக்கின்றது அது.

ஹெர்க்குலீஸ் என்பது நமக்குத் தென்படும் ஒரு தனி நக்ஷத்திரம். அது கண்ணுடியில் 50,000 நக்ஷத்திரங்கள்கொண்ட ஒரு தொகுதியாக விளங்குகின்றதாம். அத்தனை வெள்ளிகள் திரண்டு நமக்கு ஒரு பொட்டுப்போலப் புலப்படவேண்டுமானுல், அவை எவ்வளவு தூரத்தில் அமைந்திருக்க வேண்டுமோ! இத்தனை அண்ட கோடிகளும் தம்மைச் சுற்றியும் பிறரைச் சுற்றி-யும் வானத்தைச் சுற்றியும் மனதால் நினைக்க வொண்ணுத வேகத்தில் ஓயாது ஓடிக்கொண்டிருக்கின்றன வென்றால், இந்த

அதிசயங்களை நினைக்கும்போதே மனம் திகைக்காம லென்ன செய்யும்! சொல்லும்போது வாய் குழறுமலென்ன செய்யும்! எழுதும்போது கை பதறுமலென்ன செய்யும்!

பிரிட்டிஷ் ராஜாங்க வான சாஸ்திரி (Astronomer Royal) ஸர் ஹேரால்டு ஸ்பென்ஸர் ஜோன்ஸ் என்பவர் ஜனவரி 1947 ல் டில்லியில், இந்திய விஞ்ஞான சாஸ்திரிகள் சங்கக் கூட்டத்தில் வான சாஸ்திரத்தைப் பற்றிப் பல சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். அப்போது அவர்,

"நாம் பல கருவிகளால் இன்று கணிக்கக் கூடியவையாக 100 கோடிக்கு மேற்பட்ட தனித்தனிப் பேரண்டங்களும் (Universes), அவை ஒவ்வொன்றிலும் பதினயிரம் கோடிக்கு மேற்பட்டதான நக்ஷத்திரங்களும் (Stars) உள்ளன என்பதற்கு ஐயமில்லை. நமது கருவிகளுக்குள் அகப்படாதனவாக இன்னும் எத்தனை எத்தனை கோடிகளோ இருக்கின்றன," என்று தம் ஆராய்ச்சியின் பலனைக் கூறியுள்ளனர்.

உலகிலுள்ள தொலைப்பார்வைக் கண்ணுடிகளில் மிகப் பெரியது அமெரிக்காவில் காலிபோர்னியாவில் பாலோமர் மலையில் (Mount Palomer Observatory), சமீபத்தில் அமைக்கப்பட்டுள்ளது. அதன் கண்ணுடி மாத்திரம் 200 அங்குலம், சுமார் 11 கை முழத்திற்கு மேலான குறுக்களவுடையது. அதன் உதவியால் ஆகாயத்தில் 20,000 (இருபதினயிரம்) மைலுக்கப்பால் எரிந்துகொண்டிருக்கும் மெழுகு திரியொன்றைக் கண்ணுல் காணலாகுமென்று சொல்லப்படுகின்றது. அந்தக் கண்ணுடி மூலம் 100 கோடி ஒளுவாணுவுக்கப்பாலும் (அதாவது 100 கோடி × 6 லக்ஷம் கோடி மைல்கள்) பலபல நக்ஷத்திர மண்டலங்கள் (Stellar Systems) காணப்படுகின்றனவாம். நமது சூரியனைப் போன்ற 8 கோடி சூரியர்கள் ஒன்று கூடிய பிரகாசத்தையுடைய தனித்தனிச் சூரியர் 6½ கோடி ஒளி வருஷ தூரத்தில் காணப்படுகின்றனவாம். 'தான்' என்ற ஆணவங்கொண்ட சிற்றறிவும் சிறுதொழிலுமுடைய மனிதனுக்கு இவ் வான சாஸ்திர அறிவு அவனுடைய அகந்தையை ஒழிக்க ஒருவாறு உதவலாமென்று தோன்றுகிறது.

இவ்விதம் எல்லை காணமாட்டாத சூரியர்களையும் சந்திரர்களையும் நக்ஷத்திரக் கூட்டங்களையும் திருப்பாற் கடல்களையும் பிரம்மாண்டங்களையும் ஒரு சேர உள்ளடக்கி நிற்பதே அகிலாண்டம் என்று சொல்லப்படுவது. அப்பேர்ப்பட்ட அகில அண்டத்தின் இறைவனைப்பற்றி "அவன் இருக்கின்றான்" என்பதையன்றி நமக்கு வேறென்ன சொல்லமுடியும்? அந்த அருமையை அறிந்த பழந்தமிழர், அவனைக் "கடவுள்" என்ற ஒரே சொல்லாற்கூறிமுடித்தனர். அவ்வாறு உள்ளத்தையே கடந்தவனைப்பற்றி மனம் நினைப்பது எங்ஙனம்? நா உரைப்பது எங்ஙனம்?

நமது சூரிய மண்டலங்களெல்லாம் அகிலாண்ட நாயகனுக்கு வெறும் கால் தூசிகள் போன்றனவாகும். அவன் தோற்றங்களை ஆராய்வதிலேயே இன்றைய விஞ்ஞானிகள் இரவு பகலாக ஈடுபட்டு வருகின்றனர். அத்தோற்றங்களின் இறுதியற்ற தன்மையை நன்கறிந்த பண்டைய ஆன்ம ஞானிகள், அவற்றை ஆராயும் முறையை "அண்டத்திலுள்ளது பிண்டத்தில்," என்ற மகாவாக்கியத்தால் நமக்கு அருளிச்செய்தனர். பண்டைய கிரேக்க முனிவர்கள் இவ்வாக்கியத்தையே ஐரோப்பிய மக்களுக்கும் அருளியிருக்கின்றனர். ஆயினும் ஆணவத்தடிப்பால் அவற்றை அவமதித்த அம்மக்கள் இன்று தம் சொந்த ஆராய்ச்சியின் பலனாக "ஒவ்வொரு அணுவும் ஒரு குட்டிச் சூரிய மண்டலமாகும்" என்று முடிவுகட்டியுள்ளனர். ஒவ்வொரு அணுவிலும் அதற்கு உயிரூட்டுவதாக நடுச் சூரியன் ஒன்றுள்ளதாகவும், அதனைச் சுற்றிப் பல கிரகங்களும் சந்திரர்களும் சுழன்று வருவதாகவும், இன்று அவர்கள் விளக்குகின்றனர். அவற்றை எலக்ட்ரான், ப்ரோட்டான், நியூட்ரான் எனப் பல பெயர்களால் அவர்கள் அழைக்கின்றனர். ஆகவே அணுப் பிண்டமும் சூரிய அண்டமும் ஒரே ஒழுங்கில் நடைபெறுகின்றனவென்று அவர்களே இன்று கூறுகின்றனர். அத்துடன், வானவில் கண்ணுடியின் (Stereoscope) உதவியினுல் நம்முடைய பூமியிலுள்ள மூலப்பொருள்களே (Elements) சூரியனிலும் மற்றக்கிரகங்களிலும் காணப்படுகின்றனவென்றும், வானத்திலுள்ள நக்ஷத்திர கோடிகளெல்லாம் அதே செங்கல் சுண்ணும்புகளாலேயே கட்டப்பட்டிருக்கின்றனவென்றும் அவர்கள் கூறுகின்றனர். மனித உடம்பு

ஒவ்வொன்றும் சுமார் ஆறணு பெறக்கூடிய அதே மூலப்பொருள்களாலேயே அமைந்திருக்கின்றன வென்றும் அவர்கள் சொல்லுகின்றனர். ஆகவே அவருக்கும் பண்டைய மெய்ஞ்ஞானிகள் கூற்றுக்கும் இன்று அதிக வேறுபாடில்லை யென்னலாம்.

பூரண நிலையடைந்த முத்தான்மாக்கள் சொல்வதிலிருந்து மேலும் அறியக்கிடப்பது என்னவெனில், அகிலாண்டம் முழுவதும் ஏழு கூறுகளாக நிற்கின்றனவாம்; அவை இறைவனுடைய ஏழு ஆதாரங்களாம்; ஒவ்வொரு ஆதாரத்தின் மூலம் இறைவனுடைய ஒரு கலையும், பலகோடிக் கணக்கான அதன் உபகலைகளாகும் கிளைக்கலைகளும் சக்திகளும் தோற்ற மெடுக்குமாம்; ஒவ்வொரு ஆதாரச் சக்கரத்திலுமுள்ள பிரம்மாண்டங்களெல்லாம் ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்புடையனவாம்; அம்மாதிரியே ஏழு ஆதாரங்களும் தம்மில் தொடர்ச்சியுடையனவாம்; இத்தொடர்ச்சிகளின் இயல்பு விஞ்ஞானமய கோசமும் ஆநந்தமய கோசமும் பூரணமாக வளர்ச்சியுற்ற பெரியாருக்கே விளங்குமென்பதே அவருடைய அனுபவ வாக்கு. அவ்விதத் தொடர்புகளில் மிக மிக முக்கியமானதொன்றே இன்று கார்த்திகைக்கும் நமக்கும் உள்ளதென்கிறார்கள்.

அப்பெரியார் இறைவன் தோற்றங்களைவிட்டு அவன் உண்மை யியல்பைக் கூறப்புகும்போது, "ஆன்மாக்கள் உடம்புகளில் வியாபித்து நின்று அவற்றின் வேறாயும் நிற்பதுபோலவே, இறைவனும் அண்டங்கள் யாவற்றையும் ஊடுருவி நின்று அவற்றின் வேறாயும் அவற்றிற்கப்பாலும் பரந்து நிற்கின்றான்," என்கின்றனர். "அவன் சேய்மையிலிருப்பது போலவே அண்மையிலுமிருக்கின்றான். அவனைச் சேய்மையிலும் அண்மையிலும் இடைவிடாது கண்டு இன்புற்றிருப்பதே பேரின்பநிலை," என்று அவர் அனுபவத்தால் கூறுகின்றனர். "காமம் வெகுளி மயக்கற்று யான் எனதென்னும் செருக்கற்றவருடைய மெய்ஞ்ஞானக்கண்ணுக்கு அவன் எளிதில் புலப்படுவன்," என்கின்றனர். அன்னோர் வாக்கே "சர்வம் பிரம்மமயம்" என்பதும், "பார்க்குமிடமெங்கும் பரமன்காணம்மானே" என்பதும். மற்றையோர் அவற்றைச் சொல்வது வெறும் வாய் ஞானமாகும் கிளிப்பிள்ளைச் சொற்களே.

ஆலயப்படம் கடைசியாக அறிவுறுத்துவது இந்த அகிலாண்டத்தையும், அதன் 7 ஆதார அண்டங்களையும், அவ்வகிலாண்டத்தின் சப்த உலகங்களையுமேயாம்.

---

பாடம் 38.

## எவ்வேழு.

இன்றைய அண்ட வகுப்பில் ஏழு என்பது ஒரு மூல எண்- அதாவது அண்டத்தின் பல முறைகள் அத்தொகையைச் சுற்றியே சுழலுகின்றன.

| | | |
|---|---|---|
| விகாசமுறை ஒவ்வொன்றுக்கும் உயிர் வர்க்கங்கள் | | 7 |
| ஒவ்வொரு வர்க்கத்திலும் கலைகள் | | 7 |
| மனிதனுக்கு உடம்புகள் | | 7 |
| அவற்றின் ஆதாரங்கள் | | 7 |
| சப்த உலகங்கள் | | 7 |
| ஒவ்வொன்றிலும் சப்த பூதங்கள் | | 7 |
| ஒளியின் நிறங்கள் | | 7 |
| இசையின் சுரங்கள் | | 7 |
| சப்தகோடி மகாமந்திரங்கள் | | 7 (கோடி= முடிவு.) |
| வார நாட்கள் | | 7 |
| சந்திரன் ஏற்ற இரக்கம் | | 2 × 7 |
| பலநோய்களின் கெடுநாட்கள் | | 7, 14, 21, 28 முதலியன. |
| மக்கள் கிளை வகுப்புகள் | | 7 கொண்டது |
| ஒரு மூலவகுப்பு— | அவை | 7 ,, |
| ஒரு கோளம் (உலகம்)— | ,, | 7 ,, |
| ஒரு வளையம்— | ,, | 7 ,, |
| ஒரு தொடர்— | ,, | 7 ,, |
| ஒரு விகாசமுறை— | ,, | 7 கொண்டது |

ஒரு சூரியமண்டலப்.

இன்னன பிறவும காண்க.

சப்தகோடி மகாமந்திரங்களென்பது 'நமஃ' முதலிய ஏழு முடிவுகளைக்கொண்ட மந்திரங்கள்.



---

## பாடம் 39. **உலக உடம்புத் தொகுப்பு.**

| | | உலகங்கள். | | உடம்புகள். | பழையமுறைப் பாகுபாடு. | | உடம்புகளின் பல பெயர்கள். |
|---|---|---|---|---|---|---|---|
| 7 | | | கைலாயம் | ? | ... | ... | ... |
| 6 | | | வைகுண்டம் | ? | ... | ... | ... |
| 5 | 7 | 7<br>6<br>5 | சத்யலோகம் | ? | ... | ஆகாயதத்துவம் | ... |
| | 6 | 4<br>3<br>2<br>1 | தபலோகம் | ஆனந்தமயகோசம் | ஷை | | ஆன்ம உடம்பு (Spiritual Body) |
| | 5 | 1 முதல்<br>7 முடிய | ஜனோலோகம் | விஞ்ஞானமயகோசம் | ஷை | வாயுதத்துவம் | ஒட்பஉடம்பு ; புத்தியுடம்பு (Intuitional Body) |
| 3 | 4 | 7<br>6<br>5 | மகர்லோகம் | அருவமன உடம்பு | மனோமயகோசம் ... | தேயுதத்துவம் | மல்மனஉடம்பு—மேல்மன உடம்பு—காரணஉடம்பு (Higher Mental Body—Causal Body) |
| | 3 | 4<br>3<br>2<br>1 | ஸுவர்லோகம் | உருவமன உடம்பு | | | காமமனஉடம்பு (Lower Mental Body) |
| 2 | 2 | 1 முதல்<br>7 முடிய | புவர்லோகம் | இச்சையுடம்பு | ... | அப்புதத்துவம் | காமஉடம்பு (Emotional Body—Astral Body) |
| 1 | 1 | 7. அணு<br>6. திரட்டணு<br>5. நுண்ணுகாயம்<br>4. ஆகாயம்<br>3. வாயுப்பொருள்<br>2. நீர்ப்பொருள்<br>1. கட்டிப்பொருள் | பூலோகம் | பிராண உடம்பு | பிராணமயகோசம் | பிருதிவிதத்துவம் | கருஉடம்பு (Etheric Double) |
| | | | | | • | | • |
| | | | | அன்ன உடம்பு | அன்னமயகோசம் | | பருஉடம்பு—ஸ்தூலஉடம்பு (Physical Body) |

பாடம் 40.

## முடிவு.

இதுவரை சொன்னவற்றால் நமக்கு அன்றாட வாழ்க்கையில் ஏற்படும் பலன் என்ன?

1. "ஆன்மா அனாதி, ஆகவே அழிவற்றது," என்றறிந்தவனுக்கு "அஞ்சுவது யாதொன்றுமில்லை, அஞ்ச வருவதுமில்லை." அறிவில்லாதவர் மரணத்திற்கஞ்சுவர்; பிறர் மரணங்கண்டு துன்புறுவர். ஆன்மா அழிவற்றதென்றறிந்தவன் இறந்துபடுவது உடம்பேயெனக் காண்கின்றான். ஒவ்வொரு நாளும் உடையைக் கழற்றுவது போலவும், கிழிந்துபோன உடையைக் களைந்தெறிவது போலவுமே அவன் உடம்பின் மரணத்தைக் கருதுகின்றான். "இதற்குமுன் எத்தனையோ உடம்புகளைக் களைந்திருக்கின்றோம், இனியும் எத்தனையோ களையவிருக்கின்றோம். இதற்கு அஞ்சுவது அறிவுடைமையாகாது," என்று நன்கு உணர்கின்றான். மூப்புடம்பு மரிக்கும்போது இளமையுடம்பு வந்தெய்துமென்றும், நோயுற்று வலியிழந்து நிற்கும் நோயுடம்பு நீங்கும்போது புத்தம் புதிய சேயுடம்பு கிடைக்குமென்றும் மகிழ்ச்சியடைகின்றான். இதனால் அவனுக்கு மரணபயம் நீங்குகின்றது. அவன்,

"உறங்குவது போலும் சாக்காடு, உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு."

என்ற உண்மையை உணர்ந்து மரண பயத்தை அறவே அகற்றிவிடுகின்றான்.

2. ஆன்ம முன்னேற்றத்திற்கு எல்லையில்லையென்றும், அம்முன்னேற்றத்தைத் தடுக்க யாருக்கும் இயலாதென்பதும் கண்டபின், அவனுக்கு யாதொரு கவலையுமிருக்கக் காரணமில்லை. தனக்கு எது நிகழ்ந்தபோதிலும் நிகழாதபோதிலும், தான் எது செய்தபோதிலும் செய்யாதபோதிலும், பேரின்ப நிலை என்றைக்காவது தனக்கு வந்தே தீருமென்ற உறுதி அவனுக்கேற்படுகின்றது. தன்னுடைய முயற்சிக்கேற்ப அது தீவிரமாகவோ காலந்தாழ்த்தோ அடையப்பெறலாமேயன்றி, அதைத் தடுக்க

யாராலும் இயலாதென்பதை அவன் நன்குணர்கின்றான். அந்த உறுதி காரணமாக அவன் சோம்பேறியாய் உறங்கிக்கிடப்பதுமில்லை. தனது முயற்சிக்கும் முன்னேற்றத்திற்கும், உலக இன்ப வாழ்க்கைக்குமுள்ள நெருங்கிய தொடர்பை அவன் நன்குணர்வானுகையால், பதட்டமின்றியும் சோம்பலின்றியும் அவன் அறிவு இச்சை செயல்களால் நல்வினைகளிலேயே ஓயாது உழைத்து வருவான். அதாவது, "ஒல்லும் வகையால் அறவினை ஓவாதே செல்லும் வாயெல்லாம்" அவன் செய்து வருவான். அத்துடன்,

> "நில்லா தவற்றை நிலையின என்றுணரும்
> புல்லறி வாண்மை கடை,"

என்ற பொய்யாமொழியின்படி, அநித்திய உலகிற்கு இயற்கையாயுள்ள லாப நஷ்டங்களாலும் இன்ப துன்பங்களாலும் அவன் கவலையுறுவதில்லை. ஏன்? மழையும் வெயிலுமின்றி உயிரொன்றும் வளர்ச்சியுராது. மழை மாத்திரமே இருக்குமானல் மரம் வேரோடு அழுகிவிடும்; என்றும் வெயிலாகவே இருக்குமானல் எல்லாம் கருகிவிடும். ஆகவே இரண்டும் உயிர் வர்க்கங்களின் வளர்ச்சிக்கு இன்றியமையாதன வாகின்றன. அம்மாதிரியே ஆன்ம முன்னேற்றத்திற்கு இன்பதுன்பங்களாம். ஆன்மா பக்குவப்படும்வரை இன்பமும் துன்பமும் விரவி வராமல் தீராது என்பதை, சிறிது உலக அனுபவ முடையவர் எளிதில் அறிவர். ஆன்ம முயற்சியில் தளர்ச்சி யேற்படாமல் மனத்திற்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையுங் கொடுத்து உதவுவது இன்பம். இயற்கை நியதிகளையும் ஆன்மப் பள்ளிக்கூடச் சட்டங்களையும் ஒழுங்குகளையும் மீறி நடப்பதை அறிவிப்பது துன்பம். "கடவுள் கற்பனையை மீறுவது பாபம்," என்னும் விவிலிய வேத நூலாகிய பைபிள். மலை விழுங்கி மாடன் வயிற்றுவலி வந்தாலன்றித் தன் பெருந்தீனியைக் குற்றமென்று உணரான். பிறரைத் துன்புறுத்தி வாழ்பவன் தனக்குத் துன்பம் நேரும்போதே தன் தவறை ஓர்க்கின்றான். "உதைப்பார்க்கு வெளுப்பான் சாதி வண்ணான்" என்பது இந்த உண்மையையே. ஆன்மாவின் ஒரு நிலையில் அதற்கு இந்த இன்பதுன்பங்களின் ஆவசியத்தை அறிந்தவன், தனக்குத் துன்பம் நேரும்போது கவலைப்படுவதை விட்டுத்-

தன்னைச் சீர்திருத்திக் கொள்வதற்கு ஒரு சமயம் வாய்த்ததென் மகிழ்ச்சி யடைகின்றான்.

மூன்றாவதாக, விகாச முறையைப்பற்றி ஒருவாறு கற்றறிந்தவன், எவரையும் எதனையும் இகழுந்தன்மை யில்லாதவனாகின்றான். விண்ணையும் மண்ணையும் இணைத்து நிற்கும் ஏணியில், தனக்கு மேலுள்ள எண்ணற்ற படிகளைக் கண்டவனுக்குத் தற்பெருமை யென்பது இருக்கமுடியாது. தான் நிற்கும் படிக்குக் கீழ் உள்ள பல படிகளில் நிற்பவர், நிற்பவை யெல்லாம், தான் முன்னொருகால் நின்றபடிகளே யென்றும், அவர், அவையாவும் தன்னுடைய நிலைக்கு ஒரு நாள் வந்து சேருவரென்பதையும் அறிந்து கொண்டவன் அவரையும் அவற்றையும் எங்ஙனம் இகழ்வான்! அவ்விதமே, தானும் மேல்நோக்கிச் செல்லும் முறையில், மேற்படியிலுள்ளோரைக் கண்டு அவன் பொறாமைப்படுவதுமில்லை; ஏனெனில், தான் அந்நிலைக்கு என்றைக்காவது வருவோமென்ற உறுதியுடையவன் அவன். அத்துடன், தனக்கு மேற்படியிலுள்ள மக்களிடமிருந்து தான் பெறும் அருளையும் அன்பையும் அவற்றாலாகும் இன்பத்தையுங்கண்டு, தானும் தனக்குக் கீழ்ப்படிகளிலுள்ள மக்கள், மற்ற உயிர் வர்க்கங்களின் முன்னேற்றத்திற்காக இடைவிடாது இயன்றவாறெல்லாம் பாடுபடுகின்றான். ஏனெனில், விகாசமுறை விளக்கத்திலிருந்து, உயிர் வர்க்கங்களெல்லாம் நெருக்கிப் பின்னப்பட்ட ஒரேவலை யென்ற அறிவு அவனுக்குப் பிறக்கின்றது. அதனால், "நாடெங்கும் வாழக் கேடொன்றுமில்லை," யென்பதைத் தன் குறிக்கோளாகக்கொண்டு அதற்காகத் தன் மனம் மொழி மெய்கள் மூன்றாலும் பணிவுடனும் பொறுமையுடனும் பாடுபடுகின்றான்.

உயிர் வர்க்கங்களின் பின்னல் தொடர்பு எவனும் எளிதில் அறிந்து கொள்ளக் கூடியதொன்று; ஏதேனும் ஒரு தொற்று வியாதி ஊரில் ஏற்படும்போது, அது முதியோரென்னாது இளையோரென்னாது, வலியோரென்னாது எளியோ ரென்னாது, யாவரையும் ஒன்றுபோல அறுவடை செய்துவிடும். ஒருவனுக்கேற்பட்ட அத்தகைய வியாதியைக் கவனிக்காமையால், ஊரெங்குங்கேடு ஏற்படுவது இன்று சிறுவர்களும் அறிவதொன்று.

இந்த அறிவை விகாசமுறை உண்மையைக் கண்டவன் எல்லாத் துறைகளிலும் ஈடுபடுத்துகின்றான். நல்லெண்ணங்களும் நல்லிச்சைகளும் நற்செயல்களும் உத்தம அலைகளை உலகில் பரப்புவதையும், எதிரிடையானவை தீய அலைகளைப் பரப்புவதையும் கற்றறிந்துள்ள அவன், அதன் பயனாகத் தன் மனம் மொழி மெய்கள் மூன்றாலும் உலக நன்மையையே நாடி ஓயாது உழைக்கின்றான். "நல்லவனே கேள், உலகுபகாரம் ஞானிகள் விவகாரம்" என்பது கைவல்யம்.

ஆகவே, இந்நூலில் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ள ஆலய அமைப்பின் அறிகுறிப்பொருளை உணர்ந்தவன்,

"அச்சமில்லை, கவலையில்லை, யாதும் இகழ்வதில்லையே,
இச்சகத்தில் இறைவன்வேலை, ஆன்மவேலை கண்டபின்,"

என்று பாடி மகிழ்ந்திருப்பான். அதாவது, அவன் அண்டத்தையும் பிண்டத்தையும், அவற்றின் இயற்கை நியதிகள், இன்ப வாழ்க்கை முறைகள், பரிணாமமுறை என்ற விகாச முறைகளையும், அவை யாவற்றிற்கும் அடிப்படையாகவுள்ள மெய்ப்பொருளின் தன்மையையும் ஒரு சிறிது அறிகின்றமையால், அவன் ஒன்றுக்கும் அஞ்சான், வீண் கவலைப்படான், எதனையும் எவரையும் இகழான்; உயிர்களின் பல்வேறு தோற்றங்களையும் பல்வேறு முயற்சிகளையும் அவ்வேற்றுமைகளுள் காணப்படும் ஒற்றுமையையும், இறைவன் அந்தரியாமியாக நின்று அவ்வுயிரினங்களை ஆட்டுவிக்கும் ஐந்தொழில்முறை அற்புதங்களையும் கண்டு கண்டு களித்திருப்பான்.

"வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யான் எனதென்று அவரவரைக்கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே,"

என்ற அருள் வாக்கும்,

"மதுவரிகோதை மடவரற்கு, அம்ம!
புது விருந்துண்ண உண்ண,
அதிசயம் விளைக்கும் நின் அற்புதக்கூத்தே!"

என்ற அருள் வாக்கும் அன்னாருடைய ஓயாத ஆனந்தப் பல்லவி-யாக இருக்கும். அன்னை சிவகாமியம்மையே ஆனந்தத் தாண்டவ-னுடைய புதுப்புதுக் கூத்தின் அற்புதத்தையும் புதுப்புது விருந்தின் சுவையையும் கண்டு அதிசயிக்கின்றாளாம். அதுவே நன்று தீதென்னாது சாட்சி நடுவாக நிற்கும் உத்தமருடைய உயரிய இன்ப நிலையும். அவ்வுண்மையை ஒரு ஆங்கில அறிஞரும், "வாழ்வு ஒரு ஓயாத அதிசயம். அதுவே உயிர்" என்று கூறி-யுள்ளனர். ("To exist is a Perpetual Surprise which is Life.")

கடைசியாக:— நீர்வள நிலவளங்களாலும், நாகரிக வசதி-களாலும், தட்ப வெப்ப நிலைகளாலும், பூலோக கைலாயமென்று இன்று யாவராலும் புகழப்படுவது அமெரிக்காவிலுள்ள காலி-போர்னியாப் பிரதேசம். அந்த மனோகரமான நாட்டில், இன்றைக்குச் சுமார் அறுநூறு வருஷகாலத்தில், ஆறாவது மூல-வகுப்பு மக்களுக்கு அடிகோலப்படுமென்று அறிந்தோர் கூறு-கின்றனர். பண்டு அத்லாந்தியருக்கும் ஆரியருக்கும் அடிகோலிய காலத்திற்போலவே, இனிக் காலிபோர்னியாவிலும், தேவர்களும் முனிவர்களும் சித்தர்களும் முத்தர்களும் பலர்குழுமி உடனிருந்து அம்மக்களைப் பண்படுத்துவரென்று தெரிய வருகிறது. அன்னா-ருடைய சத்சங்க உறவால், இன்று பல பிறவிகளிற் சிறிது சிறிதாகப் பெறப்படும் ஆன்ம முன்னேற்றம் அன்று ஒன்றிரண்டு பிறவிகளிலேயே மிக வேகமாய் அடையப்படுமென்றும், அக்காலம் அம்மக்களுக்கு "சத்ய யுகம்" (Golden Age) என்றும் கூறப்படுகின்றது. அதற்குத் தொண்டர்களைச் சேகரிக்கும் அதிகார முத்தர்கள் இன்று முதலே தகுதியுள்ள ஆட்களைப் பொறுக்கி யெடுக்கின்றார்களாம். நள்ளிருளில் மலைமேல் நிற்பவ-னுக்குப் பள்ளத்தாக்கிலுள்ள ஒரு சிறுவிளக்கும் துலக்கமாகப் புலப்படுவதுபோல, திரிலோகங்களிலுமுள்ள ஆன்மாக்களின் பக்குவா பக்குவங்கள் அன்னாருடைய தெய்வீகக் கண்களுக்கு மிக விளக்கமாகப் புலப்படுமாம். அதற்கு வேண்டும் தகுதியைப்-பெற விரும்புவோர், "குருநாதர் திருவடியில்," என்று அவர்கள் வெளியிட்டுள்ள சிறு நூலைக்கற்று அதன்படி ஒழுக முயற்சிப்-பரேல், அந்த சத்ய யுகமாகிய ஆரம்ப காலத்தைச் சென்றடைவ-

ரென்றும் மேற்சொன்ன அறிஞர் தெரிவிக்கின்றனர். அதனால், நமது ஆலயங்களாகும் சமயக் கிண்டர்கார்டன் பள்ளியில் முறை-யாகக் கற்றுத் தேர்ந்துள்ளவன் இந்த அரிய சந்தர்ப்பத்தை நழுவவிட மனமில்லாதவனாய், அங்கு சென்று சேர்தற்குரிய தகுதியையும் இன்றே அடைய இடைவிடாது முயற்சிப்பான்.

அன்னார் திருக்கூட்டம் பெருகுவதாக!

குருவடி சரணம்.



### ராவ் பஹதூர்

# I. C. ஈஸ்வரன் பிள்ளை யவர்கள்

## வாழ்க்கை வரலாறு.

சைவ வேளாளர் குலதிலகராகிய ராவ் பஹதூர் I. C. ஈஸ்வரன் பிள்ளை யவர்கள் தென் தமிழ் நாட்டில் திருநெல்வேலி ஜில்லா, தென்காசித் தாலுகா, "தேனருவித் திரையெழும்பி வானின்வழி யொழுகும்" திருக்குற்றாலத்தை யடுத்த இலஞ்சி-யூரில் 30-1-1884 க்குச் சரியான கொல்லம் 1059 ௵ தைமாதம் சதய நக்ஷத்திரத்தன்று சிம்ம லக்கினத்தில் பிறந்தனர். பண்டே "இலஞ்சியமென்று விரிஞ்சன் நவின்ற இலஞ்சி" நகரின் பிற்-காலப் பெருங்கீர்த்திக்குப் பிறப்பிடமாகிய இவர்கள், உள்ளூரி-லேயே ஆரம்பக்கல்வி கற்றுப்பின், திருநெல்வேலியிலும், திரிசி-ராப்பள்ளியிலும் ஆங்கிலம் பயின்று முடித்து, சைதாப்பேட்டை விவசாயக் கல்லூரியில் சேர்ந்தனர். அங்கு இரண்டாவது வருஷம் படித்துக்கொண்டிருக்கும்பொழுது வீட்டில் தகப்பனார் நோய்-வாய்ப்படவே, தான் ஒரேமகனாகையாலும் பெருந்தனங்கொண்ட தம் வீட்டு வரவுசெலவுகளை மேற்பார்க்க வேறு பொறுப்பு வாய்ந்தோரில்லாமையாலும் படிப்பை அரைகுறையாக நிறுத்தி-விட்டு இலஞ்சியூர் வந்துசேர்ந்தனர். அன்றுமுதலே அவர்கள் பெருந்தன்மையே உருவாகக்கொண்டு பொறுமைக் களஞ்சியம் என்ற பெயரையும்பெற்றுப் பொதுமக்கள் சேவையில் ஈடுபட்டு 1918 முதல் 1932 வரை திருநெல்வேலித் தாலுகா போர்டு அங்கத்தினராகவும், 1925 முதல் 1932 வரை அதன் தலைவராகவும், 1918 முதல் 1938 வரை திருநெல்வேலி ஜில்லா போர்டு அங்கத்தினராகவும், அதில்பிந்திய எட்டு வருடங்கள் அதன் தகைசான்ற தலைவராகவும், 1934 முதல் 1937 வரை சென்-னைச் சட்டசபை அங்கத்தினராகவும் (M.L.C.), 1920 முதல் 1938 வரை ஜில்லாக் கல்விக் கௌன்ஸிலில் அங்கத்தினராகவும், இடையில் வெகுகாலம் அதன் துணைத்தலைவராகவும், ஜில்லா மதுவிலக்குப் பிரசாரக் கமிட்டியின் ஆரம்பமுதல் முடிவுவரை அதன் தலைவ-ராகவும், நீண்டகாலம் திருநெல்வேலி இந்து காலேஜ் கமிட்டித்

தலைவராகவும் வேறும் பலபல பொது ஸ்தாபனங்களிலும் இருந்து பொறுப்பேற்றுத் தன்னலங்கருதாது இரவுபகலாக இடையறாது உழைத்துவந்தனர். "ஒப்புரவறிதல்" என்னும் உயர்குணத்திற்குத் தாம் ஒரு உத்தம சான்றாக விளங்கினபடியால், அவர்கள் எடுத்துக்கொண்ட பொதுக்காரியங்களை யெல்லாம் இனிது முடிக்க வல்லவராயிருந்தனர். அன்னாருடைய நடுவு நிலைமையையும், உதாரகுணத்தையும், மிகச்சிக்கலான வழக்குகளையும் சலிப்பின்றி முகங்கோணாது ஆறஅமர விசாரித்து உண்மையைக் கண்டுபிடிக்கும் திறமையையும் பாராட்டி, கோர்ட்டுச் செலவின்றிக் குடிவழக்குத் தீர்க்கும்பொருட்டு அவர்கள் வீட்டுக்குக் காலை ஐந்து மணிமுதல் இரவு பன்னிரண்டு மணிவரை வருவோரும் போவோருமாகப் பெருங்கூட்டம் எப்பொழுதும் இருந்துகொண்டேயிருக்கும். அதிலிருந்து அவர்கள் இருப்பிடத்திற்குப் "பழனியாண்டவன் சன்னிதானம்" என்றே பெயரும் உண்டாயிற்று. அப்பழனியாண்டவனைப்போன்றே இப்பெரியார் தரிசனமும் ஏழைக்கும் பணக்காரனுக்கும் எந்த நேரமும் எளிதில் கிடைக்கக்கூடியதாயிருந்தது. உண்மையில் அவர்களை வாவென்றழைப்பதுபோன்று, கதவைத் திறந்துவைத்து வாயிலெதிரிலேயே புன்முறுவலோடு இவ்வுத்தமர் எப்போதும் எழுந்தருளியிருப்பர். காற்றும் மழையும் நிலவும் வெயிலும் எவ்வாறு யாவருக்கும் பொதுஉடைமையோ அவ்வாறே இவ்வுத்தமரும் எவராலும் எந்நேரமாயினும் எளிதில் அண்டப்படக்கூடியவராயிருந்தனர். அந்த மனப்பான்மைக்கேற்பத் தம் இல்லத்தின் பெயரையும் "Love's Haven"—"அன்பு நிலையம்" என்றே அமைத்து வைத்திருந்தனர். எல்லாமாய்ச் சேர்ந்து "ஐ-ஸி" என்று சொன்னால் தமிழ்நாட்டில் அவர்களை அறியாதார் இலராயினர்.

மேலே கூறப்பட்டுள்ள அவர்களது பலதிறத் தொடர்பிலிருந்து, எத்துணைப் பல்வகைத்துறைகளிலெல்லாம் அவர்கள் பங்குகொண்டு தொண்டாற்றிவந்தனரென்பது புலப்படும். இவ்விதம்

"ஒல்லும் வாயெல்லாம் அறவினை ஓவாதே
செல்லும் வாயெல்லாம் செயல்"

தம் கடமையாகக்கொண்டமை, முற்பிறவிகளிற் செய்த முயற்சியின் பலனாக இப்பிறப்பில் அவர்களுக்கு இளமையிலிருந்தே

இயற்கையாக அமைந்திருந்ததென்னலாம். கைப்பொருட் செலவைச் சிறிதும் பொருட்படுத்தாது எந்த நற்காரியங்களையும் பொறுப்பேற்று முன்னின்று நடத்த அவர்கள் தயங்குவதில்லை. ஒழுக்கத்தாலும் அறிவாலும் பக்தியாலும் ஒருங்கே உயர்ந்த அந்த மேன்மையாளர் ஆழ்ந்த சமயப்பற்றுடையவர்கள். ஆலய வழி-பாட்டிலும் அன்றாட ஆன்மார்த்த பூஜையிலும் மிகுந்த ஆர்வமுடையவர்கள். பொறுமைக் களஞ்சியமாகிய யானைத்தலை ஞானப்பிள்ளையாரையே தமது வழிபடு கடவுளாகக்கொண்டு அவரைக் காலை மாலை இருநேரமும் பூஜித்துவந்தவர்கள். பல சமய நூல்களைக் கற்றவர்கள். தியாஸபி நூல்களையும் கற்றறிந்தவர்-கள். பரந்த மனப்பான்மையும் சமரசக்கொள்கையுமுடையவர்-கள். பிறர் துன்பம் காணப்பொறாத பெருந்தகையாளர். பலன் கருதாது பிறர்க்குதவிபுரியும் பெருமையர். பெண்களுக்கான இலவச ஆரம்பப் பாடசாலை ஒன்றை 1923-ல் இலஞ்சியில் நிறுவி, பதினாயிரத்திற்கு மேற்பட்ட பணச்செலவில் அதற்குக் கட்டிடங்-களும் அமைத்து, அதனை அழகானமுறையில் நடத்திவந்தனர். திருவாவடுதுறை ஆதீனத்துத் தேவாரப் பாடசாலைகளுக்குப் பன்னிரு திருமுறைகளிலிருந்து இரண்டாண்டுப் பாடத்திட்டங்கள் பொறுக்கி யெடுத்துத் திரட்டிக்கொடுத்துள்ளனர்.

அவர்களது பசித்தோர் முகம்பார்க்கும் பண்பும், அதிதிகள் அவ்வீட்டில் உரிமை பாராட்டும் துணிவும் இந்த வட்டாரத்துள்-ளேயே மிகப்பெரும் புகழ்பெற்றது. வீடு தேடி வந்த அதிதி-களுக்குச் சாதிமதம் பாராது, உயர்ந்தோர் தாழ்ந்தோர் பாராது, காலம் அகாலம் பாராது, இருப்பது இல்லாதது பாராது, முறு-வல்பூத்த முகத்துடன் அவர்கள் விருந்தோம்புவதைக் கண்டுள்ள-வர் பல்லாயிரக்கணக்கினர். தானே நேர்நின்று ஏழை அதிதி-களுக்கு அமுதுபடைப்பதில் அவர்களுக்கு அலாதியான பிரியம். இப்பணியிடை யுத்த நெருக்கடியில் நேரிட்ட அரிசி பங்கீடு காலத்-திலும் தவறாமல் நடந்துவந்தது. ஊரும்பேருமற்ற ஏழை அகதி-களுக்கும் மற்றுமுள்ள யாவருக்கும் அவ்வாறு அவர்கள் அன்-னக் கொடிகட்டி ஆண்டுவந்தது கீதையிற் கூறப்பட்டுள்ள கரும யோகம் போன்று கைம்மாறு கருதாத ஈஸ்வர கைங்கரியமாகவே இருந்தது. அவர்களுடைய கருணை உள்ளத்தையும் அண்டின-

வர் யாவரையும் "முகத்தானமர்ந்து இனிதுநோக்கி, அகத்தானாம் இன்சொலோடு" அவரவர் அவசியங்களை ஊகித்தறிந்து அவர்களைத் தக்கவாறு உபசரித்துப் பரிமளிப்பதையும் கண்டவர் எவரும் அவர்களிடம் ஈடுபடத்தவறுவதில்லை.

அத்துடன் அவர்கள் பொறுமைக்கு ஒரு அணிகலமாகவும் திகழ்ந்தனர். சுமார் 30 ஆண்டுகளாக இரவும் பகலும் இணைபிரியாது அவர்களோடு பழகிவந்த ஒருவர், மிகுந்த சலாகைக் குணமுடையவர், அந்த 30 ஆண்டுகளும் தன்னைநோக்கி ஒருமுறைகூட அவர்கள் கடுஞ்சொல் கூறக்கேட்டதில்லையென்றும், கணவன் மனைவியரிடையேகூட அவ்வளவு பொறை கண்டிருப்பதில்லையென்றும் தன்னுடைய சலாகைக்குணத்தை அறிந்தோர் அதிசயித்திருப்பதாகவும் கூறியுள்ளனர். "பொறை என்னும் குன்றேறி நின்றார்," என்ற புகழ் அவர்களுக்கு முற்றும் பொருந்தும். அரசியல் துறையிலும் மற்று உலக வாழ்க்கையிலும் எதிரிகளில்லாதவர் எவரும் இருக்கமுடியாது. எவ்வளவு கொடிய எதிரியாயினும் "அவர் நாண நன்னயஞ் செய்துவிடல்," என்ற வள்ளுவர் வாக்கைச் சொல்லிலும் செயலிலும் இப்பெரியார் கையாண்டுவந்ததை அவர்களோடு பழகியவர் யாவரும் நன்கறிவர். பலவித சோதனைகளுக்கிடையேயும் "உற்றநோய் நோன்றல், உயிர்க்குறுகண் செய்யாமை," என்ற கொள்கைகளைக் கடைசிவரை கைப்பிடித்தாண்ட அவர்கள் பெருந்தன்மையும் பொறுமையும் பதவாசியுமே, அவர்களது கொடையால் பெற்ற புகழுக்கும் மேலான புகழை அவர்களுக்கு அளித்ததென்னலாம். எல்லாவிதத்திலும் அவர்கள் தமிழ்நாட்டுச் சைவமக்களுக்கு ஒரு உயர்பெருந்திலகமாக விளங்கினரென்பது யாவரும் ஒப்புக்கொண்ட உண்மை.

அவர்களது புகழைப் பூரணமாக விளக்கவல்லவர் எவரும் முன்வராமையால், இயன்றவரை ஒருசிறிது இங்கு கூறப்பட்டுள்ளது. அவை வெறும் முகஸ்துதியோ போலிப்புகழ்ச்சியோ அல்ல என்பதற்கு அவர்களோடு பழகிய யாரும் சாட்சி கூறத் தயாராயிருப்பர்.

* * * *

1950-ம் வருஷம் தை மாதம் 8-ம் தேதியில் ஐ. ஸி. அவர்கள் தமது 66-வது பிறந்தநாளை வழக்கம்போல ஆலயஞ்சென்று அபிஷேக ஆராதனைகள் செய்து கொண்டாடினார்கள். அவர்கள் அன்று நல்ல திடகாத்திரராகவே இருந்தார்கள். அந்த மாசி மாதம் 4-ந்தேதி புதன்கிழமை சிவராத்திரி தினம். அன்றும் வழக்கம்போல அவர்கள் உபவாசமிருந்து இரவு சிவாலயம் சென்று அபிஷேக ஆராதனைகள் செய்து சுவாமி தெரிசனம் பண்ணிவிட்டு வீடு வந்தார்கள். அப்போதும் தேகத்தில் யாதொரு அசௌகரியமோ குணக்கேடோ இல்லாமலேயிருந்தது. மறுநாள் காலையில் தனக்குப் பசியில்லையென்றும் வயிறு கொஞ்சம் மந்த-மாக இருப்பதாகவும் கூறினார்கள். மற்றப்படி வழக்கம்போலக் குளித்துப் பூஜையை முடித்துவிட்டு, வீட்டு விவகாரங்களைக் கவ-னித்துவந்தபடியால், பசியின்மை உபவாசம் காரணமாக உண்-டான வாயுவாக இருக்கலாமென்று அதைப் பெரிதாகப் பாராட்டவில்லை. அவ்வளவுதான்!—அன்று மாலை ஆறரை மணி சுமாருக்கு அவர்கள் முன்னெச்சரிப்பு யாதுமின்றியே அடுத்து நின்றோரும் அதிசயிக்கும்படியாகத் திடீரென்று உடம்பை உகுத்துவிட்டு விண்ணுலகு ஏகிவிட்டனர்.

*　　*　　*　　*

அமாவாசை—வியாழக்கிழமை—(16-2-50)—5-வ மாசி-மீ 1025-ஆம் அந்திவேளை அகன்றது. இயற்கை எங்கும் இருண்டது. ஊர்முழுவதும் ஒரே திகைப்பும் பரபரப்பும். என்ன, என்ன என்று எங்குங்கேள்வி. கண்டவர் விண்டாரிலர்; கேட்டவர் நம்பினாரிலர். உண்மை எங்கும் பரவவே இந்த வட்டாரத்துள் மழைக் கொதுங்-குவோர் மண்டபத்தை யிழந்து தவித்தனர். வெயிலுக் கொதுங்-குவோர் நிழல் மரத்தை யிழந்து துடித்தனர். பசிக் கொதுங்கு-வோர் அக்ஷயபாத்திரத்தை யிழந்து தவித்தனர். வாழ்க்கைப் போர்ச் சிக்கல்களுக்கு விடுதலை தேடி ஒதுங்குவோர் சாந்தி மழையைப் பொழிந்துவந்த அருள்மேகத்தை யிழந்து பரதவித்-தனர். இலஞ்சியூரும் சுற்றுப்பிடாகைகளும் தம் உயிர்நாடியையே இழந்து துடித்தன. அழுதுபுரண்டென்ன, அடித்துவிழுந்தென்ன?

> நெருநல் உளன்ஒருவன் இன்றில்லை யென்னும்
> பெருமை யுடைத்து இவ்வுலகு.

யாரே அதனை மாற்ற வல்லவர்!

*　　*　　*　　*

"இன்பந் தவழும் இலஞ்சி தன்னில்
அன்பு ததும்பும் அருமைப் பெரியார்
தன்னல மற்ற தகைசால் அண்ணல்
என்னல மென்றே எவர்க்கும் உதவும்
கருணை வெள்ளம் கற்பகத் தருவோன்
பொருணை மணலினும் புகழ்மிக் குள்ளோன்
எங்கள் தந்தை ஈசுவரன் பிள்ளை
தங்கள் பெருமைத் தவத்தைக் காட்ட
உறங்கு வதுபோல் உயிரை நீத்தார்
திறமிது போலச் செப்பக் கேட்டிலம்
அந்தோ! இழந்தோம். அந்தோ! தவித்தோம்.
சிந்தை நொந்து சிதறி விழுந்தோம்
காப்பா ரற்றுக் கலங்கி யழுதோம்
காப்பின் உருவாய் யார்க்கும் உதவியாய்
மண்ணில் நிறைந்த மாட்சிமை கண்டு
விண்ணில் உள்ளார் விரும்பி யழைத்தார்
கண்ணில் நிறைந்த கருத்தில் உயர்ந்த
புண்ணியன் போலவன் புகழ்க்குடி வாழ்க!
அண்ணலின் ஆன்மா அமைதி பெறுக!
ஏத்துவம் ஈசன் இணையடி நினைந்தே."

## திதி நாள் :

"மன்னும் விரோதியிது மாசியைந் தாம்நாளில்
துன்னும் அமாவாசைத் தூய்திதியில்—பன்னும்
திருவிலஞ்சி ஈசுவரச் செம்மலெம் அண்ணல்
அருளுஞ் சிவனடிசேர்ந் தான்."

*        *        *        *

குன்னக்குடி, நடுவக்குறிச்சி முதலிய கிராமங்களின் மிட்டா-தாராயிருந்த இச்குறுநிலமன்னர் உயர்த்திய அன்னக்கொடியும், ஏற்படுத்திய பெண்பள்ளிக்கூடமும், அவர்களது ஏகபுத்திரி உத்தமச்செல்வி அறம்வளர்த்தம்மாளாலும் அவளுடைய அருமைக் கணவர் திருவளர்செல்வர் A. சிதம்பரம் பிள்ளை (M.A.) அவர்க-ளாலும் அன்றுபோலவே இன்றும் போற்றப்பட்டு வருவது

"தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தால் காணப் படும்."

என்ற தேவர் குறளுக்கு ஒரு சான்றாக இலங்குவதாகும்.

# பாராட்டுகள்.

இக்காலத்தில் சிறுபதவி பெற்றோருக்குங்கூடப் பெருவாரியான வரவேற்புப் பத்திரங்களும் பாமாலைகளும் புனைந்தணிவது சாதாரண வழக்கமாய்விட்டது. அதனால் அவை விலையிழந்ததோடு, வெறும் முகஸ்துதியென்றும் வீண்பெருக்கமென்றும் வெள்ளைப்பொய்களென்றுங்கூட எண்ணப்படுகின்றன. ஆயினும் சிறப்புப் பாயிரங்கள் பெறாத பல பண்டைய நூல்களுக்கு ஆசிரியர்கூட இன்னாரென்று அறிவதற்கில்லை யாதலால், உண்மையான பாமாலைகளுக்கு உபயோகமில்லையென்று சொல்வதற்கில்லை. அதையெண்ணி திருவாளர் I. C. ஈஸ்வரன் பிள்ளை அவர்கள் தம் வாழ்நாளிற்பெற்ற பல்வேறு பாமாலைகளில் உண்மையைத் திரித்தோ மிகுத்தோ கூறாத ஒரு நான்கு மாத்திரம் இங்கு கொடுக்கப்படுகின்றது.

*  *  *  *

கோமதி எட்வர்டு நாட்டாட்சிக் கழக உயர்தரக் கல்லூரிக்குத்
தலை நாட்டாட்சிக் கழகத் தலைவர்
**உயர்திரு I. C. ஈசுரன் பிள்ளையவர்கள்**
(மிட்டாதார், நிதியாளர், இலஞ்சி.)
விஜயம் செய்தபோது பாடிய

## செந்தமிழ் மலர்.

கட்டளைக் கலித்துறை

அறந்தா னியற்றும் அவனில் அதிகனே பள்ளிபல
திறந்தான் அவனிற் சிறந்தோன் திகழுற அன்னபள்ளி
புரந்தான் அவனிலும் புண்ணியன் பொன்னால் புவிபுரந்து
இரந்தான் துயரம் எடுத்தெறி நற்குண ஈசுரனே.

வெண்பா

ஏரார் இளங்கிளியே! எம்மையாள் ஈசுரன்றன்
சீரார் திருநாடு தேர்ந்துரையாய்—பாரிலவன்
அன்பார்ந் தறம்புரிந் தாட்சி நடத்திமகிழ்
தென்பாண்டி நாடே தெளி.

ஏதமிலா இன்சொல் மரகதமே! ஈசுரன்றன்
காதல்மிக வாழ்நகர் கண்டுரையாய்—மாதே
இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
பெருகிய நல்லிலஞ்சி பேசு.

செய்யவாய்ப் பஞ்சிறகிற் செல்வீ! நம் ஈசுரன்றன்
பொய்யில் புகழுரைத்துப் பொற்புறுவாய்—தையலாய்!
செப்பமும் நாணும் செறிந்தவர்கள் செப்புவபோல்
இப்புவியில் பேறுறுவன் ஈந்து.

கிஞ்சுகவாய் அஞ்சுகமே! கேடிலா ஈசுரன்றன்
வஞ்சகமில் ஆட்சிவகை வந்துரையாய்—நெஞ்சத்(து)
இருள்அகல எங்கும் எழிற்கல்வி தங்க
அருள்வழியே ஆட்சி அறி.

கோற்றேன் மொழிக்கிள்ளாய்! கோதில் இலஞ்சியர்கோன்
மாற்றாரை வெல்லும் படைபகராய்—சீற்றமிலாய்!
ஆற்றுவார் ஆற்றல் பணிதல் அதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.

இன்பான் மொழிக்கிள்ளாய்! எங்கள் இலஞ்சியர்கோன்
முன்பான் முழங்கும் முரசியம்பாய்—அன்பால்
மறவி நெடுநீர் மடிதுயில் போக்கிப்
பரந்தின்பம் நல்கும் பறை.

சோலைப் பசுங்கிளியே! தூநீர் இலஞ்சியர்கோன்
மாலை மகிழ்ந்துரைத்து மன்னுவாய்—சாலவும்
அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்
பண்புடனே மாலையாம் பார்.

இப்பாடே வந்தியம்பு கூடுபுகல் என்கிளியே!
தப்பாவுன் வாயாலே சாற்றுவதென்—எப்போதும்
தேன்புரையும் சிந்தைகொள் ஈசுரன்றன் தெய்வம்போல்
ஊனமின்றி வாழ்க உவந்து.

சங்கரன்கோவில் }
6–3–1933 }

இங்ஙனம்
அன்புடைய மாணவர்

இலஞ்சிப் பெருநிலக் கிழவரும்
திருநெல்வேலிப் பெருநாட்டாண்மைக் கழகத்தலைவருமாகிய
உயர்திருவாளர்
**இ. சி. ஈசுவரன் பிள்ளை** M.L.C. **அவர்கள்**
சென்னை மாகாணச் சட்டசபையின் உறுப்பினராகப்
போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பெற்றபோது
நான்குநேரி நகரத்தார் மகிழ்ந்தளித்த

## வாழ்த்துப்பா.

சீரும் செல்வமும் சிறந்த நிலங்களும்,
பேரும் புகழும் பெறும்மலை வளங்களும்,
உலகெலாம் போற்றும் உளம்கவர் அருவியும்
கண்டுநம் சிவனார் களிக்கூத் தாடிடும்
திருக்குற் றாலத் திருப்பதிக் கருகே
உடல்அலுப் பெல்லாம் ஓட்டும் சாரல்
வந்துவந் துலாவும் வளம்பதி குமரன்
வள்ளியை மணந்து வாழும் இலஞ்சி.
அந்நகர் வதியும் அளவிலாச் செல்வர்கள்
யாவரும் காண எண்ணிலா அறமெலாம்
ஒருதனி யாக ஒப்பிலா தியற்றி
உறுபசி தணித்தும் உளத்துயர் போக்கியும்
மகிழ்ந்தினி திருக்கும் மாண்புறு மன்னு!
பகைவரும் புகழும் பண்பு மிக்கோய்!
ஈசுவரன் பிள்ளை எனும்பெயர் ஏந்தால்!
கல்வியும், ஒழுக்கமும், காண வருபவர்
எத்தனை பெயர்கள் எனினும் சலிப்பு
ஒருசிறி தளவும் உறாதவ ரவரைப்
புன்சிரிப் போடும் புகழ்இன் சொலோடும்
வரவேற் றருளி வந்தவா றெரிந்து
தக்கன செய்யும் தண்ணருட் பொறுமையும்,
நல்லன நினைதலும், நினைந்தவை முடித்தலும்,
ஊக்கமும் சால ஓங்கும் பெரியோய்!
திருநெல் வேலிச் சில்லாச் சிறுநாட்

பண்டைமாக் கழகத் தரும்பெரும் தலைவனைப்
பல்லாண் டமர்ந்து பாதையும் கல்வியும்
திருநெல் வேலி தென்காசி யாகிய
இருதா லுகாக்கள் எங்கும் ஓங்கிடச்
செய்த சீரினைத் தெரிந்த தலைவர்கள்
பெருநாட் டாண்மைப் பெருங்கழ கத்தின்
தலைவனாய் நின்னைத் தான்தேர்ந் திடுதலும்,
முன்னிலும் மிக்க முயற்சிமேற் கொண்டு
வள்ளியூர் இட்ட மொழிக்கும், ரெட்டியார்
பட்டி விசயநா ராயணப் பதிக்கும்,
இன்னும் பற்பல இடங்கள் தமக்கும்
பெருவழிச் சாலைகள் பெருமையாய் அமைத்து
வாணிபம் வளர்ந்திட வகைபல செய்தனை.
கோமதி யம்மைதன் கோவிலார் பதியிலும்
அழகமர் முருகன் அமர்செந் தூரிலும்
உயர்தரக் கல்வி ஓங்கிடப் பள்ளிகள்
நேரிற் கண்டு நீமகிழ் வெய்தினை.
என்னே நின்னருள் ! என்னே நின்புகழ் !
தக்கார் மதிக்கும் தகைமையோய் ! நின்றன்
பொறுமையும் செம்மையும் பொருந்துபே ராற்றலும்
வேளாண்மை தானும் விளங்கக் கண்டுநம்
நெல்லைமா வட்டம் நேரிய சட்ட
சபைக்குனை நட்பால் சார்உறுப் பினனாய்ப்
போட்டியில் லாமல் தேர்ந்துபோற் றினரால்.
அன்பு மிக்க ஐய ! இனிநீ
நமது சில்லா நலம்பல பெற்றிட
வேண்டும் செயலெலாம் விரும்பிச் சட்ட
சபையினில் செய்து சங்கரன் அருளால்
மேலும் உயர்பல பதவிகள் மேவுக.
வாழி நின்புகழ் ; வாழி நின்குலம் ;
வாழி நின்றன் வளர் அருள் ;
வாழிநீ நீடூழி வாழிவா ழியவே.

நான்குநேரி }
22-7-34 }

தங்களன்புள்ள,
நான்குநேரி நகரத்தார்.

திருநெல்வேலிச் சில்லா நாட்டாண்மைக் கழகத் தலைவரும்
பெருஞ்செல்வருமாகிய உயர்திருவாளர்
இராவ்பகதூர்

**இ. சி. ஈசுவரன் பிள்ளையவர்கள்**

இராவ்பகதூர் பட்டம் பெற்றமை கண்டு
நாட்டாண்மைக் கழக உயர்பள்ளிக்கூட ஆசிரியர் சங்கத்தார்
மகிழ்ந்தளித்த

## வாழ்த்துப்பா.

*சீரும் செழுமையும் செல்வமும் சிறந்த*
*தென்பாண்டி நாட்டின் திருநகர் பலவுள்*
*திருக்குற் றாலம் தெற்கே திகழ்ந்திட*
*நலஞ்செய் நஞ்செய்சூழ் இலஞ்சி விளங்குமால்,*
*அதன்கண் அறம்பல ஆற்றும் வேளாண்*
*குலத்தினில் தவமிகு கோமான் சிதம்பர*
*வேள்திரு மகனாய் விளங்கும் பெரும!*
*அளவிலாச் செல்வ மதனில்வந் துதித்தும்*
*"கல்வியே கருந்தனம் காக்கும்" என் றுணர்ந்து*
*தாய்மொழி யாகும் தமிழ்மிகு தமிழும்*
*ஒப்பிலாத் துறைகள் உடையஆங் கிலமும்*
*கற்றுத் தேர்ந்து கனமிகப் பெற்றோய்!*
*"நாகரி கம்தான் கல்வியின் நற்பயன், அதுதான்,*
*தன்நலம் தவிர்ந்து தண்ணளி யுடனே*
*பிறர்நலம் பேணலே" என்பது தெளிந்து*
*யார்க்கும் துணைசெய இரங்கும் மனத்தோய்!*
*"தன்னலத் துயர்ந்தது தம்குல நலம்தான்;*
*அதனிலு முயர்ந்தது அவ்வவர் ஊர்நலம்;*
*ஊர்நலத் துயர்ந்துதம் உயிர்போற் பேண*
*உரியது நாட்டு நல" மென்ப தோர்ந்து*
*தாய்நாடு வாழத் தகும்வழி யறிந்துதம்*
*உடல்பொரு ளனைத்தினால் உறுநலம் புரிவோய்!*
*நெல்லைமா நகரில் நீள்புகழ் இந்து*
*கலாசா லைதனைக் கண்கா ணிக்கும்*

கல்விக் கழகக் காவல ஞகியும்,
பற்பல ஆண்டுகள் பாங்குடன் நாடாள்
கழகத் தலைமை கருத்துடன் தாங்கியும்,
சட்ட சபைமுத லாகிய பலதுறைப்
பட்ட சபைதொறும் பண்புறுப் பாகியும்
நீபுரி தொண்டுகள் நினைந்துநம் அரசர்
மனமிக மகிழ்ந்தார், மலர்ந்த அன்புடன்
இராவ்பகதூர் எனும் இசைமிகு பட்டம்
சிறப்புடன் ஈந்தார். சிந்தை களித்தோம்,
ஈசுவரப் பெயருடை ஏந்தலே! மகிழ்ந்தோம்.
"தோன்றிற் புகழொடு தோன்றுக" என்னும்
தமிழ்முனி வாக்கினைத் தனக்கென உரியோய்!
ஏழைகள் முகம்பார்த் திரங்கி வேண்டும்
துணைபல புரிந்து தோன்றும் புகழினல்
இதுபோ லுயர்ந்த இசைபல பெற்று
நீயுநின் குலமும் நீடூழி
வாழ இறைவர்தாள் வணங்குவம் பணிந்தே.

நாட்டாண்மை உயர் பள்ளிக்கூடம்,
கடையநல்லூர்,
30—7—1937

தங்கள் பேரன்பிற்குரிய
ஆசிரியர் சங்கத்தார்.

*திராவிட மாபாடிய கர்த்தராகிய மாதவச் சிவஞான முனிவரின் வழித்தோன்றலும், I. C. அவர்களின் பால்ய நண்பரும், அரசியல் துறையிலும் மற்றும் பொதுஸ்தாபனங்களிலும் அவர்களோடிருந்து தொண்டாற்றிய சான்றோருமான அம்பைநகர் திலகக்கிழார், தம் வீட்டுக்கு வரவேற்றபோது பாடிக்கொடுத்தது.*

நெல்லை நாட்டாண்மைக் கழகத் தலைவர்
இலஞ்சி திரு. இராவ்பகதூர்
***I. C. ஈசுவரம் பிள்ளை அவர்களுக்கு***
வழங்கிய

## வரவேற்பு வாழ்த்துப் பாடல்.

*நிதியின் வளமோ! நதிவளமோ!*
*நேரும் வளங்கள் எவையுமொளிர்*
*பொதிய மலையின் நறுந்தென்றல்*
*போதும் பொழில்சூழ் இலஞ்சிவளர்*
*பதியின் உறவே ளாண்மரபிற்*
*பாரோர் பரவ வருபுகழ்சேர்*
*அதிபன் ஈசு வரனென்னும்*
*அண்ணல்! வருக! மகிழ்வுறவே.*

*நெல்லை நகரின் நாட்டாண்மை*
*நீடுந் தலைமை நீவகித்தாய்!*
*இல்லைப் பிறர்கள் இவனொப்பார்*
*என்னும் படிவேண் டுவபுரிந்தாய்!*
*சால்லைக் கியலா நின்செயல்கள்*
*இன்றே உணர்வர் ஏனையவர்*
*அல்லைப் பழிக்குங் குழல்பாகன்*
*அருளால் அன்ப! வாழியரோ!*

*கண்ணே யென்ன நடுநிலைமைக்*
*கட்சி யொன்றே கடைபிடித்தாய்!*
*உண்ணோர் அன்பின் எவர்க்குநலம்*
*ஒன்றே செய்தாய்! ஓதலுறின்*
*என்ன ருயிரின் எனக்கினியோய்!*
*இன்றென் மனையில் இருந்தருளிப்*
*பின்னு முதல்வாழ் வினிதுறநீ*
*பேணி வளர்க புவியகத்தே.*

ஒழுக்கு மவர்க்கிங் கொருநாளே
உளதால் இன்பம்; உரைக்குங்காற்
பொறுக்கு மவர்க்கே பொன்றும்வரை
புகழ்என் றுரைத்த பொன்மொழிபோற்
பொறுக்கும் பொறைநின் குணங்களினுட்
புனித மிகுவ தன்றோ! நல்
நிறுக்கும் நிறையின் நடுநிலைமை
நெறியின் வழுவா நினைவினையே.

வாழி இலஞ்சிநகர் வாழியதன் கண்மேவி
வாழுமவன் ஈசு வரமேலோன்—வாழியவே
அன்னோன் கிளைஞருடன் ஆர்வலரும் வாழியரோ
முன்னோன் அருள்கொண்டு முன்.

அம்பாசமுத்திரம், }
1—8—38. }

தங்கள் அன்பிற்குரிய,
K. A. சிவஞானம் பிள்ளை,
வக்கீல்.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 22 | அண்ணலார், | அண்ணலார் |
| ,, | 24 | மேய்ந்த | வேய்ந்த |
| ,, | ,, | அமர்ந்திருக்கும் | அமைந்திருக்கும் |
| 3 | 8 | வையாம் | வைகளாம் |
| ,, | 29 | குனிந்த | குனித்த |
| 4 | 1 | தம்மை | நம்மை |
| ,, | ,, | ஆட்கொள்ளத்தம்மை | ஆட்கொள்ள நம்மை |
| ,, | 3 | மாட்சியுடையதா | மாட்சியா |
| 5 | 11 | புரிந்தவர், | புரிந்தவர்கள் |
| ,, | ,, | புதுப்பித்தவர், | புதுப்பித்தவர்கள், |
| ,, | 12 | யுடையவர், | யுடையவர்கள், |
| 6 | 2 | மூழ்கிக்கிடந்தவர் | மூழ்கிக்கிடந்தவர்கள் |
| ,, | 7 | கள், | களே. |
| ,, | 10 | வேதபுஸ்தகம் | வேதப்புஸ்தகம் |
| ,, | 11 | அவருக்கு | அவர்களுக்கு |
| ,, | ,, | அவருக்குள் | அவர்களுக்குள் |
| ,, | 13 | அவருள்ளும் | அவர்களுள்ளும் |
| 7 | 19 | கொள்ளாதேயுங்கள் | கொள்ளாதீர்கள் |
| ,, | 23 | கூடநின்று | உடன்நின்று |
| ,, | 28 | என்பது முதல் உணர்ச்சி | என்பதே. |
| ,, | 32 | ஏதாவது பொருள் | ஏதாவது உண்மைப்பொருள் |
| 8 | 17 | உழைப்புக்குற்ற | உழைப்புக்கேற்ற |
| 9 | 3 | கொஞ்சம் | ஓரளவு |
| 11 | 15 | சம்பந்தமான | சம்பந்தப்பட்ட |
| ,, | 24 | வேதபுத்தகத்தில் | வேதப்புத்தகத்தில் |
| 12 | 30 | அறிவும் | அறியும் |
| 13 | 3 | காண்பதரிது | காண்பதறிவு |
| ,, | 6 | கொண்டும், | கொண்டும் |
| ,, | 7 | மனதுக்கு | மனத்துக்கு |
| ,, | 24 | கொள்வதும் | கொள்ளுவதும் |
| ,, | 26 | இது | அது |
| 14 | 10 | சீவத்தன்மையென்பது | சிவத்தன்மையென்பது |
| ,, | 14 | அனைவற்றிற்கும் | அனைத்திற்கும் |
| 19 | 1 | தவிற | தவிர |
| ,, | 3 | தொழுக்காது | தொதுக்காது |
| ,, | 13 | இத | இந்த |
| ,, | 15 | வெறுப்பவற்றை | வெறுப்பனவற்றை |
| 20 | 17 | தவிற | தவிர |
| 21 | 4, 5 | அனைவற்றிலும் | அனைத்திலும் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 21 | 12 | முதலியனவும், | முதலியனவும் |
| ,, | 25 | நம்பக்கூடியவையன்று | நம்பக்கூடியவையல்ல |
| ,, | 30 | அவர்பெரும் | அவர்களுள் பெரும் |
| 22 | 3 | தவிற | தவிர |
| ,, | 31 | உறவின்றிய உறவு | உறவின்றிய உணர்வு |
| ,, | 33 | பெரும்பாலர் | பெரும்பாலோர் |
| ,, | 34 | செல்கின்றாரே | செல்கின்றார்களே |
| 23 | தலைப்பு | 2 | 23 |
| ,, | 5 | தவிற | தவிர |
| ,, | 8, 9 | வரிகளை | 9, 8 வரிகளாகமாறி யமைத்துக் கொள்க. |
| ,, | 16 | யாழ்பாண | யாழ்ப்பாண |
| ,, | 27 | துன்பகாரணம் | துன்பத்துக்குக்காரணம் |
| ,, | 28 | இன்பகாரணம் | இன்பத்துக்குக்காரணம் |
| 25 | 19 | பயிற்ச்சியிலும் | பயிற்சியிலும் |
| ,, | 20 | அவர் | அவர்கள் |
| ,, | 21 | அவரைப் | அவர்களைப் |
| ,, | ,, | அவர் | அவர்களுடைய |
| ,, | 33 | அவர் | அவர்கள் |
| 27 | 7 | நல்வினைத் | நல்வினை |
| ,, | 14 | இறந்துபட்டன, | இறந்துபடவுமாயின. |
| 28 | 8 | முயலுதலுமன்று | முயலுதலுமல்ல |
| ,, | 21 | அவர் | அவர்கள் |
| 29 | 3 | மேநாட்டு | மேனாட்டு |
| ,, | 14 | நியுக்கினியஸ் | நியுக்கிளியஸ் |
| 30 | 3 | குறிப்புகளை | குறிப்புக்களை |
| ,, | 28 | பிசசய்யா | பிச்சையா |
| 31 | 18 | புணர்வார் | புணர்வால் |
| 32 | 31 | உயர்நிலை | உயிர்நிலை |
| 33 | 15 | தவிரத் | தவிர |
| 34 | 2 | அவர் | — |
| ,, | 7 | அவர் | அவர்கள் |
| ,, | 31 | வேகம் வேகமாக | வேகமாக |
| 36 | 21 | வாடித்திரிந்து | ஆடித்திரிந்து |
| 37 | 1 | என்பவற்றை | என்பனவற்றை |
| 38 | 6 | வாய்ந்திராத | வாய்த்திராத |
| ,, | 15 | அடுத்ததோர் | அடுத்தவன் |
| ,, | 21 | ஆலையத்துட் | ஆலயத்துட் |
| ,, | 24 | சிறார்-சிறுவர் என்று அர்த்தம் | (சிறார்=சிறுவர்) |
| ,, | 28 | கக்கூஸ்பறை | கக்கூஸ் அறை |
| 41 | 18 | உணர்த்தும், | உணர்த்தும் ; |
| ,, | 23 | தவிற | தவிர |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 43 | 16 | கல்விமுறை | கல்விமுறை. |
| 44 | 28 | அவர் | அவர்கள் |
| 45 | 28, 29 | ஒருவளாகிய | ஒருத்தியாகிய |
| 46 | 8 | அர்ப்பிக்கத் | அர்ப்பணஞ்செய்யத் |
| 47 | 31 | திருத்துவங்க | கிருத்துவங்க |
| 49 | 18 | அவனேதான் | அவனவனேதான் |
| 51 | 8 | வேண்டாகடப்பாட்டு | வேண்டாக்கடப்பாட்டு |
| ,, | 14 | நாம் | நம் |
| ,, | 27 | என்னல் | எனல் |
| 52 | 25 | விரும்புபவர் | விரும்புபவர்கள் |
| ,, | 28 | அவருக்காக | அவர்களுக்காக |
| 55 | 33 | சத்யாக்கிரகம் | சத்தியாக்கிரகம் |
| 61 | 6 | பொறுட்டு | பொருட்டு |
| 64 | 4 | கிழ்மேலாக | கீழ்மேலாக |
| 66 | 2 | அறியாதோர் | அறியாதார் |
| 71 | 16 | என்து | என்று |
| 74 | 18 | கையாடும் | கையாளும் |
| 75 | 14 | மாசக்கணக்காக | மாதக்கணக்காக |
| ,, | 24 | நாம் | நம்மில் |
| 76 | 1 | முடியாது | மாட்டான் |
| ,, | 17 | ஆண்டறுதியில் | ஆண்டிறுதியில் |
| 78 | 17 | அந்த | அந்தப் |
| 83 | 12 | மயக்கு | மயக்க |
| ,, | 23 | கால | கால் |
| 84 | 16 | மூக்குசசெவி | மூக்குசெவி |
| ,, | 31 | போனன் | போவான் |
| 86 | 7 | இதுவே, | இதுவே. |
| 91 | 23 | கொண்டிருப்பன | கொண்டிருக்கும் |
| 94 | 25 | விளைப்பதோடு | விளைவிப்பதோடு |
| 97 | 3 | தக்கவையாயிருக்கின்றன. | தக்கவைகளாயிருக்கின்றன. |
| ,, | 5 | மகாரங்கள் | மகரங்கள் |
| 100 | 23 | உண்மையின் | உண்மையில் |
| ,, | 33 | அவன் | அவனுடைய |
| 101 | 1 | அவள் | அவளது |
| ,, | 29 | அவர் | அவர்கள் |
| 106 | 1 | வெம்பரப்பு | வெறும்பரப்பு |
| 110 | 33 | புகைப்போலப் | புகைபோலப் |
| 112 | 2 | அனைவற்றிற்கும் | அனைத்துக்கும் |
| 120 | 5 | கூடைகளைத் | கூடை இவைகளைத் |
| ,, | 6 | லணிந்துக்கொண் | லணிந்துகொண் |
| ,, | 33 | அவருக்கு | அவர்களுக்கு |
| 131 | 9 | கறுப்புகள் | கறுப்பு |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 131 | 25 | ஒடு | ஓடு |
| ,, | ,, | கடைப்பிடித்தவர்கள் | கடைப்பிடிப்பவர்கள் |
| ,, | 27 | பஞ்சமகா | பஞ்சமா |
| 132 | 1 | மக்கள் | மக்களின் |
| 133 | 16 | அவர்கள் | அவர்களுடைய |
| ,, | 25 | கள்ளுக் | கள்ளு |
| ,, | 27 | காராபூந்தியை | காராப்பூந்தியை |
| 136 | ,, | நாம் | நம் |
| 141 | 9 | வாகும்படிப் | வாகும்படி |
| ,, | 16 | அது | இது |
| 143 | 12 | பச்சாதாபம் | பச்சாத்தாபம் |
| ,, | 27 | ஆரஞ்சி | ஆரஞ்சு |
| 144 | 24 | பாரமார்த்திகபக்குவம் | பாரமார்த்திகப்பக்குவம் |
| 145 | 23 | ஆற்றலுடையன | ஆற்றலுடையது |
| 146 | 30 | செய்வதும் | செய்வதுவும் |
| 148 | 18 | பேர் | பெயர் |
| ,, | 19 | கருடசேர்வை | கருடசேவை |
| 149 | 13 | இரண்டைத்தவிற | இரண்டைத்தவிர |
| 151 | 20 | வாசனைப்பழக்கம் | வாசனைபழக்கம் |
| ,, | 29 | முதலிய | முதலியன |
| 152 | 27 | வியபிசாரி | வியபசார |
| ,, | 33 | பார்வையுள்ன | பார்வையுள்ள |
| 153 | 31 | அவன் கைபலத்தை | அவனது கைபலத்தை |
| 154 | 12 | குட்டிச்சாந்தான் | குட்டிச்சாத்தான் |
| ,, | 20 | பக்கத்து | பக்கத்தே |
| ,, | 23 | நாம் | நம் |
| ,, | 25 | மேற்படி | மேற்கண்ட |
| 155 | 10 | அந்நோயளிகள், | அந்நோயாளிகள் |
| ,, | 18 | செய்வது, | செய்வது |
| ,, | 20 | • கல்விதானமோ | கல்வித்தானமோ |
| 156 | 20 | செல்வது | செல்கின்றனர் |
| 156 | 31 | அனைத்துயிர் | அனைத்துயிர்களும் |
| 158 | 13, 14 | உம்புகள் யாவற்றையும் | உடம்பைத் |
| ,, | 21 | அன்றி ஓயாமல் | ஓயாமல் |
| ,, | 23 | அதினின்றும் | அதனின்றும் |
| ,, | 27 | வேதபுஸ்தகத்திலுள்ள | வேதப்புஸ்தகத்திலுள்ள |
| 159 | 31 | தொடர்ந்து சில காலம் | சில காலம் தொடர்ந்து |
| 161 | 18 | போக்குபவர் | போக்குபவர்களுடைய |
| ,, | 20 | என்னப்படும் | எனப்படும் |
| ,, | 26 | போலிதியான | போலித்தியான |
| ,, | 31 | மெய்கள் | மெய் |
| 162 | 7 | திரட்டு | திரட்சி |
| ,, | 9 | இவற்றையும், | இவற்றையும் ; |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 163 | 17 | செல்வாரானால் | செல்வார்களானால் |
| ,, | 28 | வனப்புகள் | வனப்புக்கள் |
| ,, | ,, | ,, | ,, |
| 164 | 8 | பிரதிபலிக்கும், | பிரதிபலிக்கும். |
| ,, | 9 | மெய்கள் | மெய் |
| ,, | 22 | தமர்கின்றனர், | தமர்கின்றனர் ; |
| 165 | 13 | நன்கறிவாராக | நன்கறிவார்களாக |
| ,, | 14 | விலைவிரிவஞ்சி | விரிவஞ்சி |
| ,, | 20 | நள்ளிருள் | நள்ளிருட் |
| 168 | 31 | ஒருமிகச் | மிகச் |
| 169 | 6 | என்னப்படும் | எனப்படும் |
| ,, | 14 | தபலோக | தவலோக |
| ,, | 20 | தவிற | தவிர |
| 171 | 23 | ,, | ,, |
| 175 | 1 | ,, | ,, |
| ,, | 17 | பச்சாதாபமும் | பச்சாத்தாபமும் |
| ,, | 26 | தவிற | தவிர |
| 177 | 8 | ,, | ,, |
| ,, | 16 | ,, | ,, |
| 178 | 19 | மனதில் | மனத்தில் |
| 190 | 11 | அவர் | அவர்கள் |
| 193 | 23 | சண்டமாருதங்கள் | சண்டமாருதம் |
| 194 | 4 | மனதிலுண்டாகுமோ | மனத்திலுண்டாகுமோ |
| ,, | 18 | விதம் விதமான | விதவிதமான |
| ,, | 19 | உயிர்வாழ்ந்து | வாழ்ந்து |
| ,, | 23 | வல்லவராம் | வல்லனவாம் |
| ,, | 29 | தவிற | தவிர |
| 195 | 8 | என்னப் | எனப் |
| 196 | 13 | மனிதரும் | மனிதர்களும் |
| ,, | 27 | வருகின்றனர், | வருகின்றனர் |
| 199 | 4, 5 | கேட்கின்றீரில்லை | கேட்கின்றீர்களில்லை |
| ,, | 5 | கைக்கொள்கின்றீரில்லை | கைக்கொள்கின்றீர்களில்லை |
| 204 | 2 | பல்லாயிரமான | பல்லாயிர |
| 205 | 3 | மெள்ளக்கடல் | மெள்ளக்கடலால் |
| ,, | 28 | அவர் | அவர்கள் |
| 209 | 13 | கலப்புகளை | கலப்புக்களை |
| 211 | 5 | இவர் | அவர்கள் |
| 214 | 22 | அவருக்கு | அவர்களுக்கு |
| 215 | 7 | அவர்கள் | அவர்களது |
| 216 | 15 | மண்நாடு | மண்ணாடு |
| 128 | 8 | அல்லோகல்லோல | அல்லோலகல்லோல |
| ,, | 12 | அவர்கள் | அவர்களுடைய |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 218 | 12 | அவருக்குள் | அவர்களுக்குள் |
| ,, | 21 | தோலுடையவர் | தோலுடையவர்கள் |
| ,, | ,, | அவரில் | அவர்களில் |
| ,, | 22 | வந்தனர் | வந்தது |
| ,, | 23 | இவரையே | இவர்களையே |
| 219 | 12 | கலக்கலாகாது | கலக்காது |
| ,, | 32 | அவரில் | அவர்களில் |
| 220 | 1 | காணப்பட்டவர் | காணப்பட்டவர்கள் |
| ,, | ,, | அவரை | அவர்களை |
| ,, | 12 | இவரிடம் | இவர்களிடம் |
| 221 | 27 | கடலுக்கிறையாகினர் | கடலுக்கிறையாயினர் |
| 222 | 12 | சனத்குமாரர் | சனத்குமாரரது |
| 223 | 19 | அதிகாரபுருஷர் | அதிகாரபுருஷர்கள் |
| ,, | 21 | என்னப்படுவர் | எனப்படுவர் |
| 224 | 6 | இவர் | இவர்கள் |
| ,, | 21 | மற்றுள்ள | மற்றுமுள்ள |
| 227 | 24 | அவருக்குக் | அவர்களுக்குக் |
| 230 | 7 | கணந்தொறுந்தொறும் | கணந்தொறுங்கணந்தொறும் |
| 235 | 16 | தொடங்குதற்கு | தொடங்குவதற்கு |
| ,, | 33 | நல்கின்றனர் | நல்குகின்றனர் |
| 236 | 8 | நடக்கார் | நடவார் |
| ,, | 28 | கூறப்பட்டன | கூறப்பட்டது |
| 238 | 3 | நீர் | நீரில் |
| 242 | 12 | உடைக்கலாகும்போது | உடைக்கும்போது |
| 243 | 1 | ரஸாயணிகள் | இரஸாயணிகள் |
| 247 | 11 | வரும்போது | வரும்பொழுது |
| 249 | 25 | முதல்த் | முதல் |
| ,, | 28 | ,, | ,, |
| 250 | 5 | ,, | ,, |
| ,, | 10 | ,, | ,, |
| ,, | 19 | நைற்ரஜன் | நைட்ரஜன் |
| 251 | 3 | முதல்த் | முதல் |
| 256 | 20 | ன்வி | வின் |
| 258 | 25 | குறிப்புகளை | குறிப்புக்களை |
| 259 | 25 | வருமென்னப்படுகின்றது | வருமெனப்படுகின்றது |
| 260 | 4 | இயற்றைக்குணம் | இயற்கைக்குணம் |
| ,, | 17 | அணி ஆயிற்று | அணியாயிற்று |
| 266 | 2 | அக்கரையில்லை | அக்கறையில்லை |
| 268 | 11 | மாயை, | மாயை |
| 274 | 22 | வித்வானுகலாம் | வித்துவானுகலாம் |
| 278 | 11 | இந்த | இந்தத் |
| ,, | ,, | நமக்கு | — |

### இலஞ்சி புதுவீட்டுப்

# பொன்னம்மையம்மாள்

# ஞாபகார்த்த நிதி.

எனக்குப் பத்து வயதாகுமுன் என்னையும் எனக்கிளைய இருவரையும் தயங்கவிட்டு எங்கள் தாயார் கடையம் விசாலாட்சியம்மாள் (கி பி. 1895) 1071-ம் ஆண்டு மார்கழி மாதம் 21-ம் தேதி சனிக்கிழமை தேய்பிறைச் சதுர்த்தியன்று தனது 29-வது வயதில் இவ்வுலகை நீத்தபோது, எங்களைக் கடையத்திலிருந்து இலஞ்சிக்குக் கொண்டுவந்து அருமையாய்ப் போற்றிவளர்த்துப் படிக்கவைத்து ஆளாக்கிவிட்டவரும், என் தாயாரைப்பெற்ற பாட்டியாருமாகிய **பொன்னம்மையம்மாளின்** பாதசமர்ப்பணையாகவும், அவளுக்கு எனது மனமார்ந்த நன்றிபாராட்டாகவும், இந்த நிதி ஏற்படுத்தப்படுகின்றது. இத்தொகையிலிருந்து என் பாட்டியார் ஞாபகார்த்த மலராக நான் இதுவரை எழுதியுள்ளதும் இனி எழுதுவதுமான நூல்கள் யாவும் அச்சிடப்படவேண்டும். அவற்றை விற்றுவரும் தொகையும் இந்நிதியோடு சேர்க்கப்படவேண்டும். இந்த நூற்பதிப்பையன்றி வேறு யாதொரு காரியத்திற்கும் இந்நிதியை உபயோகிக்கக்கூடாது.

## அச்சிடவேண்டிய நூல்கள்.

1. **தமிழ்மறை வழிபாடு.** (1) சிறிது. (2) பெரிது.
2. **மறுபிறப்பு வரலாறுகள்.** (அச்சில்)

**ஆலயங்களின் உட்பொருள் விளக்கம் :—**

3 **பாகம் I அண்டத்திலுள்ளது பிண்டத்தில்.** ஷ
4. ,, **II. ஆலயந்தொழுவது சாலவும் நன்று.** ஷ
5. ,, **III. அறம்பொருள் இன்பமும் வீடும்பயக்கும்.** (தயாரிப்பில்)
6 ,, **IV. ஆட்டைவிழாக்களும் ஐந்தொழில்முறையும்.** (தயாரிப்பில்)

I.C.I. IN YOUR EYE.
மகாசிவராத்திரி
அமாவாசை மாலை.
இலஞ்சி—1950.